بسم الله الرحمن الرحيم

1. முதன் முதலாக
2. தத்துவ விசாரம்
3. **வியப்பூட்டும் விஞ்ஞான ஆய்வுகள்**

4. உணவு
5. இஸ்லாத்தின் தேன் துளிகள்
6. **விசித்திரமான வரலாறுகள்**
7. நவீன விஞ்ஞான யுக்திகள்
8. **உணவு**
9. பிரபஞ்ச சக்திகள்

10. தாஹா நபியின் தனிச்சிறப்புகள்
11. **மரபணுவின் விசித்திர மர்மங்கள்** 1
12. **உங்களுக்குள்ளேயே நீங்கள்**
13. ரோபாட்
14. சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள்

முதன் முதலாக உலகில் கட்டப்பட்ட கப்பல் 1 26-07-2020





INSIDE

NOAH'S ARK BUILDERS USED LAMINATED WOOD

Petrified laminated wood excavated from the site reveals amazing construction techniques.
- See page 2

THE LOST CITIES OF SODOM AND GOMORRAH

Recently relocated, the legendary cities of Sodom and Gomorrah are literally "brimming" with evidence.
- See page 3

Government confirms: "This is Noah's Ark"

ON June 20, 1987, the Turkish Government established the new 'Noah's Ark National Park,' following confirmation by a Govt commission of the investigative work on a site by the American Ronald E Wyatt.

Turks decide 1977 find near Ararat is Noah's Ark remains

ஈராக் நாட்டில் ஜபர்தஸ் மன்னன் ஆண்டு வந்தான் .அவனும் அவனது குடிமக்களும் " வத்து, சுவாஉ , யஃகூஸ் , யஊக் , நஸ்ர் போன்ற சிலைகளை வணங்கி வந்தனர்

இறைத்தூதர் நூஹ் (அலை) அவர்களை நோவா (Nova ) என்றும் அழைக்கிறார்கள் . ஆதம் (அலை) அவர்கள் இப்பூமியில் இறங்கி 1642 வருடம் கழித்து நபி நூஹ் (அலை) பிறக்கிறார்கள்

நபி நூஹ் (அலை) அவர்கள்
கி.மு ( 2948 -1958 ) வயது 950 ஆச்சரியமாக இருக்கிறதா ? அதுதான் உண்மை - குர்ஆன் (29 : 14 )

இவர்களது இயற்பெயர் அப்துல் கஃபார் அல்லது அப்துல் கபூர் என்றழைக்கப்படுகிறது .இவர்கள் நபி இத்ரீஸ் (அலை) அவர்களின் பேரரும் லாமக் என்பவரின் மகனும் ஆவார் இவர்களை "இரண்டாம் ஆதம் " என்று வரலாறு குறிப்பிடுகிறது .

ஆதம் (அலை) அவர்கள் காலம் முதல் நூஹ் (அலை) காலம் வரை 10 தலைமுறையினர் வாழ்ந்தனர் அவர்கள் அனைவருமே முஸ்லீம்களாகவே இருந்தனர் .அதன் பின்னரை நூஹ் (அலை) காலத்து சற்று முந்திய கால மக்கள்தான் முதன் முதலில் மேற்கண்ட சிலை வணக்கத்தை துவங்கினர் .

" என் மக்களே... நீங்கள் அல்லாஹ் ஒருவனையே வணங்குங்கள் ( மாறு செய்தால் ) உங்களுக்கு (வரக்கூடிய) மகத்தானதொரு நாளின் வேதனையை நினைத்து நான் பயப்படுகிறேன்."
குர்ஆன் ( 7 : 59 )

"நூஹே.... நிச்சயமாக நிச்சயமாக எங்களுடன் அதிகமாகவே தர்க்கம் செய்கிறீர்கள் ( இனி தர்க்கத்தை விட்டொழித்து வேதனை வரும் என்று கூறுவதில்) நீங்கள் மெய்யாகவே உண்மை சொல்பவராக இருந்தால், நீங்கள் அச்சமுறுத்தும் அந்த வேதனை நம்மிடம் கொண்டு வாருங்கள்"
குர்ஆன் ( 11 : 32 )

"முன்னர் நம்பிக்கைக் கொண்டவர்களைத் தவிர இனி உங்களுடைய மக்களில் ஒருவரும் நம்பிக்கை கொள்ள மாட்டார்கள் . ஆதலால் அவர்களுடைய செயலைப் பற்றி நீங்கள் விசாரப்படாதீர்கள் (கவலைப்படாதீர்கள்) "
குர்ஆன் ( 11 : 36 )

"என் இறைவனே .. பூமியில் இந் நிராகரிப்பாளர்களை ஒருவரையும் நீ வசித்திருக்க விட்டு வைக்காதே "
குர்ஆன் ( 71 : 26 )

"என் வேதனை இறங்கும் முன் கப்பலை கட்டிக் கொள்ளுங்கள் " என்ற கூற.

நபியவர்களுக்கு " கப்பல் "என்ற வாகனம் பற்றி தெரியவில்லை . "அது ஒரு பறவையே போன்று அமைக்கப்பட வேண்டும் என்றும், அதனுடைய தலை மயிலின் தலை போன்றும் . கண்கள் கழுகின் கண்கள் போன்றும் . நெஞ்சு புறாவின் நெஞ்சு போன்றும் , வால் சேவலின் வால் போன்றும் இருக்கும் என்றும் கூறப்பட்டது

கப்பல் கட்டப்பட்டது .

"பலகைகள் மற்றும் ஆணிகள் உடைய (கப்பல்) ஒன்றில் அவரை ஏற்றினோம் . அது நமது கண்காணிப்பில் ஓடியது "
குர்ஆன் ( 29 : 15 )

அதைப் பார்த்த மக்கள் " இது என்ன ? " என்று கேட்டார்கள் ஏனென்றால் அதற்கு முன்பு யாரும் கப்பலை பார்த்ததே இல்லை இதுதான் பூமியில் கட்டப்பட்ட முதல் கப்பல் .

அதற்கு நூஹ் , " இது மிதக்கும் வீடு " என்றார்.

மக்கள், "மிதக்கும் வீடா ? இங்கேதான் நீரே இல்லையே " என்றனர்.

நூஹ் " வரும். நீர் இங்கேயே வரும்.

கப்பல் கட்டி முடிக்கப்பட்டது. மழையும் தூபான் வெள்ளமும் சூழ்ந்தது.

நூஹ் (அலை) அவர்கள் உயிரினங்களில் ஒவ்வொரு ஜோடிகளையும் தம்மைச் சார்ந்தவர்களையும் ஏற்றிக் கொண்டு பரிவாரத்தோடு ரஜப் மாதம் 10 ஆம் நாள் வெள்ளிக்கிழமை கூபாவில் இருந்து (சிலர்இந்தியாவிலிருந்து ) கப்பல் புறப்பட்டது .

கப்பலில் நபியின் முஸ்லீம் மனைவியும் அவருடைய மக்களான ஹாம், ஸாம் , யஃபித் மற்றும் மனிதர்களும் ஏறிக் கொண்டனர்.

முஸ்லீமாக இருந்து பின் நிராகரிப்பாளர்களோடு சேர்ந்து கொண்ட முன்னாள் மனைவியான வாஇலா வும் அவளுக்கு பிறந்த கன்ஆன்னும் கப்பலில் ஏறவில்லை.

துல்கஃதா மாதம் 10 ஆம் நாள் தரை தட்டி நின்றது .

1969 ஆகஸ்ட் 2 ந் தேதி ரஷ்ய எல்லையை ஒட்டி அமைந்துள்ள அராரத் மலை தொடரில் ஒரு கப்பலின் சில மரப் பகுதிகளை அமெரிக்கத் தொல்பொருள் விஞ்ஞான ஆய்வுக் குழு கண்டு பிடித்தது இம்மலையின் மேற்பகுதியில் பதினான்காயிரம் அடி உயரத்தில் பனியால் மூடப்பட்ட பாறைகளுக்கிடையில் 20 மீட்டர் ஆழத்தில் புதையுண்டு கிடந்தன.

"அக் கப்பலை அகிலத்தாருக்கோர் அத்தாட்சியாக ஆக்கினோம் "
குர்ஆன் ( 29 : 15 )

" ஸலாமுன் அலா நூஹூ " அகிலங்கள் எங்கும் நூஹூ மீது ஸலாம் உண்டாவதாக " குர்ஆன் ( 37 : 79 )

உலகத்தின் பழைய நாகரிகங்கள் அனைத்திலும் பிரளயத் தொன்மம் காணப்படுகிறது .

" கில்கமெஷ் " என்ற புராதானப் பாபிலோனிய காவியத்தில் 'உட்னா பிஷ்டிம் ' என்பவர் தெய்வீக வழிகாட்டுதல்படி கப்பல் கட்டி பிரளயம் வந்தபோது அதில் ஏறித் தப்பித்தாகக் கூறப்பட்டுருக்கிறது

மற்றொரு பாபிலோனிய கதையில் பிரளயத்தில் கப்பல் ஏறி தப்பித்தவர் ஸிஸோத் ராஸ் (**Xisouthros )** என்று இருக்கிறது

சுமேரிய கதைகளில் தப்பித்தவர் பெயர் ஸியூ சுத்ரா (**Ziu-sud-ra)** என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது இது மேற்கண்ட பெயரோடு பெரும்பாலும் ஒன்றுபடுகிறது

நோவாவின் பெயர் "ஸாகுப் "என்றோ " ஸகுன் " என்றோ இருந்ததாக அறிஞர்கள் சிலர் கருதுகின்றனர்

ஹுர்ரியக் கதையில் தப்பித்தவர் பெயர் "நாஹ் மொலெல் " என்று இருக்கிறது இப்பெயர் " நூஹ் " என்ற பெயருடன் ஒன்றுபட்டு இருப்பது தெரிகிறது .

கப்பலில் ஏறி தப்பித்தவர் பெயரில் வேறுபாடு இருப்பினும், பிரளயத்தில் கப்பலில் தப்பித்த தொன்மம் ஒன்றாக இருக்கிறது என்பதாக வரலாற்று ஆய்வு அறிஞர்கள் பலர் கருத்து தெரிவித்துள்ளனர்

முதன் முதலாக உலகில் தோண்டப்பட்ட மண்ணறை 2 26-07-2020



ஆதிகாலத்து மனிதருக்கு இறந்த உடலை எவ்வாறு மறைப்பது என்பது தான் கவலையாக இருந்தது. இப்போதுள்ள நவீன மக்களுக்கு தாங்கள் இறந்த பிறகு தங்கள் உடலை எப்படி மறைப்பது என்ற கவலை அதிகமாகிவிட்டது .

உலகத்திலேயே ரொம்பவும் காஸ்ட்லியான சாவு என்பது ஜப்பானியர்களுக்கத்தான் நேருகிறது . அங்கு தனி ஒருவரின் இறுதிச் சடங்குக்கு சராசரியாக 15 முதல் 20 லட்சம் வரை செலவாகிறது. ஒட்டுமொத்தமாகப் பார்த்தால் ஜப்பானின் சாவு பிசினஸ் என்பது ஒரு லட்சம் கோடி' யென் 'வரை பணம் புரள்கிறது . மரணம் நிறைய பணம் புரளும் ஒரு பெரிய இண்டஸ்ட்ரி . 'மெமோரியல் ' எனப்படும் சடங்கு செய்ய நட்சத்திர ஓட்டல்களும், மண்டபங்களும் வாடகைக்கு விடுகின்றனர். தனியார் கம்பெனிகள் கலர்கலரா அச்சடித்த விலை விபரப் பட்டியலுடன் ஃப்யுனரல் சர்வீஸ் என்று ஆரம்பித்து காரியம் முழுவதையும் காண்ட்ராக்ட்டில் செய்து தருகிறார்கள்.

எங்கேயாவது ஒரு மரணம் வந்தால் போதும் கழுகு மாதிரி வந்து சூழ்ந்து கொண்டு விடுவார்கள் துக்கத்தில் இருக்கும் உறவினர்கள் அந்த நேரத்தில் பிசுகிப் பிசுகிப் பேரம் பேச கூச்சப்படுவார்கள் என்பதை சாதகமாக்கிக் கொண்டு ஆஸ்பத்திரி ஆம்புலன்ஸ் முதல் பூசாரி, பூக்காரி என்று எல்லோரும் கூட்டு சேர்ந்து கொள்ளை லாபம் அடிக்கிறார்கள்.

கைக்குட்டையில் பரப்பளவை உள்ள ஐரோப்பிய நாடுகள் பலவற்றிலும் இடுகாடுகள் இடநெருக்கடி ரியல் எஸ்டேட் விலை எல்லாம் ஏகத்துக்கு ஏறி கிடப்பதால் செத்தவர்களை பிழைக்க இடமில்லை ..எரித்துவிடலாம் என்றாலோ சுற்றுச்சூழல் கெடுகிறது மத நம்பிக்கைகள் மற்றும் பிசாசு பயத்தினாலும் பிணங்களை எரிக்க தயங்குகிறார்கள் விளைவு கல்லறைகள் முழுவதும் நிரம்பி மூச்சு விடுத் திணறுகின்றன

பல ஐரோப்பிய மையங்கள் பதினெட்டு பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஏற்படுத்தப்பட்டவை .லண்டனில் பழமையான இடு காடுகளை எல்லாம் ஹவுஸ்புல் போர்டு போட்டு ஒவ்வொன்றாக மூடிக் கொண்டு இருக்கிறார்கள் . இன்னும் 10 வருடத்தில் யார் செத்தாலும் "நோ அட்மிஷன் திரும்பிப்போ " என்று துரத்தப் போகிறார்கள்.

வருடாவருடம் குடும்பத்தினருடன் சென்று மலர்கொத்து வைப்பதற்காக சமாதிகளை பாதுகாக்க வேண்டிய அவசியம் . உடலை புதைக்கும் போது 80 சதவிகித மேட்டர் விரைவில் கரைந்து போய் விட்டாலும் எலும்பு மண்டையோடு போன்ற கடினமான பகுதிகள் வருடக்கணக்கில் அப்படியே இருக்கும் அண்டை நாடான அமெரிக்காவில் இருக்கும் இடுகாடுகள் பிரச்சனை இப்போது உள்ள காடு கரம்புகள் எல்லாம் 2040 வரைதான் தாங்கும் என்கிறார்கள்

அரசாங்க அதிகாரிகள் கமிட்டி போட்டு புறம்போக்கு நிலம் ஏதாவது அகப்படுகிறதா என்று தேடிக் கொண்டிருக்கிறார்கள். செயின்ட் லாரன்ஸ் இடுகாடு 100 ஏக்கருக்கும் நெருங்கிவிட்டதால் டபுள் டெக்கர் பஸ் மாதிரி ஒன்றன் மீது ஒன்றாக புதைக்க ஆரம்பித்துவிட்டார்கள் .

தனியார் நடத்தும் இடுகாடாக இருந்தால் ஆறு நிலத்தை லீசுக்கு எடுத்து வருடாவருடம் வாடகை கட்ட வேண்டும். செத்த பிறகு திரும்பி வரப் போகிறார்கள் என்ற எண்ணத்தில் பிள்ளைகள் பெற்றோர்களை நாய் நரிக்கு தூக்கிப் போட்டு விடுவார்கள் என்ற கவலை அங்கு உள்ள பெற்றோர்களுக்கு இப்போதே கவலை தொற்றிக் கொண்டுள்ளது எனவே பெற்றோர்கள் இப்போதே தன் இடத்தை துண்டு போட்டு ரிசர்வ் செய்ய தான் சம்பாதித்த மொத்த பணத்தையும் செலுத்துகிறார்கள்.

லண்டனில் மரணிக்க விரும்புபவர்கள் 4 ஆயிரம் பவுண்ட் கொடுத்து முன்பதிவு செய்து வைக்க வேண்டும்.50 வருஷத்திற்கு லீஸ் நகர்ப்புறங்களை ஒட்டிய இடங்களில் விவசாயம் பார்த்துக் கொண்டிருந்தவர்கள் எல்லாம் நிலத்தை இப்படி லீசுக்கு விடுவது லாபம் தருகிறது என்று கண்டு கொண்டு வேகமாக சமாதி பிஸினஸுக்கு மாறிக்கொண்டு இருக்கிறார்கள் . இவர்களின் ரவுசு தாங்காமல் பெரிய நிறுவனங்கள் பென்ஷன் பிராவிடண்ட் பண்ட் சலுகைகள் தருவது போல தங்கள் ஊழியர்களுக்காக மயான்கள் கூட நடத்த ஆரம்பித்து விட்டார்கள். கம்பெனி பெயர் பொறித்து ஓடாய் உழைத்த ஒரு ஜெனரல் மேனேஜர் இங்கு உறங்குகிறார் என்று கல்வெட்டு நடுகிறார்கள் .

மக்கள் உயிர் வாழ்வதற்கு இடமில்லாத ஜப்பானில் மாண்டவர் ஒவ்வொருவருக்கும் ஆறடி நிலம் ஒதுக்குவது சாத்தியமில்லை. எனவே ஓஹாகா மேன்சன் என்று அடுக்குமாடி கட்டிடங்களில் இடுகாடு அமைத்துத் தருகிறார்கள் முதல் மாடி கார் பார்க்கிங் அதற்கு மேலே இறுதிச்சடங்கு பிராத்தனை எல்லாம் செய்யும் கூடங்கள் மூன்றாவது மாடியிலிருந்து இடுகாடு ஆரம்பம் வரிசை வரிசையாக பேங்க் லாக்கர் போன்ற இழுப்பறையில் இறந்தவர்களை சீல் செய்து விடுகிறார்கள். லாக்கர் முகத்தில் சின்னதாக கம்ப்யூட்டர் தொடுதிரை அதை தொட்டால் உள்ளே உறங்குபவரின் படம் ,அவர் வாங்கிய பட்டங்கள், வென்ற போர்கள் கட்டின மனைவிகள் எல்லாம் விரிகின்றன. பார்வையாளர்கள் அதிலேயே தங்கள் இரங்கல் செய்தியையும் பதிவு செய்து கொள்ளலாம் "எங்கள் லாக்கருக்கு 4 லட்சம் யென்தான் சல்லிகள்
சாகலாம் வாரீர்" என்ற விளம்பரம் வேறு ! இதைக் கண்டு நொந்த சில புத்த பிட்சுகள் இயற்கை வழியில் ஆங்காங்கே மரத்தடியில் உடல்களை புகைக்கும் பழக்கத்தை ஏற்படுத்த முயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள் .

வேறு ஒரு கோஷ்டியினர் தரையில் புதைக்க இடமில்லை என்று சொல்லாதீர்கள் நாங்கள் நீர் நிலம் நெருப்பு ஆகாயம் காற்று என பஞ்ச பூதங்களையும் ஒரு கை பார்த்து விடுகிறோம் என்று ஆரம்பித்து விட்டார்கள் . அமெரிக்காவில் கடற்படை அதிகாரி இறந்தால் உடல் ராணுவ மரியாதையுடன் கடலில் சேர்ப்பது இன்னும் தொடர்கிறது .

ஆனால் ஹைடெக் புதையல் என்றால் விண்வெளி புதையல்தான். 1999இல் விஞ்ஞானி சூமேக்கர் இறந்தபோது அவரது சாம்பலை சந்திரனுக்கு அனுப்பினார்கள். இன்னும் கொஞ்சம் சுலபமாக செய்ய வேண்டுமென்றால் இறந்தவரின் சாம்பல் அல்லது செல்லமாக அவர் வளர்த்த வளர்ப்புப் பிராணிகளின் சாம்பல் கூட சின்ன டப்பாவில் அடைத்து வைத்து மேலே அனுப்பி " பூமியை சுற்றி வா" என்று ஏவி விடுவதற்கு தனியார் ஸ்பேஸ் நிறுவனங்கள் இருக்கின்றன. இதுவரை விண்வெளியில் நூற்றுக்கணக்கானவர்கள் இப்படி விண்வெளியில் புதைக்கப்பட்டு இருக்கிறார்கள். மேலே சென்றது குறைந்தது 250 வருடமாவது பூமியை சுற்றிக் கொண்டிருக்கும் ."எங்க வீட்டுக்காரரை விண்வெளியில் அல்லவா வைத்திருக்கிறோம் " என்று பெருமை அடித்துக் கொள்வதற்கு மனைவிகள் ஆயிரக் கணக்கான டாலர்கள் செலவழிக்கிறார்கள் .

மரணம் விற்கிற விலையை பார்த்தால் கூடியவிரைவில் கொழுத்த பணக்காரர்களுக்கு மட்டும்தான் சாவதற்கு கட்டுபடியாகும் போலிருக்கிறது உணர்வுபூர்வமான எந்தப் பிரச்சினைக்கும் இரக்கமில்லாத தீர்வு ஒன்று வைத்திருக்கும் விஞ்ஞானம் இதற்கும் விடை சொல்கிறது.

இறந்தவர்களை ஆல்கலைன் ஹைட்ராலிஸிஸ் செய்தால் போதும் என்கிறது விஞ்ஞானம். அதென்ன ?

இறந்தவர் உடலை ஆள் சைஸ்க்கு உள்ள பிரஷர் குக்கரில் சோடா காரம் சேர்த்து வேக வைத்து அப்படியே கஞ்சி மாதிரி காய்ச்சி விடலாம் . அந்த வெப்பத்திலும் கெமிக்கல் காரத்திலும் எலும்புகள் என்ன கிருமிகள் பாக்ட்ரியாக்கள் ஏதும் மீதி இருக்காது . கரும் பழுப்புத் தேன் போல இருக்கும் . அந்த திரவத்தை அப்படியே பாய்லெட்டில் கொட்டி 4 பக்கெட் தண்ணீரை ஊற்றினால் பிரச்சனை தீர்ந்தது . விஞ்ஞானிகள் பேச்சை கேட்டு நெருங்கிய உறவினர்களை சாக்கடையை கரைத்துவிட , அங்கு என்னவெல்லாம் மிதக்குமோ எத்தனை பேருக்கு மனம் வரும் என்பது தெரியவில்லை . ஆனால் அமெரிக்காவில் இரண்டு மாநிலங்களில் ஹைட்ராலிஸிஸ் சட்டப்படி செல்லும். விலைவாசி இருக்கிற இருப்பில் மற்றவர்களும் வேறு வழியின்றி இந்த புது டெக்னாலஜி மாறும் நாள் அதிக தொலைவில் இல்லை என்கிறார்கள் விஞ்ஞானிகள் . அதுசரி பாத்ரூமுக்கு போகும் போதெல்லாம் ஹைட்ராலிஸிஸ்
செய்யப்பட்ட பெரியப்பா ஞாபகம் வந்தால் என்ன செய்வது ?

இஸ்லாத்தில் மட்டும்தான் மரணத்தின் செலவு குறைவு .

இதெல்லாம் நவீன கால மரணத்தின் பிரச்சனைகள் ஆதிகாலத்தில் ஆதி முதல் மனிதர் ஆதம் (அலை ) மகன்களில் ஒருவரான காபீல் தன் சகோதரான ஹபீலை ஒரு பெண் விஷயத்திற்காக கொன்ற போது , அந்த பிணத்தை என்ன செய்வது என்று தெரியாமல் மரஞ்செடி முதலியவை இல்லாத ஒரு காட்டில் போட்டு விட்டார் என்றாலும் மிருகங்கள் தன் சகோதரனின் உடலைத் தின்று விடுமோ
என்ற எண்ணத்தால் அதனை ஒரு கூடையில் போட்டு தனது முதுகின் மீது வைத்து நாற்பது நாட்கள் வரை சுமந்து கொண்டு அலைந்தார் , ஒரு வருடம் சுமந்து திரிந்த தாகவும் கூறப்படுகிறது

பிறகு இறைவன் இரண்டு காகங்கள் அனுப்பினான் அவைகள் சண்டை போட்டுக்கொண்டு இறுதியாக ஒன்று செத்தது .மற்றொன்று தனது அலகினாலும், காலினாலும் பூமியில் பள்ளம் பறித்து அதற்குள் அக்காகத்தை இழுத்துக்கொண்டு வந்து தள்ளி மணலைப் போட்டு மூடி விட்டது . இதனை காபீல் பார்த்துக் கொண்டிருந்து தனது சகோதரின் உயிரற்ற உடலை மண்ணறை தோண்டி அதில் அடக்கினார். எனவே உலகத்தில் முதன்முதலில் மண்ணறை தோண்டியது காகமே !

فَبَعَثَ اللّٰهُ غُرَابًا يَّبْحَثُ فِى الْاَرْضِ لِيُرِيَهٗ كَيْفَ يُوَارِىْ سَوْءَةَ اَخِيْهِ‌ قَالَ يٰوَيْلَتٰٓى اَعَجَزْتُ اَنْ اَكُوْنَ مِثْلَ هٰذَا الْغُرَابِ فَاُوَارِىَ سَوْءَةَ اَخِىْ‌ فَاَصْبَحَ مِنَ النّٰدِمِيْنَ ‌ۛ

பின்னர் தம் சதோதரரின் பிரேதத்தை (அடக்குவதற்காக) எவ்வாறு மறைக்க வேண்டுமென்பதை அவருக்கு அறிவிப்பதற்காக அல்லாஹ் ஒரு காகத்தை அனுப்பினான்; அது பூமியை தோண்டிற்று (இதைப் பார்த்த) அவர் "அந்தோ! நான் இந்த காகத்தைப் போல் கூட இல்லாதாகி விட்டேனே! அப்படியிருந்திருந்தால் என் சகோதரனுடைய பிரேதத்தை நான் மறைத்திருப்பேனே!" என்று கூறி, கை சேதப்படக் கூடியவராகி விட்டார்.
(அல்குர்ஆன் : 5:31)

முதன் முதலாக உலகத்தில் தலையில் கிரீடம் தரித்த கொடுங்கோல் அரசன் 3 27-07-2020



நம்ரூது என்பவன் இறைத்தூதர் இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் காலத்தில் வாழ்ந்த ஓர் கொடிய அரசன்.

ஷினார் (மெசப்பொட்டோமியா) பகுதியை ஆட்சி செய்தவன் என்று பைபிள் குறிப்பிடுகிறது.

பாபெல் கோபுரத்தைக் கட்டியவன் என்றும் பதிவுகள் உண்டு. நம்ரூது, நபி இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கொண்டு வந்த இறைச் செய்தியை மறுத்ததுடன் அவர்களை நெருப்பினுள் இட்டுக் கொலை செய்யவும் முனைந்தவன். ஆணவத்தின் உருவமாய் வாழ்ந்தவன்.

முதன் முதலில் உலகத்தில் தலையில் கிரீடம் தரித்த கொடுங்கோல அரசன்
நம்ரூது.

இவ்வளவு செல்வாக்கும் கர்வமும் பிடித்த நம்ரூத்தின் மூக்கின் வழியே அற்ப கொசுவை அனுப்பி அவன் மூளையை அது குதற , மண்டைக்குள் புகுந்த கொசுவை வெளியே விரட்ட செருப்பாலே அவன் தலையில் அடிக்கப்பட்டு அதனால் நம்ரூத் செத்தான் என்று குர்ஆன் விளக்கவுரைகள் பகர்கின்றன.

கிரீடம் தரித்த தலையை ஊரில் உள்ளவர்களின் செருப்புகளாலும் அடிக்கப்பட்டதாம் . ம்ஹூம் ...கொசு அவன் மண்டையை விட்டு வெளியே வரவே இல்லை.

"வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்" என்று தமிழிலொரு பழமொழி உண்டு. அது ஓர் ஞான வாசகம். அதே கருத்தில், "எல்லாம் வல்ல இறைவனுக்குக் கொசுவும் ஒரு ஆயுதம்" என்று காட்டுவதாக இந்நிகழ்வை ஸூபியாக்கள் பார்க்கின்றனர்.

”நிச்சயமாக அல்லாஹ் கொசுவையோ அதனினும் அற்பமானதையோ உவமை உரைக்க நாணுவதில்லை” (குர்ஆன்:2:26) #Nasoordeencassim பதிவிலிருந்தும்....

நம்ருத் தான் செத்த பிறகும் தனக்கும் தன் மனைவிக்கும் தங்க ஆபரணங்களைக் கொண்டு அழகுப்படுத்தி புதைக்கச் சொன்னான் .
அவற்றின் இன்றைய மதிப்பு ஒவ்வொருக்கும் 35 மில்லியன் அமெரிக்க டாலருக்கும் அதிகம்.

ர.ரா

முதன் முதலாக விண்ணுலக சொர்க்கத்தை மண்ணுலகில் உருவாக்கிய மன்னன் 4 27-07-2020

அரபு பாலைவனத்தில் தென்மேற்கில் அர்ருப்உல் காலீ எனும் பகுதிக்கும் ஹலரமௌத் எனும் ஊருக்கும் மத்தியில் அமைந்துள்ள பகுதியைத்தான் மக்கள் "அஹ்காஃப் " என்று கூறுகின்றனர் . திருக்குர்ஆனிலும் இங்கு வாழ்ந்த மக்களை "கௌமுல் அஹ்காஃப்" என்றே குறிப்பிடுகிறது. அம் மக்கள் ஆது சமுதாயத்தவர்கள் அவர்களுக்கு வந்த நபி ஹூது (அலை)

நபி நூஹ் (அலை) அவர்களின் மகன் ஸாமின் மகன் இரம்மின் மகன் "உஸ்" என்பவருக்கு எட்டு ஆண். அவர்களின் ஒருவரின் பெயர்
"ஆது"அவரின் வழி வந்தவர்கள்தாம் ஆது மக்கள்

இவர்கள் பிடிவாதக்கார முரடர்கள்
குர்ஆன் ( 11 : 59 )

இவர்கள் 3 பிரிவினராக பிரிந்து யமன் நாட்டில் வாழ்ந்தனர் என்று வரலாற்று ஆங்கில ஆய்வாளர் வெல்லஸ்ட் ஜேம்ஸ் என்பவர் தன் ஆய்வில் குறிப்பிடுகிறார்.

ஆதுக்கள் பெரும் பெரும் பாறைகளை எளிதாகக் தூக்கி எதிரிகளின் மீது போட்டு அவர்களை அழிப்பார்கள்..நாம் பந்தை எறிந்து விளையாடுவதைப் போல . சாதாரணமாக பெரிய பெரிய மரங்களை பிடுங்கி தாக்குவார்கள் ஆயுதங்கள் ஏதும் இல்லாமல் .

"நீங்கள் எவரையும் பிடித்தால் ஈவிரக்கமின்றி கொடுமையாக நடந்துகின்றீர்கள் " குர்ஆன் (20 : 129)

ஆதுக்கள் வாழ்ந்த இடம் நீங்கள் போய்ப் பார்த்தல் தெரியும் சமதளமாக இல்லை ,மணற் குன்றுகள் நிறைந்த பகுதி . குர்ஆன் "அஹ்காஃப் " என்று குறிப்பிடுகிறது .இப்பகுதியில் வாழ்ந்தவர்களை "கௌமுல் அஹ்காஃப்" என்றழைக்கிறது பள்ளத்தாக்குகளில் மிகவும் கெட்டவை அஹ்காஃப் பள்ளத்தாக்கு (பள்ளத்தாக்குகளில் சிறப்பானது கஃபா இருக்கக் கூடிய பாரான் பள்ளத்தாக்கு )

மலைகளைக் குடைந்து மண்டபம் செய்து அதனை அங்கரித்து (படம் ) அதில் உல்லாசமாக வாழ்ந்தனர். ஒவ்வொருவரும் ஒவ்வொரு ஒட்டகத்தை அறுத்து சுட்டு உண்ணக் கூடியவர்கள் இதனால் இறைவன் பெருகும் ஒட்டகை மந்தைகளையும் , பேரீச்ச மரங்களில் செழிப்பையும் ஏற்படுத்தி இருந்தான். இதனைக் குறித்தே இறைவன் குர்ஆனில் ....

"உங்கள் உடலில் பலத்தை அதிகமாக்கியதை நினைவு கூறுங்கள்" குர்ஆன் (7 : 69 )

ஆது மக்களின் அரசனாக ஷத்தாத் முடிசூடிக் கொண்டான் . உருவச்சிலைகளை வணங்கும். அவனிடம் ஹூத் (அலை) ஏகத்துவத்தை போதித்தார்கள் .

"உங்களது உருவமற்ற இறைவனை வணங்கினால் என்ன கிடைக்கும் சொல்லு ஹுதே ? "

"சொர்க்கம் "

"எப்படி இருக்கும் உன் இறைவனின் சொர்க்கம் ?"

"தங்கத்தாலும் ,மணி முத்துக்களாலும் , வைர வைடூரியங்களாலும் அது உருவாக்கப்பட்டது."

" ப்பூ .... அவ்வளவுதானே ?... அந்த சொர்க்கத்தை பூலோகத்திலேயே நானே உருவாக்கிக் கொள்கிறேன்" என்று தன் கீழ் உள்ள சிற்றரசர்கள் அத்தனை பேரிடமும் மேற்கண்ட தங்கம் போன்றவற்றை உடனடியாக கொண்டு வரச் சொன்னான் .

பூலோக சொர்க்கம் தன்னுடைய 600 வயதில் உருவாக்கப்பட்டு 900 வயதில் கட்டி முடிக்கப்பட்டது . இதற்கு "இறமதாத்தில் இமாத்" என்ற பெயரும் சூட்டப்பட்டது.
اَلَمْ تَرَ كَيْفَ فَعَلَ رَبُّكَ بِعَادٍ
உம்முடைய இறைவன் ஆ(து கூட்டத்)தை என்ன செய்தான் என்பதை நீர் பார்க்கவில்லையா? (அல்குர்ஆன் : 89:6)
اِرَمَ ذَاتِ الْعِمَادِ
(அவர்கள்) தூண்களையுடைய “இரம்” (நகர) வாசிகள்,
(குர்ஆன் : 89:7)
الَّتِىْ لَمْ يُخْلَقْ مِثْلُهَا فِى الْبِلَادِ
அவர்கள் போன்ற ஒரு சமுதாயம் எந்த நாடுகளிலும் படைக்கப்படவில்லை. (அல்குர்ஆன் : 89:8)

பூலோக சொர்க்கத்திற்கு கோலாகலமான திறப்பு விழா . தன் சமூக மக்கள் புடை சூழ ஷத்தாத் அங்கு வந்தான் . அந்த நேரம் பார்த்து அந்த இடத்தில் பொன் நிற மான் ஒன்று மேயக் கண்டான் . ஏற்கனவே மயில்கள் ,குயில்கள், அன்னப்பறவைகள் , முயல்கள் போன்றவற்றை கொண்டு அழகுப்படுத்தப்பட்ட பூலோக சொர்க்கத்தில் பொன் மான் மேய்ந்தால் இன்னும் அழகாக இருக்குமே...

பொன்மானை பிடிக்க விரட்டினான் ஷத்தாத் , கூடவே அவன் சமூகமும் விரட்டியது . அது இறக்கை கொண்டு பறக்க ஆரம்பித்தது . அந்த இடத்தில் பார்க்க அச்சமுற தோற்றத்தில் ஒரு ஆள்,

"பூலோகத்தில் சொர்க்கம் கட்டினால் இறப்பே வராத இறைவன் என்ற நினைப்போ ? " என்றார் அந்த ஆள் .

" யார் நீ ?"

"இஸ்ராயீல் "

" இங்கு என்ன செய்ய வந்தீர் ?"

" உன் உயிரை வாங்க "

ஒரே ஒரு சப்தம் ஷத்தாத் உட்பட அத்தனை பேரும் மாண்டனர் ... இப்படி ஒரு வரலாறு பேசுகிறது

இறமதாத்தில் இமாத் என்ற பூலோக சொர்க்த்தை திறக்க அதன் தலைவாயிலுக்கு வந்து ஷத்தாத் வலது காலை முன்வைத்து இடது காலை தூக்கும் அந்த இடவெளி நேரத்தில் அவன் உயிர் வாங்கப்பட்டது. இப்படி ஒரு வரலாறும் பேசுகிறது.

அந்நகரை போல் வேறு ஒரு நகரம் சிருஷ்க்கப்படவில்லை என்று கூறப்படும் கருத்தைத் தழுவி முஆவியா (ரலி) அவர்கள் காலத்தில் ஒரு நகரம் பூமிக்கு அடியில் புதைந்திருப்பது கண்டுபிடிக்கப்பட்டதாகவும் , அந்நகரின் தூண்கள் மாணிக்கங்கள் வைடூரியங்கள் முதலியவற்றால் அலங்கரிக்கப்பட்டு இருந்ததாகவும் தங்கங்கள் நிரம்ப இருந்ததாகவும் சொல்லப்படுகிறது .

அப்துல்லாஹ் இப்னு குலாபா என்பவர் காணாமல் போன தனது ஒட்டகங்களை தேடிக்கொண்டு காட்டில் சென்றபோது இந்நகரம் புதைந்திருப்பதைக் கண்டு பிடித்து அதிகாரிகளுக்கு அறிவித்ததாகவும், இந்நகரம்தான் திருக்குர்ஆனில் கூறப்பட்டிருக்கும் நகரம் என்றும் கஃபுல் அஹ்பார் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் தெரிவித்ததாகவும் கூறப்படுகிறது.

காலச் சக்கரம் சுழன்றது .

இறைவன் : "இஸ்ராயீலே , நீர் எப்போதாவது எவர் மீதாவது இரக்கம் கொண்டிருக்கிறீரா ?"

"ஆம் இறை பெரியோனே !...ஒரு தடவை நடுக் கடலில் கப்பல் ஒன்று புயல் காற்றில் அலைக்கழித்து கவிழ்ந்து அத்தனை பேரின் உயிரும் வாங்கப்பட்டது.

அத்தருணத்தில் ,ஒரு கர்ப்பிணி ஆண் குழந்தை ஒன்றைப் பெற்றெடுத்து மிதக்கும் சிறிய மரத்துண்டில் வைத்து நீந்தினாள் . அந்த சமயம் அவள் உயிரையும் வாங்க ஒரு மீன் அவளை கடித்து குதறி விழுங்கியது .இந்த நிகழ்வு என்னை இரக்கப்பட வைத்தது " என்றார் இஸ்ராயீல் (அலை) அவர்கள்.

"அடுத்து ?" என்று கேட்டான் இறைவன்

ஷத்தாத், பூலோக சொர்க்கத்தை சுகிச்சு சுகிச்சி கட்டினான் . அத்தனை வருடம் கட்டிய அந்த பூலோக சொர்க்கத்தை ஒரு தடவையாவது அவன் முழுமையாக உள்ளே போய் பார்ப்பதற்குள் அவன் உயிர் வாங்கியது எனக்கு ரொம்பவும் இரக்கமாக இருந்தது என்றார் இஸ்ராயீல் (அலை) அவர்கள் .

"தாயில்லாமல் அன்று கடலில் தத்தளித்த அந்த ஆண் குழந்தைதான்
இந்த ஷத்தாத் " - என்றான் இறைவன்

உயிர் வாங்கும் இஸ்ராயீல் (அலை) அதிர்ந்து விட்டார்கள் .

ர.ரா





ஆது மகன் ஷத்தாதைப் பற்றி இன்னும் கொஞ்சம் சொல்லுங்களேன் என்று நண்பர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க....

இறைவன் கடல் அலைகள் இருந்து அவனை காப்பாற்றி கரை சேர்த்தான். கரையில் ஒரு குழந்தை வந்து ஒதுங்கி இருப்பதை கண்ட அவ்வூரின் தலைவன் அதன் அழகிலும் வனப்பிலும் மயங்கி அதனை தன் இல்லம் எடுத்துச் சென்று தன் மகன் என கருதி வளர்த்து வந்தான்

ஷத்தாத் ஏழு வயதிலேயே கூரிய அறிவு வாய்க்கப் பெற்றிருந்தான் ஒரு நாள் அவன் தன் வயதையொத்த சிறுவர்கள் உடன் ஊருக்கு வெளியே சென்று விளையாடிக்கொண்டிருந்தான் அப்பொழுது அரசர் ஒருவர் தம் படையுடன் வருபதைக் கண்டு மற்ற சிறுவர்கள் எல்லாம் பயந்து ஓடிவிட்டனர் ஷத்தாத்து மட்டும் அங்கு அஞ்சாது நின்று கொண்டிருந்தான்.

படையணியின் இறுதியில் இருவர் வந்து கொண்டிருந்தனர் அவர்களில் ஒருவன் அங்கு கடந்த ஒரு பொட்டலத்தை எடுத்து பிரித்துப் பார்த்தான் அதில் சுருமா இருப்பதை கண்டு எனக்கு கண்பார்வை சற்று குறைவாக இருக்கிறது எனவே நான் அதில் சிறிது எடுத்து என் கண்களை தடவிக் கொள்ள வா ? என்று தன் நண்பனை கேட்டான்

"தடவிக்கொள்ளலாம்தான் ஆனால் உள்ள பார்வையும் தொலைந்து போய்விட்டால் என்ன செய்வது ?" என்றான் அவன் எனவே அவ்விருவரும் தம் எதிரே சற்று தொலைவில் நின்று கொண்டிருந்த ஷத்தாதை அழைத்து அந்த சுர்மாவின் தன்மையை சோதிக்க எண்ணி, " தம்பி இதோ சுர்மா உள்ளது கண்ணில் தடவிக் கொள் கண் நன்றாக தெரியும் " என்று கூறி அவனுடைய கண்களில் தழுவி விட்டனர்.

அவ்வளவுதான் சத்தத்தின் கண்கள் முன்னே விட பன்மடங்கு தெளிவாக தெரிந்தன மண்ணுக்குள் புதைந்து கிடக்கும் புதையல்கள் எல்லாம் கூட அவனால் நன்கு பார்க்க இயன்றது .

எனினும் கூரிய அறிவு படைத்த அவன் " "இந்த ரகசியத்தை அவர்களிடம் கூறக் கூடாது கூறினால் , அவர்கள் தம் கண்களில் தடவி மண்ணில் புதையுண்டு கிடக்கும் பொருட்களை எல்லாம் அவர்கள் எடுத்துக் கொள்வார்கள் " என்று எண்ணி , பாவி மக்களே ! எதையோ என் கண்களில் தடவி என் பார்வையை போக்கடித்து விட்டீர்களே என்ன அநியாயம் இது இதனை அரசனிடம் கூறி உங்களுக்குத் தக்க தண்டனை வாங்கித் தருவேன் என்று எழுதினால் அது கேட்டு அவர்கள் அந்த பொட்டலத்தை தூக்கி எறிந்து விட்டு விட்டு ஓடிவிட்டார்கள் அதன்பின் அந்த பொட்டலத்தை எடுத்துக் கொண்டு இல்லம் அந்த சத்தம் நடந்த செய்திகள் அத்தனையும் தன் வளர்ப்புத் தந்தையிடம் கூறி அவனையும் மற்றும் தன் நண்பர்களையும் சேர்த்துக் கொண்டு இரவில் பதிவுகளை தேடி தோண்டி எடுத்து தமில்லம் கொண்டுவந்து சேர்த்தான் எந்த நாட்டுக்கு செல்லினும் அந்த நாட்டு நயவஞ்சத்தனமாக அரசர்களை எல்லாம் கொலை செய்து அவனுடைய கருவூலங்களையெல்லாம் கைப்பற்றுவான்.

முதன் முதலாக உலகில் ஓரினச் சேர்க்கையை அறிமுகப்படுத்தியவர்கள் 5 27-07-2020



இனி ஆண் - பெண் திருமணங்களைப் போலவே ஆண் - ஆண் திருமணங்களும் பெண் - பெண் திருமணங்களும் செய்து கொள்ளலாம் . பிரான்ஸ் ஓரினப் புணர்ச்சியாளர்களின் கடும்போராட்டங் களுக்கு பிறகு பாராளுமன்றத்தில் ஓரின புணர்ச்சியாளர்களுக்கு ஆதரவாக 331 ஓட்டுகளும் எதிராக 225 ஓட்டுகளும் பெற்று ஓரினப் புணர்ச்சியாளர்களுக்கு திருமண அனுமதி சட்ட மசோதா நிறைவேற்றப்பட்டது . ஒரு மனதாக நிறைவேற்றப்பட்டது .

இதனைத் தொடர்ந்து அமெரிக்கா கொலராடோ மாகாணத்தில் ஓ.பு திருமணத்திற்கு உரிமம் வழங்கப்படுகிறது .

ஜப்பான் தலைநகர் டோக்கியோவில் ஓரினப் புணர்ச்சியாளர்கள் வெட்கமே இல்லாமல் இணைந்து புனைந்து வாழ உரிமம் கேட்டு முத்தமிட்டபடியும் கட்டிப்பிடித்தப்படியும் ஊர்வலம் போய் போராடி வருகிறார்கள் .

விலங்குகளோ, பறவைகளோ, வேறு எந்த ஜீவராசிகளோ இந்த கெட்ட செய்கையை செய்ததில்லை .

இந்த மானக்கேடான செய்தி 5000 வருடங்களுக்கு முன் வாழ்ந்த இப்ராஹீம் (அலை) அவர்களின் மனைவி சாரா அவர்களுக்கு சிரிப்பை வரவழைத்ததாக குர்ஆன் (11 : 71 ) ல்...

"அச்சமயம் அங்கு நின்று கொண்டிருந்த அவருடைய கிழ மனைவி லூத் நபியின் மக்கள் செய்யும் தீய மானக்கேடான இக் காரியங்களை செவியுற்று சிரித்தாள் "

சுமார் கி.மு 2061 முதல் கி.மு 1919 முஹர்ரம் பிறை 10 வெள்ளிக்கிழமை வரையுள்ள ஜோர்டான் நாட்டின் வரலாற்றை திருப்பிப் பார்ப்போம்.

"முதஃபகாத் " என்பது ஜோர்டான் நதி தீரத்திலுள்ள ஸதூம் . ஆமோரா , ஆதாம் , ஸ்போயின் , ஸுஙுக்கு என்னும் 5 நகரங்களைக் கொண்ட ஒரு நாடு . முதஃபகாத் தலைநகர் ஸ்தூம் , நபி லூத் (அலை) அவர்கள் நபியாக அனுப்பப்பட்டார்கள் . 37 வருட காலமாக ஏகத்துவத்தையும் , சுய ஒழுக்கத்தையும் போதித்தார்கள் இவர்கள் நபி இப்ராஹிம் (அலை) அவர்களின் தம்பி .

முதஃபகாத் செழிப்பான பூமி எனவே வறுமையுள்ள பக்கத்து நாட்டு மக்கள் தர்மம் கேட்டு வந்தனர். முதஃபாகத் மக்களும் வாரி வாரி வழங்கினர்.

நாளடைவில் இரவு பகல் பராது தர்மம் கேட்க , இது பெரும் தொல்லையாக விட்டது. இப்லீஸ் வயோதிக கோலத்தில் வந்து , "பிச்சை கேட்கும் ஆடவர்களைப் பிடித்து புணர்ந்தால் .இத்தொல்லை தீரும் என கூற முதலில் மறுத்த முத ஃபகாத் மக்கள் பிறகு , " செய்தால் என்ன ?"

செய்தார்கள் . பிடித்து பிடித்துப் புணர்ந்தார்கள் .புணர்ததற்கு பிறகு 3 திர்ஹம் அன்பளிப்பும் செய்தார்கள் . இதுவே பெரும் போட்டியாகி விட்டது .

وَلُوْطًا اِذْ قَالَ لِقَوْمِهٖۤ اَتَاْتُوْنَ الْفَاحِشَةَ مَا سَبَقَكُمْ بِهَا مِنْ اَحَدٍ مِّنَ الْعٰلَمِيْنَ

லூத்தையும் (நம்முடைய தூதராக அவருடைய மக்களுக்கு நாம் அனுப்பி வைத்தோம்.) அவர் தம் மக்களை நோக்கி "உங்களுக்கு முன்னர் உலகத்தில் எவருமே செய்திராத மானக்கேடானதொரு காரியத்தையா நீங்கள் செய்கின்றீர்கள்?
(அல்குர்ஆன் : 7:80)

இதை சமரசமாக தீர்த்துக் கொள்ள முதஃபகாத் பணக்காரர்கள் பாத்திரத்தில் சிறு கற்களை போட்டு (கவனிக்க கற்கள் ) ஊருக்கு வரும் பிச்சைக்காரர்கள் மீது வீசி எறிவர் யாருடைய கல் எவர் மீது படுகிறதோ அந்த பிச்சைக்காரர் இவருடைய உடமை என்று பெயர் வைத்துப் பிரித்தார்கள் (கவனிக்க பெயர் ) பிச்சைக் காரர்களை கட்டாயப்படுத்தி புணர்ந்தார்கள் .ஒளி மறைவு இல்லாமல் வெட்ட வெளியில் கூச்சமே இல்லாமல் இராப்பகலாக புணர்ந்தார்கள்.

நாளடைவில் பிச்சைக்காரர்கள் வரத்து நின்று போனது .தம் நகர ஆண்களையே விலை பேசி புணர ஆரம்பித்தனர் . ஓரினப் புணர்ச்சியில் திளைத்த இம் மக்களால் பெண்கள் மீதான பாலுணர்வு இல்லாமல் போனது .பெண்கள் பெண்களையே புணர்ந்து கொள்ள காமப் பிரச்சனை மரபுவழி மாறி போனது .

எனவே இப் பதிவிலுள்ள முதல் பாரா வில் சொல்லப்பட்டது போல் இதற்கென்று சட்டம் ஏற்றி சடங்கு சம்பிரதாயம் பார்த்து சங்கு ஊதினார்கள் .

இந்த ஒ.பு மக்களின் கொடுமைகளை அதிகரிக்கவே இறைவன் ஜிப்ரயீல் (அலை) .மீக்காயீல் (அலை), இஸ்ராஃபீல் (அலை) ஆகிய 3 வானவர்களை இறைவன் அழகான கவர்ச்சிகரமான முகம் கொண்ட இளைஞர்கள் உருவில் (சில வரலாற்று ஆசிரியர்கள் திரு நங்கை கோலமாக இருக்கலாம் என்கிறார்கள் அல்லாஹ்தான் அறிவான் ) முதஃபகாத்தின் தலைநகர் ஸதூமிற்கு அனுப்பி வைத்தான்.

நபி லூத் (அலை) அவர்கள் அழகிய கோலமுடைய தன் விருந்தினர்களைக் கண்டு பதறினார்கள். அதே சமயம் அவர்களின் மனைவி (பெயர் : ஹல்ஸகா என்றும், வைலா என்றும் .ஹாயிலா என்றும் , வாலிஹா என்றும் ஹிபலா என்றும் பலவிதமாக கூறப்படுகிறது சரி , ஏதோ ஒரு " லா" ) க்கு கொண்டாட்டம் .

விருந்தினர்களுக்கு உணவு சமைக்க உப்பு வாங்கி வருவதாக (கவனிக்க உப்பு) வீட்டின் பின்புறமாக போய் தன் கூட்டத்தினருக்கு சேதி சொல்ல , உடனே ஒ.பு மக்கள் நபியின் வீட்டை அடைந்தேறினார்கள் .

நபியவர்கள் " விருந்தாளிகள் முன் என்னை கேவப்படுத்தி விடாதீர்கள் .என் பெண் மக்களை நீங்கள் திருமணம் செய்து கொள்ளுங்கள் என்று கூற "உங்களுடைய பெண் மக்களிடம் எங்களுக்கு யாதொரு தேவையும் இல்லை .நாங்கள் விரும்புவது என்ன என்பதை நிச்சயமாக நீங்கள் அறிவீர்கள்" என்று அவர்கள் கூற " உங்களை தடுததுவிடக் கூடிய பலமான ஆதரவை நான் அடைய வேண்டாமா ? உடனே விருந்தாளிகள் நபியை நோக்கி , "லூத்தே நாங்கள் இறைவனால் அனுப்பப்பட்ட தூதர்களாகிய வானவர்கள் . இவர்கள் நிச்சயமாக உங்களை வந்தடைய முடியாது என்று கூறினர் .. நம்முடைய கட்டளையின் நேரம் வந்ததும் அவர்களுடைய ஊரை மேல் கீழாக கவிழ்த்து விட்டோம் அன்றி அதற்கு முன்னர் அவர்கள் மீது சுடப்பட்ட செங்கற்கள் மழையைப் போல் பொழியச் செய்தோம். எறியப்பட்ட செங்கல் ஒவ்வொன்றிலும் உங்கள் இறைவனால் அடையாளம் (பெயர்) இடப்பட்டிருந்தது புரட்டப்பட்ட அவ்வூர் வெகு தூரமுமல்ல . விரும்பினால் அதனை நேரில் சென்று பார்க்கலாம் .
குர்ஆன் (11: 78 - 83)

அன்று ஒ.பு மக்கள் பொடி கற்களை எறிந்து அக்கல் பட்டவருக்கு தன் பெயரை சூட்டி புணர்ந்தார்கள் அதனால் தானோ பெயர் அடையாளமிட்ட கற்களைக் கொண்டு அந்தந்த ஒ.பு காரர்களை கொன்றொழித்தானோ ?

சரி "அவங்க ஊரை மேல் கீழாக கவிழ்த்திப் புரட்டிப் போட்டது " ஒ பு காரன் தன் துணை ஆணை புணரும் போது கவிழ்த்திப் புரட்டி தானே.... புரிந்தது புரிந்தது

அந்த செழிப்பான 5 நகரங்களைக் கொண்ட முதஃபகாத் இன்று சாக்கடலாக மற்ற கடலின் உப்பை விட அதிகமாக
34 . 2 சதவீதம் உள்ளது

ஏன் இத்தனை உப்பு ?

அன்றைக்கு நபி லூத்தின் மனைவி உப்பு வாங்கி வருவதாக பொய் சொல்வியதால் 5 நகரங்களும் உப்பால் சூழப்பட்ட செத்தக் கடலாக மாறியது .

கிழக்கு ஜோர்டானுக்கும் , பாலஸ்தீனத்துக்கும் இடையில் வடக்கிலிருந்து தெற்கு வரை 67 கி.மீ நீளத்திலும் 18 கி.மீ அகலத்திலும் , கடல் மட்டத்திலிருந்து 1400 அடி தாழ்வாக உள்ளது . சாக்கடலின் ஆழம் 1000 அடியிலிருந்து 2400 அடி வரை உள்ளது .இந்த 2400 அடி ஆழம் உள்ள சாக்கடலின் தெற்கு பகுதியில்தான் ஸதூம் தலைநகர் புதைந்து உள்ளது .

இச் சாக்கடலின் அடி ஆழத்தில் கண்டெடுக்கப்பட்ட பொருட்கள் எல்லாமே தலைகீழாக உள்ளது .

இக் கடலில் பொட்டாஷ் என்ற சாம்பல் உப்பு அதிகமாக எடுக்கப்பட்டு , ... உரம் தயாரிக்கும் ஆலைகள் அதிகம் உள்ளது .

உரம் தயாரிக்க யூரியா அவசியம் ஒ.பு புணர்ந்து வெளிப்படுத்தும் விந்தில் (சிறுநீரிலுள்ள ) யூரியா அதிகமாக இருக்கிறது.

நபி (ஸல்) அவர்கள் மிஹ்ராஜ் என்கிற விண்வெளி பயணத்தின்போது வானவெளியில் குடம் அளவிற்கு கற்கள் குவிக்கப்பட்டிருப்பதைக் கண்டு , வானவர் ஜிப்ரயீல் (அலை) அவர்களிடம் விபரம் கேட்டார்கள் . "அதைப் பற்றி இப்போது வினவ வேண்டாம் " என்றார் ஜிப்ரயீல் (அலை) அவர்கள்

பின்னர் மிஹ்ராஜ் முடித்து வரும் போது அவ்விடம் வந்த போது நபியவர்கள் வினவ, "இவை லூத்துடைய கூட்டத்தினர் மீது எறியப்பட்டது போக எஞ்சி இருப்பவை.தங்களின் சமூகத்திலுள்ள கூட்டத்தினரான அநியாயக்காரர்கள் இந்த தவற்றை செய்யும்போது இந்தக் குடக் கற்கள் மழையாய் பொழியும் " என்றார்கள் .

பிரான்ஸ் பாராளுமன்றத்தில் ஒ.பு காரரகளுக்கு ஆதாரவாக வாக்களித்த 331 பேர்களின் பெயர்கள் அந்தக் குடக்கற்களில் பொறிக்குப்பட்டிருக்கும்.

"உங்களுக்கு முன்னர் உலகத்தில் எவருமே செய்திராத மானக்கேடானதொரு காரியத்தையா நீங்கள் செய்கின்றீர்கள்?
(அல்குர்ஆன் : 7:80)

ஞாபகத்தில் இருக்கட்டும் தலைக்கு மேலே பெயர் பொறிக்கப்பட்ட குடக்கற்கள் .

முதன் முதலாக உலகில் ... ( 6 வது பதிவு) 28-07-2020




1) ஹழ்ரத் இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் இவர்கள்தான் நட்சத்திரக் கணக்கை முதன்முதலில் உலகிற்கு கொண்டு வந்தவர்கள்

2) அதேபோல் முதன் முதலாக உலகில் மக்களுக்கு எழுதுகோலை கொண்டு எழுதக் கற்றுக் கொடுத்தார்கள்.

3) முதன் முதலாக உலகில் ஆடைகளை தைத்து உடுக்கும் முறையை கற்பித்தார்கள்.

4) முதன் முதலாக உலகில் யுத்தத்தில் உபயோகப்படுத்துவதற்கான ஆயுதங்களை புழக்கத்தில் கொண்டு வந்தார்கள்.

5) முதன் முதலாக உலகில் அல்லாஹ்வின் பாதை போராடியவர்களுள் முதலாமானவர்கள் இவர்கள்தான்.

ஹழ்ரத் ஷீத் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் நான்காம் தலைமுறையில் எகிப்து நாட்டில் தோன்றிய ஹழ்ரத் இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் இயற்பெயர் எக்னூஹ் என்றும் குனூஹ் என்றும் சொல்லப்படுகிறது. அரபியில் இவர்கள் பெயர் ஹெர்மிஸ் இத்ரீஸ் அல்முதுல்லுத் பின் பினாத் என்பதாகும். இதன் பொருள் மூன்று பேரருளைப் பெற்றவர் என்பதாகும்.

தங்களது மூதாதையரின் போதனைகளையும், வழிமுறைகளையும், ஆன்மீக மேம்பாடுகளையும் மக்களுக்கு போதித்து வந்ததால் இத்ரீஸ் என்ற பெயர் வந்தது. இவர்களின் மொழி சுர்யானி ஆகும். இவர்கள் ரஸூலாகவும், நபியாகவும் இருந்தார்கள். இவர்கள் துவக்கத்தில் எகிப்துக்கும், கிரீஸுக்கும் அனுப்பப்பட்ட நபியாகிய காஸீமுன் என்பவர்களின் ஆன்மீக மாணவர்.

இவர்கள் பழுப்பு நிறமுடையவர்களாகவும் நீண்ட உருவினராகவும் பெரிய மீசையும், தாடியும் வைத்திருந்தனர். இவர்கள் தையல் தொழில் செய்து வந்தனர்.இவர்கள் மீது 30 ஷுஹ்புகள் வேதமாக இறக்கப்பட்டன.

அல்லாஹ் வழிதவறிய காபீலுடைய சந்ததியினரை நேர்வழிப்படுத்துமாறு கூறி அவர்களுக்கு நபித்துவத்ததைக் கொடுத்தான்.

இத்ரீஸ் நபி காலத்து மக்கள் வானம், பூமி, இதர படைப்புகளை சக்தி மிக்கவை என்று நம்பி செயல்பட்டு வந்தனர். தமது சமுதாய மக்களில் 7 பேர்களைத் தேர்ந்தெடுத்து அல்லாஹ்வைப் பற்றி அச்சுறுத்தியும், அவனிடம் எப்படி விசுவாசமாக நடந்து கொள்ள வேண்டும் என்றும் போதித்தார்கள். அவர்கள் இஸ்லாத்தை ஏற்று அதன்படி செயல்பட ஆரம்பித்தனர். பிறகு இவர்களின் எண்ணிக்கை 1000 ஆக பெருகியது. அவர்களின் 100 பேரை தேர்ந்தெடுத்தார்கள். அதிலிருந்து 70 பேரை தெரிவு செய்து அதிலிருந்து 10 நபர்களை பொறுக்கி எடுத்துக் கொண்டார்கள்.இத்ரீஸ் நபி அல்லாஹ்விடம் துஆ கேட்க அந்த 10 பேரும் அமீன் சொன்னார்கள். அல்லாஹ் அந்த துஆவை ஏற்றுக் கொண்டு 3 வஹீயை இறக்கினான்.

தம் கால மக்களுக்கு 72 மொழிகளில் போதனை செய்து வந்தார்கள். அவர்கள் வாழ்வதற்காக 100 நகரங்களை நிர்மாணம் செய்து கொடுத்தார்கள். தொழக் கற்றுக் கொடுத்தார்கள். ஒரு மாதத்தில் சில குறிப்பிட்ட நாட்களில் நோன்பு நோற்கவும் கற்றுக் கொடுத்தார்கள். ஜகாத்தும் கொடுத்து வருமாறு வற்புறுத்தினார்கள். கழுதை, பன்றி ஆகியவற்றின் இறைச்சியை உண்ணக் கூடாதென்று தடுத்தனர். பொழுதுபட்டு தலைப்பிறையைக் கண்டபின் இறைவனுக்குப் பலிகொடுக்குமாறு இவர்கள் போதித்தார்கள்.

இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அதிகமாக நோன்பு நோற்று வந்தார்கள்.தினமும் 12000 தடவைகளில் தஸ்பீஹ் ஓதி வந்தார்கள். இவர்களது சபையில் வானவர்களும் கலந்து கொள்வார்கள். முப்பது தடவை வானுலகம் சென்று மறைவான பல இரகசியங்களை அறிந்து வந்தார்கள்.

தமக்குப் பின்னர் வரக்கூடிய நபிமார்களைப் பற்றியும், நூஹ் நபி காலத்தில் வரக்கூடிய பிரளயம் பற்றியும் முன்னறிவிப்பு செய்துள்ளனர்.

பெரும்பாலும் இவர்கள் வாய்மூடியே இருப்பர். பேசினால் நிறுத்தி, நிறுத்திப் பேசுவர் . அப்பொழுது அவர்களின் சுட்டுவிரலை அசைப்பர்.

ஒருநாள் ஹழ்ரத் இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் சென்று கொண்டிருக்கும்போது வெயிலின் உஷ்ணத்தால் மிகவும் அவதிப்பட்டார்கள். சூரியன் இவ்வளவு தூரத்திலிருக்கும்போதே நாம் அதன் உஷ்ணத்தை தாங்க முடியவில்லையே! அதனை சுமந்து கொண்டிருக்கும் வானவர் எப்படி தாங்குவார் என்று மனதிற்குள் எண்ணி, "யா அல்லாஹ்..! சூரியனைச் சுமக்கும் வானவருக்கு அதன் உஷ்ணத்தால் சிரமம் ஏற்படாதவாறு அருள் புரிவாயாக! "என்று துஆ செய்தார்கள்.

அல்லாஹ் அந்த துஆவை ஏற்றுக் கொண்டு சூரியனைத் தாங்கும் வானவர் மீது கிருபை செய்தான். அந்த வானவர் அல்லாஹ்விடம் இதுபற்றி கேட்டதற்கு இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் உம்மீது இரக்கம் கொண்டதால் இது நடந்தது என்று சொன்னான். உடனே அந்நபி மீது அந்த வானவருக்கு அன்பு சுரந்தது. அவர்களைப் பார்க்க வேண்டுமென்று ஆவலும் ஏற்பட்டது. அந்த வானவரும் பலமுறை முயன்று ஒரு தடவை சந்தித்தார்கள்.

நபியவர்களை வானலோகத்திற்கு அழைத்து சென்று மலக்குகள் பார்வையிடும் ஸிர்ருல் மலக்கூத்து என்கிற பிரபஞ்சங்கள் இரகசிய கிதாபை படிக்க கொடுத்தும் சூரியனுடைய கோள்கள் சுற்றி வரும் பாதைகளில் அந்தந்த கிரகங்களோடு அவரையும் பயணிக்க செய்தார்கள்

இப்படி சனிக்கோளுடன் சேர்ந்து 30 ஆண்டுகள் விண்ணிலே பயணித்து வந்தார்கள் ஆகையால் இவர்களால் தன்னால் நேரில் கண்ட நட்சத்திரத்திரங்களைப் பற்றியும் கிதாபு (பிரபஞ்சங்கள் இரகசியத்தை) ஒன்றாக சேர்த்து வான சாஸ்திரத்தை இவர்கள் தொகுத்து பூமிக்கு கொடுத்தார்கள்

இஸ்ராயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் தாங்கள் சொல்லி எனது மரணத்தை கொஞ்சம் தள்ளிப் போட சொல்லுங்கள். நான் இன்னும் பூமியில் இருந்து அல்லாஹ்வை அதிகம் வணங்க விரும்புகிறேன் என்று இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் வேண்டினார்கள்.

அல்லாஹ்வின் உத்திரவு பெற்று அந்த வானவர் இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்களை சுமந்து சூரியனுக்கருகில் விட்டுவிட்டு, மலக்குல் மவ்த்திடம் வந்து, இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் மவ்த்தை தள்ளிப் போட வேண்டினார்கள்.
அதற்கு மலக்குல் மவ்த் அது என்னால் ஆகக் கூடியது அல்ல. ஆனால் அவர் இன்னும் எத்தனை நாள் வாழ முடியும் என்று கணக்குப் பார்க்க முடியும் என்று சொன்னார். அவரது மரணம் சூரியனருகில் நிகழும் என்று சொன்னார்.

அவரை நான் சூரியனருகில் விட்டு வந்திருக்கிறேன் என்று சொன்னதும், இஸ்ராயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அப்படியானால் அவர் இந்நேரம் மறைந்திருக்க வேண்டுமே! நீங்கள் அவரைப் போய் பாருங்கள் என்று சொன்னார்.
அங்கு போய் பார்த்ததும் இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் இறந்துவிட்டிருந்தார்கள்.

ஏழு வானங்களுடைய வானவர்களும் அவர்களை குளிப்பாட்டி ஜனாஸா தொழுகை நடத்தி பைத்துல் மஅமூரில் நல்லடக்கம் செய்தார்கள் என்று திருக்குர்ஆனிலுள்ள 19வது அத்தியாயமான மர்யம் அலைஹிஸ்ஸலாம் பற்றிய விளக்கவுரையில் ஹழ்ரத் அஹ்பார் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறியதாக முஆலிமுத் தன்ஜீமில் குறிப்பிடப்பட்டுள்ளது.

மற்றொரு வரலாற்றில் ....
ஒரு வானுலகப் பயணத்தின் போது வானவரின் இறக்கையில் நான்காவது வானத்தை அடைந்ததும், அந்த வானவர் மலக்குல் மவ்த்திடம் (உடலிலிருந்து உயிரை எடுக்கும் வானவரிடம்) வந்து, "இத்ரீஸ் (அலை) அவர்களின் மரணத்தைத் தள்ளிப் போட முடியுமா? அவர் அல்லாஹ்வை அதிகம் வணங்க விரும்புகிறார்கள்" என்று கேட்டபோது, அதற்கு மலக்குல் மவ்த் "இப்போது அவர் எங்கே இருக்கிறார்?" என்று கேட்க, "என் இறக்கையில்தான்" என்று அந்த வானவர் பதில் தர, அதற்கு மலக்குல் மவ்த் "இப்போது தான் இறைவன் நபி இத்ரீஸின் உயிரை நான்காம் வானத்தில் கைப்பற்றச் சொன்னான்.

நானோ எப்படிப் புவியிலிருக்கும் இத்ரீஸின் உயிரை நான்காம் வானத்தில் கைப்பற்றுவது என்று யோசித்துக் கொண்டிருந்தேன்" என்று சிரித்துக் கொண்டே நபி இத்ரீஸின் உயிரை கைப்பற்றியதாகச் சொல்லப்படுகிறது. இதைத்தான் "நாம் அவரை ஓர் உயரிய இடத்தில் உயர்த்தினோம் என்று திருக்குர்ஆனில் 19:57 குறிப்பிடுவதோடு நபி இத்ரீஸை (அலை) சத்தியவாதியாக இருந்துள்ளார் என்றும் அல்லாஹ் குர்ஆன் 19:56-இல் கூறியுள்ளான். இதையே நபிகள் நாயகம் மிஃராஜ் பயணத்தின் போதும் நான்காவது வானத்தில் இத்ரீஸ் (அலை) அவர்களைப் பார்த்தாகவும் ஹதீஸ்களும் உறுதியளித்துள்ளன.

மற்றொரு அறிவிப்பின்படி அவர்கள் தம் விருப்பப்படி மவ்த் ஆகி திரும்பவும் உயிர்ப்பெற்று எழுந்தனர். வானுலகம் சென்று சுவர்க்கத்தையும், நரகத்தையும் கண்டு வந்தனர். சுவனத்தைக் கண்டபின் மண்ணகம் வர விருப்பமில்லாமல் இஸ்ராயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களுடன் வாதிட்டனர். அல்லாஹ் அவர்களின் விரப்பத்தை நிறைவேற்றினான். விண்ணகத்தில் இன்றுவரை உயிருடன் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்றும் காணப்படுகிறது.

ஹழ்ரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் மரணத்தின் போது ஹழ்ரத் இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு வயது 100. அதன்பிறகு 200 வருடங்கள் கழித்துதான் அல்லாஹ் அவர்களுக்கு நுபுவ்வத் வழங்கினான். 150 வருடங்கள் நபியாக மக்களுக்கு சேவை செய்தார்கள். வானத்திற்கு அவர்கள் அழைத்துச் செல்லப்படும்போது அவர்களது வயது 450.

இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தமது 65 ஆவது வயதில் திருமணம் செய்தார்கள். அவர்களுக்கு மத்தூஷலக் என்பவர் பிறந்தார். இவர் 170 ஆவது வயதில் திருமணம் செய்து கொண்டார். அவருக்கு மலிக் யாலா மக் என்பவர் பிறந்தார். 969 வது வயதில் மத்துஷலக் காலமானார். மலிக் யாலா மக் தமது 180வது வயதில் திருமணம் செய்து கொண்டார். அந்த அம்மையார் வயிற்றிலிருந்துதான் நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் பிறந்தார்கள்.

ர.ரா

إقبال عبد الحميد

நபி தாவூத் (அலை) அவர்கள் போர் ஆயுதங்கள் தயாரித்ததாக தெரியவில்லை .ஆனால் யுத்த தடுப்பு தளவாடங்களான கேடயம் மற்றும் கவசங்கள் தயாரித்ததாக குர்ஆன் குறிப்பிடுகிறது

وَعَلَّمْنٰهُ صَنْعَةَ لَبُوْسٍ لَّكُمْ لِتُحْصِنَكُمْ مِّنْۢ بَاْسِكُمْ فَهَلْ اَنْتُمْ شٰكِرُوْنَ

(போரில் ஈட்டி, கத்தி ஆகியவைகளின்) காயத்தில் இருந்து உங்களை பாதுகாக்கக் கூடிய கவசங்கள் செய்வதை நாம் அவருக்குக் கற்றுக் கொடுத்தோம். இதற்கு நீங்கள் நன்றி செலுத்துவீர்களா?
(அல்குர்ஆன் : 21:80)

1) ஹாரூத் மாரூத் வானவர்களுக்கு நபி இத்ரீஸ் (அலை) கேட்ட துஆ:

மக்கள் அல்லாஹ்வின் கட்டளைக்கு மாறு செய்வதைக் கண்ட வானவர்கள் யா அல்லாஹ் நீ இந்த மனிதர்கள் மீது மாபெரும் கிருபை செய்தும் அவர்கள் உனக்கு மாறு செய்கிறார்களே! நாங்கள் மட்டும் புவியில் இருந்தால் எக்காலமும் உனக்கு மாறு செய்யாமல் இருப்போமே என்று கூறினார்கள்.

அதற்கு நான் மனிதர்களிடத்தில் காம இச்சையையும், மன இச்சையையும் ஏற்படுத்தியுள்ளேன். இந்த இரண்டு குணங்களினால்தான் அவர்கள் பாவங்களை அதிகம் செய்கிறார்கள். இந்த இரண்டு குணங்களை உங்களிடம் ஏற்படுத்தி விடுவேனாயின் நீங்களும் அவர்களைப் போலவே தீமைகள் அதிகம் செய்ய முற்பட்டு விடுவீர்கள் என்று அல்லாஹ் சொன்னான். அதற்கு கண்டிப்பாக நாங்கள் செய்ய மாட்டோம் என்று சொன்னார்கள். அவர்களை சோதிப்பதற்காக வானவர்களிலேயே

விசேசமாக இருந்த ஹாரூத், மாரூத் என்ற இரு வானவர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு மனித உருவத்தையும், குணங்களையும் கொடுத்து பூமியில் வாழ அனுமதித்து சில நிபந்தனைகளையும் விதித்தான். அதாவது அவர்கள் பூமியில் வாழும்வரை இறைநிராகரிப்பு, மது அருந்துதல், கொலை செய்தல், விபச்சாரம் செய்தல் போன்ற தீய காரியங்களை செய்யக் கூடாது என்று நிபந்தனை விதித்தான்.

அந்த இருவானவர்களும் பூமியில் பகலெல்லாம் தங்கிவிட்டு இரவு வந்ததும் இஸ்முல் அஃலம் ஓதியவாறு வானத்திற்குச் சென்று இரவு முழுவதும் வணக்கத்தில் ஈடுபட்டு வந்தனர். இப்படியே ஒரு மாதம் கழிந்தது.

وَمَا أُنزِلَ عَلَى الْمَلَكَيْنِ بِبَابِلَ هَارُوتَ وَمَارُوتَ ۚ وَمَا يُعَلِّمَانِ مِنْ أَحَدٍ حَتَّىٰ يَقُولَا إِنَّمَا نَحْنُ فِتْنَةٌ فَلَا تَكْفُرْ ۖ فَيَتَعَلَّمُونَ مِنْهُمَا مَا يُفَرِّقُونَ بِهِ بَيْنَ الْمَرْءِ وَزَوْجِهِ ۚ وَمَا هُم بِضَارِّينَ بِهِ مِنْ أَحَدٍ إِلَّا بِإِذْنِ اللَّهِ ۚ وَيَتَعَلَّمُونَ مَا يَضُرُّهُمْ وَلَا يَنفَعُهُمْ ۚ وَلَقَدْ عَلِمُوا لَمَنِ اشْتَرَاهُ مَا لَهُ فِي الْآخِرَةِ مِنْ خَلَاقٍ ۚ وَلَبِئْسَ مَا شَرَوْا بِهِ أَنفُسَهُمْ ۚ لَوْ كَانُوا يَعْلَمُونَ

இன்னும், பாபில் (பாபிலோன் என்னும் ஊரில்) ஹாரூத், மாரூத் என்ற இரண்டு மலக்குகளுக்கு இறக்கப்பட்டதையும் (தவறான வழியில் பிரயோகிக்கக் கற்றுக்கொடுத்தார்கள்). ஆனால் அவர்கள் (மலக்குகள்) இருவரும் 'நிச்சயமாக நாங்கள் சோதனையாக இருக்கிறோம் (இதைக் கற்று) நீங்கள் நிராகரிக்கும் காஃபிர்கள் ஆகிவிடாதீர்கள்' என்று சொல்லி எச்சரிக்காத வரையில், எவருக்கும் இ(ந்த சூனியத்)தைக் கற்றுக் கொடுக்கவில்லை; அப்படியிருந்தும் கணவன் – மனைவியிடையே பிரிவை உண்டாக்கும் செயலை அவர்களிடமிருந்து கற்றுக்கொண்டார்கள். எனினும் அல்லாஹ்வின் கட்டளையின்றி அவர்கள் எவருக்கும் எத்தகைய தீங்கும் இதன் மூலம் இழைக்க முடியாது; தங்களுக்குத் தீங்கிழைப்பதையும், எந்த வித நன்மையும் தராததையுமே – கற்றுக் கொண்டார்கள். (சூனியத்தை) விலை கொடுத்து வாங்கிக் கொண்டவர்களுக்கு மறுமையில் யாதொரு பாக்கியமும் இல்லை என்பதை அவர்கள் நன்கறிந்துள்ளார்கள். அவர்கள் தங்கள் ஆத்மாக்களை விற்றுப்பெற்றுக்கொண்டது கெட்டதாகும். இதை அவர்கள் அறிந்து கொள்ள வேண்டாமா?

2 ) ஒரு நாள் இவர்கள் இருவரும் பூமியில் தங்கியிருந்தபோது, ஜொஹ்ரா என்ற அழகிய பெண் இவர்களிடம் வந்து தன் கணவனுடன் சண்டை போட்டுக் கொண்டு வந்துவிட்டதாகவும், தன்னை அவர்கள் காப்பாற்ற வேண்டும் என்று கேட்டுக்கொண்டாள். அவளின் அழகு அவர்களை வசீகரித்து விட்டது. அந்தப் பெண் அடிக்கடி வந்து மனித ரூபத்திலுள்ள இந்த வானவர்களிடம் பழக ஆரம்பித்தாள்.

அவளுடன் உடலுறவு கொள்ள அவ்விருவரும் ஆசைப்பட்டனர். அதற்கு அவள் மது அருந்த வேண்டும், ஒருவரை கொல்ல வேண்டும், விக்கிரகத்தின் முன்னால் தலை வணங்க வேண்டும். பிறகுதான் என்னோடு உடலுறவு கொள்ளலாம் என்று நிபந்தனை விதித்தாள். அதற்கு அல்லாஹ் நமக்கு தடை விதித்திருப்பதால் இதை செய்ய முடியாது என்று சொன்னார்கள். அவள் போய்விட்டாள். ஆனால் அவளின் பிரிவு இவர்களிருவரையும் வாட்டி எடுத்தது. பிறகு இரண்டு, மூன்று முறை அப்பேரழகியை கண்டு தங்கள் இச்சையை தெரிவித்தனர். அவளும் அந்த நிபந்தனைகளை விதித்தாள். இவர்களும் மறுத்ததால் அவள் திரும்பிக் கொண்டிருந்தாள்.

ஒருநாள் அந்தப் பேரழகி மீண்டும் வந்தாள். இச்சமயம் அவளது கையில் ஒரு மதுப்பாட்டில் இருந்தது. அவ்விரு வானவர்களும் அவளை நெருங்கினர். இதையாவது குடியுங்கள் என்று மதுபாட்டிலை அவர்கள் முன் நீட்டினாள். மது அருந்துவது பெரிய குற்றமில்லையே என்று கருதிய அவர்கள் அதை அருந்தத் துவங்கினர். போதை தலைக்கேறியதும், அவளை கட்டிப்பிடிக்க முயற்சிக்கும்போது அந்த அழகி எனக்கு இஸ்முல் அஃலத்தை கற்றுத் தாருங்கள். நானும் வானம் செல்ல ஆசைப்படுகிறேன் என்று கூறினாள். அவர்களும் அந்த அற்புதமான இஸ்முல் அஃலத்தை அவளுக்கு கற்றுக் கொடுத்து உடலுறவு கொண்டனர். இதை ஒருவன் பார்த்து விட்டான். எங்கு அவன் யாரிடமும்சொல்லி விடுவானோ என்று பயந்து அவனை கொல்லவும் செய்தனர். மக்கள் இதைத் தெரிந்து அவர்களை விரட்டி செல்லவே ஒரு கோயிலுக்குள் புகுந்து விக்கிரக ஆராதனை செய்பவர்களோடு சேர்ந்து விக்கிரகத்தின் முன் ஸஜ்தா செய்தனர்.

3) அந்த ஜொஹ்ரா இஸ்முல் அஃலத்தைக் கொண்டு மூன்றாம் வானம் வரை சென்று விட்டாள். அவளை அல்லாஹ் ஒரு நட்சத்திரமாக்கிவிட்டான். அவளைத் தொடர்ந்து வானவர்கள் இருவரும் வானத்தில் பறக்க முற்பட்டனர். ஆனால் அல்லாஹ் அவர்களின் பறக்கும் சக்தியைப் பிடுங்கிக்

கொண்டதால் அவர்களால் பறக்க முடியவில்லை. அப்போதுதான் அவர்களுக்கு தாங்கள் செய்த குற்றங்கள் புரிய ஆரம்பித்தது.

அவ்விருவரும் இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்களை சந்தித்து விபரங்களை சொல்லி அல்லாஹ்விடம் தங்களை மன்னித்து அருளும்படி செய்ய வேண்டும் என்று வேண்டிக் கொண்டனர். அல்லாஹ்விடம் இத்ரீஸ் நபியும் துஆ கேட்டனர்.

அதற்கு அல்லாஹ் அவர்கள் செய்த குற்றத்திற்கு தண்டனையை இவ்வுலகில் பெற்றுக்கொள்கிறார்களா? மறுமையில் பெற்றுக் கொள்கிறார்களா? என்று கேட்கச் சொன்னான். நபி அவர்களும் கேட்டார்கள். மறுமையில் தண்டனையை எங்களால் பொறுக்க இயலாது. எனவே இம்மையிலேயே தண்டனையை பெற்றுக் கொள்கிறோம் என்று சொன்னார்கள்.

அவர்கள் இருவரையும் பாழும் கிணற்றுக்குள் தலைகீழாக தொங்க விடுமாறு வானவர்களுக்கு கட்டளையிட்டான். அதன்படி வானவர்கள் இராக்கிலுள்ள மிகப் பழைய நகரமான பாபுலில் ஒரு கிணற்றுக்குள் தலை கீழாகத் தொங்கவிட்டனர். அதற்குள் இருந்த தண்ணீருக்கும் அவர்களின் தலைக்கும ஒரு அங்குல இடைவெளி மட்டுமே இருந்தது. அவர்களின் முகங்கள் கருநிறமாக்கப்பட்டன. கண்கள் நீல நிறமாக்கப்பட்டன. தாகத்தால் அவர்கள் உலகின் இறுதிநாள் வரை இப்படியே தொங்கி கொண்டிருப்பார்கள்.

ஒருமுறை ஒருவர் இந்த மலக்குமார்களின் நிலையை பார்த்து விட்டு லாஇலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரஸூலுல்லாஹ் என்று சொல்லி அனுதாபப்பட்டார். இதைக் கேட்ட அவ்விருவரும் நீங்கள் யார்? என்று கேட்க நான் முஹம்மது நபியின் உம்மத் என்று சொன்னார்.

மலக்குகள் இருவரும் சந்தோஷப்பட்டு முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிறந்து விட்டார்கள். எனவே இறுதிநாளும் விரைவில் வந்து விடும் நமக்கும் விடுதலை கிடைத்து விடும் என்று மகிழ்ச்சி அடைந்தனர்.

அப்துற் றஹீம் எழுதிய நபிமார்கள் வரலாறு மற்றும் Sufi Manzil பதிவிலிருந்து ..

முதன் முதலாக உலகில் காற்றில் பயணித்தவர் 28—07-2020



நம் காற்றோடை (**Jet Stream)** என்பது அப்படியான **Vertical Shear**. பக்கவாட்டு வெப்ப மாறுதல்களால் ஏற்படும் காற்றுச் சறுக்கல். பொதுவாக காற்று, மிகை அழுத்தப் பகுதியில் இருந்து குறை அழுத்தப்பகுதியை நோக்கிப் பாயும். அப்படிப் பாயும்பொழுது அங்கே, **Coriolis** (இதனைக் குறித்து சுருக்கமாகத் தேடிப்படித்துவிடுங்கள்) விசையொன்று செயல்படும். அது நம் காற்றுச் சறுக்கலை மேலும் கீழுமாக, அதாவது புவியின் வட மற்றும்

தென் துருவமாக அலைக்கழித்து ஒரு sine அலையைப் போன்ற அமைப்பைத் தரும். இதனை Meandering அமைப்பு என்பார்கள்.

இது நம் வளிமண்டலத்தின் **Troposphere**க்கும் **Stratosphere**க்கும் இடையே இருக்கும் ஒரு திருப்பப்பகுதியான Tropopause பகுதியில் நிகழும். புவியின் முக்கியமான காற்றோடை எதுவென்றால் மேற்கத்திய காற்றுதான். அதாவது மேற்கிலிருந்து கிழக்கு நோக்கி வீசும் காற்று. இக்காற்றோடையானது, இரண்டு மூன்று அல்லது பல்வேறு கிளைகளாகப் பிரியலாம், பிரிந்து ஒன்றாகச் சேரலாம், அப்படியே கலைந்தும் போகலாம், பல்திசைகளிலும் வீசவும் செய்யலாம்.

கடல்மட்டத்திலிருந்து ஏறக்குறைய 7 முதல் 12 கிலோமீட்டர் உயரத்தில் வீசும் துருவக்காற்றோடை(polar jet)தான் மிக சக்தி வாய்ந்தது. அதற்குச் சற்று வலுக்குறைந்த Subtropical jet கடல் மட்டத்திலிருந்து 10 முதல் 16 கிலோமீட்டர் உயரத்தில் வீசும்.

இக்காற்றோடை உருவாவதற்கான காரணம், புவிச்சுழற்சியும், சூரியக்கதிர்வீச்சால் வளிமண்டலத்தில் ஏற்படும் வெப்பமாறுபாடும் ஆகும். வேறுசில கிரகங்களில் அக்கிரகத்தின் உள்வெப்பமும் ஒரு காரணமாக அமையக்கூடும்.

இதுல ஒரு சுவாரஸ்யமான நிகழ்வு என்னன்னா, இந்தப்பக்கம் விமானத்துல பறக்குற விமானிகள் இந்தக் காற்றோடைகளில் தங்கள் விமானத்தை திறம்பட நுழைத்து தங்களின் எரிபொருளையும் நேரத்தையும் மிச்சப்படுத்துவார்கள். டர்புலன்ஸ் சற்று அதிகமாகத்தான் இருக்கும். எல்லா விமானிகளும் அப்படிச் செய்வதில்லை.

1883ல் இந்தோனேஷியாவின் **Krakatoa** எரிமலை வெடித்ததற்குப்பின் பல வருடங்களாக காலமாறுபாட்டைக் கணிக்கும்பொழுது பல தகவல்களைச் சேகரித்துப் பதிந்துள்ளார்கள். அதில் ஒரு சம்பவத்தை அவர்கள் **Equatorial Smoke Stream** என்று ஒன்றைக் குறிப்பிட்டுள்ளார்கள்.

1920ல் ஜப்பானின் ஃப்யூஜி எரிமலைக்கு அருகே ஒரு காற்றோடையைக் கண்டுபிடித்தார். 1933ல் உலகைத் தனியாக வலம் வந்த அமெரிக்க விமானி **Wiley Post**, இந்தக் காற்றோடைகளை கண்டுபிடிக்க பேருதவியாக இருந்திருக்கின்றார். இவர் அதிஉயரப் பறக்கும் விமானத்தில் பல முறை முயற்சி செய்து, தன் விமானத்தின் தரைவேகம், வளிவேகத்தை விட அதிகரிப்பதைக் கண்டு கொண்டார். அதிலிருந்து காற்றோடை இருப்பதை உறுதி செய்துகொண்டார்.

இரண்டாம் உலகப் போரின் இறுதி கட்டம் அது . 1944 நவம்பர் ஜப்பானில் எல்லா தொழிற்சாலைகள் மீது குண்டு வீச 100 க்கும் மேற்பட்ட பி - 29 ரக போரா விமானங்கள் பயன்படுத்தப்பட்டன ஒரே நேரத்தில் அத்தனை விமானங்களும் 10 கி மீ உயரத்தில் பறப்பது அப்போது அது புது விஷயம் ஜப்பானி டோக்கியோவை நெருங்கி குண்டு வீச ஆயத்தமாயின

அந்த நிமிடத்தில் திடீரென எல்லா விமானங்களும் ஏதோ ஓர் அசாதாரண சக்தியால் தூக்கி எறியப்பட்டன. விளவு . . எல்லா குண்டுகளும் இலக்கு மாறி கடலில் விழுந்தன தாங்கள் இயக்காமலேயே தங்கள் விமானங்கள் தொலை தூரத்திற்கு வீசி எறியப்பட்டது எப்படி

அப்போதுதான் தெரிந்தது ஜெட் காற்றோடை வானில் இருப்பது அது என்ன ஜெட் காற்றோடை ?

பூமியின் காற்று மணடல அதிசயங்களில இதுவும் ஒன்று ஆரடிக் அண்டார்டாக் என்கிற பூமியின் பனி மூடிய இரு துருவங்களின் மேலே காற்று ஈரமாக இருக்கும் அதேசமயம் இந்தியா போன்ற நாடுகளுக்கு மேலேயுள்ள காற்று வெப்பமாக இருக்கும் இப்படி குளிர் காற்றும் வெப்பக் காற்றும் அருகருகே சந்தித்துக் கொள்ளும் இடங்களில் காற்று சலனம் அடைந்து பூமியில் எப்படி வெள்ளமாய் ஆறுகள் ஓடுமோ அதைப் போல் வானில் காறறோடைகள் ஜெட் வேகத்தில் மணிக்கு 400 கி மீ வேகத்தில் பூமியிலிருந்து 10 கி மீ உயர்த்திலிருந்து 13 கி மீ உயரம் வரையில் இந்த காற்றோடை ஓடுகிறது இதன் அகலம் 200 கிமீ முதல் 400 கி மீ அகலம் கொண்டது இதனைப் பற்றி பெரிய அளவில் ஆராய்ச்சி நடைபெற்றுக் கொண்டிருக்கிறது இந்த காற்றோடையில்தான் அமெரிக்க போர் விமானங்கள் சிக்கி உள்ளது என்பது தெரிய வந்தது

وَلِسُلَيْمٰنَ الرِّيْحَ غُدُوُّهَا شَهْرٌ وَّرَوَاحُهَا شَهْرٌ وَ اَسَلْنَا لَهٗ عَيْنَ الْقِطْرِ وَمِنَ الْجِنِّ مَنْ يَّعْمَلُ بَيْنَ يَدَيْهِ بِاِذْنِ رَبِّهِ وَمَنْ يَّزِغْ مِنْهُمْ عَنْ اَمْرِنَا نُذِقْهُ مِنْ عَذَابِ السَّعِيْرِ

(அவருக்குப் பின்னர்) ஸுலைமானுக்குக் காற்றை (வசப்படுத்திக் கொடுத்தோம்), அதனுடைய காலைப் பயணம் ஒரு மாத தூரமாகவும் மாலைப் பயணம் ஒரு மாத தூரமாகவும் இருந்தது. (குர்ஆன் : 34:12)

நபி சுலைமான் (அலை ) அவர்களுக்கு அல்லாஹுத்தஆலா காற்றை வசப்படுத்திக் கொடுத்திருந்தான் . நபியவர்கள் ஒரு தரை விரிப்பில் அமர்ந்து கொள்வார்கள் அந்த தரைவிரிப்பு காற்றுத் தூக்கிக் கொண்டு செல்லும். அப்போது சூரியன் உதயமான திலிருந்து நடுப்பகல் வரை ஒரு மாதம் (அதாவது மனிதர்கள் ஒரு மாதம் வரை நடந்து செல்லத்தக்க தூரம்) சென்றுவிடுவார்கள் இதுபோல் நடுப்பகல் இருந்து சூரியன் மறையும் வரை ஒருமாத தோறும் சென்று விடுவார்கள் ஒரு பகலில் இரண்டு மாதம் சென்றுவிடுவார்கள்.

நபி சுலைமான் அலை அவர்கள் காலை வேளையில் தமது தரை விரிப்பின் மீது ஏறி டமாஸ்கஸ் (சிரியா) நகரிலிருந்து புறப்படுவார்கள். இஸ்த்தகர் (ஈரான் ) வந்து சேர்ந்து அங்கு அன்றைய காலை உணவை உட்கொள்வார்கள்.

பின்னர் மாலை வேளையில் இஸ்த்தகர் நகரில் இருந்து புறப்பட்டு காபூல் நகரை (ஆப்கானிஸ்தான்) அடைந்து அங்கேயே இரவில் தங்குவார்கள் . வேகமாக பயணிக்கும் ஒருவருக்கு டமாஸ்கஸ் இஸ்த்தகர் ஆகிய இரு நகரங்களுக்கு இடையிலான தொலை தூரத்தை நடந்து கடக்க ஒரு மாதம் பிடிக்கும் அவ்வாறே

இஸ்த்தகர் - காபூல் நகரங்களுடையிலான தொலை தூரத்தை கடக்கவும் வேகமாக நடந்து செல்லும் பயணிக்கு ஒரு மாதம் தேவைப்படும்.

நபி சுலைமான் (அலை) அவர்களுக்கு காற்றை வசப்படுத்திக் கொடுத்திருப்பதால் மேற்கண்ட காற்றோடையை பயன்படுத்தி தங்கள் பயணத்தை தொடர்ந்திருக்கலாம் என்பதாக நமக்கு தெரிய வருகிறது .

அன்று நபி சுலைமான் (அலை) அவர்கள் காற்றில் பயணம் செய்த விஷயம் நவீன விஞ்ஞான உலகத்தில் சற்று மாற்றமடைந்துள்ளது.

உத்தரகாண்ட் மாநிலத்தில் ஏராளமான மலை கிராமங்களுக்கு காற்றில் மிதக்கும் பலூன் மூலம் இன்டர்நெட் சேவை வழங்கும் திட்டம் தொடங்கப்பட்டுள்ளது.

நாடுமுழுவதும் செல்போன் இன்டர்நெட் சேவைகளை பெறுவதற்காக நகர்ப் பகுதிகள் ஆங்காங்கே செல்போன் டவர்கள் அமைக்கப்பட்டு இணைப்பு வழங்கப்படுகிறது.

தொலைதூர கிராமங்கள் மற்றும் மலைப்பிரதேசங்களில் செல்போன் டவர்கள் அமைப்பதில் சிரமங்கள் உள்ளன. அதற்கு கூடுதல் செலவு பிடிக்கும். மேலும் செல்போன் இன்டர்நெட் இணைப்புகள் சரிவர கிடைப்பது இல்லை.

இது போன்ற பகுதிகளில் பயன்படுத்துவதற்கு மும்பை ஐ.ஐ.டி. காற்றில் பறக்கும் பலூன் மூலம் செல்போன்- இன்டர்நெட் இணைப்பு பெறும் வசதியை கண்டுபிடித்துள்ளது. உத்தரகாண்ட் மாநிலத்தில் ஏராளமான மலை கிராமங்களுக்கு இதன் மூலம் செல்போன் இன்டர்நெட் இணைப்பு வழங்க முடிவு செய்யப்பட்டுள்ளது.

முதலாவது ஏர்பலூன் இன்டர்நெட் சேவை வசதியை உத்தரகாண்ட் மாநில முதல்-மந்திரி திரிவேந்திர சிங் ரவத் டேராடூனில் நடந்த நிகழ்ச்சியில் தொடங்கி வைத்தார்.

இதற்கு ரூ.50 லட்சம் செலவாகும். இது ஏரோஸ் டாட் டெக்னாலஜி முறையில் உருவாக்கப்பட்டுள்ளது. 6 மீட்டர் நீளம் கொண்ட பலூனில் நைட்ரஜன் வாயு நிரப்பப்பட்டு இருக்கும். தரையில் இருந்து ரிமோட் மூலம் இயங்கக்கூடியது. அதில் டிரான்ஸ்ரிசீவர் ஆன்டெனா கருவி பொருத்தப்பட்டு இருக்கும். இதன் மூலம் இன்டர்நெட் சேவை வழங்க கூடிய மோடம் இணைக்கப்பட்டு வைபை வசதி மூலம் செல்போன் மற்றும் இன்டர்நெட் இணைப்புகள் கிடைக்கும். 7.5 கி.மீ. சுற்றளவுக்கு இணைப்புகள் கிடைக்கும்.

இந்த சுற்றளவுக்குள் இருப்பவர்கள் பாஸ்வேர்டு இல்லாமலேயே வைபை மூலம் இணைப்பு பெறலாம். தொடக்கத்தில் இன்டர்நெட் இணைப்புகளை இலவசமாக வழங்க அரசு முடிவு செய்துள்ளது.

உத்தரகாண்ட்டில் இமயமலைப் பகுதியில் உள்ள 16,870 கிராமங்களில் 680 கிராமங்களுக்கு இந்த பறக்கும் பலூன் மூலம் இன்டர்நெட்-செல்போன் இணைப்புகள் வழங்கப்படும்.

இது தொலைதூர பகுதிகளுக்கு இன்டர்நெட் வசதி இல்லாத கிராமங்களுக்கு மிகவும் பயனுள்ளதாக இருக்கும். மேலும் வெள்ளம் போன்ற அவசர காலங்களுக்கு உதவவும் பயனுள்ளதாக இருக்கும் என்று முதல்- மந்திரி ரவத் தெரிவித்தார்.

## முதன் முதலாக உலகில் செங்கலை தயாரித்தவன். 8 28-7-2020



செங்கல் தயாரிப்பு என்பது கட்டிடம் கட்டுவதற்கான மூலப் பொருட்களில் ஒன்றாக இருக்கும் செங்கல்லை உற்பத்தி செய்வதைக் குறிக்கும்.

செங்கல் தயாரிப்பு பெரிய தொழிற்சாலைகளில் இடம்பெறுகின்ற அதேவேளை கிராமப்பகுதிகளில் குடிசைத் தொழிலாகவும், சிறுதொழிலாகவும் செய்யப்பட்டு வருகின்றது.

பெரிய தொழிற்சாலைகள் இயந்திரங்களைப் பயன்படுத்தி உற்பத்தி செய்கின்றன. குடிசைத் தொழில்களில் மனித வலுவே முக்கியமானதாக உள்ளது.

செங்கல் உற்பத்திக்கான முக்கிய மூலப் பொருள் களிமண். களிமண்ணை நீருடன் சேர்த்துக் குழைக்கும்போது அச்சில் வார்ப்புக்குத் தேவையான வடிவத்துக்குக் கொண்டுவரக்கூடிய வகையில் அது நெகிழ்வுத்தன்மை கொண்டதாக இருக்கவேண்டும். அச்சிலிருந்து எடுத்த பின்னர் வடிவம் மாறாமல் இருக்கும்வகையில் ஈரநிலை வலிமையையும், காற்றுலர் வலிமையையும் கொண்டிருத்தல் வேண்டும்.

கி.மு 7500 ஆம் ஆண்டளவில் உருவாக்கப்பட்ட செங்கற்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. முதலில் வெயிலில் சுட்டு உருவாக்கப்படும் செங்கல் கற்களை மெசபடோமியாவில் (தற்போதைய ஈராக்) கி.மு 4000 - ம் வாக்கில் செங்கல் உருவம் பெற்றது.

முதன் முதலில் உலகில் செங்கலை தயாரிக்க ஃ பிர்அவ்ன் ஹாமானிடம் உத்தரவிடுகிறான் .

இந்த ஹாமான் ஃபிர்அவ்னின் இனமான கிப்தி இனத்தைச் சேர்ந்தவன். ஃபிர்அவ்னின் நெருங்கிய ஆலோசகராகவும் , அமைச்சராகவும், பெரிய நிர்வாகியாகவும் அவன் விளங்கினான். பாரசீகத்தில் ஒரு ஹாமான் இருந்துள்ளான் . இவனை "அகாஸ்வேரு " என வில்லியம் அழைக்கிறது , எஸ்தர் ஆகமத்தில் இது இடம் பெற்றிருக்கிறது

وَقَالَ فِرْعَوْنُ يٰۤاَيُّهَا الْمَلَاُ مَا عَلِمْتُ لَـكُمْ مِّنْ اِلٰهٍ غَيْرِىْ‌ ۚ فَاَوْقِدْ لِىْ يٰهَامٰنُ عَلَى الطِّيْنِ فَاجْعَلْ لِّىْ صَرْحًا لَّعَلِّىْۤ اَطَّلِعُ اِلٰٓى اِلٰهِ مُوْسٰى ۙ وَاِنِّىْ لَاَظُنُّهٗ مِنَ الْـكٰذِبِيْنَ

அதற்கு ஃபிர்அவ்ன் (தன் மக்களில் உள்ள தலைவர்களை நோக்கி) "தலைவர்களே! என்னைத் தவிர வேறொரு இறைவன் உங்களுக்கு இருப்பதாக நான் அறியவில்லை. ஹாமானே! களிமண்(ணால் செய்த செங்கல்) சூளைக்கு நெருப்பு வை. (அச் செங்கற்களைக் கொண்டு வானளாவ) மாளிகையை நீ கட்டு. (அதில் ஏறி) மூஸாவினுடைய இறைவனை நான் பார்க்க வேண்டும். (அவர் தனக்கு வேறு இறைவன் இருப்பதாகக் கூறுகிறாரே!) இவ் விஷயத்தில் நிச்சயமாக அவர் பொய் சொல்வதாகவே நான் எண்ணுகிறேன்" என்று கூறினான்.
(அல்குர்ஆன் : 28:38)

ஃபிர்அவ்னுடைய காலத்திற்கு முன்னர் களிமண்ணுடன் மணலைக் கலந்து குழைத்து வெயிலில் மட்டுமே காய வைப்பார்கள் .சூலையில் நெருப்பில் வைத்து சுட்டு தயாரிக்கும் முறை ஃபிர்அவ்னுடைய காலத்தில்தான் இருந்திருக்க வேண்டும். காரணம் "சூலையில் நெருப்பிட்டு செங்கலை தயார் செய் " என்பதை சுட்ட செங்கற்களின் தயாரிப்பு முறையை மேற்கண்ட வசனத்தில் குறிப்பிட்டுள்ளதால் .. செங்கல் தயார் செய்த "உலகின் முதல் மனிதன் ஃபிர்அவ்ன்தான் " என திருக்குர்ஆன் ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர் .

பிர்அவ்னுடைய உத்தரவுப்படி அமைச்சரான ஹாமான் பல்லாயிரக் கணக்கானவர்களை செங்கல் அறுக்கும் வேலையில் ஈடுபடுத்தி பெரும்பெரும் செங்கல் சூளைகளை ஏற்படுத்தி செங்கல்களை தயார் செய்தான். இவ்வேலைக்கு பனூ இஸ்ராயீல்களை கட்டாயப்படுத்தி வேலை வாங்கினான். தங்களுடைய இனத்தாரை கஷ்டப்படுத்தி நிர்ப்பந்தமாக வேலை வாங்குவது குறித்து நபி மூஸா , நபி ஹாரூன் (அலை) வருத்தப்பட்டார்கள்

இவ்வாறு 5000 முழம் உயரமும் ,
3 ஆயிரம் முழம் அகலமும் கொண்ட கோபுரம் கட்ட ஏழு ஆண்டுகள் ஆயிற்று

கட்டிடம் பூர்த்தியான பிறகு அதன்மீது ஏறி ஆகாயத்தை நோக்கி அம்பு எய்ததாகவும் , மேலே போன அம்பு திரும்ப கீழே வந்தபோது அதில் இரத்தம் தோய்ந்து இருந்ததாகவும் அதனை பார்த்து ஃபிர்அவ்ன் மூஸாவின் இறைவனை நான் கொன்று விட்டேன் என்று கூறியதாகவும் சொல்லப்படுகிறது.

பிறகு இறைவன் ஜிப்ரீல் (அலை) அவர்களை அனுப்பினான் . அவர்கள் கட்டடத்தை அசைத்தார்கள் . அக்கட்டிடம் 3 துண்டங்களாக முறிந்து கீழே விழுந்தது . ஒரு துண்டு இராணுவங்கள் இருந்த இடத்தில் விழுந்தது. அதனால் பல லட்சக்கணக்கில் வீரர்கள் மடிந்தனர்.

இன்னொரு துண்டு கடலில் விழுந்தது மற்றொன்று மேற்கு பக்கம் விழுந்தது இக் கட்டடத்தை கட்டும் வேலையில் மனம் ஒப்பி வேலை செய்த ஃபிர்அவ்ன் கட்சியினரில் எவரும் மிஞ்சவில்லை. யாவரும் மடிந்தனர் . இவ்வித அலங்கோலங்களை ஃபிர்அவ்ன் பார்த்ததும் அவன் திமிர் ஒடுங்கவில்லை இன்னும் அதிகமாகவே திமிர் ஏற்பட்டது. ஃபிர்அவ்ன் எழுப்பிய கோபுரத்தின் வீழ்ச்சியே பின் தொடர்ந்து அவனுடைய வீழ்ச்சியும் இறப்பும் வந்து கொண்டிருந்தன.

ஃ பிர்அவ்ன் காலத்திற்கு பிறகு சுட்ட செங்கற்களின் பயன்பாடுகள் அதிகம் என்பதை ஓரிரு உதாரணங்களில் பார்த்தால் ...

ஒன்பதரை கோடி செங்கற்களால் கட்டப்பட்ட இலங்கையின் இரும்புக் கோட்டை! எகிப்திய பிரமிட்டுக்கு இணையான சாதனை!

ஆயிரக்கணக்கில் செங்கற்களை பயன்படுத்தி கட்டப்பட்ட மாளிகைகளை பார்த்திருப்போம், லட்சக்கணக்கில் கற்களை கொண்டு கட்டப்பட்ட கட்டடங்களைப் பற்றி கேள்விப்பட்டிருப்போம். ஆனால் ஒரு கோடியல்ல இரண்டு கோடியல்ல ஒன்பதரை கோடி செங்கற்களை பயன்படுத்தி கட்டப்பட்ட கோட்டையை பற்றி தெரியுமா?

அதுவும் இலங்கையில் இவ்வாறான ஒரு கோட்டை உருவாக்கப்பட்டிருக்கின்றது என்றால் நம்ப முடிகிறதா? நம்பித்தான் ஆக வேண்டும். ஆம் ஒன்பதரை கோடி செங்கற்களால் கட்டப்பட்ட உலகின் முதலாவது கட்டிடம் இலங்கையில் உருவாக்கப்பட்ட ஜேதவனராமய விகாரை. இலங்கையின் இரும்புக்கோட்டை எனவும் வர்ணிக்கப்படுகிறது

கி.மு 276 - 303 காலப்பகுதியில் இலங்கையை ஆட்சி செய்த மகாசேன மன்னனால் இத்தூபி நிர்மாணிக்கப்பட்டது . இத்தூபி அமைந்துள்ள பகுதியில் அதற்கு அண்மித்ததாக பொருளாதார நடவடிக்கைகளுக்கான கட்டடத்தொகுதியொன்றும் அமைக்கப் பட்டிருந்ததால் இதற்கு இணைந்த பெயராக ஜேதவனராமய தூபி என்ற பெயர் வந்ததாகவும் கருதப்படுகின்றது.

8 ஏக்கர் நிலப்பரப்பில் நிர்மாணிக்கபட்டிருக்கும் அதன் அமைவு விட்டத்தில் இருந்து நுனிவரை மேல் நோக்கியதாக 430 அடி வரை உயரம் கொண்டதாக இருக்கின்றது.

அன்றைய காலப்பகுதியல் இந்நாட்டில் நிலவிய கட்டடக்கலை நிர்மாணம் மற்றும் அதற்குரிய செங்கற்கள் போன்ற மூலப்பொருட்கள் பயன் படுத்தப்பட்டுள்ளமையானது அக்காலத்தில் உயர்நிலையில் காணப்பட்ட தொழில்நுட்பத்தை எடுத்து காட்டுகின்றது.

வரலாற்றுடன் ஒப்பிட்டு நோக்கும் போது இந்த தூபி என்ன காரணத்தின் அடிப்படையில் நிர்மாணிக்கப்பட்டது என்பது இன்று வரை புரியாத புதிராகவே காணப்படுகின்றது.

எனினும் சில தூபிகள் புத்தரின் புனித தந்தம்( உடல் பாகங்கள்) வைக்கப்பட்டு நிர்மாணிக்கப்பட்டுள்ளன. இந்நாட்டில் புத்தரின் புனித தந்தமான உடலபகுதி( எலும்பு கூடு அல்லது அஸ்தி) வைக்கப்பட்டு நிர்மாணிக்கப்பட்டதாக குறிப்புக்களும் அடையாளப்படுத்துகின்றன.

4ஆம் நூற்றாண்டில் உரோமப்பேரர் வீழ்ச்சி கண்ட போது உலகில் உள்ள மிக உயரமான கட்டடமாகவும் தூபியாகவும் இது இருந்தது.

அத்தோடு எகிப்தில் பிரமிட்டுகளுக்கு அடுத்ததாக சிறப்பு இந்த தூபிக்கு இருக்கின்றது. இந்த ஜேதவனராமய தூபியை நிர்மாணிப்பதற்கு 9 கோடி 33 லட்சம் செங்கற்கள் பயன்படுத்தப்பட்டிருப்பதாகவும் கணிப்பிடப்பட்டிருக்கின்றன.

உலக அதிசயங்களில் ஒன்றான சீனப் பெருஞ்சுவர் அண்மைக்காலமாக உள்ளூர் மக்களின் அலட்சியம் மற்றும் இயற்கை வானிலை காரணமாக 30% அளவுக்கு முற்றிலும் சேதமடைந்து விட்டதாக அதிர்ச்சி தகவல் வெளியாகியுள்ளது.

யுனெஸ்கோவால் உலக பாரம்பரிய சின்னமாக அறிவிக்கப்பட்ட சீனப் பெருஞ்சுவர் எவ்வித இடைவெளியும் இன்றி ஆயிரக்கணக்கான கிலோ மீட்டர்கள் நீளம் கொண்டதாகும். ஷான்ஹாய்குவானில் இருந்து ஜியாயூகுவான் கோபி பாலைவனம் வரை நீண்ட நெடிய தூரம் கொண்டது அந்த பெருஞ்சுவர்.

கி.மு. 3-ம் நூற்றாண்டில் ஆரம்பிக்கப்பட்ட சீனப்பெருஞ்சுவரின் கட்டுமான பணிகளில் சுமார் 6,300 கிலோ மீட்டர்கள் 1368-1644-க்கு இடைப்பட்ட மிங் வம்சத்தினரால் கட்டப்பட்டது.

இதில், 1,962 கிலோ மீட்டர்கள் நீள சுவரானது பல ஆண்டுகள் ஆகிவிட்டதாலும், காற்று, மழை போன்ற இயற்கை வானிலை காரணத்தாலும், வலுவிழந்து சிதைந்துவிட்டது. 2014-ல் எடுக்கப்பட்ட கணக்கெடுப்பில் இது தெரியவந்தது.

இந்நிலையில், அங்கு வசிக்கும் உள்ளூர் மக்கள் சீனப்பெருஞ்சுவரில் உள்ள செங்கற்களை வீடு கட்டுவதற்கு திருடிச் சென்று விடுவதாக அதிர்ச்சி தகவல் வெளியாகியுள்ளது.

மேலும் வீடுகள் கட்ட அப்பகுதி மக்கள் சீன பெருஞ்சுவரின் செங்கற்களை பெயர்த்து எடுத்து செல்கின்றனர். சுவரை பார்க்க வரும் வெளிநாட்டு சுற்றுலா பயணிகளிடம் நினைவு பொருளாக அந்த செங்கற்கள் திருட்டு தனமாக அதிக விலைக்கு விற்கப்படுகிறது. மேலும் சீன பெருஞ்சுவர் அழிக்கப்பட்டு அப்பகுதி விளை நிலங்களாக மாற்றப்பட்டு வருகின்றன.

அங்கு வரும் சுற்றுலா பயணிகளும் அலட்சியமாக சீனப்பெருஞ்சுவருக்கு சேதத்தை ஏற்படுத்துவதாக புகார் எழுந்துள்ளது.

மேலும் அங்குள்ள லூலாங் மாகாணத்தில் உள்ள ஏழை கிராம மக்கள் கடினமான, கருநிற சீனப்பெருஞ்சுவர் செங்கற்களை திருடி ஒரு செங்கல்லை 30 யுவானுக்கு உள்ளூரில் விற்றுவிடுகின்றனர்.

இதையடுத்து, செங்கற்களை திருடுவோருக்கு 5 ஆயிரம் யுவான் அபராதம் விதிக்கப்படும் என சீன அரசு அறிவித்துள்ளது.

சீனாவின் கலாச்சார, கட்டிடக்கலையை உலகிற்கு பறைசாற்றி வரும் சீனப்பெருஞ்சுவருக்கு நேர்ந்திருக்கும் இந்த ஆபத்து சுற்றுலா பயணிகளை அதிர்ச்சியில் ஆழ்த்தியுள்ளது.

இந்த செங்கற்களையெல்லாம் தயாரிக்க உலகில் முதன் முதலில் வித்திட்டவன் நபி மூஸா (அலை) அவர்களின் எதிரி ஃபிர்அவ்ன்தான் என்றால் உங்களுக்கு வியப்பானதாக இருக்கிறதா ?

நானும் செங்கல் வியாபாரம் செய்கின்றவன்தான் .

முதன் முதல் உலகின் முதல் மாதவிடாய் பிரச்சனை 9 30-07-2020




" நாம் (ஆதமுக்குத் துணையாக அவர் மனைவியைப் படைத்து ஆதமை நோக்கி) "ஆதமே! நீங்கள் உங்களுடைய மனைவியுடன் இச்சோலையில் வசித்திருங்கள். நீங்கள் இருவரும் இதில் விரும்பும் இடத்தில் (விரும்பியவற்றைத்) தாராளமாகப் புசியுங்கள். ஆனால் இந்த மரத்தை அணுகாதீர்கள். அணுகினால் நீங்கள் இருவரும் (உங்களுக்குத்) தீங்கிழைத்துக் கொண்டவர்களாவீர்கள்" என்று கூறினோம் " (குர்ஆன் : 2:35)

இப்லீஸ் அவர்களிடம் வந்தான் ."நீங்கள் என்னை நம்புவீர்களையானால் என்னுடைய வார்த்தையில் உங்களுக்கு நம்பிக்கை இருக்குமேயானால் நான் சொல்வது போல் செய்யுங்கள் இங்கு ஒரு மரம் உள்ளது . அதன் பெயர்
"ஷஜரத்துல் குல்து" (சிரஞ்சீவி மரம்) என்பதாகும் .நான் உங்களை அழைத்துச் செல்கிறேன் அதனுடைய தீஞ்சுவை கனிகளை நீங்கள்
சுவைத்தீர்களானால் துன்பமும் உங்களுக்கு இல்லை , துயரமும் உங்களுக்கு இல்லை , இறப்பும் உங்களுக்கு இல்லை எல்லாம் இன்ப மயம்தான். நீங்கள் வானவர்களாகவோ நித்தியமானவர்களாகவோ ஆகி என்றென்றும் நீங்கள் இனிதே இங்கு வாழ்வீர்கள். மேலும் உங்களுக்கு நிலையான அரசாட்சியும் இங்கு உண்டு. இறைவன் அம்மரத்தை நீங்கள் அணுக வேண்டாம் என்று உங்களுக்கு ஆணையிட்டுள்ளானே தவிர அம்மரம் உண்மையில் உங்களுக்கு ஹராம் அல்ல " என்றான் .

ஆதம் அலை அம்மரத்தை நெருங்கவில்லை என்றும் ஹவ்வாதான் அக்கனியை பறித்து தாம் தின்றதுடன் தம் கணவர் அவர்களுக்கும் கொடுத்தனர் என்றும் அதனை பறித்தப்பொழுது அம்மரத்திலிருந்து ரத்தம் வழிந்தது என்றும் அதன் காரணமாகவே பெண்களுக்கு மாதவிடாய் இறைவன் ஏற்படுத்தினான் என்றும் மஆது (ரலி ) அவர்கள் கூறுகின்றனர்.

فَاَزَلَّهُمَا الشَّيْطٰنُ عَنْهَا فَاَخْرَجَهُمَا مِمَّا كَانَا فِيْهِ وَقُلْنَا اهْبِطُوْا بَعْضُكُمْ لِبَعْضٍ عَدُوٌّ وَلَـكُمْ فِى الْاَرْضِ مُسْتَقَرٌّ وَّمَتَاعٌ اِلٰى حِيْنٍ
எனினும் (இப்லீஸாகிய) ஷைத்தான் அவ்விருவரையும் (தடுக்கப்பட்டிருந்த மரத்தை அணுகித்) தவறிழைக்கும்படிச் செய்து அச்சோலையை விட்டும், அவ்விருவரும் இருந்த (மேலான) நிலைமையிலிருந்தும் அவர்களை வெளியேறும்படி செய்து விட்டான். ஆகவே (அவர்களை நோக்கி) "உங்களில் சிலர் சிலருக்கு எதிரியாவர். (இச்சோலையிலிருந்து) நீங்கள் இறங்கிவிடுங்கள். உங்களுக்கு பூமியில்தான் வசிக்க இடமுண்டு. அதில் சிறிது காலம் வரையில் சுகமும் அனுபவிக்கலாம்" என நாம் கூறினோம்.
(குர்ஆன் : 2:36)

சில நாட்கள் கழித்து ஒரு செவ்வாய்க்கிழமை ஹவ்வாவுக்கு மாதவிடாய் ஏற்பட்டது. அவர்கள் என்னவோ ஏதோ என்று பயந்து அலறினார்கள் . அப்போது இறைவன் , "அவ்வாறு அஞ்சாதே அது உனக்கும் ஒரு பெண் மக்களுக்கும் பரிகாரமாக இருக்கும் " என்று ஆறுதல் கூறினான் .

இதன்பின் ஹவ்வா அவர்களுக்கு ஒர் ஐயம் ஏற்பட்டது இந்நிலையில் தொழலாமா கூடாதா என்பதே அந்த ஐயம் . இதுபற்றி அவர்கள் தம் கணவரிடம் வினவினார்கள் . அவர்கள் இச்செய்தியை ஜிப்ரீல் (அலை) அவர்களிடம் கூறி இறைவனிடம் இது பற்றி கேட்டு வருமாறு வேண்டினர். இறைவன் அந்த நேரங்களில் தொழ வேண்டாம் என்று அருள் சலுகை அழித்தான் .

மீண்டும் நோன்பு காலத்தில் அவர்களுக்கு மாதவிடாய் ஏற்பட்ட பொழுது முன்னர் இறைவன் தொழுகை பற்றி அளித்த அருள்சலுகையே மனதில் கொண்டு நோன்பை விட்டு விடுமாறு தன் மனைவியிடம் பணித்தனர் ஆதம் (அலை) அவர்கள். அவ்விதமே ஹவ்வா செய்தார்கள். உடனே இறைவனிடமிருந்து ஹவ்வா அவர்கள் விட்ட நோன்பை "களா"ச் செய்ய வேண்டும் என்று கண்டிப்பான கட்டளை வந்தது அது கேட்டு அதிர்ந்து போன ஆதம் (அலை ) அவர்கள் " இறைவனே..! தொழுகையும் நோன்பும் வணக்கத்தின் பாற்பட்டவைதாமே. அவ்வாறு இருக்க தொழுகையைக் 'களா'ச் செய்ய வேண்டாம் என்று நீ கூறிய போது நோன்பு மட்டும் களாச் செய்யுமாறு ஏன் கூறுகிறாய் என்று ஆதம் (அலை ) வினவினார்

அதற்கு இறைவன் " நீர் தொழுகையைப் பற்றி தாழ்மையுடன் என்னிடம் விளக்கம் கேட்டீர் . எனவே சலுகை அளித்தேன் .ஆனால் நோன்பைப் பற்றியோ நீரே உம் விருப்பப்படி தீர்ப்பு வழங்கினீர் . எனவேதான் இவ்வாறு நான் தீர்ப்பு வழங்குகிறேன் . மாதவிடாய் நின்றதும் மீண்டும் விட்ட நோன்பைக் 'களா'ச் செய்யுமாறு ஹவ்வாவுக்கு கூறும் ! " என்றான் .- (நபிமார்கள் வரலாறு - அப்துற் _ றஹீம்)

மாதவிலக்கு அல்லது மாதவிடாய்என்பது ஒரு பூப்படைந்த
பெண்ணின் உடலில், மாதந்தோறும் சுழற்சி முறையில் நிகழும் ஒரு உடலியங்கியல் மாற்றமாகும்.

இது பெண்ணின்இனப்பெருக்கத் தொகுதியிலுள்ள ஒரு உறுப்புக்களில் ஒன்றான கருப்பையிலிருந்து, யோனியினூடாக மாதத்தில் 3-7 நாட்கள் குருதியுடன்சேர்ந்து கருப்பையின்உள் சீதமென் சவ்வும் வெளியேறுவதைகுறிக்கும்.

மருத்துவப்படி, ஒவ்வொரு மாதமும், கருத்தரிப்பிற்கான தயார்ப்படுத்தலுக்காக, கருப்பையின் உள் மடிப்புகளில் (**endometrium)** போதிய இரத்தம் நிரம்பி இருக்கிறது. ஒரு பெண் கர்பமடைவாரேயானால், கருப்பையில் தங்கும் கருக்கட்டிய முட்டைக்கு போதிய ஊட்டச்சத்தை வழங்குவதற்காகவே இந்த குருதி நிறைந்த மடிப்புக்களை இயற்கை உருவாகியிருக்கிறது .

பெண் கருத்தரிக்காத நேரங்களில் இம்மடிப்புகளில் உள்ள தேவையற்ற இழையங்களும், அவற்றுடன் சேர்ந்து மடிப்புக்கள் இருக்கும் நுண்ணிய குருதிக் குழாய்களிலிருந்து வெளிவரும் குருதியும் வெளியே கழிவாக தள்ளப்படுகிறது.

மாதவிடாய் மாதவிடாய்ச் சுழற்சியின் ஒரு பகுதியாகும். இச்சுழற்சியின் நீட்டம் 21 நாட்களிலிருந்து 35 நாட்கள் வரை இருக்கும். முதல் மாதவிடாய் பொதுவாக 10 வயதிற்கும் 16 வயதிற்கும் இடையே ஒரு பெண் பூப்படையும்போது ஏற்படுகிறது.

இந்நிகழ்வு அனைத்து பாலூட்டிகளிலும் நடந்தாலும், மனிதன், மற்றும் பரிணாம வளர்ச்சியில் மனிதனுடன் நெருங்கிய தொடர்புடைய சிம்பன்சி போன்ற சில விலங்கினங்களிலேயே இவ்வாறு வெளிப்படையாக கருப்பை மடிப்பு வெளியேறுகிறது. மற்ற பாலூட்டிகளில், இனப்பெருக்க சுழற்சியின் இறுதிக் காலத்தில் கருப்பைமடிப்புகள் மீளவும் உள்ளே உறிஞ்சப்படுகின்றது.

கருத்தரித்திருக்கும் காலத்திலும் குழந்தை பிறந்த சில மாதங்களுக்கும் மாதவிடாய் இருப்பதில்லை. அதாவது, குருதிப்போக்கு இருப்பதில்லை. இச்சுழற்சி மீண்டும் துவங்கும்வரை, பாலூட்டும் காலத்தில் கருத்தரிப்பு நடக்காது. சில குறிப்பிட்ட பாலூட்டும் பழக்கங்களை பின்பற்றினால் இந்த காலத்தை நீடிக்க முடியும். இதனை குடும்பக் கட்டுப்பாட்டு முறையாகவும் கையாளலாம்.

பெரும்பாலான பெண்கள் மாதவிடாயின்போது 50 மி.லி. வரை உதிரம் இழக்கிறார்கள். இந்த நாட்களில் தங்கள் உள்ளாடைகள் கறைபடாதிருக்க அணையாடை அல்லது அடைப்பான் பாவிக்கின்றனர். கர்ப்பம் தரித்திருப்பதற்கான முதல் அடையாளம் மாதவிலக்கு நிற்பது என்றாலும் சில வேளைகளில் கருத்தரிக்காமலேயே மாதவிலக்கு நின்றிருக்கும்.

இந்த நிலைக்கு உடல் இயக்கங்களும், நோய்களும் முக்கிய காரணமாக இருக்கும். குறிப்பாக புதிய இடங்களில் குடியேறுதல், புதிய சூழல்களில் பணியாற்றுதல், டீன் ஏஜ் பருவத்தின் கடைசியில் இருத்தல், அதிக கவலை, டென்ஷன், போன்ற மனநிலைகளில் இருத்தல், குறிப்பிட்ட காலத்தில் ஹார்மோன்கள் முட்டைகளை வெளியிடாத நிலை ஆகிய காரணங்களாலும் மாதவிலக்கு நின்றிருக்கும்.

நோய் என எடுத்துக்கொண்டால், நாள்பட்ட நோய்கள், ரத்த சோகை, ஊட்டச்சத்து குறைபாடுகள், உடற் பருமன், நரம்புத் தளர்ச்சி நோய், போன்றவற்றால் மாதவிலக்கு தொடராது. ஆகவே மாதவிலக்கு நின்றுவிட்டது என்று தாங்களாகவே முடிவுக்கு வந்துவிடக்கூடாது. சரியான மருத்துவரை அணுகி காரணத்தை அறிந்து சரிசெய்துகொள்ள வேண்டும்.

மாதவிடாய் நிறுத்தம் என்பது, 45-70 வயது காலகட்டத்தில் ஒரு பெண்ணில் மாதவிடாயினால் ஏற்படும் உதிரப்போக்கு நின்றுவிடுவதைக் குறிக்கிறது. இக்காலத்தில் பெண்ணின் பாலின பண்பிற்கு காரணமான எஸ்ட்ரோஜன் எனும் நொதி சுரப்பது குறைகிறது.

காரணமின்றி எரிச்சல்படுவது, உடல் வெப்பமடைதல், யோனி எரிச்சல் மற்றும் உலர்ந்திருத்தல் ஆகியன சில அறிகுறிகளாகும். மாதவிடாய் நிறுத்தம் ஏற்பட்ட பெண்கள், அதன் பின்னர் இனப்பெருக்கத்தில் பங்கேற்றி கரு தரிக்க இயலாதே தவிர ஆனால் சுகம் பெற முடியும் .

சரியான சுழற்சியில் மாதவிடாய் நிகழாமல் இருப்பதுமாதத்திற்கு ஒருமுறை அல்லது மாறுபட்ட சுழற்சியில் மாதவிடாய்.மாதவிடாய் மூன்று முதல் ஆறு மாதங்கள் வரை வராமல் இருப்பதுமாதவிடாய் உண்டாகும்போது அதிகமான அடிவயிற்று வலி, உடல் அசதி, வாந்தி, குமட்டல், தலைச்சுற்றல் சாதாரண வேலைகளை கூட செய்ய முடியாத நிலை.மாதவிடாய் ஒழுங்காக வந்தாலும் அளவுக்கு அதிகமாக உதிரம் போவது.மாதசுழற்சிக்கு இடையில் ஓரிரு நாட்கள் உதிரம் படுவது.

மாதவிடாயின்போது அதிகளவு உதிரப்போக்கு ஏற்படும் பெண்களுக்கு கருப்பைக் கோளாறுகள், கருப்பைக் கட்டிகள் அல்லது கருப்பையில் புற்றுநோயின் பாதிப்போ இருக்கக்கூடும்.

228. 'அபூ ஹுபைஷ் என்பவரின் மகள் ஃபாத்திமா என்ற பெண், நபி(ஸல்) அவர்களிடம் வந்து, 'இறைத்தூதர் அவர்களே! நான் அதிகம் உதிரப்போக்குள்ள ஒரு பெண். நான் சுத்தமாவதில்லை. எனவே நான் தொழுகையைவிட்டு விடலாமா?' எனக் கேட்டதற்கு, 'இல்லை! அது ஒருவித நோயால் ஏற்படுவதாகும். அது மாதவிடாய் இரத்தமன்று. உனக்கு மாதவிடாய் வரும்போது தொழுகையைவிட்டு விடு; அது நின்றுவிட்டால் இரத்தம் பட்டு இடத்தைக் கழுவிவிட்டுத் தொழுகையை நிறைவேற்று' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். 'பின்னர் அடுத்த மாதவிடாய் வரும் வரை ஒவ்வொரு தொழுகைக்கும் நீ உளூச் செய்து கொள்' என்றும் நபி(ஸல்) அவர்கள் அப்பெண்ணிடம் கூறினார்கள்' என ஆயிஷா(ரலி) அறிவித்தார்.
ஸஹீஹ் புகாரி அத்தியாயம் : 4. உளூச் செய்வது

மாதவிடாய் இயற்கையின் இயல்பாக இருப்பினும் மக்கள் இதனை பொதுவிடங்களில் குறிப்பிடத் தயங்கினர். அதனாலேயே இடக்கரடக்கலாக வீட்டில் இல்லை, வீட்டிற்கு வெளியே, வீட்டுக்குத் தூரம், வீட்டு விலக்கு என்ற சொல்வழக்கு எழுந்தது. குறிப்பிட்ட காலத்தில் நிகழாது தாமதமாகும்போது தள்ளிப்போயிற்று எனக்கூறுவர். தள்ளிப்போதல் ஒரு பெண் கருவுற்றிருப்பதன் முதல் அறிகுறியாகும். ஆனால் இது மட்டுமே கருத்தங்கலை உறுதிப்படுத்தாது. சீரற்ற மாதவிடாய் சுழற்சி ஆரம்ப ஆண்டுகளில் இயல்பானது. தவிர பெண்ணின் உள/உடல் தகைவுகள் இச்சுழற்சியை பாதிக்கும்.

கருத்தரித்த காலத்திலும் முதலிரு மாதங்களில் சில பெண்களுக்கு மாதவிடாய் ஒழுகல் தொடர்வதும் உண்டு. மாதவிடாயினாலான உதிரப்போக்கு நின்ற பிறகு (3-7 நாட்களில்) தலைக்கு நீர்விட்டு குளிப்பதும் உண்டு. இதனால் குளிக்காமல் இருக்கிறாயா என்பது கருத்தரித்திருக்கிறாயா என்னும் பொருளில் பொதுமக்களிடையே நிலவும் சொற்றொடராகும்.

மாதவிலக்கு பற்றியும் அவர்கள் உம்மிடம் கேட்கின்றனர். அது ஓர் (இயற்கை) உபாதை. எனவே, மாதவிலக்கின் போது (தாம்பத்திய உறவு கொள்ளாமல்) பெண்களிடமிருந்து விலகியிருங்கள். அவர்கள் தூய்மையாகும் வரை அவர்களை நெருங்காதீர்கள். அவர்கள் தூய்மை அடைந்து விட்டால், அல்லாஹ் உங்களுக்குக் கட்டளையிட்டபடி அவர்களிடம் செல்லுங்கள். பாவத்திலிருந்து மீள்வோரை அல்லாஹ் நேசிக்கிறான், தூய்மையானவர்களையும் நேசிக்கிறான் எனக் கூறுவீராக!" (அல்குர்ஆன், 002:222)

பல சமயங்களிலும் மாதவிடாய் குறித்த வழக்கங்கள் சில உள்ளன. இக்காலத்தில் உடலுறவு கொள்வதை சூடாயியம், இந்து மற்றும் இஸ்லாமிய சமயங்கள் தடை செய்கின்றன. சில பழங்குடிகள் பெண்களை இந்தக் காலம் முடியும் வரை தனிக் குடிலில் தங்க வைக்கிறார்கள்.

தமிழக சமூகங்களிலும் அண்மைக் காலங்களில் அவர்களை வீட்டிற்கு வெளியே, புறக்கடையில், தங்க வைத்திருந்தனர். இந்த நாட்களில் அவர்கள் சமையலறை, சமய சடங்குகள் எதிலும் கலந்து கொள்ள அனுமதிக்கப்படுவதில்லை.

பல இடங்களில் மாதவிலக்கு சமயத்தில் பெண்கள் வெளியில் சென்றால் விபத்து நடக்கும், குளித்தால் சளி பிடிக்கும், காயம் படும், கனமான பொருட்களை தூக்கக்கூடாது, பூக்களைத் தொட்டால் வாடிவிடும், வயல்வெளியில் சென்றால் பயிர் கருகிவிடும், தனி தட்டில்தான் சாப்பிட வேண்டும், தலைக்கு குளிக்காமல் வீட்டுக்குள் நடமாடக் கூடாது, சாப்பிட்ட மிச்சத்தை நாய்க்கு போட்டால் வயிறு வலிக்கும்... என்பதான நம்பிக்கைகள் உள்ளன.

கிராமப்புறங்களில் மாதவிலக்கான பெண்ணை தனிக் குடிசையில் ஒதுக்கி வைப்பதோடு, குளிக்க வெளியே வருவதானால்கூட ஒரு இரும்புக் கம்பியை பாதுகாப்புக்குக் கொடுத்தனுப்பும் வழக்கம் உண்டு.

ஐரோப்பியாவில் கூட சில காலங்களுக்கு முன்னர் வரை உணவகங்களில் வேலை செய்யும் பெண்கள் அந்த நாட்களில் உணவைத் தொடக்கூடாது என்ற கட்டுப்பாடு இருந்தது. மாதவிலக்கின் போது குறிப்பிட்ட அந்தப் பெண்ணின் கை பட்ட உணவுகள் பழுதடைந்து விடுமென்ற நம்பிக்கையே அதற்குக் காரணமாக இருந்தது. 1960 இல் இருந்து சில பெண்கள் தங்கள் மாதவிடாய் சுழற்சியை மாற்றும் மருந்துகளைக் கொண்டு மாதவிடாய் நேருவதையும் கருத்தரிப்பதையும் சுயகட்டுப்பாட்டில் வைத்துக் கொள்கின்றனர்.

ஆனால் இஸ்லாம் மாதவிடாய் பெண்களை அப்புறப்படுத்தாமல் குடும்பத்தோடு ஒன்றி இருக்கவே செய்தது. அதற்கு உதாரணங்களாக ....

296. 'ஒருவர் 'தம் மனைவி குளிப்புக் கடமையான நிலையில் தம்முடன் நெருங்கலாமா? மாதவிடாய்க்காரி தமக்குப் பணிவிடை செய்யலாமா?' என்று உர்வாவிடம் கேட்டதற்கு உர்வா 'அது எல்லாமே என்னிடம் சிறிய விஷயம்தான். (என் மனைவியர்) எல்லோருமே எனக்குப் பணிவிடை செய்வார்கள். அவ்வாறு செய்வதில் யார் மீதும் எந்தக் குற்றமுமில்லை. ஆயிஷா(ரலி)வுக்கு மாதவிடாய் ஏற்பட்டிருக்கும் நிலையில் அவர்கள் நபி(ஸல்) அவர்களின் தலை முடியைச் சீவி விடுவார்கள். என ஆயிஷா(ரலி) என்னிடம் கூறினார்' என்றார்' என ஹிஷாம் அறிவித்தார்.

298. 'நான் நபி(ஸல்) அவர்களுடன் ஒரு போர்வையைப் போர்த்திப் படுத்துக் கொண்டிருந்தபோது எனக்கு மாதவிடாய் ஏற்பட்டது. மாதவிடாய்க் காலத்தில் அணியும் துணியை எடுப்பதற்காக நபி(ஸல்) அவர்களுக்குத் தெரியாதவாறு அந்த இடத்தைவிட்டு நகர்ந்தேன். 'உனக்கு நிஃபாஸ் (மாதவிடாய்) ஏற்பட்டுவிட்டதா?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டார்கள். 'ஆம்' என்றேன். ஆயினும் அவர்கள் என்னை அருகில் வரக் கூறினார்கள். நான் அவர்களோடு போர்வைக்குள் படுத்துக் கொண்டேன்' என உம்முஸலமா(ரலி) அறிவித்தார். ஸஹீஹ் புகாரி

297. 'எனக்கு மாதவிடாய் ஏற்பட்டிருக்கும்போது நபி(ஸல்) அவர்கள் என்னுடைய மடியில் சாய்ந்து கொண்டு குர்ஆனை ஓதும் வழக்கமுடையவர்களாக இருந்தார்கள்' என ஆயிஷா(ரலி) அறிவித்தார். ஸஹீஹ் புகாரி

"மாதவிலக்கு என்பது ஆதமுடைய பெண் மக்களின் மீது அல்லாஹ் விதித்த ஒன்றாகும்" என்று இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

ர.ரா

கேள்விகளுக்கு அப்பால் .....

தத்துவ விசாரம் 1




கேள்வி என்பது தேடலின் வார்த்தை வடிவம். அகமோ புறமோ பயணமின்றித் தேடல் இல்லை. கேள்வி, தேடல், பயணம் இவற்றுக்கெல்லாம் விடை அல்லது முடிவு என்ற ஒன்று இல்லை என்று ஜென் கூறுகிறது.

ஜென் மடாலயங்களில் கோவான் என்ற புதிர்கள் சீடர்களுக்குத் தரப்படுகின்றன. இவை பெரும்பாலும் கேள்வி வடிவில் இருக்கும். ஒரு வண்ணத்துப் பூச்சியைப்போல் அதை சீடரின் கையில் பொத்தித் தருகிறார் குரு. கையைத் திறந்தவுடன் வண்ணத்துப் பூச்சி பறக்கிறது. பின்னாலேயே சீடன் துரத்திக்கொண்டு ஓடுகிறான். அது உட்காரும் பூவருகே மெல்ல நடந்து செல்கிறான். அடுத்த கணம் விரலிடுக்கில் வண்ணத்துப்பூச்சி பிடிபட்டுவிடும். அதாவது விடை தெரிந்துவிடும். அடடா! சட்டென்று பறந்துவிட்டதே.

இப்படித்தான் புதிர்களுக் கான விடையை கிட்டத்தட்ட நெருங்கிவிட்டதாக உணரும் வேளையில் விடை நழுவி விடுகிறது. இதுவல்ல இதுவல்ல என்று வேறு விடைதேடிக் கேள்வியை வைத்துக்கொண்டு அலையும் சீடனைப் பார்த்து குரு புன்னகைக்கிறார். வண்ணத்துப் பூச்சியைப் பிடிப்பதல்ல நோக்கம். பறப்பதைக் கவனித்தாலே பிடிபட்டுவிட்டதாகப் பொருள்.

தேடலிலேயே தேடல் பூரணத்துவம் பெறுகிறது. இதைத்தான் முதல்படியே கடைசிபடி என்கிறார்கள் .

“இது தான் எனக்கும், உமக்குமிடையே பிரிவு(க்குரிய நேரம்) ஆகும்; எதைப் பற்றி நீர் பொறுமையாக இருக்க முடியவில்லையோ, அதன் விளக்கத்தையும் (இப்பொழுதே) உமக்குத் திட்டமாக அறிவித்து விடுகிறேன்” என்று அவர் கூறினார்.
(அல்குர்ஆன் : 18:78)

“அம்மரக்கலம் கடலில் வேலை செய்யும் ஏழைகள் சிலருக்குச் சொந்தமானது; எனவே நான் அதை (ஓட்டையிட்டு)ப் பழுதாக்க விரும்பினேன்; (ஏனெனில்) அவர்களுக்குப் பின்னால் (கொடுங்கோலனான) ஓர் அரசன் இருந்தான்; அவன் (பழுதில்லா) மரக்கலங்களையெல்லாம் பலவந்தமாக எடுத்துக் கொள்கிறான்.
(அல்குர்ஆன் : 18:79)

“(அடுத்து) அந்த சிறுவனுடைய தாய், தந்தையர் இருவரும் முஃமின்களாக இருக்கிறார்கள்; அவன் (வாலிபனாகி) அவ்விருவரையும் வழிகேட்டிலும், குஃப்ரிலும் சேர்த்து விடுவான் என்று நாம் பயந்தோம்.
(அல்குர்ஆன் : 18:80)

“இன்னும், அவ்விருவருக்கும், பரிசுத்தத்திலும் (பெற்றோரிடம்) அன்பு செலுத்துவதிலும் சிறந்திருக்க கூடிய (ஒரு மகனை) அவ்விருவருடைய இறைவன் (கொலையுண்டவனுக்குப்) பதிலாக கொடுப்பதை நாம் விரும்பினோம்.
(அல்குர்ஆன் : 18:81)

“இனி (நான் நிமிர்த்து வைத்த) அந்த சுவர் அந்தப் பட்டிணத்திலுள்ள அநாதைச் சிறுவர் இருவருக்குரியது; அதன் அடியில் அவ்விருவருக்கும் சொந்தமான புதையல் உள்ளது; அவ்விருவருடைய தந்தை (ஸாலிஹான) நல்ல மனிதராக இருந்தார்; எனவே, அவ்விருவரும் தக்க பிராயமடைந்த தம்மிருவரின் புதையலையும் வெளிப்படுத்தி (எடுத்துக்) கொள்ள வேண்டும் என உம்முடைய இறைவன் நாடினான். (இவையெல்லாம்) உம் இறைவனுடைய ரஹ்மத்தில் நின்றும் உள்ளவை; என் விருப்பு, வெறுப்பின்படி எந்தக் காரியத்தையும் செய்யவில்லை; எதைப் பற்றி நீர் பொறுமையாக இருக்க முடியவில்லையோ அதன் விளக்கம் இது தான்” என்று கூறினார்.
(அல்குர்ஆன் : 18:82)

ர.ரா

மனப் பதிவு
தத்துவ விசாரம் 2



உன்னை உணராமையால் உலகு தோன்றுகிறது. உன்னை உணர்ந்தால் உலகு தோன்றாது.

கயிற்றைக் காணாததால் அரவு தோன்றும்; கயிற்றைக் கண்டால் அரவு (பாம்பு) தோன்றாது.

இதுவே அஷ்டாவக்கிர கீதையின் சாரம்.

நமக்கு பாம்பை பற்றியும் அதன் விஷத்தன்மையை பற்றியும் சிறு வயதில் சொல்லிக் கொடுக்கப்படுகிறது.

இரவு நேரத்தில் ரோட்டில் நடந்து செல்லும் போது கயிறு போன்ற ஏதோ ஒன்றை மிதித்து விடுகிறீர்கள். மிதித்ததும் அடுத்த கணமே அது ஒரு பாம்பாகத்தான் இருக்கும் என்ற எண்ணம் உங்களுக்குள் எழுகிறது. இங்கே என்ன நடக்கிறது? எப்படி இந்த எண்ணம் பிறந்தது?

கயிறும் பாம்பும் வடிவத்தில் ஒத்தது. பாம்பின் வடிவம், அதன் கொடூரமான விஷத்தன்மை பற்றி நமக்கு ஏற்கனவே மனப்பதிவுகள் இருக்கிறது. எனவே தான் நாம் கயிறை மிதிக்கும் போது நம் தொடு உணர்வானது அறிவால் விளங்கி கொள்ளப்பட்டு சிந்தனைக்கு உள்ளாக்கப்படுகிறது. சிந்தனையானது மனப்பதிவுகளை அடிப்படையாக கொண்டு ஒரு எண்ணத்தை உருவாக்குகிறது. அதனாலயே கயிறை மிதித்தவுடன் அது பாம்பாக இருக்குமோ என்ற எண்ணம் மேலோங்குகிறது. பயம் ஏற்படுகிறது.

ஒரு வேளை நமக்கு பாம்பு என்கிற ஒரு சந்துவை பற்றிய அறிவு இல்லை என வைத்துக்கொள்வோம். இருட்டில் நீங்கள் பாம்பையே மிதித்து இருந்தாலும் அது ஏதோ ஒரு கயிறு தான் என கடந்து செல்வீர்கள். ஏனெனில் உங்களுக்கு கயிறு பற்றிய மனப்பதிவு மட்டுமே ஏற்கெனவே இருந்திருக்கும்.

இந்த உதாரணத்தின் வழியாக ஒரு எண்ணம் எப்படி பிறக்கிறது என புரிந்து கொள்ள முடியும். ஆகையால் தான் நம் முன்னோர்களும், சான்றோர்களும் “நல்ல எண்ணங்களை/உயர்வான எண்ணங்களை கொண்டிரு” என சொல்லிவிட்டு சென்றிருக்கிறார்கள்.

நல்ல எண்ணங்களுக்கு மூலாதாரமாக இருப்பவை நமது நல்ல மனப்பதிவுகள் தான். நேர்மறையான விசயங்களை கேட்பதாலோ, படிப்பதாலோ நமக்குள் நல்ல மனப்பதிவுகள் உருவாக்கப்படுகிறது. அதனாலயே நாம் நேர்மறையான எண்ணங்களை கொண்டிருப்போம். எதிர்மறையான விசயங்களை மட்டுமே கேட்டு வளரும் ஒரு குழந்தை மிக மோசமான மனப்பதிவுகளை சேமித்து வைத்திருக்கும். அதனாலயே அதனிடம் வெறுமனே எதிர்மறையான எண்ணங்கள் வெளிப்பட்டு கொண்டிருக்கும்.

எதிர்மறையான எண்ணங்களை வெளிப்படுத்தும் ஒருவனுக்கு எல்லாமுமே எதிர்மறையாகத்தான் நிகழும். இதனால் மிகுந்த மன உளைச்சல் அடைந்த அவன் மனதை தூற்ற தொடங்குவான். அவனுக்கு தெரியப்போவதில்லை, அவனுடைய அனைத்து பிரச்சனைகளுக்கும் மூலக்காரணம் அவனுடைய மனப்பதிவுகளும், எதிர்மறை எண்ணங்களும் தான் என்று. இதனை சரியாக பயன்படுத்தி கொள்ளும் நமது டூபாக்கூர் ஆன்மிகவாதிகள் தான் உங்களிடம் “மனமே அனைத்திற்கும் காரணம். அதனை அடக்கு, ஒடுக்கு” என கூவி கொண்டிருப்பார்கள்.

உன் மனதில் இருப்பவைகளுக்கு நீ எப்போது பொறுப்பேற்க தொடங்குகிறாயோ அந்த கணம் உன் மனதின் இயல்பு உனக்கு புரிந்துவிடும். மனதிற்கும், மனப்பதிவிற்கும் உள்ள வேறுபாடு வெட்ட வெளிச்சமாகிவிடும்

قَالَ هِىَ عَصَاىَ اَتَوَكَّؤُا عَلَيْهَا وَاَهُشُّ بِهَا عَلٰى غَنَمِىْ وَلِىَ فِيْهَا مَاٰرِبُ اُخْرٰى
(அதற்கவர்) “இது என்னுடைய கைத்தடி; இதன் மீது நான் சாய்ந்து கொள்வேன்; இதைக் கொண்டு என் ஆடுகளுக்கு இலைகள் பறிப்பேன்; இன்னும் இதில் எனக்கு வேறு தேவைகளும் நிறைவேறுகின்றன” என்று கூறினார்.
(அல்குர்ஆன் : 20:18)

قَالَ اَلْقِهَا يٰمُوْسٰى
அதற்கு (இறைவன்) “மூஸாவே! அதை நீர் கீழே எறியும்” என்றான்.
(அல்குர்ஆன் : 20:19)

فَاَلْقٰهَا فَاِذَا هِىَ حَيَّةٌ تَسْعٰى
அவ்வாறே அவர் அதனைக் கீழே எறிந்தார்; அப்போது அது ஊர்ந்து செல்லும் ஒரு பாம்பாயிற்று.
(அல்குர்ஆன் : 20:20)

قَالَ خُذْهَا وَلَا تَخَفْ سَنُعِيْدُهَا سِيْرَتَهَا الْاُوْلٰى

(இறைவன்) கூறினான்: “அதைப் பிடியும்; பயப்படாதீர்; உடனே நாம் அதை அதன் பழைய நிலைக்கே மீட்டுவோம்.”

(அல்குர்ஆன் : 20:21)

ர.ரா




Rahmath Rajakumaran நமக்கு பாம்பை பற்றியும் அதன் விசத்தன்மையை பற்றியும் சிறு வயதில் சொல்லிக் கொடுக்கப்படுகிறது. இரவு நேரத்தில் ரோட்டில் நடந்து செல்லும் போது கயிறு போன்ற ஏதோ ஒன்றை மிதித்து விடுகிறீர்கள். மிதித்ததும் அடுத்த கணமே அது ஒரு பாம்பாய் தான் இருக்கும் என்ற எண்ணம் உங்களுக்குள் எழுகிறது. இங்கே என்ன நடக்கிறது? எப்படி இந்த எண்ணம் பிறந்தது?

கயிறும் பாம்பும் வடிவத்தில் ஒத்தது. பாம்பின் வடிவம், அதன் கொடூரமான விசத்தன்மை பற்றி நமக்கு ஏற்கனவே மனப்பதிவுகள் இருக்கிறது. எனவே தான் நாம் கயிறை மிதிக்கும் போது நம் தொடு உணர்வானது அறிவால் விளங்கி கொள்ளப்பட்டு சிந்தனைக்கு உள்ளாக்கப்படுகிறது. சிந்தனையானது மனப்பதிவுகளை அடிப்படையாக கொண்டு ஒரு எண்ணத்தை உருவாக்குகிறது. அதனாலயே கயிறை மிதித்தவுடன் அது பாம்பாக இருக்குமோ என்ற எண்ணம் மேலோங்குகிறது. பயம் ஏற்படுகிறது. ஒரு வேளை நமக்கு பாம்பு என்கிற ஒரு சந்துவை பற்றிய அறிவு இல்லை என வைத்துக்கொள்வோம். இருட்டில் நீங்கள் பாம்பையே மிதித்து இருந்தாலும் அது ஏதோ ஒரு கயிறு தான் என கடந்து செல்வீர்கள். ஏனெனில் உங்களுக்கு கயிறு பற்றிய மனப்பதிவு மட்டுமே ஏற்கெனவே இருந்திருக்கும்.

இந்த உதாரணத்தின் வழியாக ஒரு எண்ணம் எப்படி பிறக்கிறது என புரிந்து கொள்ள முடியும். ஆகையால் தான் நம் முன்னோர்களும், சான்றோர்களும் “நல்ல எண்ணங்களை/உயர்வான எண்ணங்களை கொண்டிரு” என சொல்லிவிட்டு சென்றிருக்கிறார்கள். நல்ல எண்ணங்களுக்கு மூலாதாரமாக இருப்பவை நமது நல்ல மனப்பதிவுகள் தான். நேர்மறையான விசயங்களை கேட்பதாலோ, படிப்பதாலோ நமக்குள் நல்ல மனப்பதிவுகள் உருவாக்கப்படுகிறது. அதனாலயே நாம் நேர்மறையான எண்ணங்களை கொண்டிருப்போம். எதிர்மறையான விசயங்களை மட்டுமே கேட்டு வளரும் ஒரு குழந்தை மிக மோசமான மனப்பதிவுகளை சேமித்து வைத்திருக்கும். அதனாலயே அதனிடம் வெறுமனே எதிர்மறையான எண்ணங்கள் வெளிப்பட்டு கொண்டிருக்கும். எதிர்மறையான எண்ணங்களை வெளிப்படுத்தும் ஒருவனுக்கு எல்லாமுமே எதிர்மறையாக தான் நிகழும். இதனால் மிகுந்த மன உளைச்சல் அடைந்த அவன் மனதை தூற்ற தொடங்குவான். அவனுக்கு தெரியப்போவதில்லை, அவனுடைய அனைத்து பிரச்சனைகளுக்கும் மூலக்காரணம் அவனுடைய மனப்பதிவுகளும், எதிர்மறை எண்ணங்களும் தான் என்று. இதனை சரியாக பயன்படுத்தி கொள்ளும் நமது டூபாக்கூர் ஆன்மிகவாதிகள் தான் உங்களிடம் “மனமே அனைத்திற்கும் காரணம். அதனை அடக்கு, ஒடுக்கு” என கூவி கொண்டிருப்பார்கள்.

உன் மனதில் இருப்பவைகளுக்கு நீ எப்போது பொறுப்பேற்க தொடங்குகிறாயோ அந்த கணம் உன் மனதின் இயல்பு உனக்கு புரிந்துவிடும். மனதிற்கும், மனப்பதிவிற்கும் உள்ள வேறுபாடு வெட்ட வெளிச்சமாகிவிடும்

அறிவையும் தூக்கிப் போடு

தத்துவ விசாரம் 3

அறிவு என்பது மனித வாழ்க்கைக்கு மிகவும் முக்கியம். பொருள் சார்ந்த நடைமுறை வாழ்வுக்கு மட்டுமின்றி ஆன்மிக வாழ்வுக்கும் இது மிகவும் அவசியம். எல்லையற்ற இறை ஆற்றலுடன் தனிமனிதன் இணைவதே யோகம் எனப்படுகிறது.

ஆனால், அறிவு எல்லைக்குட்பட்டது. ஒரு கட்டத்துக்கு மேல் நம்மை அழைத்துச்செல்லாது. அறிவு இல்லையேல் நாம் நடைமுறை வாழ்வை நடத்த முடியாது. அறிவியல், மெய்யியல் ஞானங்களைப் பெற

முடியாது. ஆனால் உண்மையான மெய்யியல் அனுபவத்தைப் பெற வேண்டுமென்றால் அதற்கு அறிவு மட்டும் போதாது என்றே மகான்கள் சொல்கிறார்கள்.

ஹெர்மென் ஹெஸ் என்னும் ஜெர்மானிய எழுத்தாளர் இந்தியத் தத்துவ இயலில் ஆழங்கால் பட்டவர். இந்தியத் தத்துவ மரபை அடியொற்றி சித்தார்த்தன் என்னும் நாவலை அவர் எழுதியுள்ளார். கதையின் மையப் பாத்திரமான சித்தார்த்தன் ஆன்மிகத் தேடல் கொண்டவன். கூர்மையான அறிவும் வாதத் திறமையும் கொண்டவன். அவன் ஒரு ஞானியைச் சந்திக்கிறான். அவரிடம் சில கேள்விகள் கேட்கிறான். அவனுக்குப் பதில்களைச் சொல்லும் அந்த ஞானி கடைசியில் ஒரு வார்த்தை சொல்கிறார்:

“உன்னுடைய மிதமிஞ்சிய அறிவுக் கூர்மையிலிருந்து உன்னைத் தற்காத்துக்கொள்.”

மிதமிஞ்சிய அறிவு உன்னை ஒரு கட்டத்துக்கு மேல் முன்னேற விடாது என்பதே அந்த ஞானி சித்தார்த்தனுக்குச் சொல்ல விரும்பிய செய்தி. சித்தார்த்தன் பல்வேறு அனுபவங்களுக்கும் அலைதல்களுக்கும் பிறகே அறிவின் தடையைக் கடக்கிறான்.

கூர்மையான வாதங்கள், மண்டையைப் பிளக்கும் தர்க்கங்கள், தீவிரமான ஆய்வுகள் ஆகிய எல்லாமே அவசியம்தான். ஆனால், அறிவு ஒருவரைக் கடைசிவரை கூட்டிச்செல்லாது. அறிவு எல்லைக்குட்பட்டது. எல்லாவற்றுக்கும் அடிப்படையான பேருண்மையைத் தனக்குள் கண்டுணரும் முயற்சியில் அறிவு என்பது சுமையாகிவிடக்கூடும்.

“ஒரு முள்ளை எடுக்க இன்னொரு முள்ளைப் பயன்படுத்துகிறோம். முள்ளை எடுத்த பிறகு இரண்டு முட்களையும் தூக்கிப் போட்டுவிடுகிறோம். அறியாமை என்னும் முள்ளை எடுக்க அறிவு என்னும் முள்ளைப் பயன்படுத்துகிறோம். அந்த நோக்கம் நிறைவேறியதும் இந்த முள்ளையும் தூக்கிப் போட்டுவிட வேண்டும். அறிவை எப்போதும் சுமந்துகொண்டிருக்கக் கூடாது” என்கிறார் ராமகிருஷ்ண பரமஹம்ஸர்.

சீரான அறிவு சரியான ஆதாரத்திற்கு ஒத்துப் போக வேண்டும். குர்ஆனிலும், ஸுன்னாவிலும் கூறப்பட்டவைகளுக்கு அது முரண்படக்கூடாது. முரண்பாடு இருப்பதாக தோன்றும்போது அறிவை விட ஆதாரத்தை முற்படுத்த வேண்டும்.

குர்ஆன் மற்றும் ஸுன்னாவை புரிந்துகொள்ளும் விஷயத்தில் ஆதாரத்தை முற்படுத்தி அறிவை பிற்படுத்த வேண்டும்.

மனித அறிவு வரையறைக்குட்பட்டதாகும் அறிவு சரிகாணும் அனைத்தும் உண்மையாகவோ, நன்மையாகவோ இருப்பதில்லை. அறிவு சிலபோது மனோ இச்சையின்அடிப்படையிலும், சிலபோது கற்பித்ததின் அடிப்படையிலும், யூகங்களின் அடிப்படையிலும் பலவற்றையும் சரி காணும். மனித அறிவு குறைபாடுள்ளதாக இருக்கிறது.

وَمَاۤ اُوْتِيْتُمْ مِّنَ الْعِلْمِ اِلَّا قَلِيْلًا

இன்னும் ஞானத்திலிருந்து உங்களுக்கு அளிக்கப்பட்டது மிகச் சொற்பமேயன்றி வேறில்லை எனக் கூறுவீராக.
(அல்குர்ஆன் : 17:85)

மனிதனுக்கு வழிகாட்டுவதற்கு அவனது அறிவு மட்டுமே போதுமானதாக இல்லை. அப்படியிருந்திருந்தால் அல்லாஹுு தஆலா தூதர்களையும், வேதங்களையும் அனுப்பி வைத்திருக்கமாட்டான். மாறாக மனிதனுக்கு வழங்கப்பட்ட அறிவின் மூலம் அவன் ஆதாரத்தை பின்பற்ற வேண்டும், அதன் மூலம் தான் அவன் நேர்வழி அடைய முடியும்.

அல்லாஹ் கூறுகிறான்:

فَاِمَّا يَاْتِيَنَّكُمْ مِّنِّىْ هُدًى ۙ فَمَنِ اتَّبَعَ هُدَاىَ فَلَا يَضِلُّ وَ لَا يَشْقٰى
அப்பொழுது நிச்சயமாக என்னிடமிருந்து உங்களுக்கு நேர்வழி வரும்; எவர் என்னுடைய நேர்வழியைப் பின் பற்றி நடக்கிறாரோ அவர் வழி தவறவும் மாட்டார், நற்பேறிழக்கவும் மாட்டார்.
(அல்குர்ஆன் : 20:123)

அறிவும், ஆதாரமும் முரண்படும் போது அறிவை பிற்படுத்தி ஆதாரத்தை முற்படுத்த வேண்டும். ஏனெனில் அறிவு ஆதாரத்தை உண்மைப்படுத்தும்; ஆதாரம் ஒரு போதும் அறிவை உண்மைப்படுத்தாது இதன் விளக்கத்தை அலீ (ரலி) அவர்களின் கூற்றிலிருந்து புரிந்து கொள்ளலாம்.

அலீ(ரலி) அவர்கள் கூறினார்கள்:

அறிவை மட்டும் அடிப்படையாக கொண்டதாக மார்க்கம் இருந்திருந்தால் (மஸஹ் செய்யும் போது) காலுறையின் அடிப்பகுதி தடவுவது, மேல் பகுதியில் தடவுவதை விட ஏற்றமானதாக இருந்திருக்கும் நபி(ஸல்) அவர்கள் காலுறையின் மேற்பகுதியை தடவுவதை நான் பார்த்திருக்கிறேன்.
நூல்: சுனனு அபிதாவூது -162

கண்களால் காட்சிகளை பார்ப்பதற்கு வெளிச்சம் எவ்வாறு அவசியமோ, அதேபோன்று அறிவிற்கு ஆதாரம் அவசியமாகும். அறிவை மட்டும் அடிப்படையாகக் கொண்டு தீர்ப்பு வழங்குவது தான் அதிகமான மக்கள் வழிகேட்டிற்கு செல்ல காரணம். முஃமின்களைப் பொறுத்த வரை ஆதாரங்களை நம்பி ஏற்றுக் கொள்வார்கள். எனவே தான் நாம் அறிவிற்குப் புலப்படாத மறைவானவற்றை நம்பிக்கை கொண்டுள்ளோம். அத்தகைய நம்பிக்கையை அல்லாஹுு தஆலா முத்தக்கீன்களின் பண்பாக கூறுகிறான்.

ذٰلِكَ الْكِتٰبُ لَا رَيْبَ فِيْهِ هُدًى لِّلْمُتَّقِيْنَۙ.
الَّذِيْنَ يُؤْمِنُوْنَ بِالْغَيْبِ وَ يُقِيْمُوْنَ الصَّلٰوةَ وَمِمَّا رَزَقْنٰهُمْ يُنْفِقُوْنَۙ.

وَالَّذِيْنَ يُؤْمِنُوْنَ بِمَّا اُنْزِلَ اِلَيْكَ وَمَاۤ اُنْزِلَ مِنْ قَبْلِكَ وَبِالْاٰخِرَةِ هُمْ يُوْقِنُوْنَ.
اُولٰٓٮِٕكَ عَلٰى هُدًى مِّنْ رَّبِّهِمْ وَاُولٰٓٮِٕكَ هُمُ الْمُفْلِحُوْنَ.

இது, (அல்லாஹ்வின்) திருவேதமாகும்; இதில் எத்தகைய சந்தேகமும் இல்லை; பயபக்தியுடையோருக்கு (இது) நேர்வழிகாட்டியாகும்.

(பயபக்தியுடைய) அவர்கள், (புலன்களுக்கு எட்டா) மறைவானவற்றின் மீது நம்பிக்கை கொள்வார்கள்; தொழுகையையும் கடைப்பிடிப்பார்கள்; இன்னும் நாம் அவர்களுக்கு அளித்தவற்றிலிருந்து (நல்வழியில்) செலவும் செய்வார்கள்.

(நபியே!) இன்னும் அவர்கள் உமக்கு அருளப்பெற்ற (வேதத்)தின் மீதும் உமக்கு முன்னர் அருளப்பட்டவை மீதும் நம்பிக்கை கொள்வார்கள்; இன்னும் ஆகிரத்தை(மறுமையை) உறுதியாக நம்புவார்கள்.

இவர்கள் தாம் தங்கள் இறைவனின் நேர்வழியில் இருப்பவர்கள்; மேலும் இவர்களே வெற்றியாளர்கள்.
(அல்குர்ஆன் : 2: 2-5)

அல்லாஹ்வின் மார்க்கத்தில் அறிவிற்கு வேலையில்லை என்பதல்ல இதன் பொருள். மாறாக அறிவை விட ஆதாரங்களுக்கு முக்கியத்துவம் வழங்க வேண்டும் என்பதாகும்.

ஏனெனில் குர்ஆனிலும் ஸுன்னாவிலும் சொல்லப்பட்டுள்ள சில விஷயங்கள் நமது சிற்றறிவால் புரிந்து கொள்ள முடியாமல் போகும். அது போன்ற சந்தர்ப்பங்களில் ஈமானின் அடையாளமாக, அல்லாஹ்வும் அவனது தூதரும் கூறியவற்றை நம்பிக்கையுடன் செயல்படுத்துவோம். இதற்கு உதாரணமாக உளு செய்வதை எடுத்துக் கொள்வோம்.

உளு செய்த ஒருவருக்கு காற்று பிரிந்து விட்டால் அவரது உளு முறிந்து விடும் என்று நபி(ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். அப்போது அவர் மீண்டும் உளு செய்ய வேண்டும். அப்படி செய்யும் போது காற்றுப் பிரிந்த இடத்தை அவர் சுத்தம் செய்வதுமில்லை, கழுவுவதுமில்லை. மாறாக ஏற்கனவே கழுவிய இடங்களைத்தான் கழுவுகிறார். இச்செயல் அறிவுக்கு பொருந்துமா என்று கேட்டால், இல்லை என்றுதான் கூறுவோம். ஆனாலும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறுதான் செய்யவேண்டுமென்று கட்டளையிட்டுள்ளதால் அதனையே நாமும் செய்கிறோம்.

இவ்வாறே குளிப்புக் கடமையான ஒருவர் குளிப்பதற்கு தண்ணீர் இல்லாதபோது தயமம் செய்துகொள்ள வேண்டும் என்று மார்க்கம் சொல்கிறது. தயமம் என்பது கைகளை மண்ணில் அடித்து கையில் படிந்துள்ள தூசியால் முகத்தையும் முன் கையையும் தடவிக் கொள்வதாகும்.

அசுத்தமான ஒருவர் தன்னை சுத்தப்படுத்திக் கொள்ள தண்ணீரைப் பயன்படுத்துவது அறிவிற்கு பொருந்துகிறது. மண்ணைக் கொண்டு தடவுவது அறிவிற்கு பொருந்தாத செயலாகும். இன்னும் சொல்லப் போனால் தயமம் செய்வதைப் பொருத்தவரை அசுத்தம் ஏற்பட்ட இடத்தில் தடவுவதுமில்லை. ஆனாலும் இதைத்தான் நபி(ஸல்) காட்டித்தந்த வழிமுறை என்று கடைப்பிடிக்கிறோம்.

இதற்குத்தான் ஆதாரத்தை முற்படுத்தி அறிவைப் பிற்படுத்துவது என்று கூறுகிறோம். இதில் அடங்கியுள்ள ரகசியத்தை நாம் அறியமாட்டோம்.

மறைவான விஷயங்களை பொறுத்தவரையில் இது போன்ற ஏராளமான உதாரணங்கள் உள்ளன. அவைகள் நமது அறிவுக்கு புலப்படாதவைகள்தாம். அவற்றை அல்லாஹ்வும் அவனது தூதரும் கூறியுள்ளார்கள் என்பதால் நாம் அதனை ஈமான் கொள்கிறோம்.

மனித அறிவு அதன் எல்லைக்கும் அப்பால் இருப்பதை அறிந்து கொள்ளும் திறன் அற்றது .

ர.ரா



உண்மை எத்தனை வகை?

தத்துவ விசாரம் 4

ஒரு சீடன் அத்வைத பாடம் படித்துக்கொண்டி ருந்தான். எல்லாமே பிரம்மம் என்று குரு சொல்லிக்கொடுத்தார்.

“எல்லாமே பிரம்மம் என்றால் நானும் பிரம்மமா?” என்று சீடன் கேட்டான்.

“ஆமாம்” என்றார் குரு.

“இந்தக் குடிசை?”

“பிரம்மம்தான்.”

“இந்த ஆடு?”

“அதுவும் பிரம்மம்தான்.”

சீடனின் ஆச்சரியத்துக்கு அளவே இல்லை. தன்னையும் தன்னைச் சுறியுள்ள சகல உயிர்களையும் உயிரற்ற பொருள்களையும் பிரம்மமாக எண்ணிப் பார்க்கத் தொடங்கினான். அந்த எண்ணமே பரவசமூட்டுவதாக இருந்தது. காற்றில் மிதப்பதுபோன்ற உணர்வு ஏற்பட்டது.

மறுநாள் கடைத்தெருவில் அவன் நடந்து போய்க் கொண்டிருந்தபோது மதம் கொண்ட யானை ஒன்று ஆக்ரோஷமாக ஓடி வந்தது. எல்லோரும் அதைக் கண்டு விலகி ஓடினார்கள். இந்தச் சீடன் மட்டும் ஓடவில்லை. யானையின் மீது இருந்த பாகன் இவனைப் பார்த்து “ஓடு ஓடு” என்று கத்தினான். இவனோ கண்டுகொள்ளவே இல்லை. ஆனந்தமாகப் போய்க்கொண்டிருந்தான்.

அருகில் வந்த யானை இவனை ஒரு தட்டுத் தட்டியது. இவன் பல அடி தூரம் போய் விழுந்தான். உடலெல்லாம் ரத்த காயம்.

சிகிச்சை முடிந்து ஆசிரமத்துக்கு வந்தவனிடம் குரு கேட்டார்:

“யானையைப் பார்த்ததும் நீ ஏன் தப்பி ஓடவில்லை?”

“யானையும் பிரம்மம், நானும் பிரம்மம். ஒரு பிரம்மம் இன்னொரு பிரம்மத்தைப் பார்த்து ஏன் ஓட வேண்டும்?” என்றான் சீடன்.

“யானை மேல் இருந்தவனும் பிரம்மம்தானே. அந்த பிரம்மம் சொன்னதை நீ கேட்டிருக்கலாமே?” என்று சொல்லிச் சிரித்தார் குரு.

இந்தக் கதை ஒரு முக்கியமான கேள்வியை எழுப்புகிறது. எல்லாமே பிரம்மம் என்பது உண்மை என்றால் ஏன் ஒரு பிரம்மத்தைப் பார்த்து இன்னொரு பிரம்மம் ஓட வேண்டும்?
ஏன் ஒரு பிரம்மம் இன்னொரு பிரம்மத்தைத் தாக்க வேண்டும்?
ஒரு பிரம்மம் ஏன் இன்னொரு பிரம்மத்தைக் காப்பாற்றவோ அழிக்கவோ செய்ய வேண்டும்? பிரம்மமே எல்லாவற்றுக்கும் ஆதாரம் என்பது உண்மை என்றால் இவை எல்லாம் பொய் ஆகின்றன.

ஐம்புலன்களாலும் அறிவாலும் உணர்ந்து அனுபவிக்கும் இவற்றை எல்லாம் பொய் என்று எப்படிச் சொல்ல முடியும்? இவை இரண்டில் ஏதாவது ஒன்றுதான் பொய்யாக இருக்க முடியும் அல்லவா?

தத்துவத் தேடலில், குறிப்பாக அத்வைதத்தில் மிக முக்கியமான கேள்வி இது. இரண்டுமே உண்மைகள்தான், ஆனால் இரண்டு உண்மைகளும் மாறுபட்டவை அல்லது சார்பு நிலை கொண்டவை என்று இதற்கு பதில் சொல்லப்படுகிறது.

எல்லாமே பிரம்மம் என்பது நிரந்தரமான, முழுமையான உண்மை.

நம் உடல், மனது, நம்மைச் சுற்றியுள்ள பொருள்கள், மனிதர்கள் முதலானவை நடைமுறை உண்மை. நடைமுறை வாழ்வைப் பொறுத்தவரை, யானை வேறு, பாகன் வேறு, சாலையில் நடப்பவர் வேறு. கடன் கொடுத்தவர் வேறு, கடன் வாங்கியவர் வேறு.

இன்னொரு உண்மையும் இருக்கிறது. அகவயமான உண்மை. அதாவது, ஒருவரின் கனவு, கற்பனைகள், கடவுளை நேரில் கண்ட அனுபவங்கள் ஆகியவை இதில் சேரும். இவை எல்லோருக்கும் பொதுவான உண்மைகளல்ல. இவற்றில் எதையும் அவர் நிரூபிக்க முடியாது. இவை அவருக்கு நேரவில்லை என்பதைப் பிறரும் நிரூபிக்க முடியாது. இது அனுபவித்தவருக்கு மட்டுமேயான உண்மை.

எல்லாமே பிரம்மம் என்பது நிரந்தரமான உண்மை. ஆனால் அந்த உண்மையை நாம் நடைமுறை வாழ்வில் உணர முடியாது. நடைமுறை வாழ்வைத் தாண்டிய நிலையிலேயே இந்த உண்மையை உணர முடியும் என்று தத்துவ நூல்கள் சொல்கின்றன. இதை உணர்ந்தவர்களுக்கு இந்த உலகம் பொருளற்றதாகிவிடுகிறது. பேதங்கள் இல்லாமல் ஆகிவிடுகின்றன. இது தத்துவத்தில் மிக உயர்ந்த நிலை. லட்சிய நிலை.

இந்த லட்சிய நிலையில் பேதங்கள் இல்லை. நடைமுறை வாழ்வில் வித்தியாசங்கள் உள்ளன. ஆனால் இந்த வித்தியாசங்கள் தாற்காலிகமானவை என்பதை உணர்ந்து இவற்றைக் கையாள வேண்டும் என்பதற்காகவே நிரந்தர உண்மைகள் எல்லோருக்கும் கற்பிக்கப்படுகின்றன. அந்த உண்மையை உணரும் பாதையில் பயணிப்பவர்கள் கொஞ்சம் கொஞ்சமாக வித்தியாசங்களைத் துறந்துவிடுவார்கள்.

முற்றிலும் துறக்கும் நிலைதான் உயிரோடு இருக்கும்போதே பெறும் மோட்சம்.

وَلَا تَطْرُدِ الَّذِيْنَ يَدْعُوْنَ رَبَّهُمْ بِالْغَدٰوةِ وَالْعَشِىِّ يُرِيْدُوْنَ وَجْهَهٗ مَا عَلَيْكَ مِنْ حِسَابِهِمْ مِّنْ شَىْءٍ وَّمَا مِنْ حِسَابِكَ عَلَيْهِمْ مِّنْ شَىْءٍ فَتَطْرُدَهُمْ فَتَكُوْنَ مِنَ الظّٰلِمِيْنَ
(நபியே!) தங்கள் இறைவனின் திருப்பொருத்தத்தை விரும்பி காலையிலும் மாலையிலும் பிரார்த்தித்துக்

கொண்டிருப்பவர்களை நீங்கள் விரட்டி விடாதீர்கள்! அவர்களுடைய கணக்கிலிருந்து எதுவும் உங்களுடைய பொறுப்பாகாது. உங்களுடைய கணக்கிலிருந்து எதுவும் அவர்களுடைய பொறுப்பாகாது. ஆகவே, நீங்கள் அவர்களை விரட்டினால் அநியாயக்காரர்களில் நீங்களும் ஒருவராகி விடுவீர்கள்!
(அல்குர்ஆன் : 6:52)

அவ்லியாக்களைப்பற்றி எல்லாம் வல்ல அல்லாஹ் அஸ்ஸவஜல் புனித அல்குர்ஆனில் கூறும்போது: "அல்லாஹ்வுடைய அவ்லியாக்களுக்கு எந்த பயமும் இல்லை. எந்த கவலையும் இல்லை" என்று கூறுகிறான். அவர்கள் விரும்பாத ஒன்று நடந்து விட்டதே என்று கவலைப்படவும் மாட்டார்கள். அவர்கள் விரும்பாத ஒன்று எதிர்க்காலத்தில் நடக்குமோ என்று பயப்படவும் மாட்டார்கள். இதுதான் இதன் பொருள்.

ஆனால் கியாமத்து நாளைப்பற்றிய கவலை மற்றவர்களைவிட இந்த அவ்லியாக்களுக்குத்தான் அதிகமாக இருக்கும். அதேபோன்று அல்லாஹ்வுடைய அச்சம், பயம் மற்றவர்களைவிட இந்த அவ்லியாக்களுக்குத்தான் மிக அதிகமாக இருக்கும். அதேநேரம் இந்த உலக சம்பந்தப்பட்ட விஷயங்களில் அவர்கள் எந்த கவலையும், பயமும் அடையமாட்டார்கள்.

இதே போன்று அல்லாஹ் அஸ்ஸவஜல் கூறியதாக எங்கள் கண்மணி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) அன்னவர்கள் திருவுளமானார்கள்:

"எனது அடியான் நஃபிலான வணக்கங்களை விருப்பத்துடன் செய்து, என்னுடைய நெருக்கத்தைபெற விரும்பி, என்னை நெருங்கினால் நான் அவனை நேசிக்கும் அளவுக்கு ஆகிவிடுகிறான். நான் அவனை நேசித்து விட்டால், அவன் கேட்கும் காதாகவும், பார்க்கும் கண்ணாகவும், பிடிக்கும் கையாகவும், நடக்கும் காலாகவும் நான் ஆகிவிடுகிறேன்." (ஸஹீஹுல் புகாரி)

அல்லாஹுதஆலா வலிமார்களுக்கு பல அந்தஸ்துகளை வழங்கி சிறப்பாக்கி வைத்திருக்கிறான். உதாரணமாக, கராமத்துக்களை அதாவது பல அற்புத சக்திகளை வழங்கி அதன் மூலம் அல்லாஹ் அவர்களைக்கொண்டு பல மக்களை சீர்த்திருத்தியும், வழித்தவறியவர்களை நேரான வழியில் கொண்டுவரவும் செய்துள்ளான்.

இதை அல்லாஹுதஆலா சில சம்பவங்களின் மூலமாக எமக்கு சொல்லிக்காட்டுகிறான்.

பத்ர் யுத்தத்தில் எதிரிகளை ஸஹாபாக்கள் கொன்றபோது, அல்லாஹ் அஸ்ஸவஜல் அல்குர்ஆனில் கூறினான்: "நீங்கள் எதிரிகளை கொல்லவில்லை, அல்லாஹுத்தஆலாவே கொன்றான்" என்பதாக. இந்த வசனத்திற்கு பொருள் என்னவென்றால், அல்லாஹ் சொல்கிறானே நான் ஒருவரை நேசிக்கும்போது அவன் கேட்கும் காதாகவும், பார்க்கும் கண்ணாகவும், பிடிக்கும் கையாகவும், நடக்கும் காலாகவும் நான் ஆகிவிடுகிறேன் என்று. இதுதான் இதற்கு அர்த்தமாகும்.

எனவே அல்லாஹ் தனக்கு சொந்தமான சில பதவிகளை அவ்லியாக்களுக்கு வழங்கி, அவர்களை இந்த உலக மக்களுக்கு தன் பிரதிநிதியாக அதாவது கலீஃபாவாக ஆக்கி வைத்திருக்கிறான். எப்படி எங்கள் இனிய தூதர் கண்மணி நாயகம் (ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்) அன்னவர்கள் உலகத்துக்கே ரஹ்மத்துலில் ஆலமீனாக இருக்கிறார்களோ அப்படியே அவ்லியாக்களை அல்லாஹ் அஸ்ஸவஜல் இந்த உலக மக்களுக்கு கிருஃபையுள்ளவர்களாக ஆக்கிவைத்துள்ளான்.

ர.ரா

அதுவாக மாறி விடு

தத்துவ விசாரம் 5




முல்லாவுக்கென்று ஒரு கழுதை இருந்தது அதுவும் இப்போது தொலைந்து விட்டது முல்லாவுக்கு ஒரே கவலை ஊரெல்லாம் அலைந்து தேடினார் கிடைக்கவில்லை
முல்லாவுக்காக அவரது கிராம மக்களும் சேர்ந்து தேடினார்கள் கிடைக்கவில்லை

முல்லா கழுதை காணாமல் போன இடத்திற்கு போனார் கண்களை மூடிக்கொண்டு அங்கேயே அப்படியே குனிந்து கை கால்களால் ஒரு விலங்கு போல நடக்கத் தொடங்கினார்
வீட்டைச் சுற்றிப் போனார் தோட்டத்தையும் சுற்றி வந்தார் அப்புறம் அப்படியே நடந்து போய் ஒரு பெரிய பள்ளத்தைப் பார்த்தார் அந்த பள்ளத்தில் அவரது கழுதை விழுந்து கிடந்தது .

ஊரார் ஆச்சரியப்பட்டனர் " இது எப்படி ? எப்படி இதைச் செய்யத் தோன்றியது ? ஏன்? என்று கேட்டார்கள்

முல்லா சொன்னார் :

" ஒரு மனிதன் தன் கழுதையைக் கண்டு பிடிக்க முடியவில்லை என்றால் திறவுகோல் அவனிடம் இல்லையென்று அர்த்தம். அதனால் கழுதையைக் கண்டு பிடிக்க நான் கழுதையாக மாற வேண்டிய வந்தது . அதுவாக மாறியதும் ஒரு கழுதையை எங்கே தேட வேண்டும் எப்படி தேட வேண்டும் என்பது தெரிந்து விட்டது கழுதை எங்கே இருக்கிறது எனபது எனக்குத் தெரியாதுதான் ஆனால் கழுதையாகக் கண்களை மூடி நடந்தேன் கண்களைத் திறந்தபோது எதிரே பள்ளம் அதில் என் கழுதை ". . என்றார் முல்லா

அதுவாக மாறிவிடு 2

நபிஸல் அவர்கள் தம் தோழர்களோடு இருக்கும் போது . .

"உங்களில் எவராவது சொர்க்கத்திற்கு சென்று வந்தது உண்டா ?"

அனைவரும் திகைத்தனர் .
அங்கிருந்த அப்துல்லாஹ் இப்னு உமர் ரலி உடனே கையை உயர்த்தியவராக
"யா ரசூல்லாஹ் ! நான் சென்றுள்ளேன்" என்றார் .

அருகில் இருந்து இதனைக்
கவனித்துக் கொண்டு இருந்த அவரது தந்தை உமர் (ரலி ) தமது தலையில் கை வைத்தவராக திடுக்கிட்டு மகனைப் பார்க்கிறார்கள்.

நபி (ஸல் ) அவர்கள் "உங்களில் சொர்க்கத்து நீரோடையில் நீர் அருந்தியது உண்டா ?"

அப்போதும் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி ) அவர்கள் "யா ரசூல்லாஹ் ! நான் அருந்தியிருக்கிறேன் "

உமர் (ரலி )அவர்கள் 'எனது மகன் எழுந்து செல்லாமல் மானத்தை வாங்கப் போகிறானே என்று எண்ணினார்கள் .

நபி (ஸல் )அவர்கள் மீண்டும் "உங்களில் எவராவது சொர்க்கத்தின் உணவை சுவைத்தது உண்டா ? "

அப்போதும் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி )அவர்கள் "நான் சுவைத்திருக்கிறேன்" என்றார்கள்

'நம்முடன் உலகில் உயிருடன் இருக்கிறார் இவர் மட்டும் எப்படி சொர்க்கம் சென்றிருக்க முடியும் ? ' என்று அனைவரும் திகைத்தனர்

நபி (ஸல் ) அவர்கள் "அப்துல்லாஹ்வே ! உங்கள் விளக்கத்தை மக்களிடம் கூறுங்கள் "

அப்துல்லாஹ் இப்னு உமர் கூறினார்கள் : " யா ரசூல்லாஹ் ! சொர்க்கத்தை நேரில் கண்ட செய்தியை தாங்கள் எங்களிடம் கூறினீர்கள்.
அப்போது நானும் உங்களுடன் நுழைந்ததாகவே உணர்ந்தேன்.

சொர்க்கத்து நீரோடையில் நீர் அருந்தியதைத் தாங்கள் குறிப்பிட்ட போது நானும் அதிலிருந்து நீர் அருந்தியதாகவே உணர்ந்தேன் .

சொர்க்கத்துப் பழங்களை உண்டதைக் குறித்து தாங்கள் கூறிய போது நானும் உங்களுடன் உண்டதாகவே உணர்ந்தேன்" என்றார்கள். ஆமாம் அதுவாக மாறிவிடு .

மாயை

தத்துவ விசாரம் 7 04-08-2020




மாயை என்ற பதம் உலக மதங்கள் எல்லாவற்றாலும் சொல்லப்படுகிறது. இது பற்றி வேதத்தில் சொல்லப்பட்டாலும் இந்த வார்த்தை மற்ற மதங்களை நினைவுபடுத்துவது போல இருப்பதால் மாயையை பற்றி பெரும்பாலும் போதிக்கப்படுவதில்லை. ஆனால் இதை பற்றின அறிவு நாம் நம்முடைய வாழ்வில் முன்னேறி செல்ல மிகவும் தேவையானதாகும்.

இப்போது மாயை என்றால் என்ன என்று பார்ப்போம். மாயை என்பதற்க்கு உண்மையை போல தோற்றமளிக்கும் உண்மையில்லாதவைகள் என்று பொருள்.

மனிதன் இந்த உலகில் என்னுடைய குடும்பம், என்னுடைய சொத்து என்று இப்படி பல என்னுடையவைகளை தனக்குள் வைத்து கொண்டிருக்கிறான். இப்படி இந்த உலகில் தன்னுடையவைகளோடு இருக்கும் மனிதன் மரணம் வரும் போது தன்னுடையது என்று அவன் நினைத்து கொண்டிருக்கும் எல்லா பொருள்களிடமிருந்தும், உயிர்களிடமிருந்தும் அவன் தனியே பிரிக்கப்படுகிறான்.

இப்படி இறக்கும் போது கூட வராதவைகள் "மாயை " என்று சொல்லப்படுகிறது. கூட வருவதோ சத்தியம் அல்லது மெய்ப்பொருள் என அழைக்கப்படுகிறது. கண்ணதாசனின் “வீடு வரை உறவு, வீதி வரை மனைவி, காடு வரை பிள்ளை” பாடலில் வரும் கடைசி வரை யாரோ என்பதற்க்கு பதில் தான் மெய்ப்பொருள் அல்லது சத்தியம்.

وَاعْلَمُوْۤا اَنَّمَاۤ اَمْوَالُكُمْ وَاَوْلَادُكُمْ فِتْنَةٌ ۙ وَّاَنَّ اللّٰهَ عِنْدَهٗۤ اَجْرٌ عَظِيْمٌ
அன்றி, உங்களுடைய பொருள்களும், உங்களுடைய சந்ததிகளும் (உங்களுக்குப்) பெரும் சோதனையாக இருக்கின்றன என்பதையும், நிச்சயமாக அல்லாஹ்விடத்தில்தான் (உங்களுக்கு) மகத்தான வெகுமதி உண்டு என்பதையும் நீங்கள் உறுதியாக அறிந்து கொள்ளுங்கள். (குர்ஆன் : 8:28)

மாயை என்பது சைவ சித்தாந்தத்தில் சிறப்பான ஒரு இடத்தை பெற்றுள்ளது. வேதங்களிலும், உபநிஷத்துகளிலும் பல இடங்களில் இந்த உலகம் 'மாயை ' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இந்த பிரபஞ்சத்தில் உள்ள பொருட்களை இரண்டாக பிரிக்கலாம். ஒன்று மெய்ப்பொருள், இரண்டாவது பொருள் போல தோற்றம் கொண்ட மாயையான பொருள்.

எது நேற்றும், இன்றும், நாளையும் எந்த மாற்றமும் இல்லாமல் இருக்கிறதோ, எது தோன்றுவதும், மாறுவதும், அழிவதும் இல்லையோ, அதுவே மெய்ப்பொருள்.
அது எந்த காலத்திலும் எந்த மாற்றமும் இல்லாமல் நிலையாக இருக்கிறது. எது தோன்றுவதும், மாறுவதும், காலத்தால் அழிவதுமாக இருக்கிறதோ அது பொருள் இல்லை மாயை. இது ஆன்மிகம் கூறும் மாயைக்கான விளக்கம்.

فَلَمَّا جَنَّ عَلَيْهِ الَّيْلُ رَاٰ كَوْكَبًا ‌ قَالَ هٰذَا رَبِّىْ ‌ فَلَمَّاۤ اَفَلَ قَالَ لَاۤ اُحِبُّ الْاٰفِلِيْنَ
(ஒரு நாள்) இருள் சூழ்ந்த இரவில் அவர் (இப்ராஹீம்) (மின்னிக் கொண்டிருந்த) ஒரு நட்சத்திரத்தைக் கண்டு "இது என்னுடைய இறைவன் (ஆகுமா?)" என (தம் மக்களைக்) கேட்டு அது மறையவே, "மறையக்கூடியவற்றை

(இறைவனாக எடுத்துக்கொள்ள) நான் விரும்பமாட்டேன்" எனக் கூறிவிட்டார்.
(குர்ஆன் : 6:76)

உதாரணமாக ஒரு வாழைப்பழம் என்ற பொருளை எடுத்துக் கொள்வோம். இதை சாதரணமாக பார்த்தால் இது ஒரு வாழைப்பழம் என்று தெரிகிறது. இன்னும் கொஞ்சம் அறிவியல் பார்வையில் உள்ளே போனால் இந்த வாழைப்பழம் பல அணுக்களின் கூட்டு என்றும், ஒவ்வொரு அணுக்களும் தனித்தனியாக இயங்கிக் கொண்டு இருக்கின்றன என்றும் தெரிந்துகொள்ளலாம். பல அணுக்கள் இணைந்து வாழைப்பழம் என்ற இயக்கத்தை, நிகழ்ச்சியை நடத்தி கொண்டு இருக்கின்றன. எனவே இந்த வாழைப்பழத்தை நாம் ஒரு நிலையான பொருள் என்று சொல்லமுடியாது. ஒரு நிகழ்ச்சி என்று சொல்லாம். ஆனால் அது நம் பார்வைக்கு ஒரு நிலையான பொருள் போல தோற்றம் தருகிறது. தொடர்ந்து நடந்து கொண்டிருக்கும் ஒரு நிகழ்ச்சி ஒரு பொருள் போல தோன்றுவதே அறிவியல் பார்வையில் மாயைக்கான விளக்கம்.

இதே அடிப்படையில்தான் தாவரம், விலங்குகள், பறவைகள், மனிதன், இன்னும் நாம் உலகில் தொடர்புகொள்ளும் அத்தனை பொருட்களும் தொடர் இயக்கத்தில் உள்ள ஒரு நிகழ்சிகளே. எதுவும் நிலையான பொருள் இல்லை என்று புரிந்துகொள்ளலாம். ஆனால் ஒரு மனிதனை பார்க்கும்போது ஒரு திடமான உருவம் தெரிகிறது அவன் உடல் முழுதும் அணுக்கள் தொடர்ந்து இயங்கி கொண்டே இருப்பதாக தெரியவில்லையே ஏன்? இதற்கும் அறிவியல் விளக்கம் உள்ளது.

நாம் நம் வீட்டில் மேலே மின்விசிறி சுழல்வதை பார்த்திருக்கிறோம். அது வேகமாக சுழலும்போது அதன் இறக்கைகள் தனித்தனியாக தெரியாது. மொத்தமாக ஒரு தட்டு போல தெரியும். அதற்கு காரணம் அதன் வேகமான சுழற்சி இயக்கமே.

அதே போல் நாம் திரையரங்கத்தில் திரைப்படம் பார்த்திருக்கிறோம், அங்கு திரையில் நாம் தொடர்ந்து படம் ஓடுவதை பார்க்கிறோம் அனால் அந்த படத்தின் “பிலிமை” எடுத்து பார்த்தால் இரண்டு நிமிடம் படம் ஓட இருநூறு தனித்தனி “பிலிம்கள்” உபயோகப்படுத்த படுவதை பார்க்கிறோம். எப்படி தனித்தனி “பிலிம்கள்” ஒரு நிலையாக தொடர்ச்சியாக ஒரு காட்சியை தருகிறது. இதுவும் அந்த “பிலிம்களின்” வேகமான சுழற்சி இயக்கமே காரணம்.

இப்படித்தான் நம் உடலிலும் உள்ள அணுக்கள், வேகமாக சுழன்று இயங்கிக்கொண்டே இருப்பதால் நம் உடல் மொத்தமாக ஒரு நிலையான பொருள் போல தெரிகிறது. அனால் உண்மையில் இந்த அணுக்கள் தினமும் நம் உடம்பிலிருந்து ஆயிரக்கணக்கில் இறப்பதும் புதிதாக தோன்றுவதுமாக இருக்கிறது. இன்று நாம் பார்த்த அணு நம் உடலில் நாளை இருக்காது. எனவே இன்று உள்ள நாம் உடலும் நாளை உள்ள நம் உடலும் ஒன்று அல்ல வேறுவேறு. அனால் நமக்கு நம் உடல் பிறந்ததிலிருந்து ஒன்று போல தோன்றுகிறது. இதுதான் மாயை.

நாம் மரணம் அடைந்தவுடன் அந்த அணுக்களின் சுழற்சி நின்றவுடன் நாம் உடல் என்ற கூட்டு இயக்கம் நின்று தனித்தனி அணுக்களாக பிரிந்து அதன்அதன் இயல்பான இடத்தை சென்று சேர்ந்துவிடும். இதே இலக்கணம்தான் உலகில் உள்ள விலங்குகள், பறவைகள், மற்ற உயிருள்ள, உயிர் இல்லாத அனைத்து பொருட்களுக்கும்.

மேற்படி கருத்துகளிலிருந்து நாம் தெரிந்துகொள்வது இந்த உலகில் நம் கண்களுக்கும், மற்ற புலன்களுக்கும் தெரியும் அனைத்து விஷயங்களுமே, மனிதன் உட்பட ஒரு நிரந்தர பொருள் இல்லை. அனைத்தும் வெறும் நிகழ்ச்சிகளே. இதை விளக்கத்தான் நம் முன்னோர்கள் “ உலகம் ஒரு நாடக மேடை” என்று சொல்லிவைத்தனர்.

உயிருள்ளவை உயிரில்லாதவை என்று எதை வேண்டுமானாலும் எடுத்து அதை பிரித்து கொண்டே போனால் கடைசியில் இனி பிரிக்கமுடியாத ஒரு அணு கிடைக்கும். அந்த ஒற்றை அணு, மனிதனிடமும், விலங்குகளிடமும் மற்ற உயிரில்லா பொருள்களிடமும ஒன்றேதான்.

நம் உருவங்களில் காணும் மாற்றங்கள் எல்லாம் அந்த அணுக்களின் எண்ணிக்கையிலும் இயக்க வேகத்திலும் உள்ள மாற்றங்களால் வருவது. இதன் அடிப்படையில் நான் வேறு நீங்கள் வேறு இல்லை, நான் வேறு ஒரு விலங்கு வேறு இல்லை, நான் வேறு ஒரு மரம் வேறு இல்லை, நான் வேறு ஒரு கல் வேறு இல்லை. ஆனால் நாம் பார்க்கும்போது இதெல்லாம் வேறுவேறாக தெரிகிறதே இதுதான் மாயை. இதுதான் மாயையின் அடிப்படை.

- இதைத்தான் பாரதியார் தன் பாடலில்

நிற்பதுவே,நடப்பதுவே,பறப்பதுவே,
நீங்களெல்லாம் சொற்பனந் தானோ?-
பல தோற்ற மயக்கங்களோ?

கற்பதுவே,கேட்பதுவே,கருதுவதே,
நீங்க ளெல்லாம் அற்பமாயைகளோ?-உம்முள் ஆழ்ந்த பொருளில்லையோ?

வானகமே,இளவெயிலே,மரச்செறிவே,
நீங்களெல்லாம் கானலின் நீரோ?-வெறுங் காட்சிப் பிழைதானோ?

போன தெல்லாம் கனவினைப்போற் புதைந்தழிந்தே போனதனால்
நானுமோர் கனவோ ?-
இந்த ஞாலமும் பொய்தானோ?

அப்போது உலகில் உள்ளதெல்லாம் மாயை என்றால் மாயை இல்லாத பொருள் என்று ஒன்று உண்டா? என்று சந்தேகம் எழுவது இயல்பு. அந்த பொருளுக்கு மாயைக்கு எதிர்பதமான மெய்ப்பொருள்; அது ஒன்றே ஒன்றுதான்.
وَّيَبْقٰى وَجْهُ رَبِّكَ ذُو الْجَلٰلِ وَالْاِكْرَامِ
மிக கண்ணியமும் பெருமையும் தங்கிய உங்களது இறைவனின் திருமுகம் மட்டும் (அழியாது) நிலைத்திருக்கும்.
(அல்குர்ஆன் : 55:27)

Mujeeb Rahman ஹுருர் என்று சொன்னால் மாயையை குறிக்கும் சொல் ஆகும். மாயை என்பது நம் கண்களுக்கு மாயை அல்ல. நம் கண்களுக்கு அவை காட்சியாக தெரியும். ஆனால் அது தன்னளவில் நிலையான ஒன்றல்ல. மாய்ந்து விடக்கூடிய ஒன்று. அதனால்தான் அதை மாயை என்று சொல்லுகின்றோம். மெய்ப்பொருள் என்பது மாறாத ஒன்று. அது எப்போதும் நிலைத்திருக்கக்கூடிய ஒன்று. மாயை அல்லது மாய பொருள் என்பது சில காலம் நம் கண்ணுக்கு தெரியும். அதன் பின்பு அழிந்துவிடும். இப்படித்தான் மாயை குறித்து நாம் புரிந்து கொள்ள வேண்டும்

" நானே தலைவன் "

வியப்பூட்டும் விஞ்ஞான ஆய்வுகள் 1 14-08-2020




வகுப்பறையானாலும் சரி , அரசியல் கட்சி குழுவானாலும் சரி அட , ரவுடிகளின் கூட்டமானலும் சரி அங்கெல்லாம் தலைமைப் பதவிக்கு எப்போதும் ஒரு போட்டி இருந்துகொண்டே இருக்கும் .

பொதுவாக ஒரு கூட்டம் இருந்தால் அதற்கு நிச்சயம் தலைவன் ஒருவன் இருப்பான் .தலைவன் எப்போது அழிந்து போவான் அந்த தகுந்த இடம் எப்போது காலியாகும் என்று அடுத்த ரேங்கில் இருக்கும் நபர் எதிர்பார்த்து அடுத்த 'ரேங்கில் 'இருக்கும் நபர் காத்துக் கிடப்பார் . இது உலக இயற்கை.

நம்மை அறியாமலேயே நமக்குள் நாம் அந்த அடுக்கு வரிசையில் ஒரு இடத்தில் நம்மை நாமே அமர்த்திக் கொள்கிறோம். அல்லது அந்தக் குழுவே நம்மை அமர்த்தி கொள்கிறது.

சிங்கம் யானை குரங்கு போன்ற விலங்குகளிடமும் பறவைகளிடமும் கூட இந்த தலைமைத்துவப் போட்டி இருந்து கொண்டே இருக்கிறது !

உதாரணமாக , காட்டில் சிங்கம் தான் பிரவேசிக்கும் இடத்துக்குள் தன் பெண் துணைகளை வைத்துக்கொண்டு மற்ற சிங்கங்கள் அந்த இடப் போட்டிக்கும் தலைமைக்கும் வரக்கூடாது என்று அந்த இடத்தின் பரப்பளவை சுற்றி தன் மூத்திரத்தை பெய்து உறுதிப்படுத்தி இடம் பிடித்துக் கொள்கிறது .

இதன் மூலம் இந்த இடத்தின் தலைவன் தானே என்று பிரபல்ய படுத்திக் கொள்கிறது . இதற்கு அடுத்தக் கட்ட ஆண் சிங்களையும் ஒரு கொஞ்ச காலத்திற்குப் பின் தன் கூட்டத்திலிருந்து விரட்டி விட்டு அதன் பெண் துணைகளையும் பத்தோடு பதினொன்னாக தன்னுடன் சேர்த்துக் கொள்கிறது. இந்த ஒற்ற தலைவனுக்கு மற்ற பெண் சிங்கங்களும் துணையாகவும், தாம்பத்யமாகவும் இருக்க சம்மதம் தெரிவித்து கொள்கிறது

இந்த பதவி மோகம் தலைமை ஸ்தானம் எல்லாம் எதற்கு என்கிறீர்களா விலங்குகளிடம் அது பெண் ஆசைக்காகவும் தன் சுய பலத்தை நிரூபிப்பதற்காகவும் தலைமை குணம் கொண்ட விலங்கு அதிகமான தன் சந்ததிகள் உண்டாக வாய்ப்பு ஏற்படுகிறது.

தலைமுறை தலைமுறையாக இது தொடர்ந்து ஏற்படுவதால் ஒரு பெரும் கூட்டத்தில் பெரும்பாலான தலைமைத்துவம் குணமுடைய விலங்கிலிருந்து பிறந்ததாக ஜின்கள் இருப்பது நியாயம்தானே..

இந்த தலைமைத்துவ குணம் பரிணாம வளர்ச்சிக்கு உறுதுணையாக இருக்கிறது. எப்படி என்றால் அதாவது தான்தான் என்கிற ஆணவப்போக்கால் பேடி, பயந்தாங்கொள்ளி , கோழை, தலைமைப் பண்பு இல்லாத நோஞ்சான் உயிரினங்கள் இதன்மூலம் வடிகட்டப்பட்டு , இந்த கூட்டம்தான் வலிமை வாய்ந்தத தைரிய கூட்டமாக கருதப்படுகிறது.

தலைமைப் பண்புக்கும் மூளைக்கும் ஏதாவது சம்பந்தம் இருக்குமா ? என்று நியூஜெர்சியில் உள்ள பிரின்ஸ்டன் பல்கலைக்கழக ஆய்வாளர்கள் எலிகளை வைத்து ஆய்வு செய்தனர்

நாற்பது எலிகளை வழக்கமான இரும்பு கூண்டுகளில் வளர்க்காமல் ஒரு குறிப்பிட்ட பரப்பளவில் கிட்டத்தட்ட இயல்பான சூழ்நிலையில் இருப்பது போல பொந்து, வளை ஆகியவை அமைத்து வளர்த்தனர் .

இதன்காரணமாக அவற்றுக்கிடையே குழுத் தலைவன் என்ற பதவி அவைகளுக்குள் ஏற்பட்டு ஒரு தலைமை எலியும் உருவாகியது. அது மற்ற ஆண் எலிகளை அடக்கி அவற்றிற்குரிய பெரும்பாலான பெண் எலிகளை தனக்கே உரிமையாக்கிக் கொண்டது !

அப்படிப்பட்ட தலைமை எலியின் மூளையை பரிசோதித்துப் பார்த்ததில் மிக முக்கிய வேறுபாடு இருப்பது தெரிந்தது. அதாவது நினைவாற்றலை நீடிக்க வைக்கும் உறுப்பாகிய ஹிப்போகேம்பஸ் (Hippocampus) பகுதியில் புதியதாக தோன்றும் நரம்பு செல்கள் நீண்ட காலம் நீடித்து இருப்பது தெரிந்தது மற்ற கோழை எலிகளில் இந்தப் பகுதியில் உள்ள நரம்பு செல்கள் சீக்கிரம் சீக்கிரமே அழிந்துபோயின !

தலைமைத்துவ குணத்திற்கு சாதுரியம், நினைவாற்றல் ,சீக்கிரம் கற்றுக் கொள்ளல் , சுய திறமையில் தனித்துவம் போன்றவை அவசியம் இது தலைமைத்துவம் வாய்ந்த மிருகங்களிலும் பறவைகளிலும் காணப்படுகிறது .

மேற்கண்ட ஆய்வுகளை குர்ஆனோடு ஒப்பிட்டு பார்க்கும்போது சில உண்மை நிலவரம் தெரியவருகிறது அதாவது நபி தாவூத் அலை அவர்களுக்கு தேனிசை குரலால் சபூர் வேதத்தை ஓதும் தனித்துவத்தை இறைவன் வழங்கி இருந்தான் . இது தலைமையத்துவத்திற்கு சிறப்பாக இருந்தது

وَلَقَدْ اٰتَيْنَا دَاوٗدَ مِنَّا فَضْلًا ‌ؕ يٰجِبَالُ اَوِّبِىْ مَعَهٗ وَالطَّيْرَ‌ ۚ وَاَلَـنَّا لَـهُ الْحَدِيْدَ ۙ

இன்னும், நிச்சயமாக நாம் தாவூதுக்கு நம் (மேன்மையான) அருளை வழங்கினோம்; “மலைகளே! (அவர் தஸ்பீஹு செய்யும் போது) அவருடன் (அத்துதியை) நீங்களும் எதிரொலியுங்கள்; பறவைகளே! (நீங்களும் அவ்வாறே செய்யுங்கள் என்றோம்;) மேலும் நாம் அவருக்கு இரும்பை மிருதுவாக்கித் தந்தோம்.
(அல்குர்ஆன் : 34:10)

ஒரு நாள் தாவூத் அலை அவர்கள் தங்களின் வணக்க மாளிகையின் முன் பக்க கதவுகளை உட்புறமாக தாழிட்டு விட்டு மாளிகையில் அமர்ந்து மனமொன்றி இறைவனை வணங்கிக் கொண்டிருந்தார்கள் அப்பொழுது இருவர் சுவர் ஏறி தொப்பென்று கீழே குதித்து உள்ளே நுழைந்தனர் அவர்களை கண்டதும் தாவூத் அலை அவர்கள் திடுக்கிட்டார்கள்.

"தாவூதிடம் நுழைந்த போது அவர்; அவர்களைக் கண்டு திடுக்குற்றார்; அப்போது அவர்கள் கூறினார்கள்; “பயப்படாதீர்! நாங்களிருவரும் வழக்காளிகள்; எங்களில் ஒருவர் மற்றவர் மீது அநீதம் செய்திருக்கிறார்; எங்களிருவருக்கிடையில் நீதத்தைக் கொண்டு தீர்ப்பளிப்பீராக! (அதில்) தவறிழைத்து விடாதீர்! எங்களைச் செவ்வையான பாதைக்கு நேர்வழி காட்டுவீராக!”

(அவர்களில் ஒருவர் கூறினார்:) “நிச்சயமாக இவர் என்னுடைய சகோதரர்; இவரிடம் தொண்ணூற்றொன்பது ஆடுகள் இருக்கின்றன; ஆனால் என்னிடம் ஒரே ஓர் ஆடுதான் இருக்கிறது; அவர் அதனையும் தனக்குக் கொடுத்துவிட வேண்டுமெனச் சொல்லி, வாதத்தில் என்னை மிகைத்து விட்டார்.”

(அதற்கு தாவூது:) “உம்முடைய ஆட்டை அவர் தம்முடைய ஆடுகளுடன் சேர்த்து விடும்படிக் கேட்டது கொண்டு நிச்சயமாக அவர் உம்மீது அநியாயம் செய்து விட்டார்; நிச்சயமாகக் கூட்டாளிகளில் பெரும்பாலோர் - அவர்களில் சிலர் சிலரை மோசம் செய்து விடுகின்றனர்; ஈமான் கொண்டு (ஸாலிஹான) நல்லமல்கள் செய்பவர்களைத் தவிர; இத்தகையவர் சிலரே” என்று கூறினார்; இதற்குள்: “நிச்சயமாக நாமே அவரைச் சோதித்து விட்டோம்” என்று தாவூது எண்ணித் தம்முடைய இறைவனிடம் மன்னிப்பு கோரிக் குனிந்து விழுந்தவராக இறைவனை நோக்கினார்.
(அல்குர்ஆன் : 38:22_24)

நபி தாவூத் அலை அவர்கள் தீர்ப்பு வழங்கியது தவறேதும் ஏதும் இல்லையே பின் ஏன் இறைவனிடம் பாவ மன்னிப்பு கேட்டார்கள் ? அவர்கள் தீர்ப்பு கூறி வாய் மூடுமுன் அவர்களின் அறிவுக் கண்கள் வெளிச்சம் பெற்றன. அவர்களின் மனச்சான்று அவர்களை குத்தியது

காரணம் தீர்ப்பு கேட்டு வந்த இருவரும் "தாவூத் தமக்கே தாம் தீர்ப்பளித்துக் கொண்டார் " என்று கூறியதும் வந்திருந்த இருவரும் இறைவனால் அனுப்பி வைக்கப்பட்ட வானவர்கள் என்று நபி அவர்கள் உணர்ந்து கொண்டார்கள்

தன் மனச்சான்று உறுத்துதலுக்கு காரணமான சம்பவத்தை அறிய முன்காலத்தில் தாவூத் அலைஅவர்கள் செய்த காரியத்தை நீங்கள் அறிய வேண்டும்

முன்னொரு காலத்தில் ஒரு நாள் தங்களின் மண்டபத்தின் உப்பரிகை லிருந்து ஒரு அழகான பெண் தன் இல்லத்தில் குளித்துக் கொண்டிருக்கும் பெண்ணை பார்த்தார்கள் . அந்தப் பெண்ணின் அழகில் தம்மைத்தாமே மறந்தார்கள் அத்தனை பேரழகு கொண்ட பெண் உடனே அந்தபுரத்து பெண்கள் இருவரை அழைத்து தான் சற்று முன் பார்த்த அழகிய பெண்ணைப் பற்றி விசாரிக்கிறார்கள் .

அதற்கு அந்தப் புறத்தில் பெண்கள் விசாரித்ததில் அவள் ஊரியா என்பவரின் மனைவி "பத்த ஷாயா" என்று கூறினார்கள் அதுகேட்டு தாவூத் அலை அவர்கள் பெரிதும் ஏமாற்றம் உற்றார்கள்.

எனினும் ஆசை அறிவுக்கண்ணை மறைக்க அவர்கள் அந்தப் பெண்ணின் கணவர் ஊரியாவை அழைத்து வருமாறு செய்து அவர் தம் மனைவி பத்த ஷாயாவை மணவிடுதலை செய்து விடுமாறும் பின் தாம் அவளை

மணமுடித்து வாழ விரும்புவதாகவும் கூறினார்கள் அதற்கு அவளின் கணவர் ஊர்யா மனம் வருத்தப்பட்டு பின் சம்மதித்தார்.

ஆனால் அந்த அழகிய பெண்ணும் மன்னராய் இருந்த தாவூத் நபியிடம் ஒரு வாக்குறுதி கேட்டாள் அதாவது "நான் தங்களை மணந்த பின் தங்கள் மூலம் எனக்கு பிறக்கக்கூடிய மகனுக்கே அரியணை மற்றும் ஆட்சி அதிகாரம் தரவேண்டும்" என்று கேட்டாள்

அவளின் அழகு உந்துதலின் காரணமாக அதற்கும் நபி தாவூத் அலை வாக்குறுதி கொடுத்தார்கள்.

ஊரியா அவளை மண விடுதலை செய்ய நபி தாவூத் அலை அவளை மணந்து தன் மனம் விரும்பிய மனைவியை பெற்று மகிழ்ந்தார்கள் . அந்த அழகிய பெண் பத்த ஷாயாதான் நபி சுலைமான் அலை அவர்களை ஈன்றெடுத்த தாய் ஆவார்கள்

ஆனால் ஊரியாவோ தம் அழகான மனைவியை இழுந்து தம் உள்ளத்தின் உள்ளே உழந்து கொண்டிருந்தார்.

ஒரு பெண்ணை விரும்பினால் அந்தப் பெண்ணின் கணவனை விவாகரத்து செய்யச் சொல்லி திருமணம் செய்வது அக்கால ஷரியத்தில் அனுமதிக்கப்பட்டிருந்தது .அக்காலத்தில் உள்ள மக்கள் இவ்வாறு திருமணம் செய்து கொள்வது வழக்கம்.

என்றாலும் நபி தாவூத் அலை அவர்கள் முர்ஸலான நபியாக இருந்ததால் அவர்களது உயர்வான அந்தஸ்துக்கு இம்முறையில் திருமணம் செய்வது நல்லது அல்ல என்பதை உணர்த்தவே அவ்விரு வழக்காளிகளான 99+1 பெண் ஆடுகளின் வானவர்கள் மனித வடிவத்தில் தோன்றி தாவூத் அலை அவர்களது செயலை உருவகமாக கூறி உணர்த்தினார்கள்.

எனவே தாம் செய்த தீர்ப்பு சரியானதாக இருந்தாலும் தனக்கு 99 மனைவிகள் இருக்க ஊரியாவின் ஒரே ஒரு மனைவியை தான் சொந்தம் கொண்டாடியது தவறு என்று தன் மனம் உறுத்தியது இதற்காக நபி தாவூது அலைஹி தன் பாவத்தை மன்னிக்க வேண்டி இறைவனிடம் அழுது புலம்பினார்கள் .

இது குறித்து நபி ஸல் அவர்கள் உலகத்தினர் அழுத கண்ணீரை விட ஆதம் அலை அவர்களின் கண்ணீரை அதிகம் . நபி ஆதம் அலை அவர்களின் கண்ணீரை விட நபி தாவூத் அலை அவர்களின் கண்ணீரே அதிகம் " என்பதாக அனஸ் ரலி அவர்கள் அறிவிக்கிறார்கள் .

எதிரொலிகள்

வியப்பூட்டும் விஞ்ஞான ஆய்வுகள் 2

மனிதர் உணர்ந்துகொள்ள மனிதக் காதல் அல்ல…

காதல் அல்ல…



உங்கள் யூகம் சரிதான். எதிரொலிகளைப் பற்றிதான். சில காட்சிகளின் ஆழத்தை, செறிவை, எதிரொலிகள் அப்படியே தூக்கிக் கொடுத்துவிடும் அல்லவா?

அடிப்படையில் ஒலி ஒரு அலை. ஒலி பரவுவதற்கு ஏதேனும் ஒரு ஊடகம் வேண்டும். ஊடகத்தின் ஒவ்வொரு புள்ளியும் அதிருகையில் ஒலி கடத்தப்படுகிறது. காற்றில் தோராயமாக மூன்று நொடிகளுக்கு ஒரு கி.மீ என்ற வேகத்தில் (விநாடிக்கு 330 மீட்டர்) காற்றில் பரவுகையில், இடைப்படும் எல்லாப் பொருட்களிலும் பட்டுச் சிதறும். சிதறுகையில், இருவிதமான விளைவுகள் ஏற்படுகின்றன.

ஒன்று ஒலி உருவாவதற்கும், வேறு ஒரு பொருள் மீது மோதிச் சிதறுவதற்கும் இடைப்பட்ட நேரம் குறுகலாய் இருந்தால், அந்த ஒலி கொஞ்சம் நீண்டு ஒலிக்கிற மாதிரி தெரியும். இதற்கு ரெவர்பரேஷன் (reverberation) என்று பெயர். கச்சேரிகளில், சிறிய அரங்குகளில் இது இசையில் உயிர்ப்பை ஏற்றுகிறது.

ஒலி அலைகள் நீள நெடுகப் போய் எதிர்ப்பக்கம் தொலைவில் இருக்கும் பொருளைத் தொட்டுவிட்டு திரும்ப வர வேண்டும் அல்லவா? அதனால் ஏற்படும் காலதாமதத்தால், இது அசல், இது எதிரொலி என்று ஆறு வித்தியாசம் கண்டுபிடிப்பதுபோல், காது சொல்லிவிடும்.

சோனார் (**SONAR**) எனப்படும் கடல்படுகை ஆய்வில் இந்த எதிரொலி பயன்படுகிறது. SOund Navigation And **Ranging** என்பதன் சுருக்கமே சோனார். நீரில், மீயொலிகளைப் (**ultrasonic waves**) பாய்ச்சி, அது கடல்படுகையிலோ, அல்லது நீர்மூழ்கிகளிலோ மோதித் திரும்புகிற நேரத்தையும், நீரில் ஒலி பாயும் வேகத்தையும் கொண்டு, கீழே இவ்வளவு தூரத்தில் தரை இருக்கிறது அல்லது நீர்மூழ்கிகளின் இருப்பிடம் இது எனத் தெரிந்துகொள்ள முடிகிறது.

இன்னொரு முக்கியமான உபயோகம், கருவுற்றிருக்கும் பெண்ணின் வயிற்றில் இருக்கும் குழந்தையைப் படம் பிடித்தல். வேறு எந்த சோதனை என்றாலும், கதிரியக்கம் அல்லது வேதிப்பொருட்களால் பாதிப்பு உண்டாகும். ஆனால், நம்மால் கேட்க முடியாத ஒலியலைகளை வயிற்றின் தோல் வழியாக உட்செலுத்தி, அந்த ஒலியலையின் எதிரொலியைக் கொண்டு ஒரு முப்பரிமாண படம் மூலம், குழந்தையின் அசைவைக் காண முடியும்.

வவ்வால்கள் தான் எழுப்பு கிரீச் சப்தத்தை எழுப்பி இதன் எதிரொலியை நம்பித்தான் பறப்பதற்கு பயன்படுத்துகிறது.

இதைப்போலவே, பார்வையற்றோரில் சிலர் வெறும் க்ளிக் க்ளிக் என்று வாயினால் ஒலியெழுப்பி, அதன் எதிரொலியைக் கொண்டு நகர்கிறார்கள். இந்த முறைக்கு, echolocation என்று பெயர்.

وَلَقَدْ اٰتَيْنَا دَاوٗدَ مِنَّا فَضْلًا ‌ؕ يٰجِبَالُ اَوِّبِىْ مَعَهٗ وَالطَّيْرَ‌ ۚ وَاَلَـنَّا لَـهُ الْحَدِيْدَ ۙ

இன்னும், நிச்சயமாக நாம் தாவூதுக்கு நம் (மேன்மையான) அருளை வழங்கினோம்; "மலைகளே! (அவர் தஸ்பீஹு செய்யும் போது) அவருடன் (அத்துதியை) நீங்களும் எதிரொலியுங்கள்; பறவைகளே! (நீங்களும் அவ்வாறே செய்யுங்கள் என்றோம்;) மேலும் நாம் அவருக்கு இரும்பை மிருதுவாக்கித் தந்தோம்.
(அல்குர்ஆன் : 34:10)

வாத்தின் "குவாக்" சத்தம் எதிரொலிக்காது!

பாடசாலைகளில்எதிரொலி பற்றி கற்பிக்கப்படும் போது வாத்து எழுப்பும் "குவாக்"ஒலி விதிவிலக்காக எதிரொலிக்காது என கற்பிக்கப்பட்டது.

எனினும் அது தவறு என தற்போதைய
விஞ்ஞான ஆய்வுகள்
உறுதிப்படுத்தியுள்ளன.
உண்மையில் "குவாக்"
ஒலி எதிரொலிக்கிறது, எனினும்
நமது செவிப்பறையும் (அதனுடன்
இணைந்த மூளை நரம்புகளும்) அந்த
ஒலியின் மீடிறனிற்கு (frequencies)
எதிர்வினையைக்காட்டுவதில்லை!
அதனாலேயே வாத்தின் "குவாக்"
ஒலி நமது காதுகளுக்கு எதிரொலிக்காததுபோன்று தோன்றுகிறது.
"குவாக்" ஒலிக்கு எதிரொலிப்பு உண்டு என்பது,விசேடமாக தயாரிக்கப்பட்ட
எதிரொலி அறை மூலம்
நிரூபிக்கப்பட்டது

உலகில் சில இடங்களில் எழுப்பப்படும் சப்தங்கள் மிகவும் அதிசயத்தக்க வகையில் எதிரொலிக்கின்றன அப்படிப்பட்ட சில எதிரொலிகள் பற்றிய தகவல்கள் இதோ

-இங்கிலாந்தில் ஆக்ஸ்போர்டுஷயர் என்ற இடத்தில் உள்ள பள்ளத்தாக்கில் ஏதேனுமொரு சப்தம் எழுந்தால் அது இருபது முறை திரும்ப கேட்கும்

- சிலி தீவில் உள்ள குகையில் தகரத்தை அசைத்தால் அதனால் உண்டாகும் சிறிய சப்தம் பீரங்கியில் தோன்றும் வெடி சத்தத்தை போல அதிகமாகிவிடும்

- லண்டனில் உள்ள செயின்ட் பால்ஸ் கதீட்ரல் ஆலயத்தின் ஒரு மூலையில் நின்றுகொண்டு குசுகுசுவென பேசினாலும் முப்பது மீட்டருக்கு அப்பால் உள்ள இன்னொரு முனையில் தெளிவாக கேட்கும்.

- மான்டோனா என்ற இடத்தில் ஆற்று வெள்ளத்தின் ஓசை எதிரொலியால் சங்கு ஊதுவது போலவும் , நரி ஊளையிடுவது போலவும் கேட்கும் பல ஆண்டுகளுக்கு முன்பு இதை பேய் பிசாசுகள் எழுப்பும் சப்தம் என்று நினைத்து பயந்து உள்ளனர்.

- வேல்ஸ் என்னுமிடத்தில் உள்ள இரும்பு பாலத்தை ஒருமுறை தட்டினால் அதிலிருந்து 576 சப்தங்கள் எழுகிறது

- சிலி நாட்டில் 30 மீட்டர் உயரம் உள்ள ஒரு கட்டிடத்தின் கீழ் அறையில் மூச்சு விட்டாலும் கூட அந்த ஓசை 36 மீட்டர் உயரத்தில் உள்ள மேல்மாடியில் தெளிவாக கேட்கிறது .டயோனீஷியஸ் என்ற அரசன் தன் பகைவர்களை கட்டிடத்தில் அழைத்து வைப்பார் அவர்கள் ஒருவரோடு ஒருவர் கிசுகிசு வென பேசிக்கொண்டிருப்பதை மேல் மாடியில் இருந்து கேட்பாராம்.

மரணத்தை வெல்லுமா நவீன விஞ்ஞான தொழில்நுட்பம் ?

வியப்பூட்டும் விஞ்ஞான ஆய்வுகள் 3

மனித வாழ்க்கையைப் பொறுத்தவரை மனித உடலை விட்டு ஒருமுறை உயிர் பிரித்தால் அது பிரிந்ததுதான். அதனை மீட்டுக் கொண்டு வந்து மனித உடலுக்கு மீண்டும் சேர்ப்பது என்பது எந்த விஞ்ஞானம் அல்லது தொழில் நுட்பத்தாலும் முடியாது என்பதே இன்றைய நிலை.

ஆனால், உயிருள்ள மனிதர்களை 196 டிகிரி செல்சியஸ் உறை வெப்பநிலையில் உறைய வைத்துப் பின்னர் மாதங்கள் அல்லது ஆண்டுகள் பல கழித்து மீண்டும் 37 டிகிரி செல்சியஸ் வெப்பநிலைக்கு கொண்டு வருவதன் மூலம், அவர்களை (அதாவது உயிரற்ற உடல்களை) மீண்டும் உயிர்ப்பிக்க முடியும் என்ற நம்பிக்கை சில பல விஞ்ஞானிகளிடம் இருந்து வருகிறது.

உதாரணமாக, இந்த மருத்துவக் கூற்று அல்லது நம்பிக்கையின் அடிப்படையிலேயே இங்கிலாந்து நாட்டைச் சேர்ந்த ஜே.எஸ்., எனும் பெயர்கொண்ட ஒரு 14 வயது சிறுமி, மிகவும் அரிதாக ஒரு வகைப் புற்றுநோயால் பாதிக்கப்பட்டதன் காரணமாக இறக்கும் தறுவாயில் இருந்தபோது, தன்னை உறைய வைக்கும்படி நீதிமன்றத்தில் மனு தாக்கல் செய்து, அதில் வெற்றியும் கண்டார். தற்போது அவரது உடல் உறைய வைக்கப்பட்டிருக்கிறது.

இவரைத் தாக்கிய அரிதான புற்றுநோய்க்கான மருந்துகள் எதிர்காலத்தில் கண்டுபிடிக்கப்பட்டால், அவரை மீண்டும் உயிர்ப்பித்து அவரின் புற்றுநோயைக் குணப்படுத்தி மீண்டும் அவர் ஆரோக்கியமாக வாழ ஒரு வாய்ப்பு இருக்கிறது எனும் கூற்றை அந்தச் சிறுமியும், அவரது தாயாரும் நம்பியதே இந்த நிகழ்வுக்குக் காரணம் என்பதும் இங்கு கவனிக்கத் தக்கது.

சிறுமிக்கும் அவரைப் போன்ற நம்பிக்கை கொண்ட மற்ற பலருக்கும் நம்பிக்கை ஊட்டும் விதமாக உள்ளது

அமெரிக்காவில் உள்ள கலிபோர்னியா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த ஆய்வாளர்களால் மேற்கொள்ளப்பட்ட இந்த ஆய்வில், எலிகளுடைய சிசுக்களின் வளர்ச்சியானது ஒரு வகையான ரசாயனத்தின் மூலம் முற்றிலுமாக நிறுத்தப்பட்ட (அதாவது உறைந்துபோனது போன்ற நிலைக்கு தள்ளப்பட்ட) பின்னர், சுமார் நான்கு வாரங்களுக்கு பிறகு அந்த ரசாயனத்தை நீக்கியபோது, மீண்டும் அந்த சிசுக்களின் இயற்கையான வளர்ச்சி தொடர்ந்தது கண்டறியப்பட்டது.

ஆங்கிலத்தில் **Suspended Animation** என்று அழைக்கப்படும் ஒரு வகையான வளர்ச்சி உறைநிலையில் இருந்து ஒரு சிசுவானது மீண்டும் இயற்கையாக வளரும் என்பது ஆதாரப்பூர்வமாக நிரூபிக்கப்படுவது உலகில் இதுவே முதல்முறை.

இதன் அடிப்படையில், இந்த ஆய்வில் கர்ப்பப்பையில் பொருத்தப்படாத நிலையில் இருக்கக்கூடிய எலிகளுடைய வளர்ச்சியின் நிலையான **Blastocyst-**ல் உள்ள உயிரணுக்களின் வளர்ச்சியின் வேகத்தைக் குறைக்கவே ஆய்வாளர்கள் முயன்றனர்.

அதாவது, உயிரணுக்களின் பல்வேறு செயல்பாடுகளைக் கட்டுப்படுத்தும் திறன்கொண்ட mTOR எனும் புரதத்தின் செயல்பாடுகளைத் தடுக்கும் **mTOR inhibitors** எனப்படும் ஒருவகையான ரசாயன மருந்து மூலம் சிசு உயிரணுக்களின் வளர்ச்சி வேகத்தைக் குறைக்க முயன்றபோது, அந்த உயிரணுக்களின் வளர்ச்சி முற்றிலுமாகத் தடைபட்டு நின்றுபோனது தெரியவந்தது.

இந்த ரசாயன சிசு உயிரணுக்கள் மீது பயன்படுத்துவதை நிறுத்தியபோது, அதே சிசுவானது மீண்டும் இயற்கையாக வளரத் தொடங்கியது. ஆய்வாளர்களுக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்தியது. மிகவும் முக்கியமாக, இந்த வளர்ச்சி உறைநிலையானது அதிகபட்சமாக சுமார் நான்கு வாரங்கள் வரையில் பாதிப்புகள் இன்றித் தொடர்ந்து அதே சிசுக்கள் மீண்டும் உயிர்ப்பிக்கப்பட்டதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

ஆனால், இத்தகைய ஒரு வளர்ச்சி உறைநிலையும் பின்னர் மீண்டும் இயற்கையாக வளர்வதும் எலிகளுக்குப் புதிதல்ல என்று கூறப்படுகிறது.

உதாரணமாக கர்ப்பமாக இருக்கும் எலிகள், மிகவும் மனஉளைச்சல் அல்லது உடல்ரீதியான உளைச்சல்கள் உள்ள சூழல்களின்போது (அதாவது உணவு இல்லாத சூழல் போல) தனது கர்ப்ப வளர்ச்சியை சில காலம் உறைநிலையில் வைத்திருந்துவிட்டு, பின்னர் உணவு கிடைக்கும் சூழல் ஏற்பட்டவுடன் மீண்டும் கர்ப்ப வளர்ச்சியை இயற்கையாகத் தொடரும் திறன் எலிகளுக்கு உண்டு என்று கூறப்படுகிறது.

ஆனால் முக்கியமாக இந்த ஆய்வில் எலிகளின் சிசுக்கள் மட்டுமல்லாமல், உடலின் எல்லா வகையான உயிரணுக்களையும் உற்பத்தி செய்யும் சிசு ஸ்டெம் செல்களையும் **(Embryonic Stemcells) mTOR inhibitors** மருந்து மூலம் உறைய வைத்து மீண்டும் உயிர்ப்பித்திருக்கின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது.

ஸ்டெம் செல்களுக்கு உள்ளே நிகழும் பெரும்பாலான மரபணுச் செயல்பாடுகளைக் குறைப்பதன் மூலமே இந்த மருந்துகள் ஸ்டெம் செல்களின் வளர்ச்சியைத் தடுத்து உறையச் செய்கின்றன என்று விளக்குகிறார்கள் ஆய்வாளர்கள்.

சிசுக்களையும், ஸ்டெம் செல்களையும் உறைய வைத்துப் பின்னர் மீண்டும் உயிர்ப்பிக்கக்கூடிய அசாத்திய திறன் கொண்ட இந்தப் புதிய தொழில் நுட்பத்தின் உதவியுடன், முழுமையாக வளர்ந்த உயிரணுக்கள் மற்றும் சிசுக்களையும் சில காலம் உறையச் செய்து தேவையானபோது மீண்டும் உயிர்ப்பிக்க முடியும் என்கிறார்கள் ஆய்வாளர்கள்.

அதாவது உடலில் குறிப்பிட்ட ஒர பகுதியைத் தாக்கியுள்ள (புற்றுநோய் போன்ற) ஒரு நோயானது உடலின் பிற பகுதிகளுக்கும் பரவி உயிர்ச்சேதம் ஏற்படுவதைத் தடுக்க, அத்தகைய உயிரணுக்கள் அல்லது திசுக்களை உறையச் செய்துவிடலாம் என்கின்றனர்.

அதுமட்டுமில்லாமல், தொடக்க நிலை கர்ப்பத்தில் உள்ள சிசுக்களை உறையச் செய்வதன் மூலம் அவற்றில் மிகவும் ஆபத்தான மரபணு குறைபாடுகள் இருக்கின்றனவா என்பது தொடர்பான மேலதிக பரிசோதனைகளைச் செய்து பார்த்துவிட்டு மீண்டும் கர்ப்பத்தைத் தவிர்ப்பதா என்பது குறித்த முடிவுகள் எடுக்கும் வாய்ப்பு மனிதர்களுக்கு உருவாகும்.

ஆக மொத்தத்தில் உயிரணுக்களை உறையச் செய்து மீண்டும் உயிர்ப்பிக்கும் இந்தத் தொழில்நுட்பத்தின் மூலம் மனித குலத்தைப் புற்றுநோய் போன்ற ஆபத்தான நோய்களில் இருந்து காப்பாற்றுவது முதல் மரபணு குறைபாடுகள்ள குழந்தைகளைப் பெற்றுக் கொள்வது உள்ளிட்ட இன்னும் கண்டறியப்படாத பல பலன்கள் இருக்கின்றன என்று உறுதியாகக் கூறுகிறார்கள் விஞ்ஞானிகள்.

وَلَتَجِدَنَّهُمْ اَحْرَصَ النَّاسِ عَلٰى حَيٰوةٍ ۛ وَ مِنَ الَّذِيْنَ اَشْرَكُوْا ۛ يَوَدُّ اَحَدُهُمْ لَوْ يُعَمَّرُ اَ لْفَ سَنَةٍ وَمَا هُوَ بِمُزَحْزِحِهٖ مِنَ الْعَذَابِ اَنْ يُّعَمَّرَ وَاللّٰهُ بَصِيْرٌ بِمَا يَعْمَلُوْنَ

அன்றி, (நபியே! அந்த யூதர்கள்) மற்ற மனிதர்களை விடவும் (குறிப்பாக இணைவைத்து வணங்கும்) முஷ்ரிக்குகளை விடவும் (நீண்ட நாள்) உயிர்வாழ மிகவும் பேராசை உடையவர்களாக இருப்பதை நிச்சயமாக நீங்கள் காண்பீர்கள்!

அவர்களில் ஒவ்வொருவனும் "நான் ஆயிரம் ஆண்டுகள் உயிர்வாழ வேண்டுமே?" என்று விரும்புவான்.

(அவ்வாறு நீண்ட நாள்) யிருடன் இருக்க அவனை விட்டு வைத்தாலும் அது வேதனையிலிருந்து ஒரு சிறிதும் அவனைத் தப்பிக்க வைத்துவிட மாட்டாது.

அல்லாஹ் அவர்கள் செய்வதை உற்று நோக்குபவனாக இருக்கின்றான்.
(அல்குர்ஆன் : 2:96)

ர.ரா



தங்கம் கலந்த பழங்கால மருந்து உடலையும், ஆன்மாவையும் சுத்திகரிக்கின்றன !
வியப்பூட்டும் விஞ்ஞான ஆய்வுகள் 4



நீங்கள் எகிப்துக்குச் சென்றால், கெய்ரோ அருங்காட்சியகத்தில் தங்கத்தால் ஆன ஒரு பல் இணைப்பைக் காணலாம் - இது 4,500 ஆண்டுகள் பழமையானது ஆகும்.

தங்கம் பணமாக மாறிய ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர், அது பல்வேறு பயன்களைக் கொண்டிருந்தது. பண்டைய எகிப்தியர்கள் தங்களின் உடல், ஆன்மா மற்றும் மனம் ஆகியவற்றை சுத்திகரிக்க தங்கள் உணவில் தங்கத் துகள்களை சேர்த்தனர் என்று சில வரலாற்று ஆய்வுகள் தெரிவிக்கின்றன.

பண்டைய நகரமான அலெக்ஸாண்ட்ரியாவில், நேர்த்தியைப் பிரதிபலிக்கும் மர்மமான பண்புகளை தங்கம் கொண்டிருப்பதாக இரசவாதிகள் நம்பியதால், திரவ தங்கத்தினால் ஆன ஒரு 'அமிர்தத்தை' இரசவாதிகள் உருவாக்கினர்.

மனித உடலில், முழுமையான ஆரோக்கியத்தை மீட்பது தவிர, அது புத்துணர்ச்சியளிக்கிறது மற்றும் பல நோய்களைத் தீர்க்கிறது.

இடைக்கால ஐரோப்பாவில் தங்கம் பூசப்பட்ட மாத்திரைகள் மற்றும் தங்கத் தண்ணீர் ஆகியவை மிகவும் பிரபலமாக இருந்ததாக புராணங்கள் கூறுகிறது.

‘கை கால் வலிகளைத் தணிப்பதற்காக’ இரசவாதிகள் தங்கத் துகள்களை பானங்களில் கலந்துப் பயன்படுத்தினர் (மூட்டு வலியை குணமாக்க பயன்படுத்தப்பட்டது ).

15ஆம் மற்றும் 16ஆம் நூற்றாண்டுகளில், நவீன மருந்தியலின் தந்தையாக கருதப்படும் பாராசெல்ஸஸ் என்பவர், தங்கம் உட்பட விலைமதிப்பற்ற உலோகங்களைப் பயன்படுத்தி பல மருந்துகளை உருவாக்கியுள்ளார்.

பாராசெல்ஸஸ் என்பவர் நவீன மருந்தியலின் முன்னோடியான லேட்ரோ-வேதியியல் அல்லது மருத்துவ வேதியியல் ஆகியவற்றுக்கான பள்ளியை நிறுவியுள்ளார்.

தங்கத்தின் மருத்துவ குணங்களின் மீதான நம்பிக்கை என்பது 19 ஆம் நூற்றாண்டு வரை எல்லா இடங்களிலும் இருந்தது. ஐரோப்பியர்கள் நூறு ஆண்டுகளுக்கு மேலாக தங்கம் பூசப்பட்ட மாத்திரைகள் மற்றும் தங்கத் தண்ணீரை கடைகளில் வாங்கி வருகின்றனர் என்று சில எழுத்தாளர்கள் கூறியுள்ளனர்.

நவீன காலகட்டத்திலும் கூட, கிராமப்புற சீனாவில், தங்கம் என்பது இன்னும் இயற்கை மருத்துவத்தில் பயன்படுத்தப்படுகிறது; விவசாயிகள் தங்கத்தின் புத்துணர்ச்சியூட்டும் குணநலன்களைப் பயன்படுத்திக் கொள்வதற்காக, அவர்கள் சமைக்கும் அரிசியில் ஒரு தங்க நாணயத்தைப் போடுகிறார்கள். நகரங்களில் உள்ள பல உணவகங்களில், சீன சமையல்காரர்கள் தங்கள் உணவில் 24 காரட் தங்க இலைகளை சேர்த்துக் கொள்வதாகக் கூறப்படுகிறது.

நவீன விஞ்ஞான யுகத்தில், இது மிகைப்படுத்தப்பட்டதாக தோன்றலாம். ஆனால் இதைக் கவனியுங்கள்: சிகாகோவில் உள்ள ஒரு மருத்துவரான டாக்டர் எட்வர்ட் ஓகனெர் என்பவர் மருத்துவ மருந்துகள் மற்றும் அறுவை சிகிச்சை என்ற இதழில் ஜூலை 1935-ல் வந்த ஒரு கட்டுரையில் பின்வருமாறு கூறினார்:

"உடலின் நிலைமை நம்பிக்கையற்றதாக இருக்கும்போது, நோயாளிகளுக்கும் அவர்களைச் சேர்ந்தவர்களுக்கும் கூழ்ம தங்கம் என்பது ஆயுளை நீட்டிக்கிறது மற்றும் அதிக தாங்கும் வல்லமையை அளிக்கிறது, ஏனெனில் அது உடல்நலமின்மை காலகட்டத்தைக் (நாள்பட்ட நோயுடன் தொடர்புடைய பொதுவான உடல் பலகீனம் மற்றும் ஊட்டச்சத்து குறைபாடு) குறைக்கிறது,

மேலும் வலி மற்றும் அசௌகரியம் ஆகியவற்றைப் பொதுவாகக் குறைக்கிறது, மற்றும் பெரும்பாலான நிகழ்வுகளில் ஓபியேட்ஸ்-க்கான தேவைகளைக் குறைக்கிறது."

'தங்கத்தின் மீதான அதிக ஆசையும்' ஒரு நோய் என்று அழைக்கப்படுகிறது, ஆனால், அவ்வாறு ஏற்படும் பொழுது, அதை தங்கம் உண்மையில் குணமாக்குகிறது.

தங்கத்தின் மீதான அதிக ஆசையைப் பற்றி இஸ்லாம்.....

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

"(மேற்காசியாவில் பாயும்) யூப்ரடீஸ் நதியானது வற்றி, தங்க மலை ஒன்றை வெளிப்படுத்தாத வரை யுக முடிவு நாள் வராது.

அதற்காக (உரிமை கொண்டாடி) மக்கள் சண்டையிட்டுக்கொள்வர். அப்போது ஒவ்வொரு நூறு பேரிலிருந்தும் தொண்ணூற்றொன்பது பேர் கொல்லப்படுவர். அவர்களில் ஒவ்வொருவரும் "உயிர் பிழைப்பவர் நானாக இருக்க வேண்டுமே!" என்று கூறுவர்.

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

அதில் தக்வான் (ரஹ்) அவர்கள், "அதை நீ கண்டால், அதை நெருங்க வேண்டாம்" என அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறியதாகக் கூடுதலாக அறிவிக்கிறார்கள் முஸ்லிம் : 5548.

ர.ரா

## கடவுள் இருக்கிறாரா? இருந்தால் அவர் எங்கே இருக்கிறார்?

## வியப்பூட்டும் விஞ்ஞான ஆய்வுகள் 5

உலகில் இதுவரை பிறந்த விஞ்ஞானிகளில் முதன்மையானவராகக் கருதப்படும் ஐன்ஸ்டீனிடம் ஒருமுறை "கடவுள் இருக்கிறாரா?" என்று கேட்டபோது "கடவுள் தேவைப்படுகிறார்" என்று பதில் அளித்தார்.

ஐன்ஸ்டீனின் சில கோட்பாடுகள் மனித குலத்தை கடவுளை உணர அல்லது கடவுளுக்கு அருகில் கொண்டு செல்ல வைப்பவை.

பிரபஞ்சம் எவ்வாறு உருவானது என்பதைக் கண்டுபிடிக்கும் ஆய்வில் மனிதன் சரியான பாதையில் சென்று கொண்டிருப்பதாக நவீன விஞ்ஞானம் நம்புகிறது.

"பெரு வெடிப்பு" எனப்படும், ஒரு சூன்யத்தில் இருந்து எண்ணிப் பார்க்க முடியாத அளவிலான ஒரு மகாசக்தி வெடித்துச் சிதறியதால் இந்த பிரபஞ்சம் உருவானது என்பதை ஆதாரப்பூர்வமாக நிரூபிக்கும் ஆய்வில் முன்னேறிக் கொண்டிருப்பதாக நம்பும் மனித இனம், இந்த மகாவெடிப்பின் முதல் மூன்று நிமிடங்களில் (**THE FIRST THREE MINUTES)** என்ன நடந்தது? அதாவது பெருவெடிப்பின் ஆரம்பக் கணங்களில் நடந்தது என்ன என்பதைத்தான் தேடித் தடுமாறிக் கொண்டிருக்கிறது.

இந்த முதல் நொடியில் என்ன நடந்தது என்பதை மனிதன் உணர்ந்து விட்டால், அறிந்து விட்டால், நாம் கடவுளைக் கண்டு பிடித்து விட்டதாகத்தான் அர்த்தம். கடவுளைப் பற்றிய இதுபோன்ற ஒரு பேட்டியில்தான் ஐன்ஸ்டீன் "அவர் இருக்கிறாரோ, இல்லையோ, தேவைப்படுகிறார்" என்று சொன்னார்.

ஐன்ஸ்டீனின் காலமான சென்ற நூற்றாண்டு வரை பிரபஞ்சத்தில் நீளம், அகலம், உயரம் என மூன்று பரிமாணங்கள்தான் இருக்கின்றன என்று நம்பப்பட்டது.

அதாவது ஒரு உயிருக்கு இடம்-வலம், மேலே-கீழே, முன்-பின், என மூன்று நிலைகள் இருக்கும். இன்னும் தெளிவாகச் சொல்லப் போனால் ஒரு மனிதன் தனக்கு இடப்புறமாகவோ, வலப்புறமாகவோ, மேலும்,

கீழுமாகவோ, முன்னும் பின்னுமாகவோ எல்லாத் திசைகளிலும் பயணிக்க முடியும். இதுவே நீளம், அகலம், உயரம் எனும் முப்பரிமாண நிலை.

மனித குலத்தைத் திசை திருப்பிய இயற்பியல் விஞ்ஞானியான ஐன்ஸ்டீன், நினைத்துப் பார்க்க முடியாத வேகத்தில் ஒரு மனிதன் பயணம் செய்ய முடியுமானால் அவனது வேகத்தைப் பொருத்து, அவன் செல்லும் வாகனத்தினுள் நேரம் சுருங்கும் என்று சொன்னார். இதுவே அவரது புகழ் பெற்ற சார்பியல் கோட்பாடு..

இதை நாம் சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால் நீளம், அகலம், உயரம் என்ற மூன்று நிலைகளை அடுத்து “காலம்” என்ற ஒன்றையும் அவர் நான்காவது பரிமாணமாகச் சொன்னார்

அதிக வேகத்தில், ஏறக்குறைய ஒளி செல்லும் வேகமான ஒரு வினாடிக்கு மூன்று லட்சம் கிலோமீட்டர் வேகத்திற்கு அருகில், ஒரு மனிதனால் பயணம் செல்ல முடியுமானால், அவனுக்கு ஒரு மணிநேரம் என்பது ஒரு நிமிடமாகச் சுருங்கும் என்பதை ஐன்ஸ்டீன் நிரூபித்துக் காட்டினார்.

காலத்திற்கு ஊடாக மிக வேகமாகப் பயணம் செய்யும் ஒருவருக்கு, ஒரு மணி நேரம் என்பது ஒரு நிமிடமாக இருக்கும் .

வேதங்களில், நமக்கு ஒரு வருடம் என்பது தேவர்களுக்கு ஒரு நாள் எனவும், நம்முடைய ஆறு மாதம் அவர்களுக்கு ஒரு பகல், இன்னொரு ஆறு மாதம் அவர்களுக்கு ஒரு இரவு என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

இதையே குர்ஆன் வேதத்தில் ...

تَعْرُجُ الْمَلٰٓٮِٕكَةُ وَ الرُّوْحُ اِلَيْهِ فِىْ يَوْمٍ كَانَ مِقْدَارُهٗ خَمْسِيْنَ اَلْفَ سَنَةٍ

அந்நாளில் மலக்குகளும், ஜிப்ரயீலும் அவனிடம் போய்ச் சேருவார்கள். (அந்நாள்) ஐம்பதினாயிரம் வருடங்களுக்குச் சமமாக இருக்கும்.
(அல்குர்ஆன் : 70:4)

விண்வெளியில் மிக வேகமாகச் செல்லும் ஒருவருக்கு, அல்லது வேறு ஒரு பரிணாம நிலையில் இருக்கும் ஒருவருக்கு, நமது ஒரு வருடம் என்பது அவருக்கு ஒரு நாளாகச் சுருங்குவதற்குச் சாத்தியம் இருக்கிறது என்பதை இப்போது நவீன விஞ்ஞானமும் ஏற்றுக் கொண்டிருக்கிறது.

சார்பியல் தத்துவத்தை உலகிற்கு அறிவித்த இதே ஐன்ஸ்டீன், அதிக எடையுள்ள ஒரு பொருளின் அருகில் வரும் ஒளி, அந்தப் பொருளின் ஈர்ப்பு விசையால் நேராகச் செல்லாமல் வளைந்து செல்லும் என்பதையும் சொன்னார். இந்த விதி இப்போது நாம் பார்க்கும் சில நட்சத்திரங்கள் இருக்கும் இடத்தையே கேள்விக்குறியாக்கியது.

ஆனால் ஐன்ஸ்டீன் அப்படி அதை நம்பவில்லை. இந்த ஈர்ப்பாற்றல் ஜடப்பொருளின் இயற்கை அல்ல . அந்தப் பொருளைச் சுற்றியுள்ள வெளி , ஸ்பேஸ் , அந்தப் பொருள் இருப்பதால் வெளியை வளைத்து விடுகிறது. இந்த வளைவினால் ஏற்படும் சரிவே , வழுக்கலே , ஈர்ப்பாற்றாலாகி விடுகிறது

இந்தக் கருத்து நிரூபிக்க அமெரிக்கா வில் 1919 - மே 29 -ல் சூரிய கிரகணத்தின் போது பட்டப் பகலில் சூரியன் மறைந்தது . ஹயாடெஸ் **(Hyades)** என்கிற நட்சத்திர விண்மீன் தொகுதியில் உள்ள நட்சத்திரத்தை முந்தைய இரவில் டெலஸ்கோப் மூலம் படம் பிடித்து , டெலஸ்கோப்பை நகர்த்தாமல் அப்படியே வைத்து அன்றைய சூரிய கிரண பகலில் ஏற்பட்ட போது மீண்டும் அதே நட்சத்திரத்தை படம் எடுக்க அந்த நட்சத்திரம் கொஞ்சம் இடம் மாறி இருந்த இடமாற்றத்தின் வளைவு 1.75 ° ஆர்க் வினாடி
ஆக விண்வெளி வளைந்திருக்கிறது. கிரகங்கள் சுற்றி வரும் பாதைகளும் வளைந்திருக்கிறது ; ஈர்ப்பாற்றல் என்று எதுவும் இல்லை என்றார்.

இந்த சூரிய கிரகணத்தின் போது சூரியனுக்குப் பின் மறைந்திருக்கும் நட்சத்திரங்கள் சூரியனைச் சூழ்ந்துள்ள "வெளி" வளைந்திருப்பதாக காட்டியது. அந்த நட்சத்திர ஒளி வளைந்து வளைந்து நம்மை வந்து சேரும் என்றார் ஐன்ஸ்டீன்

'இப்படி வளைந்து வளைந்து வெளி முழுவதும் திரும்ப ஒன்றுடன் ஒன்று சேர்ந்துகொண்டு விடும். அப்படியெனில் இங்கிருந்து புறப்பட்ட ஒளிக்கற்றை விண்வெளியில் சென்று கோடிக்கணக்கான வருஷங்களுக்குப் பிறகு புறப்பட்ட இடத்துக்கே திரும்ப வந்துவிடும் ! இதில் காலம் என்பது என்ன ? தூரம் என்பது என்ன ? சரித்திரம் என்பது என்ன ? எதிர்காலம் , இறந்த காலம் எல்லாம் ஒன்றிப் போகின்றன !

ஐன்ஸ்டீன் ஒளி வளைவுக் கொள்கை நிரூபிக்கப்பட்டு உலகமே அவரைக் கொண்டாடியது.

கடவுளைப் பற்றிய புதிர்களை அவிழ்க்கும் அவரது இன்னொரு கோட்பாடு “தியரி ஆப் எவ்ரிதிங்” என்பதாகும். இந்த விதி “பிரம்மாண்டமான இந்த பிரபஞ்சத்திற்கும், ஒரு மிகச் சிறிய அணுவிற்கும் அடிப்படையாக இருப்பவைகள் ஒரே கணிதச் சமன்பாட்டில் அடங்கும்” என்று சொல்கிறது.

ஐன்ஸ்டீன் அறிவித்த தியரி ஆப் எவ்ரிதிங் தத்துவத்தை நிரூபிக்க முயற்சித்த விஞ்ஞானிகளில் ஒருவரான எட்வர்ட் விட்டன் அவரது ஆய்வு முடிவுகளை இருபது வருடங்களுக்கு முன் “எம் தியரி” என்ற பெயரில் வெளியிட்டார்.

அதன் சுருக்கம் என்னவெனில், பிரபஞ்சத்தில் மூன்று பரிமாணங்கள் இருப்பதை அறிந்த நாம், ஐன்ஸ்டீனின் காலம் என்கிற நான்காவது பரிமாணத்தையும் ஏற்றுக் கொண்டிருக்கிறோம். தற்போது கிடைத்திருக்கும் ஆய்வு முடிவுகளின்படி மொத்தம் பதினொரு பரிமாணங்கள் இருக்கிறது என்பதை நிரூபிக்க முடியும் என்பதே அது.

இந்தப் பரிமாணங்களுக்கும், கடவுளை உணருதலுக்கும் உள்ள தொடர்பை நவீன விஞ்ஞானம் தேடுவதை விளக்க வேண்டுமானால், முதலில் இந்த பரிமாணங்களின் வகையை நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

ஒரு பரிமாண உயிரையும், இரண்டு பரிமாண உயிரையும் புரிந்து கொள்ள, முதலில் ஒரு நேர் கோட்டையும், அதனை வெட்டிச் செல்லும் ஒரு படுக்கைக் கோட்டையும் ஒரு கூட்டல் குறியினைப் போலக் கற்பனை செய்து கொள்ளுங்கள்.

ஒரு நேர் கோட்டில் முன் பின்னாகச் சென்று வாழும் மிகவும் மெதுவான செயல்பாடுகளைக் கொண்ட ஒரு பரிமாண உயிரான, ஒரு ஆமையால் அந்தக் கோட்டில் மட்டுமே வாழ முடியும், பார்க்க முடியும், உணர முடியும். அதைத் தவிர வேறு எதையும் அது அறியாது. கோட்டுக்கு வெளியில் இன்னொன்று இருப்பதாகச் சொன்னாலும் நம்பாது.

நேர் கோட்டினை வெட்டிச் செல்லும் படுக்கைக் கோட்டில் வாழும் முயல் ஆமையை விட அறிவானது, விரைவானது. இந்த இரண்டு பரிமாண உயிரான முயலால், ஆமையைப் பார்க்க முடியும். ஆனால் ஆமையால் முயலைப் பார்க்க முடியாது. இந்த இரு கோடுகளும் இணையும் நடு மத்திப் புள்ளியில் எப்போதாவது முயல் வருமாயின் அப்போது மட்டும் ஆமையால் முயலைப் பார்க்க முடியும்.

இப்போது இந்தக் கூட்டல் குறி போன்ற இரண்டு பரிமாண உயிர் அமைப்புகளின் மையப் புள்ளியில் ஒரு பென்சிலை வைப்போம். அதன் உச்சியில் இவை இரண்டையும் விட விரைவான, இவைகளுக்கு இல்லாத பறக்கும் சக்தியுள்ள மூன்று பரிமாண உயிரான பருந்து இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம்.

இந்தப் பருந்து இருப்பதை உணரவோ, பார்க்கவோ, ஆமையாலும், முயலாலும் முடியாது. ஏன், இப்படி ஒன்று இருக்கிறது என்பதைக் கூட இவைகள் கற்பனை செய்ய முடியாது. ஆனால் பருந்து இந்த இரண்டையும் பார்க்க முடியும். அதேபோல கீழே இருக்கும் இரண்டு பரிமாண உயிர்களை இணைக்கும் புள்ளியில் பருந்து வரும்போது மட்டும் பருந்தை மற்ற இரண்டால் பார்க்க முடியும்.

நாம் இருப்பது இப்போது இந்த பருந்தின் அமைப்பில்தான்.

இந்தக் கூட்டல் குறியையும் அதன் மேல் நிற்கும் பென்சிலையும் சேர்த்தாற் போல் அதன்மேல் ஒரு டப்பாவைக் கவிழ்த்துங்கள். நான்காவது பரிமாண உயிர் அந்த டப்பாவினுள் அடங்கும். இறந்தவர்கள் ஆவிகளாக இருப்பது பரிமாண இந்த அமைப்பில்தான் என்ற கருத்து இப்போது வலுப்பெற்று வருகிறது.

இந்தப் பரிமாணத்தில், ஆவி வடிவில், சூட்சும உடலுடன் இருக்கும், நம் முன்னோர்களால் நம்மைப் பார்க்க முடியும். ஆனால் நம்மால் அவர்களைப் பார்க்க முடியாது.

அதேநேரத்தில் அபூர்வமாக பரிமாண மையப் புள்ளியில் அவர்கள் வர நேரிடும்போது நம் கண்களுக்கு ஆவிகளாகத் தெரிகிறார்கள்.

நான் முந்திய பாராவில் சொன்னதைப் போல, எப்படி பருந்து இருப்பதை முயல் நம்பாதோ, பருந்தும், முயலும் இருப்பதை ஆமை நம்பாதோ, அதேபோல இதையும் நீங்கள் நம்பச் சற்றுச் சிரமமாகத்தான் இருக்கும்.

இந்த டப்பாவிற்கு மேல் டப்பாவாக நவீன விஞ்ஞானம் சொல்லும் பதினோரு பரிமாணங்கள் எனும் டப்பாக்களை அடுக்கிக் கொண்டே போங்கள்.
இதில் ஏதோ ஒரு பரிமாணத்தில் இறைவனின் அரியணை கூட நீரில் மீது இருக்கும் .

وَ هُوَ الَّذِىْ خَلَقَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ فِىْ سِتَّةِ اَ يَّامٍ وَّكَانَ عَرْشُهٗ عَلَى الْمَآءِ لِيَبْلُوَكُمْ اَيُّكُمْ اَحْسَنُ عَمَلًا وَلَٮِٕنْ قُلْتَ اِنَّكُمْ مَّبْعُوْثُوْنَ مِنْ بَعْدِ الْمَوْتِ
لَيَـقُوْلَنَّ الَّذِيْنَ كَفَرُوْۤا اِنْ هٰذَاۤ اِلَّا سِحْرٌ مُّبِيْنٌ

அவன்தான் வானங்களையும், பூமியையும் ஆறு நாள்களில் படைத்தான். (அச்சமயம்) அவனுடைய "அர்ஷு" நீரின் மீதிருந்தது. உங்களில் நற்செயல்களைச் செய்பவர்கள் யார் என்று உங்களைப் பரிசோதிப்பதற்காக (உங்களையும், இவற்றையும் அவன் படைத்தான். நபியே! நீங்கள் மனிதர்களை நோக்கி) "நீங்கள் இறந்த பின்னர் நிச்சயமாக (உயிர்கொடுத்து) எழுப்பப்படுவீர்கள்" என்று கூறினால், அதற்கு அவர்களிலுள்ள நிராகரிப்பவர்கள் "இது பகிரங்கமான சூனியமேயன்றி வேறில்லை" என்று கூறுகின்றனர். (குர்ஆன் : 11:7)

ர.ரா

சூரியனின் கோபம்

வியப்பூட்டும் விஞ்ஞான ஆய்வுகள் 6



وَّجَعَلَ الْقَمَرَ فِيْهِنَّ نُوْرًا ۙ وَّجَعَلَ الشَّمْسَ سِرَاجًا
அவனே, அவைகளில் சந்திரனைப் பிரதிபலிக்கும் வெளிச்சமாகவும், சூரியனை ஒளி விளக்காகவும் அமைத்தான்.
(குர்ஆன் : 71:16)

சூரியன் விளக்கு என்றால் விளக்கைச் சுற்றி இருட்டு இருக்கும் . ஆனால் சூரியனுக்குள் கரும்புள்ளிகள் இருட்டாக இருக்கிறது . இது ஏன் ?

கரும்புள்ளி என்றால் அது கருப்பான புள்ளி அல்ல. வெள்ளைக்காரன் பக்கத்தில் பஞ்சாபி ஒருவர் நின்றால் பஞ்சாபி கருப்பாக தெரிவார் . அதுபோலான சூரியனில் கரும்புள்ளிகள் தென்படுகிறது .

கடும் கோபத்தில் இருப்பவரைக் குறிப்பிடும்போது, "அவர் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்கிறது" என்பதாகக் கூறுவது உண்டு. சூரியனின் முகத்திலும் அவ்வப்போது 'எள்ளும் கொள்ளும் வெடிப்பது' போன்ற நிலைமை தோன்றுகிறது. அந்த 'கோபம்' மாறி, வேறொரு சமயத்தில் சூரியன் முகத்தில் சாந்தம் தவழும் நிலை ஏற்படுவதும் உண்டு.

தினமும்தான் சூரியன் உதிக்கிறது. ஆனால், நாம் சூரியனை உற்றுக் கவனிப்பதில்லை. சூரியனை உற்றுப் பார்ப்பது முடியாது . கூடாது . கலிலியோவுக்கு அந்திம காலத்தில் கண் கெட்டுப்போனதே சூரியனை தன் டெலஸ்கோப் மூலம் நேரடியாக பார்த்ததால்தான் என்று சொல்கிறார்கள்

சூரியனைப் பார்க்க விஷேச கருவிகள் உண்டு. சூரியனைக் கவனித்து வருவதற்கென்றே விசேஷமான செயற்கைக் கோள்களும் உள்ளன. அப்படி கவனிக்க வேண்டிய காரணம் உள்ளது.

சூரியனின் முகத்தில் அவ்வப் போது கரும்புள்ளிகள் தோன்றுகின்றன. பின்னர் அவை மறைகின்றன. சூரியனில் கரும்புள்ளிகள் தோன்றுவது சூரியனின் காந்த மண்டலத்துடன் தொடர்புடையது.

கரும்புள்ளி அதிகமாக இருக்கும் சமயங்களில் சூரியன் சீறுகிறது. இது மட்டுமின்றி, சூரியனில் இருந்து அப்போது சிஎம்இ **(CME- Coronal Mass Ejection)** எனப்படும் ஆற்றல் மொத்தைகள் தூக்கி எறியப்படுகின்றன. சில சமயங்களில் இவை பூமியைத் தாக்குகின்றன.

கரும்புள்ளிகள் தோன்றும் கால அளவு சில மணி நேரங்களிலிருந்து பல வாரங்கள் வரையானதாகவும் காணப்படுகிறது. நீண்ட கால அளவைப் பெற்றிருப்பின் புவியின் அயனி மண்டலத்தில் பாதிப்பை ஏற்படுத்துகிறது.

இதனால் வானொலித் தகவல் தொடர்பில் பாதிப்பு ஏற்படுகிறது.
புவியை நோக்கி வரும் மின்னூட்டப்பட்ட துகள்களை மின்காந்தப் புலம் விலக்கித் தள்ளும். இதனால் அத்துகள்கள் புவியின் இருதுருவங்களை நோக்கி ஈர்க்கப்படும். இவ்வாறு துருவங்களை நோக்கி மின் துகள்கள் ஈர்க்கப்படுவதால் வடக்கு மற்றும் தெற்கு துருவம் நோக்கி பேரொளி (அ) அறோறா பொறியாலிஸ் **(Aurara Borealis)** எனப்படும் விந்தைக் காட்சிகள் அதிகமாகக் காணப்படும்.

இதன் விளைவாக பூமியின் காற்று மண்டலம் பாதிக்கப்பட்டு அது விரிவடைகிறது. காற்று மண்டலம் பூரி போல உப்புகிறது. அதுவரை காற்று மண்டலத்துக்கு வெளியே அமைந்திருந்த செயற்கைக் கோள்கள் காற்று மண்டலத்துக்குள் வந்துவிடும் நிலை ஏற்படுகிறது. இதனால் செயற்கைக் கோள்களின் வேகம் பாதிக்கப்பட்டு, நீண்ட கால அளவில் அவற்றின் ஆயுள் குறைகிறது.

ரேடியோ ஒலிபரப்புகளும் பாதிக்கப்படுகின்றன. தவிர, பூமியில் மின்கட்டமைப்பும் பாதிக்கப்படுகிறது. கனடாவில் ஒருமுறை, மின்விநியோகம் கடுமையாக பாதிக்கப்பட்டு, பெரும் பகுதி இருளில் மூழ்கியது.

பூமியில் நிலத்துக்கு அடியில் புதைக்கப்பட்டுள்ள எரிவாயுக் குழாய்கள், கச்சா எண்ணெய்க் குழாய்களும் பாதிக்கப்படுவது உண்டு.

ஆனால், சூரியனில் ஏற்படும் சீற்றமோ, சூரியனில் இருந்து வீசி எறியப்படும் ஆற்றல் மொத்தைகளோ மக்களை நேரடியாக பாதிப்பதில்லை.

சூரியனில் கரும்புள்ளிகள் நிறைய இருக்கும்போதுதான் இத்தனை பிரச்சினைகளும் ஏற்படுகின்றன.

அக்டோபர் 4 ஆம் தேதி சூரியனில் 126 கரும்புள்ளிகள் காணப்பட்டன. இதே மாதம் 21 ஆம் தேதி கரும்புள்ளிகளின் எண்ணிக்கை 207 ஆக அதிகரித்தது. கரும்புள்ளிகள் அதிகரிக்கும் போது தான் சூரியனின் குணம் கோபமாக மாறுகிறது.

சூரியனின் மேற்பரப்பில் மற்ற இடங்களைக் காட்டிலும் ஓரிடத்தில் வெப்பம் குறைவாக இருந்தால் அந்த இடம் நமக்குக் கரும் புள்ளியாகத் தெரிகிறது. கரும்புள்ளியைச் சுற்றி உள்ள இடத்தில் வெப்பம் 6000 டிகிரி செண்டிகிரேட் என்றால் கரும்புள்ளி உள்ள இடத்தில் வெப்பம் சுமார் 4200 டிகிரி செண்டிகிரேட் அளவுக்கு இருக்கலாம்.

பூமியிலிருந்து பார்த்தால் சிறியதாகத் தெரிகிறதே தவிர, மற்றபடி ஒரு கரும் புள்ளிக்குள் பூமியைப் போட்டு நிரப்ப முடியும். சூரியனில் தென்படும் கரும் புள்ளிகள் நிரந்தரமானவை அல்ல. சில நாட்களில் மறைந்து விடலாம். சூரியனில் கரும்புள்ளிகளே இல்லாத கட்டம் ஏற்படுவது உண்டு. கரும் புள்ளிகளின் எண்ணிக்கை உச்சத்தை எட்டுகிற கட்டமும் உண்டு. இதில் ஒரு வகையான கால ஒழுங்கு உள்ளது.

சூரியனில் மிக நீண்ட காலம் கரும்புள்ளிகளே தோன்றாமல் போகுமா?

கடந்த காலத்தில் நமக்குத் தெரிந்து குறைந்தது நான்கு தடவை அவ்விதம் ஏற்பட்டுள்ளது. கி.பி. 1645 முதல் 1715ம் ஆண்டு வரையிலான 70 ஆண்டுகளில் சூரியனில் கரும்புள்ளிகளே காணப்படவில்லை.

சூரியனின் கரும்புள்ளிகளை ஆராய்ந்தவரான எட்வர்ட் மாண்டர் என்ற விஞ்ஞானியைக் கௌரவிக்கும் வகையில் இக் காலகட்டத்துக்கு "மாண்டர் மினிமம்" (**Maunder Minimum**) என்று பெயர் வைக்கப்பட்டுள்ளது.

இதற்கு முன்னர் கி.பி. 1280 - 1350 காலகட்டத்திலும் கி.பி.1460 - 1550 காலகட்டத்திலும் இவ்வித நிலைமை இருந்தது. மாண்டர் மினிமத்துக்குப் பிறகு கி.பி. 1790 முதல் 1830ம் ஆண்டு வரையிலான காலகட்டத்திலும் இதேபோல சூரியனில் அனேகமாகக் கரும்புள்ளிகளே காணப்படவில்லை

இதில் வேடிக்கை என்னவென்றால் 2012ம் ஆண்டு வாக்கில் சூரியனில் அதிகபட்சமாகக் கரும்புள்ளிகள் தோன்றும் என்றும், அதன் விளைவாக சூரியனில் கடும் சீற்றங்கள் ஏற்படும் என்றும், அதையடுத்து பூமிக்கே ஆபத்து ஏற்படும் என்ற கற்பனை அடிப்படையில் இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர் ஹாலிவுட் தயாரிப்பாக ஓர் ஆங்கிலப் படம் (2012 **- http://www.sonypictures.com/homevideo/2012/** ) வெளியானது. இந்தியாவிலும் அது திரையிடப்பட்டது.

கடந்த 2008 ஆம் ஆண்டில் சூரியனில் கரும்புள்ளிகளே காணப்படவில்லை. பின்னர் இது படிப்படியாக அதிகரித்து ஆரம்பித்தது. சுமார் ஐந்தரை ஆண்டுக் காலம் இவ்விதம் அதிகரித்துக் கொண்டே போகும்.பின்னர் படிப்படியாகக் குறைய ஆரம்பிக்கும். அடுத்த ஐந்தரை ஆண்டுகளுக்குப் பிறகு சூரியனில் அனேகமாகக் கரும்புள்ளிகளே இராது. இப்படியாக ஒரு சுற்று முடிவடைவதற்கு சராசரியாக 11 ஆண்டுகள் ஆகின்றன. இதைக் கரும்புள்ளிக் காலவட்டம் (SunSpot Cycle) என்று குறிப்பிடுகிறார்கள்.

கரும்புள்ளிகளின் எண்ணிக்கை
ஏறுவதையும் இறங்குவதையும் இந்த
வரிவடிவப் படம் காட்டுகிறது. பின்னூட்டத்தில் பார்க்கவும் .

கரும்புள்ளிகளின் எண்ணிக்கையைக் கணக்கிடுவதில் உலகில் இரு அமைப்புக்கள் முக்கிய பங்கு வகிக்கின்றன. இவை தனி பார்முலா அடிப்படையில் கரும் புள்ளிகளைக் கணக்கிடுகின்றன. மேலே கரும்புள்ளிகள் பற்றி அளிக்கப்பட்ட தகவல் அமெரிக்க NOAA அமைப்பின் ஒரு பிரிவு தெரிவித்ததாகும்.

கரும்புள்ளிகள் அதிகரித்துக் காணப்படும் கால கட்டத்தில் சூரியனில் ஏற்படும் கிளர்வுகள் பூமியை-- மனிதனின் பல செயல்பாடுகளைப் பாதிக்கின்றன். ஆகவே தான் நிபுணர்கள் சூரியன் மீது ஒரு கண் வைத்திருக்கிறார்கள்.விசேஷ செயற்கைக்கோள்களும் சூரியனைத் தொடர்ந்து கவனித்து தகவல்களை அளிக்கின்றன.

சூரியனில் கரும்புள்ளிகள் ஐந்தரை வருஷம் வரை உச்சத்தைத் தொடுகின்றது
பின் ஐந்தரை வருஷம் வரை குறைந்து கொண்டே போகிறது .ஆக ஏதோ சத்தியத்திற்கு கட்டுப்பட்டு சூரியன் நடந்து கொள்கிறது .பின் கொஞ்ச காலம் எந்த கரும்புள்ளி இல்லாமல் இருக்கிறது

இதெல்லாம் எப்படி நடக்கிறது ? ஏன் ?
தெரியவில்லை .

ர.ரா

வியப்பூட்டும் விஞ்ஞான ஆய்வுகள் 7



சூப்பர் கன்டக்டிவிட்டி **(super conductivity** ) என்ற இயல் . அதாவது உலோகங்களிலுள்ள வெப்பத்தைப் பற்றி விஞ்ஞான உலகம் தீவிரமாக ஆராய்ச்சி செய்கிறது.

இந்த இயலில் உலக நாடுகள் பணத்தை கொட்டோ கொட்டு என்று கொட்டி ஆராய்கிறது . இன்னும் விடை கிடைக்கவில்லை அப்படி என்ன ஆராய்ச்சி ?

ஒரு பொருளின் வெப்ப நிலை மைனஸ் 273 டிகிரிக்கு குறைந்தால் அந்த வெப்பநிலைக்குப் பெயர் " அப்ஸல்யூட் ஜீரோ**" (Absolute Zero )**
அப்படி என்ன மைனஸ் 273 டிகிரியில் அப்படி என்ன விசேஷம் ?

சொல்றேன்.

இதற்கு மேல் குளிர் என்பது விஞ்ஞான ரீதியாக இல்லை . இந்த மைனஸ் 273 டிகிரியில் சில வினோதங்கள் அந்த பொருளின் மீது விசித்திரமாக நிகழ்கின்றன . இது கற்பனை இல்லை , நிரூபிக்கபட்ட விஞ்ஞான உண்மை.

அதாவது, உலோகங்களிலுள்ள அணுவில் உள்ள எலக்ட்ரான்கள் வெளிவட்டத்தில் சுற்றிக் கொண்டிருப்பது முற்றிலுமாக நின்று போய் உஷ்ணம் என்பதே இல்லாத நிலை அந்த உலோகத்திற்கு வந்து விடுகிறது . இப்போது அது உலோகம்தானா ? என்ற கேள்வி விஞ்ஞானத்திற்கு வருகிறது . அது ஓரமாக இருக்கட்டும் .

இந்த மைனஸ் 273 டிகிரியில் உலோகங்களின் மின் தடைகளில் (Resistance) கணிசமான மாற்றம் ஏற்பட்டு . மின்சாரத்தைக் கடத்தும் தகுதி நேரடியாக அதிகமாகி விடுகிறது . மின்சாரத்தை தடுத்து நிறுத்த வேண்டிய தடை மின்சாரத்தை ஒரேயடியாகக் கடத்துகிறது . அந்த உலோகத்தின் மின் தடைக்கு என்னாச்சி ? இதென்ன மாறுபட்ட இயல்பு ?

அதாவது லாரி ஓட்டுவதற்கு "'பிரேக் " மிகவும் தேவையானது . "பிரேக் _ வேகத்திற்கு தடை .

அதே மாதிரி 'ரெஸிஸ்டன்ஸ் " என்பது மின்சார தடை . இந்த மின் தடையை எல்லா உலோகங்களுக்கும் அலோகங்களுக்கும் இருக்கும் . இந்த இயல்பான தடை இப்போது இல்லாமல் செய்து விடுகிறது இந்த மைனஸ் - 273 டிகிரி . இதனால் உலோகங்களில் பெரும் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தி இருக்கிறது.

அதாவது பிரேக்கே இல்லாத லாரி தலைதெறிக்க ஓடுவது மாதிரி மின்சாரம் மின் தடை ஏதுமின்றி சகட்டுமேனிக்கு பாய்கிறது . விஞ்ஞானமே இது பற்றி கொஞ்சம் பயந்துதான் இருக்கிறது.

ஒரு ஆங்கிலப் படத்தில் பொம்மை ஒன்று எல்லோரையும் விரட்டி விரட்டி கொலை செய்யுமே... பார்த்திருக்கீங்களா ? கடைசியில் கதாநாயகி பொம்மைக்குள் பேட்டரி இருக்கிறதா ... பார்க்கும் போது பேட்டரி இல்லாமல் , கையிலிருந்து பொம்மை குதித்து ஒடுமே .... - அது மாதிரி விஞ்ஞானிகளுக்கெல்லாம் மின் தடையை மீறிய மின்சாரப் பாய்ச்சல் உலோகங்களுக்குள் எப்படி வந்தது ? இங்கென்ன விஞ்ஞானப் பேயா உலோகம் / அலோகத்திற்குள் வந்தது ?

இது ஏன் ? தெரியவில்லை .

தெரிந்தால்,

நாளைய நவீன உலகத்தில் போக்குவரத்து , கம்யூட்டர், மின் சக்தி உற்பத்தி, விண்வெளிப் பயணம் அதுவும் ஒளியின் நிகர வேகத்திற்கு கலங்கள் உருவாகி வேற்று கிரகவாசிகளை சந்தித்து தலைப்பாக் கட்டு பிராணி சாப்பிட நீங்கள் ஏலியன்களை அழைக்கலாம்.

உலகில் விஞ்ஞானத்தில் ஏன் எல்லா துறைகளிலுமே பெருத்த மாற்றம் ஏற்படப் போகிறது. நிறைய விஞ்ஞான விதிகளிலும் மாற்றம் ஏற்பட்டு , ஒரு பொருள் பொருள்தானா என்பதற்கு நிறைய அத்தாட்சிகள்

தேவைப்படும் . மொத்தத்தில் விஞ்ஞானம் மெஞ்ஞானத்தின் பிடிக்குள் இருக்கும் . மெஞ்ஞான சித்தாத்தங்கள் கோலோச்சும் . நிறைய மெஞ்ஞானப் பாடல்களுக்கு விஞ்ஞானிகளால் விளக்கம் கொடுக்கப்படலாம்.

மைனஸ் 273 டிகிரி வெப்ப நிலை என்பதை விட மிக உச்சக்கட்ட குளிர் என்பதே சரி.

இது பற்றி விளக்கம் உங்களுக்குத் தெரிந்தால் கோடி கோடியாய் பணமும் நோபிள் பரிசும் உங்கள் வீடு தேடி வரும்.

" எவன் ஒவ்வொரு பொருளுக்கும் அதற்குரிய இயற்கைத் தன்மையைக் கொடுத்து அவைகளைப் பயன்படுத்தும் வழியையும் அவைகளுக்கு அறிவித்தானோ அவன்தான் எங்கள் இறைவன்" என்றார் மூஸா

திருக்குர்ஆன் ( 20 : 50 )

- மைனஸ் 273 டிகிரி என்பது ஒவ்வொரு பொருளின் இயற்கைத் தன்மை என்கிறது குர்ஆனின் விஞ்ஞான விளக்கம். இது என்ன இயற்கைத் தன்மைக்கு மாற்றமான குணம் எப்படி வந்தது என்பது பற்றி இனி விஞ்ஞானிகளும்தான் குர்ஆனைத் தூக்க வேண்டும் .

ரஹ்மத் ராஜகுமாரன் .

## அதள பாதாளத்தில் அழகானதொரு நகரம் .

## வியப்பூட்டும் விஞ்ஞான ஆய்வுகள் 8



وَاذْكُرُوْۤا اِذْ جَعَلَكُمْ خُلَفَآءَ مِنْۢ بَعْدِ عَادٍ وَّبَوَّاَكُمْ فِى الْاَرْضِ تَتَّخِذُوْنَ مِنْ سُهُوْلِهَا قُصُوْرًا وَّتَنْحِتُوْنَ الْجِبَالَ بُيُوْتًا فَاذْكُرُوْۤا اٰلَاۤءَ اللّٰهِ وَلَا تَعْثَوْا فِى الْاَرْضِ مُفْسِدِيْنَ

"(அன்றி) "ஆத்" (என்னும்) மக்களுக்குப் பின்னர் (அவர்களுடைய) பூமியில் உங்களைக் (தமூதுமக்களை) குடியேறச் செய்து (அதற்கு) உங்களை அதிபதிகளாக்கி வைத்ததை நீங்கள் நினைத்துப் பாருங்கள்.

நீங்கள் அதன் சமவெளியில் மாளிகைகளைக் கட்டியும், மலைகளைக் குடைந்தும் வீடுகளை அமைத்துக் கொள்கின்றீர்கள்.

ஆகவே, அல்லாஹ்வின் இவ்வருட்கொடைகளை எல்லாம் நீங்கள் நினைத்துப் பாருங்கள்; அன்றி பூமியில் விஷமம் செய்துகொண்டு அலையாதீர்கள்" (என்றும் கூறினார்.)

(அல்குர்ஆன் : 7:74)

தமூத் அல்லது ஸமூத் என்பது வடமேற்கு அரேபியாவில் வாழ்ந்த பழம்பெரும் ஒரு சமூகத்தாரின் பெயராகும்.

ஹிஜ்ர் என்னும் ஊர் அவர்களின் தலைநகரமாக விளங்கியது . அது இன்றும் "மதாயினு ஸாலிஹ்" என அழைக்கப்படுகிறது .

ஆது சமூகத்தாருக்குப் பின் வாழ்ந்த
தமூது எனும் இக்கூட்டத்தார்கள் கட்டடக் கலையில் சிறந்து விளங்கினர்.

கல் மாளிகைகள் , மலைக்குகைகள் , மலைப்பிரதேசமான கல் பாறை தரையில் கூட அழகாக தோண்டி அற்புதமான வீடுகளை தங்களுக்கு அமைத்துக் கொண்டனர். இவர்களின் நகரத்தை பெட்ரா (Petra) என்றழைக்கின்றனர்

இத் தமூது கூட்டத்தாரை நல்வழிப்படுத்த அவர்களில் ஒருவரான ஸாலிஹ் (அலை) அவர்களை நபியாக அல்லாஹ் அனுப்பினான் . அம்மக்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க மலைப்பாறையைப் பிளந்து சினை ஒட்டகத்தை வரவழைத்து பின் அது ஒரு ஒட்டகக் கன்றையும் ஈன்றது .

தமூத் சமூகத்தார்கள் போன்று இன்றைய நவீன காலத்திலும் கனடாவில் அண்டர் கிரவுண்ட் நகரமான மாண்ட்ரீல் உருவாக்கி இருக்கிறார்கள் .

மொத்த நடைபாதை நீளம் 40 லட்சம் சதுர அடி.அதாவது 30 கி.மீட்டர் நீளமுள்ள நடைபாதைகள் கொண்ட நகரம்அமைந்திருப்பது பூமிக்கு அடியில்..

கனடா நாட்டின் ஒன்டாரியோ க்க்கி உள்ள டொரொண்டோ நகரின் கீழேதான் இந்த அதிசய அண்டர் கிரவுண்ட் நகரம் அமைந்து இருக்கிறது.

உலகில் பல நகரங்களில் அண்டர் கிரவுண்ட் மால்கள் வந்து விட்டன என்றாலும் டொரொண்டோ தான் உலகின் மிகப்பெரிய பாதாள பஜாரைக் கட்டி இருக்கிறது!

இதன் வெற்றிக்கு காரணம் கனடாவின் கடும் பனிப்பொழிவு!. டொரொண்டோ நகரில் வருடத்தில் ஆறுமாதம் வெளியே தலைகாட்ட முடியாது. வெயில் காலத்தில் 35 டிகிரி வரை வெப்பம் உயருவது போலவே,

பனிக்காலத்தில் மைனஸ் 20 டிகிரியாக ஊரே உறைந்து விடும். அந்த ஆறுமாதகால நீங்கள் வெளி உலகைப் பற்றிக் கவலையே இல்லாமல் இந்த பாதாள நகரில் உலவலாம்.

1900-ஆம் ஆண்டு ஈட்டன்ஸ் என்கிற நிறுவனம் பக்கத்து தெருவில் இருக்கும் இன்னொரு வனிகவளாகத்தை இணைக்க பூமிக்கடியில் சுரங்கப்பாதை அமைத்ததுதான் ஆரம்பம். இதை PATH என்று அழைக்கிறார்கள். பூமிக்கு அடியில் வழிகாட்ட அங்கங்கே இந்த PATH என்கிற பெயர் பொறித்து வைத்து இருப்பார்கள். அதில் 'பி' என்கிற எழுத்து சிகப்பு நிறத்தில் இருந்தால் அது தெற்கே போகும் பாதை.'ஏ' என்கிற எழுத்து ஆரஞ்சு நிறத்தில் இருந்தால் மேற்கே போகிறீர்கள் என்று பொருள்.இதே போல , மேற்கு 'டி' புளூ, கிழக்கு 'ஹெச்' மஞ்சள் என்று மக்கள் குழம்பிவிடாமல் இருக்கும் வகையில் எளிமையாக
வடிவமைத்து இருக்கிறார்கள்.

பூமிக்கு அடியில் 1200 சரவணா ஸ்டோர்கள் ஒரே இடத்தில் இருந்தால் எவ்வளவு பெரிதாக இருக்குமோ அந்தளவுக்கு பிரமாண்டமான அண்டர் கிரவுண்ட் உலகம் மாண்ட்ரீல் இது!

உணவகங்கள்,திரை அரங்குகள், இருக்கின்றன. ஆறு பெரிய அடுக்குமாடி வணிக வளாகங்கள் இணைக்கப்பட்டு இருக்கின்றன. யூனியன் ஸ்டேஷன் என்கிற நகரின் பிரதான ரயில் நிலையம்,5 சப்வே ரயில் நிலையங்கள், நான்கு மால்கள், 20 பிரமாண்ட கார் பார்க்குகள் இணைக்கப்பட்டு இருக்கின்றன. 2014-ம் ஆண்டு முதல் இதன் விரிவாக்கப் பணிகளை மீண்டும் தொடங்கப்பட்டு இருக்கின்றன.

இந்த பாதாள நகரம் விரைவில் இரண்டு மடங்காகப் போகிறது. மனிதர்கள் மட்டுமின்றி இதன் உள்ளே பயணிக்க வாகனங்களும் வரலாம். நம்ம ஊரிலும் பூமிக்கடியில் ஒரு ரங்கநாதன் தெருவும் பாண்டி பஜாரும் அமைத்தால் நாமும் கோடைகாலத்தை கொண்டாடலாம்.

பெட்ராவும் , மாண்ட்ரீலும் மனிதனின் கட்டடக்கலைக்கு சிறந்த எடுத்துக் காட்டுகளாகும்

## பூமியின் அடியாழத்தில் 100 கோடி ஆண்டுகளுக்கு முந்தைய நீர்
## வியப்பூட்டும் விஞ்ஞான ஆய்வுகள் 9




قُلْ اَرَءَيْتُمْ اِنْ اَصْبَحَ مَآؤُكُمْ غَوْرًا فَمَنْ يَّاْتِيْكُمْ بِمَآءٍ مَّعِيْنٍ
(பின்னும் நபியே!) நீங்கள் கூறுங்கள்: "(நீங்கள் குடிக்கும்) தண்ணீர் பூமிக்குள் வெகு ஆழத்தில் சென்றுவிட்டால், பிறகு தண்ணீரின் (வேறொரு) ஊற்றை உங்களுக்குக் கொண்டு வருபவன் யாரென்று கவனித்தீர்களா?
(அல்குர்ஆன் : 67:30)

அக்காலத்தில் திரு மக்காவில் ஜம்ஜம் கிணறும் மைமூனுல் ஹள்றமீயின் கிணறும் தான் இருந்தன இவ்விரு கிணற்று தண்ணீர் தான் பொதுமக்களின் சேவைகளுக்கு உதவியாக இருந்தது .இவ்விரண்டின் தண்ணீரும் பூமிக்குள்ளே வற்றி போய் விடுமாயின் உங்களுக்கு ஊறுகிற தண்ணீரை கொண்டு வருவது யார் ?...

என்று வினவுமாறு நபி ஸல் அவர்களுக்கு கட்டளையிடப்பட்டது.
இவ்வாலயத்தை ஓதி முடித்தவுடன் இதிலுள்ள கேள்விக்குப் பதில் அளிக்கும் தோரணையில் "ரப்புல் ஆலமீன் கொண்டு வருவான் " என்று கூற வேண்டும் என ஹதீஸில் கூறப் பட்டிருக்கிறது

ஓர் ஆசிரியர் தன்னுடைய மாணவனுக்கு இந்த வசனத்தை கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தார் . அங்கு ஒரு ஜிந்தீக் அதாவது அல்லாஹுத் தஆலாவின் மீது விசுவாசமற்றவனும் பொதுவுடமைக் கொள்கையுடையவனுமான ஒருவன் இதனை கேட்டுக் கொண்டிருந்து கோடாரியும் கடப்பாரையும் அதனைத் திரும்பக் கொண்டுவர முடியும் என்று குறும்புத்தனமாக கூறினான்.

அவன் அன்று இரவு தூங்கி எழுந்து திருக்கையில் கண் குருடனாக போய்விட்டான் " இப்பொழுது உனது கண்ணிலுள்ள நீர் வற்றிப் போய்விட்டது கோடாரியும் கடப்பாரையும் அதனை திரும்ப கொண்டுவர முடியுமா ? "என்று கூறுக என அவனுக்கு அசரீரி கேட்டதாம் என தஃப்ஸீர் ஜாஹிதியில் எழுதப்பட்டிருக்கிறது .

இந்த வசனத்தில் 'வெகு அழத்திற்குள் போய்விடும் ' என்பதை குறிக்க ஃகவ்ர் எனும் சொல் மூலத்தில் ஆளப்பட்டுள்ளது இது 'ஊறுதல்' என்பதற்கு எதிர்பதமாகும்.

இதனாலேயே இவ்வசனத்தின் அடுத்த தொடர் உங்களுக்கு வேறு ஒரு நீரூற்றை கொண்டு வருபவர் யார் என்று நீங்கள் எனக்குச் சொல்லுங்கள் என கேட்குமாறு சொல்கிறது .

அதாவது பொங்கிப் பெருகி நிலத்தின் மேற்பரப்பில் பிரவாகம் எடுத்து ஓடுகின்ற தண்ணீரை உங்களுக்கு கொண்டு வருபவர் வேறு யார் ? அதாவது இதற்கு வல்லமையும் மாண்பும் மிக்க அல்லாஹ்வைத் தவிர வேறு யாருக்கும் ஆற்றல் கிடையாது

அவனது கருணை மற்றும் கிருபை காரணமாக உங்களுக்காகத் தண்ணீரை பூமியில் அவன் ஊரைச் செய்தான் இதை அடியார்களின் தேவைக்கேற்ப குறைவாகவோ அதிகமாகவோ பூமியின் பல்வேறு பகுதியில் ஓடச் செய்தான்.

"நூறு கோடி ஆண்டுகள் பழமையான நீர் பூமிக்கடியில் அதிகம் உள்ளது என்பதாக விஞ்ஞானம் கண்டு பிடித்துள்ளது.

நிலத்துக்கு கீழே மிகவும் ஆழத்தில் உள்ள பாறை இடுக்குகளில் காணப்படுகின்ற உலகின் மிகப் பழமையான தண்ணீர், நாம் ஏற்கனவே நினைத்ததை விட மிகவும் அதிகமான அளவுகளில் இருப்பதாக விஞ்ஞானிகள் கூறுகின்றனர்

பூமிக்கடியில் பல கிலோமீட்டர்கள் ஆழத்தில் 100 கோடி ஆண்டுகள் கணக்கில் பழமையான இப்படியான தண்ணீர் காணப்படுகிறது. இந்த தண்ணீர் பூமியின் மேற்பரப்பில் ஒரு காலத்தில் ஓடிய ஆறு மற்றும் நீரூற்றுகளாக இருக்கும் என்பதாக விஞ்ஞானிகள் கருதுகிறார்கள் . உதாரணமாக சரஸ்வதி என்ற பெரிய நதி இவ்வுலகை விட்டு மறைந்து விட்டதாக ஒரு கருத்துக்கோள் உள்ளது . இதைத்தான் குர்ஆனில்...

"(நீங்கள் குடிக்கும்) தண்ணீர் பூமிக்குள் வெகு ஆழத்தில் சென்றுவிட்டால் " என்கிறது

11 மில்லியன் சதுர கிலோமீட்டர்கள் என்ற அளவில் இந்த பழைய தண்ணீர் இருக்கலாம் என ஆய்வாளர்கள் தற்போது கணித்துள்ளனர். அதாவது உலகிலுள்ள அனைத்து ஆறுகள், ஏரிகள், குளங்கள் அனைத்திலும் இருக்கின்ற நீரை விட புவியின் மேற்பரப்புக்கு மிக ஆழத்தில் இருக்கின்ற இந்த பழைய தண்ணீரின் அளவு அதிகம்.

அமெரிக்கன் ஜியோஃபிஸிகல் யூனியன் என்ற அறிவியல் கழகத்தின் இலையுதிர்காலத்து மாநாட்டில் இந்த விஷயம் விவாதிக்கப்பட்டுள்ளது.

தவிர "நேச்சர் " என்ற அறிவியல் சஞ்சிகையிலும் இந்த ஆய்வு வெளியிடப்பட்டுள்ளது.

பூமிக்கடியில் கிலோமீட்டர்கள் ஆழத்தில் இந்த தண்ணீர் இருந்தும், தண்ணீருக்கும் பாறைகளுக்கு இடையிலான நடக்கின்ற ரசாயன மாற்றங்களால் ஹைட்ரஜன் வாயு உருவாவதை விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளனர்.

ஹைட்ரஜன் என்பது சில வகை நுண்ணுயிர்களின் உணவு ஆதாரமாக இருக்கிறது.

எனவே இவ்வளவு ஆழமான இடங்களிலும், உயிர்கள் வாழ்வதற்கான சாத்தியம் இருப்பதை இது சுட்டிக்காட்டுகிறது.

பழைய தண்ணீர் பற்றி ஆய்வு செய்துள்ள விஞ்ஞானிகளில் ஒருவரான ஒக்ஸ்ஃபோர்ட் பல்கலைக்கழகத்தின் கிறிஸ் பல்லென்டின் பழைய தண்ணீர் பற்றி பிபிசியிடம் விளக்கினார்.

இந்த தண்ணீர் மிகவும் அதிகமான உப்புத்தன்மை கொண்டுள்ளது என்றும் அதில் யாரும் விழுந்தால் சாவுக் கடலைப் போல மிதப்பார்கள் என்றும் அவர் தெரிவித்தார்.

"ஆனால் இந்த மிகப் பழைய தண்ணீர்ல் உயிர்கள் வாழத் தேவையான இரசாயன மூலக்கூறுகள் இருக்கின்றன. இந்த மாதிரியான இராயானங்கள் இருந்தால் அதில் நுண்ணுயிர்கள் இருக்கும் என்பது மாதிரியான சில இடங்கள் நமக்கு தெரியும்."

கனடாவில் பூமிக்கு அடியில் கிட்டத்தட்ட இரண்டரை கிலோமீட்டர்கள் ஆழத்தில் கண்டெடுக்கப்பட்ட தண்ணீர் 250 கோடி ஆண்டுகள் பழமையானது என ஆய்வுகள் காட்டியுள்ளன.

இதுவரையில் பூமியில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள மிகப் பழமையான தண்ணீர் இதுதான்.
சுரங்கங்களில் பழைய தண்ணீர் கண்டுபிடிக்கப்பட்டது (படம்)

ர.ரா

லியாபத்து " என்னும் இறை விருந்து
உணவு 01
( இஸ்லாமிய அடிப்படைக்
கோட்பாடுகள் 107 ) 30-08-2020



லியாபத்து என்பது விருந்து. அல்லாஹு தஆலா சொர்க்கத்திலுள்ள தன் அடியார்களுக்கு கொடுப்பது .

அல்லாஹு தஆலா இந்த விருந்து செய்ய நாடினபோது, ஜிப்ரயீல் (அலை) அவர்களை அழைத்து,

" என்னுடைய ஹபீப் முஹம்மது நபி ﷺ அவர்களுக்கும், அவர்களுடைய உம்மத்துக்கும், மற்ற நபிமார்களுக்கும் , அவரவர்களுடைய உம்மத்துக்களுக்கும் நான் ஒரு விருந்து கொடுக்கப் போறேன். அதற்காக நீர் ஹலீலத்துல் குதுஸியைத் தயார் செய்யும். அங்கே தான் விருந்து நடத்த வேண்டும் " .

உடனே ஜிப்ரயீல் (அலை) அவர்களும் , மற்ற மலக்குமார்களும், அந்த தானத்தை அலங்காரமாகத் தயார் செய்வார்கள் .

ஹலீலத்துல் குதுஸி என்பது ' அதன் ' என்னும் சொர்க்கத்திலுள்ள ஒரு தானம். அது செம்முத்தினால் படைக்கப்பட்டு , எல்லா சொர்க்கங்களிலும் உயர்ந்ததும், மேன்மையானதும் , அது கற்பனைக் கெட்டாத அலங்காரமானதமாகவும் இருக்கும். இது அல்லாஹு தஆலாவின் அர்ஷுக்கு நேர் கீழ் இருக்கும்.

ஹலீலத்துல் குதுஸி தயாரானதும் நம் பெருமானார் நபிகள் நாயகம் ﷺ அவர்கள் முதற்கொண்டு 1,24,000 நபிமார்கள் , அவர்களுடைய உம்மத்துக்கள் அனைவரும் விருந்து உண்ண அழைத்து வரும்படி ஜிப்ரயீல் (அலை) அவர்களுக்கு உத்தரவு செய்வான் .

உடனே ஜிப்ரயீல் (அலை) அவர்கள் மேற்சொன்ன அத்தனை பேர்களையும் அழைப்பார்கள். எல்லோருமே தங்கள் தங்கள் வாகனங்களில் வந்து குவிந்துக் கொண்டே இருப்பார்கள்.

விருந்தாளிகள் விருந்து தானத்திற்கு வரும் வழியில் வெள்ளியினாலும் , பொன்னினாலும் , ரத்தினங்களினாலும் ஒன்றாகப் பட்டு ஓராயிரம் வருஷப் பிரயாணத் தூரம் முதல் பதினாயிரம் வருஷப் பிரயாணத் தூரம் வரையுள்ள அதிக அலங்கார முள்ள 10 மாளிகைகள் ஒன்றன் பின் ஒன்றாய் ஒரு நிமிடத்தில் கடந்து போவார்கள். இந்த 10 மாளிகைகள் யாருக்குரியது என்பது பற்றி விபரம் இல்லை .

பின்பு ஹலீலத்துல் குதுஸி என்கிற உன்னதமான மேல் மாடிகளும் விருக்ஷங்களும் , ஒரே ஒளிவாய்த் தோன்றும். எல்லோரும் அவைக் கண்டு களிப்புற்று அதிக ஆனந்தத்துடன் அங்கு வந்து சேர்வார்கள்.

ஹலீலத்துல் குதுஸி யில் அவரவர் வஸ்துக்கள் ஒவ்வொன்றிலும் அவரவர்கள் பெயர்கள் பொறிக்கப்பட்டிருக்கும். அவைகள் மற்ற சுவர்க்கங்களில் உள்ள பொருட்களைக் காட்டிலும் ரொம்பவும் வித்தியாசமாக இருக்கும்.

எல்லோரும் அவரவர் பெயர் குறிப்பிட்ட ஆசனங்களில் உட்கார்ந்த பின் ஒவ்வொரு ஒடுக்கு கொண்ர்ந்து மலக்குகள் வைப்பார்கள் .

அந்த ஒவ்வொரு ஒடுக்களிலும் வெள்ளித் தட்டு 10 ம் , பொன்தட்டு 10 ம் , முத்து தட்டு 10 ம் , அகீக்குத் தட்டு 10 ம் , மாணிக்கத் தட்டு 10 ம், மரகதத்
தட்டு 10ம் , பவளத் தட்டு 10 ம் ஆக மொத்தம் 70 தட்டுகள் பரப்பி , ஒரு தங்கத்தால் அதை மெல்லிய பசும் பட்டினால் பொதித்து கட்டப்பட்டதாக இருக்கும் . அந்த உணவுகளின் மணம் இதுவரை எந்த மூக்கும் நுகர்ந்திராத வாடையில் உணவுகள் கமகமக்கும்.

அந்த 70 தட்டுகளில் ஒரு தட்டிற்கு 60 வித ருசியுள்ள பதார்த்தங்களாக ஆகாரங்கள் வைக்கப்பட்டு இருக்கும். அதுகளை அவரவர் விரும்பியபடி வேண்டிய மட்டும் புசிப்பார்கள்.

ஒவ்வொரு பிடி உணவும் ஒன்றுக்கொன்று அதிக ருசிகரமாக இருப்பதும் அல்லாமல், ஒரு பிடி உணவிலே துனியாவில் இருந்த சகல ருசியும் அதிலே அடங்கி விடும்.

இறை விருந்து உணவுகள் உண்ட பின் பொன்னினாலும், ரத்தினங்களினாலும் ஆன கெண்டிகளில் தண்ணீர், பால், தேன் , மது இவைகளை நிரப்பிக் கொணர்ந்து எல்லோரும் கொடுப்பார்கள். அதுகளை வேண்டிய மட்டும் வாங்கிக் குடித்துக் கொண்டிருப்பார்கள்.

அதன் பின் நவரத்தினங்கள். இழைத்த தங்கத் தாளங்களில் பழ வர்க்கங்களைப் பரப்பி , பசும் பட்டினால் மூடிக் கொண்ர்ந்து ஒவ்வொருக்கும் கொடுப்பார்கள் . அந்த பழங்களை அவர்கள் ....

" அவற்றிலிருந்து அவர்களுக்கு ஒரு கனி உணவாகக் கொடுக்கப்படும் போதெல்லாம், “முன்னர் இதைத்தான் நாங்கள் கொடுக்கபட்டோம்” எனக் கூறுவார்கள். அது (பார்வைக்கு) ஒரே விதமாகத் தோன்றக் கூடியாதாகயிருக்க அவர்கள் கொடுக்கப்பட்டார்கள். (ஆனால் அவை ருசியில் மாறுபட்டவையாக இருக்கும்). (குர்ஆன் 2 : 25 )

பிறகு ஒவ்வொருவருக்கும் , பலவிதமான பட்டுகளும், ரத்னாபரணங்களும் கொணர்ந்து கொடுக்கப்படும். அதுகளை வாங்கி உடுத்தியும் ,அணிந்தும் எல்லோரும் தன்னை அலங்கரித்துக் கொள்வார்கள்.

அதன் பின் பரிமளம் பூசிக்கொள்ளும்படி கொணர்ந்து கொடுக்கப்படும். அதுகளையும் பூசிக்கொள்வார்கள்.

ஹூருல் ஈன்களின் பலவிதமான சங்கீதங்கள் பாடும்படி ஹூருல் ஈன்களுக்கு இறைக்கட்டளை பிறக்கும் . அப்படியே சங்கீதங்களை கேட்டு சுவனவாதிகள் ஆனந்த பரவசத்தில் மூழ்கி விடுவார்கள் .

ர.ரா

இது மீள் பதிவு . (ஆச்சரியம் . இது ரொம்ப ஆச்சரியம் 2019 ஆக 30-ல் இந்தப் பதிவைப் பற்றி தெரியாமலேயே இந்த வருடமும் ஆகஸ்ட் 30 - 2020இல் உணவு பற்றிய பதிவு ஆரம்பிக்கிறேன் . அல்லாஹ்வே மிக அறிந்தவன் அவன் நாட்டப்படியே எல்லாம் நடக்கிறது! உணவு தலைப்பை முன்மொழிதவர் Abdullah Baqavi தான் )

முதல் பசி , முதல் உணவு

உணவு 2 01-09-2020



பாவா ஆதம் (அலை ) அவர்கள் சுவனத்திலிருந்து அவர் மனைவியுடன் பூமியில் சரந்தீப் என்ற பகுதியில் இறக்கப்பட்டார்கள்.

பின்னர் அவர்களின் வயிற்றில் ஒருவித உணர்ச்சி ஏற்பட்டது உள்ளிருந்து எவரோ ஒருவர் கிள்ளுவது போன்ற தோன்றியது . ஜிப்ரயீல் (அலை) அவர்களிடம் "அது என்ன ?
என்று அவர்கள் வினவினார்கள்.

"அதுதான் பசி " என்றார் அவர் .

"அதற்கு நான் என்ன செய்வது ? "
என்று ஆதம் அலை கேட்டனர் .

"சற்று பொறும் "என்று கூறிவிட்டு, விண்ணை நோக்கி சிறகு விரித்து பறந்து சிறிது நேரத்தில் மீண்டும் திரும்பி வந்தார் . அவரின் ஒரு கையில் நெருப்பு இருந்தது ; மற்றொரு கையில் இரும்பு இருந்தது .அவரின் அருகில் சிவப்பு நிற காளை மாடுகள் இரண்டு வந்து நின்றன .

ஆனால் இறைவன் ஆதம் அலை அவர்களுக்கு 8 ஜோடிகளை அதாவது வெள்ளாடு 2 , செம்மறி ஆடு 2 , மாடு 2 , ஒட்டகம் 2, என அனுப்பி வைத்தான் என்று குர்ஆன் 6 : 143 குறிப்பிடுகிறது

கையில் கொண்டுவந்த நெருப்பை ஆதம் அலை கையிலே கொடுத்தார்கள் . சூடு பொறுக்காமல் நெருப்பை கீழே போட , அது பறந்து சென்று கடலில் விழுந்தது . மீண்டும் அதனை பிடித்து கொடுத்தார்கள் நெருப்பு மீண்டும் கடலில் விழுந்தது இவ்வாறாக ஏழு தடவை நிகழ்ந்தன .

உடனே ஆதம் அலை " நெருப்பு என்னை மட்டும் ஏன் சுடுகிறது ? உமது கையை ஏன் சுட விடவில்லை ? என்று கேட்டார்கள் . அதற்கு ஜிப்ரீல் அலை "நான் இறைவனுக்கு மாறு செய்ய வில்லையே ! என்று பகர்ந்தார்கள்

அதன்பின் இறைவன் ஜிப்ரீலை நோக்கி அந்த நெருப்பை "ஏழு ரஹமத் " உள்ள கடலில் கழுவுமாறு கூற , அவ்விதமே ஜிப்ரீல் செய்தார்கள் அதன் பின் அதன் சூடு தணிந்து இப்போதுள்ள நிலைக்கு மாறியது .

நபி ஸல் அவர்கள் : " நரக நெருப்பை 99 பகுதியில் ஒன்றொன்றும் அது ஏழு தடவை நீரில் கழுவப்பட்டது பின் இப்போதுள்ள நிலைக்கு மாறியது . என்று கூறினர்கள் .

நெருப்பு , ஆதமே நோக்கி "ஆதமே நான் உமக்கு இப்போதும் பணிய மாட்டேன். என்று கூறி மமதையில் விண்ணை நோக்கி அதாவது மேல் நோக்கியே எரிந்தது. இன்றும் அப்படித்தானே எரிந்து கொண்டே இருக்கிறது !

"ஆதமே உமக்கும் ,உம்முடைய வழித்தோன்றல்களுக்கும் நெருப்பு பயன்படும் எனவே அதனை இரும்பிலும் கல்லிலும் அடக்கிவையும் " என்று ஜிப்ரயீல் அலை கூறினார்கள் .

ஜிப்ரீல் கோதுமை கதிர் ஒன்றைக் கொண்டு வந்தார்கள் அதிலே ஆதம் அலை அவர்களும் ஹவ்வா அவர்களும் முன்னர் தின்று எஞ்சிய மூன்று தானிய மணிகள் இருந்தன . அவற்றில் இரண்டு ஆதமுக்கும் ஒன்று ஹவ்வாவுக்கும் .(இதிலிருந்து ஆணுக்கு இரண்டு பங்கும் , பெண்ணுக்கு ஒரு பங்கும் என்ற சட்டம் ஏற்பட்டது ) அவை உங்களுக்கும் உங்கள் வழித்தோன்றல்கள் இரணமாக இருக்கும் என்று கூறி ,அக்கதிரை ஆதம் அலை அவர்களின் கையில் கொடுத்தார்கள்.

அம்மூன்று தானியங்களுக்குள்ளும் 300 வகையான தானியங்களின் கரு வைக்கப்பட்டு இருந்தது .

ஆதம் அலை அவர்களுக்கு வழங்கப்பட்ட இரண்டு மாடுகளை ஏரில் பூட்டி நிலத்தை உழுதும்படியும் பின்னர் அந்நிலத்தில் தானியங்களை விதைத்து பயிரிடும்படியும் ஜிப்ரியீல் (அலை) சொன்னார்கள் . அவ்வாறு செய்து முடித்தார்கள் .

அப்பொழுது மண் ஆதம் அவர்களை நோக்கி , "ஆதமே ! நான் கிழவி ஆகிப்போன பின்னரே நீர் என்னிடம் வந்து உள்ளீர். நானும் இப்பொழுது மிகவும் பலவீனமாகி உள்ளேன் முன்புபோல் இளமையுடன் இருந்திருப்பேன் விதைத்த மறுகணமே தானிய மணிகளை கொழித்து
தந்திருப்பேன் என்று கூறியது .

எனினும் அது அவ்வாறு கூறி வாயை மூடுமுன் இறைவன் மேகங்களின் அதிபதியாகிய மீக்காயீலை அழைத்து , "ரஹ்மத் " எனும் கடலில் இருந்து நீரை அள்ளி மழையைப் பொழியும் . அவ்விதமே அவர் செய்தார் என்ன வியப்பு ! ஆதம் அலை அவர்களால் விதைக்கப்பட்ட தானியங்கள் அனைத்தும் சில வினாடிகளில் கதிர் விரித்து நின்றன .

இப்போது ஆதம் அலை அவர்களுக்கு பசியின் கொடுமையை தாங்க இயலவில்லை

நான் அத்தானிய மணிகளை பறித்து உண்ண வா ? என்று ஜிப்ரீல் நோக்கி வினவினர் .

"பொறும் ! " என்று கூறி ஜிப்ரீல் பின்னர் கதிர்களை அறுத்து களத்திலேயே அடித்து தானிய மணிகளை குவிக்கும் முறையை கற்றுக்கொடுத்தார் .

தானிய மணிகளை குவித்தாகி விட்டது இப்போது உண்ண வா ? என்றனர் ஆதம் அலை அவர்கள்

"பொறும் ! "என்று மறுமொழி பகர்ந்தார் ஜிப்ரயீல் . பின்னர் அவற்றில் இருந்து தோல் நீக்கும் முறையை அவர்களுக்கு கற்றுக் கொடுத்து , இரண்டு கற்களை கொண்டு வந்து கற்களை வைத்து அவற்றை அரைக்குமாறு பணித்தார்கள் . அவ்வாறே செய்தனர் ஆதம் அலை அவர்கள் .

அனஸ் ரலி அவர்கள் , நபி ஸல் அவர்களை நோக்கி " நாம் ஏன் கோதுமையை மாவாக்கி ரொட்டியாக சுட்டு உண்ணுகிறோம் அப்படியே உண்டால் என்ன ? என்று வினவியபோது ,

"மனிதனையும் மிருகத்தையும் பாகுபடுத்தி அறிந்து கொள்வதற்காக அவ்விதம் செய்யப்பட்டுள்ளது என்று விடையளித்தனர் .

அரைத்த மாவைப் பார்த்து இப்போது உணவா ? என்று வினவினர் ஆதம் (அலை)

"பொறும் ! "என்று மறுமொழி பகர்ந்தார் ஜிப்ரயீல்

பின்னர் குழி தோண்ட சொல்லி அதில் மரக்கட்டைகளை கொண்டு வந்து வைத்து நெருப்பு மூட்டி எரிக்குமாறு செய்து, அந்த நெருப்பின் மீது ஒரு தட்டை வைத்து அதில் மாவை பிசைந்து தட்டை மாதிரியே வைக்குமாறு கூறினார். அவ்வாறே செய்தனர் ஆதம் அலை அவர்கள் .

இப்போது உணவா ? என்று வினவினர் .

ஜிப்ரயீல் அதனை "அடுப்பிலிருந்து எடுத்து வெளியில் வைத்து ஆற வைத்த பின் உண்ணும் " என்றார்

அவ்வாறு அவர்கள் செய்து உண்ணத் தொடங்கியபோது , " அதில் ஹவ்வாவின் பங்கை தனியாக எடுத்து வைத்துவிட்டு உண்ணும் . நான் அதை ஹவ்வாவுக்கு கொடுத்து விடுகிறேன் " என்றார்கள் ஜிப்ரயீல் . அவ்வாறு செய்துவிட்டு ஆதம் (அலை )அதனை உண்டார்கள்

ஆதம் அலை அப்பொழுது அவர்கள் கண்களில் இருந்து கண்ணீர் தாரைதாரையாக வழிந்தோடியது .

"இத்தனை துன்பத்திற்கு பின்னரே இந்த உணவு " என்று அவர்கள் வாய் அறியாமல் முணுமுணுத்தது .

"உங்களுக்கு மட்டுமல்ல உங்களுடைய சந்ததிகளுக்கும் இந்த உணவைப் பெறுவதற்குரிய பொருளை ஈட்டுவதற்கு இத்தனை பிரச்சினை என்றென்றும் தொடரும் " என்றார்கள் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் .

பாவா ஆதம் (அலை) உணவுக்காக தம் சந்ததியினரின் கஷ்டத்தை நினைத்து அழுதார்கள் .

ர.ரா



அறியாத புறத்திலிருந்து
நீங்கள் அறியாத உணவு. உணவு 04 05-09-2020

" இறந்த பின்னும் நிச்சயமாக உயிருடன் இருக்கிறார்கள். அன்றி அவர்களுக்கு #உணவும் அளிக்கப்படுகிறது " _ இப்படி யாராவது சொன்னால் நம்புவீர்களா ? அல்லது உங்களின் பகுத்தறிவுதான் ஏற்றுக் கொள்ளுமா ?

ஏற்றுக் கொள்ள வேண்டும் . சொல்வது நம்மைப் படைத்த இறைவன். நம்பித்தான் ஆக வேண்டும் !.

முதல்ல உணவின் அவசியம் பற்றி...
நாம் உயிர் வாழ இந்த உடலுக்கு உணவு அவசியம் என்பதை அறிவோம் இந்த உணவு உடலில் உயிர் வாழ என்னவெல்லாம் செய்கிறது என்பதை விஞ்ஞானம் மூலம் ஆய்வு செய்வோம்.

நாம் உடல் பெரும்பாலான மாலிக் கூட்டணுக்கள் பாதிக்குமேல் 15 நாட்களில் புதுப்பிக்கப்படுகிறது .
நம் உடலின் எலும்புகளில் உள்ள கால்சியம் நான்கு வருடத்தில் பாதிக்குமேல புதுப்பிக்கப்படுகிறது
86 நாட்களில் நம் தசை நார்களும் மூளையிலுள்ள புரோட்டீன்களும் புதுப்பிக்கப்படுகிறது

நம் சுவாசப்பையில் உள்ள புரோட்டீன்கள் 43 நாட்களிலும் வயிற்றிலுள்ள புரோட்டீன்கள் 12 நாட்களிலும் புதுப்பிக்கப்படுகிறது எலும்பின் மொத்த கால்சியம் 14 வருஷத்தில் புதுப்பிக்கப்படுகிறது

உடலில் எல்லாமே காலப்போக்கில் நீக்கப்பட்டு புதுசாக புதுப்பிக்கப்படுகிறது இவையெல்லாம் விட நம் இரத்தத்தில் உள்ள சிவப்பணுக்கள் ஒரே ஒரு செகண்டுக்கு 30 லட்சம் புதுப்பிக்கப்படுகிறது !

இவையெல்லாம் அவ்வப்போது புதுப்பிக்க நம் உடல் நாம் சாப்பிடும் உணவுகளைதான் பயன்படுகிறது ! உயிருடன் வாழ்வதற்கு நாம் உடலுக்கு உணவு எத்தனை அவசியம் என்பதை இந்தப் இந்த புள்ளிவிபரத்தை விஞ்ஞானம் கொடுக்கின்றது .

சரி...உயிருடன் வாழ உயிரோடு இருப்பவர்களுக்கு உணவு அத்தனை அவசியம்தான் . ஆனால் இறந்தவர்கள் அதுவும் கண்டம் துண்டமாக அநியாயமாக வெட்டுப்பட்டு இறந்தவர்களுக்கு உணவு அளிக்கப்படுகிறதா ? ஆமாம் !

இதை சற்று மெய்ஞானத்தின் மூலம் இதை ஆய்வு செய்தபோது அல்லாஹுத்தஆலா குர்ஆனில் ...
وَلَا تَحْسَبَنَّ الَّذِيْنَ قُتِلُوْا فِىْ سَبِيْلِ اللّٰهِ اَمْوَاتًا ‌ؕ بَلْ اَحْيَآءٌ عِنْدَ رَبِّهِمْ يُرْزَقُوْنَۙ

"நம்பிக்கையாளர்களே அல்லாஹ்வின் பாதையில் போர் செய்து வெட்டுப்பட்ட வரை இறந்து விட்டவர்கள் என நீங்கள் ஒருபோதும் எண்ண வேண்டாம் அவர்கள் நம் தம் இறைவன் இடத்தில் நிச்சயமாக உயிருடன் இருக்கிறார்கள் அன்றி அவர்களுக்கு உணவும் அளிக்கப்படுகிறது " . குர்ஆன் (3 : 169 )

உலகில் எத்தனையோ இறை நேச அடியார்களின் மண்ணறைகளில் நிர்ப்பந்தத்தின் காரணமாக தோண்டிய போதெல்லாம் அவர்களின் உடல்கள் எவ்வித பாதிப்பும் இன்றி அன்றைக்குத்தான் மரணித்து அடக்கப்பட்ட உடல்களாக காட்சியளித்தனர் .இது எவ்வளவு பெரிய அற்புத நிகழ்வு. காரணம் இவர்கள் மரணித்த பின்பும் இவர்களுக்கு உணவு உட்கொண்டு இருக்கிறார்கள் என்றால் இவர்கள் #இயங்குகிறார்கள் என்பது சரிதானே

"(வீழ்ச்சி அடைந்து) மரணித்தவர்களாக இருந்தவர்களில் எவரை நாம் உயிர்ப்பித்து மனிதர்களுக்கிடையில் நடமாடுவதற்குரிய ஒளியையும் கொடுத்திருக்கின்றோமோ அவர், இருளில் சிக்கி அதிலிருந்து வெளியேற முடியாமலிருப்பவனுக்குச் சமமாவானா? இவ்வாறே நிராகரிப்பவர்களுக்கு அவர்களுடைய (தீய) செயல்கள் அழகாக்கப்பட்டு விட்டன " .
(அல்குர்ஆன் : 6:122)

இயங்குகிறார்கள் என்பது சரிதானே !

நாம் உடல் பெரும்பாலான மாலிக் கூட்டணுக்கள் பாதிக்குமேல் 15 நாட்களில் புதுப்பிக்கப்படுகிறது . அதே மாதிரி அல்லாஹ்வின் பாதையில் மரணித்தவர்களின் உடலிலும் இதே மாற்றம் உண்ட உணவால் செய்யப்படுகிறது !

நம் உடலின் எலும்புகளில் உள்ள கால்சியம் நான்கு வருடத்தில் பாதிக்குமேல புதுப்பிக்கப்படுகிறது
86 நாட்களில் நம் தசை நார்களும் மூளையிலுள்ள புரோட்டீன்களும் புதுப்பிக்கப்படுகிறது !

நம் சுவாசப்பையில் உள்ள புரோட்டீன்கள் 43 நாட்களிலும் வயிற்றிலுள்ள புரோட்டீன்கள் 12 நாட்களிலும் புதுப்பிக்கப்படுகிறது எலும்பின் மொத்த கால்சியம் 14 வருஷத்தில் புதுப்பிக்கப்படுகிறது

உடலில் எல்லாமே காலப்போக்கில் நீக்கப்பட்டு புதுசாக புதுப்பிக்கப்படுகிறது இவையெல்லாம் விட நம் இரத்தத்தில் உள்ள சிவப்பணுக்கள் ஒரே ஒரு செகண்டுக்கு 30 லட்சம் புதுப்பிக்கப்படுகிறது !

அதே மாதிரி அல்லாஹ்வின் பாதையில் மரணித்தவர்களின் உடலிலும் இதே மாற்றம் உண்ட உணவால் செய்யப்படுகிறது !

இந்த நிகழ்வில் அல்லாஹுத்தஆலா அற்புதத்திற்கு காரணமான உணவின் அவசியம்தான் என்னே அதிசயம் !

ஓர் உதாரணத்திற்கு

இப்போது யூதர்களின் கைக்கூலியாக சில நவீனத்துவக் கொள்கைக்காரர்களால் நபித் தோழர்களான ஸஹாபிகளின் கபறுகளை தரைமட்டமாக்க துணிந்தனர் . அப்படி நபித்தோழர்களின் மண்ணறை உடைத்தபோது , அந்த கபுறுகளில் துயில் கொண்டிருப்பதை காணமுடிந்தது

1) sahabi e Rasool a.s - Hajr bin Adi (R.a) grave and body distry by Yazzdi Fores?
(ஹஜ்ரத் ஹஜ்ர் பின் அதீத் (ரலி) அவர்கள்

2) Hazarat Zubair bin Qais (RA) சுபைர் பின் கைஸ் (ரலி) அவர்கள்

1400. வருடங்களுக்கு முன்னால் புதைக்கப்பட்டவர்கள். இல்லை இல்லை விதைக்கப்பட்டவர்கள் !

இவ்விருவர்களின் மக்ஃபூ ராவை உடைத்து அவர்களின் உடலை சேதப்படுத்தியதை மேற்கண்ட வலைதளத்தில் பார்க்கவும்.

இந்த இறை நேசர்களுக்கு உணவும் அளிக்கப்பட்டு கொண்டே இருக்கிறது இன்னும் !

ர.ரா
அல்லாஹ் கூறுகின்றான்: “மேலும் நீங்கள் உண்ணுங்கள்; பருகுங்கள்; விரயம் செய்யாதீர்கள். விரயம் செய்வோரை அவன் (அல்லாஹ்) நேசிப்பதில்லை”. (திருக்குர்ஆன் 7:31)

மதிய வேளை. வீட்டில் உணவு எதுவும் இருக்கவில்லை. பசி வயிற்றைக் கிள்ளியது. வீட்டைவிட்டு வெளியே வந்தார்கள் இறைவனின் இறுதித்தூதர் (ஸல்) அவர்கள். பள்ளிவாசலில் அபூபக்கர் (ரலி) அவர்களைச் சந்திக்கின்றார்கள்.

“என்ன இந்த நேரம் வெளியே வந்துள்ளீர்கள்?” என்று நபி (ஸல்) அவர்கள் அபூபக்கர் (ரலி) அவர்களிடம் கேட்க, “இறைத்தூதர் அவர்களே! தாங்கள் எதற்காக வீட்டைவிட்டு வெளியே வந்தீர்களோ, அதற்காகவே நானும் வந்துள்ளேன்” என்று அபூபக்கர் (ரலி) பதிலளித்தார்.

“சரி, வாருங்கள் நடக்கலாம்” என்று இருவரும் நடக்க, சற்று நேரத்தில் அங்கே உமர் (ரலி) அவர்களும் வெளியே வருகின்றார்.

“என்ன இந்த நேரம் வெளியே வந்துள்ளீர்கள்?” என்று நபிகளார் (ஸல்) அவர்கள் உமர் (ரலி) அவர்களிடம் கேட்க, “அல்லாஹ் மீது ஆணை! நீங்கள் இருவரும் எதற்காக வெளியே வந்தீர்களோ, அதற்காகவே நானும் வெளியே வந்துள்ளேன்” என்று அவரும் பதிலளித்தார்.

இவர்கள்தான் இஸ்லாமிய உலகின் முப்பெரும் ஆளுமைகள். அன்றைய தினம் இந்த மூவருக்குமே உண்பதற்கு வீட்டில் உணவு எதுவும் இருக்கவில்லை என்பது எவ்வளவு கவலைக்குரிய விஷயம்.

அபூஹைஸம் அல் அன்சாரி (ரலி) என்ற நபித்தோழரின் வீட்டில் மூவருக்கும் விருந்து. பலவகைப் பேரீச்சம் பழங்கள், ரொட்டி, ஆட்டிறைச்சி, குளிர்ந்த நீர் முதலியன விருந்தில் உணவாகக் கொடுக்கப்பட்டன.

அவற்றை உண்டபின் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “மறுமை நாளில் விசாரணையின்போது இந்த அருட்கொடைகளைக் குறித்து அல்லாஹ் விசாரிப்பான்”.

(அதாவது சற்றுமுன் நாம் பசியோடு இருந்தோம். இப்போது இந்த உணவு நமக்குக் கிடைத்துள்ளது. எனவே இந்த உணவு நமக்குக் கிடைத்தமைக்காக இறைவனுக்கு நாம் நன்றி செலுத்தினோமா? புசிக்கும்போது வீணடித்தோமா? இந்த உணவை உண்டபின் கிடைக்கும் உடல் ஆரோக்கியத்தின் மூலம் பயனுள்ள விஷயங்களைச் செய்தோமா? என்பது குறித்தெல்லாம் இறைவன் மறுமையில் விசாரிப்பான் என்று பொருள்)

இதனைச் செவியுற்ற உமர் (ரலி) அவர்களுக்கு, ‘இது குறித்துமா இறைவன் விசாரிப்பான்?’ என்று ஆச்சரியம்.

பெருமானார் (ஸல்) அவர்களிடமே விசாரித்தார்: “அல்லாஹ்வின் தூதரே! நாம் புசித்த இந்த உணவு அசுத்தமாகவும், நாம் அருந்திய இந்தத் தண்ணீர் சிறுநீராகவும் உடலில் இருந்து வெளியேறிவிடுகின்றது. இது குறித்துமா அல்லாஹ் மறுமையில் விசாரிப்பான்?”

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “ஆம், எனது உயிர் யார் கைவசம் இருக்கிறதோ அந்த இறைவன் மீது ஆணை! மறுமையில் இந்த அருட்கொடைகளைக் குறித்து நிச்சயம் அல்லாஹ் விசாரிப்பான். சற்றுமுன் வீட்டைவிட்டு நீங்கள் பசியுடன் வெளியே வந்தீர்கள். இதோ இப்போது இந்த அருட்கொடைகளை அல்லாஹ் உங்களுக்கு வழங்கியுள்ளான் என்பதை மறந்துவிடாதீர்கள். “பிறகு அந்நாளில் இந்த அருட்கொடைகளைக் குறித்து கட்டாயம் நீங்கள் வினவப்படத்தான் போகின்றீர்கள்” (திருக்குர்ஆன் 102:08) என்று அல்லாஹ் கூறவில்லையா?”
(முஸ்லிம், அஹ்மத், நஸாயி)

உணவும் பானமும் இறைவனின் அருட்பேறுகளில் ஒன்று. ஆனால் அது குறித்த சிந்தனை எதுவும் இல்லாமல் எவ்வளவு உணவுகளைத்தான் அன்றாடம் நாம் வீணடித்துக் கொண்டிருக்கின்றோம். மறுமையில் இது குறித்த விசாரணை உண்டு என்பது ஏன் நமக்கு இன்னும் உறைக்கவில்லை?

உயிரினங்களில் மனிதனைத் தவிர, வேறு எந்த உயிரினமும் உண்ண உணவில்லாமல் பசியால் இறப்பதில்லை.

பறவைகளும், விலங்குகளும் தனது உணவையோ, இரையையோ வீணடிப்பதில்லை. ஆனால், மனிதன் மட்டுமே உணவுப் பொருள்களை வீணடிக்கிறான்.

உலகின் உணவு உற்பத்தியில் சுமார் மூன்றில் ஒரு பங்கு உணவு, அதாவது 1.3 பில்லியன் டன் உணவு வீணாக்கப்படுகிறது.

குறிப்பாக உணவை வீணடிப்பதில், இந்தியர்கள் முதலிடத்தில் இருக்கின்றனர். பல்வேறு நாடுகளில், சரிபாதி உணவு ஒவ்வொரு வருடமும் வீணாக்கப்படுகிறது.

பெரும்பான்மையாக வீணடிக்கப்படும் உணவுப்பொருள்களில் பழங்களும், காய்கறிகளும் அடங்குகின்றன.

இந்தியாவில் அரசியல் கட்சி நிகழ்ச்சிகள், திருமணங்கள் எனப் பல்வேறு நிகழ்வுகளில் பரிமாறப்படும் உணவுகளில், பாதிக்கு மேல் குப்பைக்குத்தான் போகின்றன.

இந்தியாவில் ஏழை மக்களுக்கு மூன்று வேலை உணவு என்பது வெறும் கேள்விக்குறியாகவே உள்ளது. நாம் வீணாக்கும் உணவைப் பிறருக்கு கொடுப்பதன் மூலம் அவர்களின் ஒருவேளை பசியைப் போக்க முடியும். நம்மால் முடிந்த அளவு உணவை வீணாக்காமல் பிறருக்கு கொடுத்து மகிழ்வோம்.

ர.ரா

மூன்றாவது உணவு
- நாகூர் ரூமி.

உணவு 19

நாம் எதற்காக வாழ்கிறோம்? இது என்ன கேள்வி என்கிறீர்களா? ஒவ்வொருவருக்கும் ஒரு லட்சியம், இலக்கு இருக்கும். அதற்காகத்தான் நான் வாழ்கிறேன் என்று அவர்கள் சொல்வார்கள். அது உண்மையாகவும் இருக்கலாம். நான் அதைப்பற்றி இங்கே பேசவில்லை. உயிர் வாழ்வதைப் பற்றி நான் இங்கே பேசுகிறேன் என்று இப்போதைக்கு வைத்துக்கொள்ளலாம். உயிர் வாழ்வது வேறு, வாழ்வது வேறு. கோமாவில் இருப்பவர் உயிரோடு இருப்பார். ஆனால் அவர் வாழ்ந்துகொண்டிருப்பதாகச் சொல்ல முடியாது. அல்லவா?

ஒருவர் உயிரோடு இருந்தால்தானே லட்சியத்தை அடைவதற்காகப் பாடுபட முடியும்? அந்த உயிர் வாழ்தலுக்கு எது அவசியம் என்று கேட்கிறேன். இதற்கான பதிலை பதினோறாம் நூற்றாண்டில் ஒரு ஞானி அழகாகச் சொல்லிவிட்டார். மனிதன் வாழ்வதற்குக் காரணம் பசி என்று அவர் சொன்னார். அந்த ஞானியின் பெயர் இமாம் கஸ்ஸாலி.

பயங்கரப் பசியில் இருக்கும் மாணவனிடம் ‘ரெண்டும் ரெண்டும் எத்தனை’ என்று கேட்டால் ‘நாலு’ என்று சொல்லமாட்டான். அவன் வடநாட்டுப் பையனாக இருந்தால் ‘நாலு சப்பாத்தி’ என்றோ, தமிழ்நாட்டுப் பையனாக இருந்தால் ‘நாலு இட்லி’ என்றோ சொல்லலாம்! பசி மட்டும் இல்லையெனில், உலகில் ஒரு வேலையும் நடக்காது. எல்லா முயற்சிகளும், சாதனைகளும், வேதனைகளும் வயிற்றுக்காகத்தான். நாம் வாழ்வதே ஒருவகையில் உணவுக்காகத்தான் என்று சொல்லிவிடலாம். உணவே மருந்து, உணவே நோய், உணவே ஆரோக்கியம், உணவுதான் நாம், நாம்தான் உணவு.

நாம் உண்ணும் உணவு சில மணி நேரங்களில் நாமாக மாறிவிடுகிறது என்ற கருத்து நம் உடலுக்குள் நடக்கும் விஞ்ஞான மாற்றங்களைச் சுட்டுகிறது. ஆனால் பெரும்பாலும் அசைவ உணவு உண்பவர்களுக்கு எதிரான வாதமாகவே இந்தக் கருத்து முன்வைக்கப்படுகிறது. கோழி, மீன், ஆடு, மாடு போன்ற சமாசாரங்களை உண்ணும்போது மிருக உணர்வுகளே நம்மை ஆட்கொள்ளும். அதுவே மெல்லமெல்ல ஆட்கொல்லி உணர்வை மேலோங்கச் செய்யும் என்பது பெரும்பாலான சைவக்கொக்குகளின் மொக்கை வாதம்.

அசைவ உணவில் உயிர்க்கொலை நடைபெறுகிறது என்ற வாதம் விஞ்ஞானப்பூர்வமாக எடுபடுவதில்லை. தாவரங்களுக்கும் உயிர் உண்டு என்பது நிரூபிக்கப்பட்டு ரொம்ப காலமாகிவிட்டது. ஆடு, கோழியாவது அறுக்குமுன் ஓடிப்போய்விடும் சாத்தியம் உள்ளது, செடிகொடிகள் பாவம், ஓடக்கூட முடியாது என்கிறார் ஆதியோகியைக் கண்டுபிடித்த நம்ம சத்குரு ஜக்கி அவர்கள்! சமயங்களில் அவர் இப்படி சரியான விஷயங்களையும் சொல்லிவிடுவார்!

சைவத்தை ஓரங்கட்டவோ அசைவத்துக்கு வக்காலத்து வாங்கவோ இதை நான் சொல்லவில்லை. ‘டேய், முட்டாப்பயல்களெல்லாம் ஏந்திரிச்சு நில்லுங்கடா’ என்று ஒரு வாத்தியார் சொன்னாராம். எந்த மாணவனும் எழவில்லை. ஆனால் ஒருவன் மட்டும் எழுந்து நின்றான். ‘என்னடா, இந்த வகுப்புல நீ மட்டும்தான் முட்டாள்னு புரிஞ்சிகிட்டியா?’ என்றாராம் வாத்தியார் கிண்டலாக. ஆனால் ‘சொந்தக்காலில் நின்ற’ அந்த மாணவன் சொன்ன பதில்தான், முட்டாள் யாரென்று புரியவைக்கிறது. அவன் சொன்னானாம்: ‘சார், பாவம் நீங்க மட்டும் தனியா நிக்கிறிங்களேன்னுதான் நானும் எந்திரிச்சேன்’! முன்முடிவுகளின்றி சில உண்மைகளை நாம்

புரிந்துகொண்டால் நன்மை பயக்கும் என்பதைப் புரிந்துகொள்ளவே உங்களுக்குத் தெரிந்த இக்கதையைச் சொன்னேன்!

உணவுதான் நம்மை உருவாக்குகிறது என்பது சரிதான். ஆனால் உணவு என்றால் என்ன என்று உங்களை நான் கேட்டால், நீங்கள் என்னை ஒரு மாதிரியாகப் பார்க்கலாம். இருந்தாலும் பரவாயில்லை. நான் சொல்லிவிடுகிறேன். உணவு என்று சொல்லப்படும்போதெல்லாம் ஒரு வாயால் உண்டு, இன்னொரு வாயால் கழிவு வெளியேற்றம் செய்யப்படுவதுதான் உணவு என்பதாக நாம் புரிந்துகொள்கிறோம். ஆனால், அது மட்டுமே மனிதனுக்கான உணவல்ல.

உண்மையில், ஒரு மனிதன் அன்றாடம் மூன்று வகையான உணவுகளை எடுத்துக்கொள்கிறான் என்று எனக்கு முதன்முதலில் புரியவைத்தவர், என் ஞானாசிரியர் மறைந்துவாழும் ஹஸ்ரத் மாமா அப்துல் வஹ்ஹாப் அவர்கள்தான்.

முதல் வகை வாயால் எடுத்துக்கொள்ளும் சைவ / அசைவ உணவுகள். தோசை இட்லி, இடியாப்பத்தில் தொடங்கி, பறப்பன, நடப்பன, நீந்துவன என்று அது விரியும். இரண்டாம் வகை உணவானது, மூக்கால் எடுத்துக்கொள்ளும் மூச்சாகும். ஆமாம். முந்திய உணவின்றி பல மணி நேரங்கள் மனிதனால் இருக்க முடியும். நோன்பு இருக்கும்போதெல்லாம் நாம் அதைத்தான் செய்கிறோம்.

ஆனால் மூச்சு என்ற உணவின்றி சில விநாடிகளுக்கு மேல் நம்மால் இருக்க முடியாது. மூச்சை அடக்கவல்ல யோகிகள், சித்தர்கள், ஞானிகளை இந்த வரிசையில் சேர்க்க முடியாது. அவர்கள் விதிவிலக்குகள். எனவே, முதல் வகை உணவைவிட இரண்டாவதான மூச்சு அதிமுக்கியமானது. உயிர் வாழவைப்பதால் மட்டுமல்ல, நம்முடைய ‘கேரக்டரையே’ மாற்றவல்ல தகுதியும் மூச்சு என்ற உணவுக்கு உண்டு.

ஆசையோடு நீங்கள் உங்கள் காதலியை அல்லது மனைவியை அணுகும்போது விடும் மூச்சு வேறு, அன்போடு ஒரு குழந்தையை அணைத்துக் கொள்ளும்போது விடும் மூச்சு வேறு. அச்சத்தில் விடும் மூச்சு வேறு, புகழின் உச்சத்தில் இருக்கும்போது விடும் மூச்சு வேறு. ஆத்திரத்தில் விடும் மூச்சு வேறு, அவசரத்தில் விடும் மூச்சு வேறு. வெயிலில் விடும் மூச்சு வேறு, மழையில் விடும் மூச்சு வேறு. தியானத்தில் விடும் மூச்சோட்டத்தை வீடுகூடும்போது கொண்டுவர முடிந்தால், செக்ஸ்கூட ஒரு தியானமாகிவிடும் என்கிறார் ஓஷோ. ரொம்ப அனுபவித்துச் சொல்லியிருப்பார்போல!

மூச்சை மாற்றினால் உங்கள் மனநிலை மாறும். வேண்டுமானால், கோபம் வரும்போது வேண்டுமென்றே மூன்று முறை நிதானமாக, கவனித்து நீண்ட மூச்சு விட்டுப்பாருங்கள். உங்களால் கோபப்பட முடியாமல் போய்விடும். எவனாவது கோபப்படும்போது கவனித்து மூச்சு விட்டுக் கொண்டிருப்பானா என்று நீங்கள் கோபமாகக் கேட்பது என் காதில் விழுகிறது!

கிரண் பேடி காவல் துறை அதிகாரியாக இருந்த காலத்தில், சிறைக் கைதிகளுக்கு மூச்சுப்பயிற்சி கொடுத்ததாகச் சொல்லப்படுகிறது. மூச்சு பற்றிய உண்மை கிரணுக்குத் தெரிந்திருக்கிறது. இப்போதுகூட அதிகாரத்தில் இருப்பவர்கள் பத்திரிகையாளர்களுடன் பேசும்போது ஆழமான மூச்சொன்றை விட்டுக்கொண்டு அவர் பேசினால், காக்கிச் சட்டை கதர்ச்சட்டைகளுக்கு இடையிலான உரசல்கள் இன்றி இன்னும் சிறப்பாகச் செயல்படலாம். ஏனெனில், மூச்சு என்ற இரண்டாம் வகை உணவு உங்களை, உங்கள் வாழ்க்கையை மாற்றவல்லது.

மூன்றாவது வகை உணவு ஒன்று உள்ளது. இது மூச்சைவிட முக்கியமானது, நுட்பமானது. இதையும் அன்றாடம் ஒவ்வொரு மனிதனும் ஒவ்வொரு கணமும் அவனுக்கே தெரியாமல் எடுத்துக்கொண்டேதான் இருக்கிறான். இது இல்லாமலும் அவனால் வாழ முடியாது. இந்த உணவின் பெயர், பதிவுகள் (Impressions). அன்றாடம் நம் மனத்தில் நமக்கே தெரியாமல் போடப்பட்டுக்கொண்டே இருக்கின்ற பதிவுகள், கருத்துகள்.

ஒரு சோப்பு விளம்பரத்தை ஒரு மாதம்பூரா பார்த்துக்கொண்டிருக்கும் நாம், என்றைக்காவது சோப்பு வாங்க கடைக்குச் சென்றால், நம் கை நம்மை அறியாமல் விளம்பரத்தில் பார்த்த சோப்புக்குத்தான் போகும்!

ஒரு மகளை அவள் அம்மா தன் ஸ்கூட்டரில் ஏற்றாமல் தூசியிலும் சேற்றிலும் ஓடவிட்டு ஓடவிட்டு, கடைசியில் அவள் கையில் ஒரு சோப்பைக் கொடுத்து அது உனக்குப் பாதுகாப்பு தரும் என்று சொல்கிறாள்! அந்தப் ‘பாதுகாப்பை’ வைத்து பாலியல் வன்முறையைத் தடுக்க முடியுமா என்று தெரியவில்லை! ஒரு இளம்பெண் (என்று நினைக்கிறேன்) ஒரு கண்ணாடிக் கதவை அல்லது ஜன்னலை உடைத்துக்கொண்டு உள்ளே வந்து தாடிவைத்த ஒரு இளைஞனிடம் ‘உங்கள் டூத்பேஸ்ட்ல உப்பிருக்கா?’ என்று கேட்கிறாள்! ஒரு பற்பசையில் உப்பு கலந்துள்ளதா என்று கேட்பதற்கு அவள் ஏன் ஒரு கண்ணாடிக் கதவை உடைக்க வேண்டும் என்று தெரியவில்லை!

யோகாசனங்கள் செய்துகாட்டுவதில் பிரபலமானவர் அவர். சட்டென்று தன் வயிற்றை அஷ்டகோணலாக்கி படுவேகமாக உருட்டிக்காட்டுவார். சர்க்கஸ் கூண்டுக்குள் சுற்றும் மோட்டார் வாகனங்களைப்போல, ஒரு சதைப் பகுதி இன்னொன்றைத் துரத்துவதுபோல, துரத்தப்படும் பகுதி பிடிபடாமல் ஓடுவதைப்போல அவரது வயிறு மட்டும் சுற்றிக்கொண்டே இருக்கும்! அப்படி எல்லோராலும் செய்யமுடியுமா? ஏன் செய்ய வேண்டும்? அப்படிச் செய்வது ஆரோக்கியம் தரும் என்றால், இந்தியத் திருநாட்டில் எத்தனை பேருக்கு அந்த வயிற்று சர்க்கஸ் ஆரோக்கியம் சாத்தியம்?

நமக்குத் தெரியாமலே, நம்மைக் கலக்காமலே, திரும்பத் திரும்ப காட்டப்படும் விளம்பரங்கள், சர்க்கஸ்கள், செய்திகள் எல்லாம் நமக்குள் பல கருத்துகளை ஒவ்வொரு கணமும் விதைத்துக்கொண்டே இருக்கின்றன. இது நல்லது, இது கெட்டது, இது சரி, இது தவறு, இவன் மேலானவன், அவன் கீழானவன், இவன் நண்பன், அவன் பகைவன், இவன் தாடி, அவன் கேடி, அவன் ஒஸ்தி, இவன் மட்டம் – இப்படிப்பட்ட கருத்துகள்

காலம்காலமாக நம் மூளை வழியாக அனுதினமும், ஒவ்வொரு கணமும் ஊட்டப்பட்டு அவற்றை ரசித்து ருசித்து நாம் சாப்பிட்டுக்கொண்டே இருக்கிறோம், அதைப் பற்றிய விழிப்புணர்வு கொஞ்சம்கூட இல்லாமலே.

இரண்டாவது உணவான மூச்சுவிடுதலை semi-conscious eating என்றும், மூன்றாவது வகையை unconscious eating என்றும் சொல்லலாம். ஏனெனில், மூச்சு நம்மைக் கேட்காமல் அதுவாகவே வந்து போய்க்கொண்டிருந்தாலும், நாமாக விழிப்புணர்வோடு மூச்சுப் பயிற்சியும் செய்யலாம். ஆனால் கொஞ்ச நேரம்தான் அப்படிச் செய்யமுடியும். மீதி நேரமெல்லாம் அதுவாகவே வந்துபோய்க்கொண்டிருக்கும். அப்படித்தான் வாழ முடியும். எனவே அது 'செமி-கான்ஷியஸ்' செயல்பாடு.

ஆனால் நமக்குள் வந்து புகுந்துகொள்கின்ற, நம்மை ஆட்டிப் படைக்கின்ற, நம்முடைய பாத்திரத்தை உருவாக்குகிற, நதிமூலம், ரிஷிமூலம் அறியப்படாத எண்ணங்கள், சிந்தனைகள், கருத்துகள் எங்கிருந்து, யார் மூலம் வருகின்றன என்று கண்டுபிடிக்கவே முடியாது. அவை 'அன்கான்ஷியஸ் ஈட்டிங்' வகையாகும்.

பதிவுகள் எனப்படும் இந்த மூன்றாவது வகை உணவுதான் முன்னது இரண்டையும்விட உயர்ந்தது அல்லது மோசமானது. ஏனெனில், நமக்கே தெரியாமல் நமக்குள் போடப்பட்டுக் கொண்டே இருக்கும் விதைகள் அவை. அவை எவ்வளவு பெரிய மரங்களாகிவிட்டன என்று நமக்கே தெரியாது. அவை ஆலமரங்களாக இருந்தால் நல்லது. ஆலகால விஷமாக இருந்தால்?

யூதர்கள் என்ற ஒரே காரணத்துக்காக ஒரு கோடிப் பேரைக் கொன்ற ஹிட்லர் அன்றாடம் சாப்பிட்ட உணவின் பெயர் யூதவெறுப்பு. அமைதிக்கான நோபல் பரிசு பெற்ற அன்னை தெரஸா, 'வழக்கமான விருந்து வேண்டாம்; அதற்குச் செலவாகும் பணத்தை (1,92,000 டாலர்கள்) இந்தியாவில் உள்ள ஏழைகளுக்குக் கொடுத்துவிடுங்கள்' என்று கேட்டாரே, அவர் உண்டது அன்பு, கருணை ஆகிய உணவுகள்.

இங்கே இன்னொரு முக்கிய விஷயத்தையும் சொல்லவேண்டி உள்ளது. உலக மகாக் கொலைகாரனான ஹிட்லர் ஒரு சைவன்! ஆனால், அடுத்தவர் தொடக்கூடத் தயங்கும் மனிதர்களுக்கு வாழ்நாள் பூராவும் தன் கைகளால் சேவை செய்த அன்னை தெரஸா ஒரு அசைவர்! நாம் வாயால் உண்ணும் உணவு நமது அடிப்படைக் குணத்தை மாற்றிவிடுவதில்லை என்ற உண்மையைப் புரிந்துகொள்ள அவர்கள் நல்ல சான்றுகள்.

தீவிரவாதம் தப்பு, அதற்கு நம் மார்க்கத்தில் அனுமதி இல்லை என்று சொன்னதற்காக, தன் அம்மா என்றுகூடப் பாராமல் அவரை அங்கேயே ஒரு தீவிரவாதி சுட்டுக்கொன்றான் என்று எதிலோ படித்த செய்தி மனத்தைப் பிழிந்தது. வேனில் தூங்கிக் கொண்டிருந்த க்ரஹாம் ஸ்டெய்ன் என்ற மிஷனரியையும் அவரது இரண்டு மகன்களையும், வேனிலிருந்து வெளிவர முடியாமல் செய்து சில மதவெறியர்கள் எரித்துக்கொன்றார்கள். இது நடந்தது 1999-ல் ஒரிஸ்ஸாவில்.

என் மார்க்கம் சரி, உன் மார்க்கம் தப்பு என்பதே கொலைகாரர்களின் உணவு. செக்ஸ் உணர்வை அன்றாட உணவாகக் கொள்பவர்கள்தான் சிறுமிகளை, குழந்தைகளையெல்லாம் வன்புணர்ச்சி செய்து கொல்கிறார்கள். அன்பு, மென்மை, பாசம், சகிப்புத்தன்மை, கருணை, மன்னிப்பு ஆகியவற்றுக்கு எதிரான கருத்துகள்தான் எல்லாத் தீவிரவாதிகளின் உணவாக உள்ளது.

நமக்கு சோம்பு பிடிக்கும் என்றால் சீனர்களுக்குப் பாம்பு ரொம்பவும் பிடிக்கும். பிடிக்குமென்றால், பிடிப்பதற்கல்ல; கடிப்பதற்கு! பாம்பு மட்டுமல்ல, நாம் எதையெல்லாம் கண்டு அஞ்சுவோமோ அவர்கள் அதையெல்லாம் எடுத்துக் கொஞ்சுவார்கள்! சின்ன வயசு சீனக் குழந்தைகள்கூட பாம்பை வெட்டி சூப் செய்து குடிக்கிறார்கள்!

கரப்பானைப் பார்த்தாலே காத தூரம் ஓடுவார்கள் நமது பெண்கள். ஆனால், தேளைக் கடித்துச் சாப்பிட்டுவிட்டு (!) நன்றாக இருப்பதாகச் சொல்கிறார்கள், சீனர்களும் ஜப்பானியர்களும்!

நம் ஊரில் ஆட்டுக்கறி தொங்கவிட்டிருப்பது மாதிரி, சீனாவில் யூலின் என்ற ஊரில் உள்ள சந்தையில் நாய்க்கறிகள் வெட்டிக் கொடுக்கப்படுகின்றன! தவளைகளை வெட்டிச் சமைத்துச் சாப்பிடும் சீன சிறுவர்களின் காணொளி யூடியூபில் காணக் கிடைக்கிறது. கல்லையும் மண்ணையும்கூட உணவாக எடுத்துக்கொள்பவர்கள் நம் நாட்டில் இருக்கிறார்கள். நீங்களும் பார்த்திருக்கலாம்.

கொரியாவில் நடந்தது அல்லது நடப்பது இன்னும் கொடூரமானது. கருவில் கலைந்த அல்லது கலைக்கப்பட்ட குழந்தையின் சதையைப் பொடிசெய்து மாத்திரைகளின் உள்ளே வைத்துக் கொடுத்தார்கள்! தைவான் நாட்டில் கலைக்கப்பட்ட கருக்குழந்தையைச் சாப்பிட்டுக்கொண்டிருக்கும் ஒருவனின் ஒளிப்படம் சில ஆண்டுகளுக்கு முன்பு வெளியாகி நம்மையெல்லாம் கலக்கியது. அதைப்பற்றி 'ஏழாவது சுவை' என்ற தலைப்பில் நான் ஒரு கவிதைகூட எழுதினேன். அதிலிருந்து கொஞ்சம் உங்களுக்காக:

தட்டில் வைத்து

வாஷ்பேசினில் கழுவும்போது

சற்றே தெரிகிறது

சந்தேகத்தின் தலை..

வருத்த இளம் தொடையை

வழுக்கைத் தலையன் ஒருவன்

வாயில் வைத்துக் கடிக்கும்போது

விளங்கிவிடுகிறது.

கருவறையிலேயே கலைந்து போன
அல்லது கலைக்கப்பட்ட
கம்பனோ காளிதாசனோ
ஏசுவோ லாசூ வோ?!

தெரியவில்லை எனினும்
ஆரோக்கியமான வாழ்வுக்கு
அமோக விற்பனையாம்
தைவானில்!

ஆன்மாவின் நாக்குகள்
அறுந்துபோனவர்களுக்கான
ஏழாவது சுவை..

வாய்வழியாக உண்ணப்படும் உணவுகள் எல்லாம் சூழல் மற்றும் பண்பாடு சார்ந்த பழக்கங்கள்தானே தவிர வேறில்லை. ஆனால், மனிதகுலத்தையும் மனிதத்தன்மையையும் வாழவைக்கும் அல்லது வீழவைக்கும் மூன்றாவது வகை உணவைப் பற்றித்தான் நாம் மிகவும் கவனமாக இருக்கவேண்டி உள்ளது.

17 Sep 2018 தினமணி யிலிருந்து

ர.ரா



ஒரு தானியத்திற்குள் மறைந்திருக்கும் பேருண்மைகள் !

உணவு 20

ஒரு நாள் இரமண மகரிஷி சமையலறை அருகில் அரிசி சிந்தியிருக்கக் கண்டார். உடனே அவர் கீழே அமர்ந்து ஒவ்வொரு அரிசியாகப் பொறுக்கி எடுக்கலானார்.

அவர் அங்கு அமர்ந்து என்ன செய்கிறார் என்று அறிய சில பக்தர்கள் ஆவலோடு விரைந்து மகரிஷியைச் சூழ்ந்து நின்றனர்.

வீட்டைத் துறந்து வந்து அனைத்தையும் இறைவனுக்கே அர்ப்பணித்துவிட்ட அந்தப்பெரும் ஞானி சில அரிசி மணிகள் சிந்திக்கிடப்பதைப் பொறுக்க மாட்டாது அவற்றைக் கருத்தாகப் பொறுக்கி எடுக்கிறார் என்பதை அறிந்து வியப்பினால் வாயடைத்து நின்றனர்.

அவர்களில் ஒருவன் துணிந்து ‘பகவான்! சமையலறையில் பல அரிசி மூட்டைகள் நிறைந்து உள்ளனவே! தரையில் சிந்திவிட்ட சில அரிசிகளைப் பொறுக்கி எடுக்கத் தாங்கள் ஏன் இந்த அளவுக்கு வருத்திக் கொள்கிறீர்கள்?” என்று கேட்டான்.

அது கேட்ட ஞானி தலை நிமிர்ந்து பார்த்தார். “உங்களுக்கு இவை அரிசி மணிகளாகத் தெரிகின்றன. ஆனால் இந்தத் தானியங்களின் உள்ளே இருப்பதை உன்னிப்பாகக் கவனித்தீர்களா?

நிலத்தை உழுது விதைவிதைத்துப் பாடுபடும் விவசாயியின் கடினமான உழைப்பை இதில் கண்டீர்களா? மேலும், கடல் நீர், சூரிய வெப்பம், கரிய மேகங்கள், கனத்த மழை, குளிர்ந்த காற்று, இளஞ்சூடான வெய்யில், மென்மையான பூமி, நெற்பயிரின் வளர்ச்சி - இவை அனைத்தும் அல்லவா இந்தச்சிறிய அரிசியில் பொதிந்துள்ளன!

இந்தப் பேருண்மையை நீங்கள் முழுமையாக அறிந்து கொண்டால் ஒவ்வொரு தானிய மணியிலும் கடவுளின் கைவண்ணத்தைக் காண்பீர்கள். சிறப்பு மிக்க சிறு அரிசி மணிகளைக் காலின் அடியிலிட்டு மிதிக்கலாமா? மண்ணில் விழுந்து விட்ட அவை உங்களுக்குப் பிடிக்காவிடில் அவற்றைப் பறவைகளுக்குப் போட்டு விடுங்கள்” என்று அறிவுறித்தினார் மகரிஷி.

சாப்பிடும் முன்பு இரு கைகளை கழுகுவது

உணவு 24

ஹள்ரத் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் : நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குளிப்பு கடமையான நிலையில் தூங்க நாடினால் உளூ செய்து கொள்வார்கள். மேலும் சாப்பிட நாடினால் தங்களது கையை கழுகிக் கொள்வார்கள். (நூல் : நஸாயீ)

நடந்த சம்பவம் :

கார் டிரைவர் ஒருவர் ஓட்டலுக்கு அருகில் தனது வாகனத்தை நிறுத்திவிட்டு சக்கரங்களில் காற்று சரியாக இருக்கின்றதா என்று பரிசோதித்து விட்டு ஓட்டலுக்குச் சென்று கைகளை கழுகாமல் அப்படியே சாப்பிட ஆரம்பித்தார்.

சாப்பிட்டுக் கொண்டே இருந்தவர் சிறிது நேரத்தில் மயங்கி விழுந்து இறந்து போனார்.

உணவில் ஏதேனும் விஷம் கலந்து விட்டதோ என்று ஆராய்ந்தால் உணவு உண்ட மற்றவர்களுக்கோ எதுவும் ஆகவில்லை.

பிறகு விசாரித்தால் அவர் வாகன சக்கரங்களை தனது கரத்தால் பரிசோதனை செய்தார் என்று தெரியவந்தது .

சக்கரங்களை பார்த்தார்கள். அதில் ஒரு விஷ ஜந்து இறந்து ஒட்டிக் கொண்டிருந்தது. அதை அவர் தொட்டு விட்டு கை கழுகாமல் அப்படியே சாப்பிட்டதால் விஷமும் உள்ளே சென்று அவர் இறந்துள்ளார் என்பது தெளிவானது.
(நூல் : சுன்னதே நபவீ அவ்ர் ஜதீத் சையின்ஸ்)

ர.ரா



தூய்மையானவற்றை உண்ணுங்கள்.

உணவு 23

தொழுகைபோன்ற வணக்கத்தில் ஈடுபடும் ஒருவர் அதன் நிபந்தனைகளை அடிபிசகாமல் கடைப்பிடிக்க வேண்டும் என்பதில் கவனம் செலுத்துகின்றார்.

ஸுஃப்யானுஸ் ஸவ்ரி என்ற அறிஞரிடம் ஒருவர் கேட்டார்: “அறிஞரே! கூட்டுத் தொழுகையின்போது முதல் வரிசையில் வலப்பக்கமாக நின்று தொழுவது சிறந்ததா? அல்லது இடப்பக்கமாக நின்று தொழுவதா..?”

அறிஞர் கூறினார்: “நீ உண்ணும்ரொட்டித் துண்டு ஆகுமான வழிமுறையின் மூலம் (ஹலால்) கிடைத்ததா? அல்லது தவறான வழிமுறையின் மூலம் (ஹராம்) கிடைத்ததா? என்பதில் கவனம் செலுத்து. அவ்வாறெனில் வரிசையில் எங்கு நின்று தொழுதாலும் பிரச்சினை இல்லை. சிலபோது எங்கு தொழவேண்டும் என்பதில் மிகவும் கவனமாக இருப்பாய். ஆனால் அந்த வணக்கம் ஏற்றுக்கொள்ளப்படுவதற்குக் காரணமாக அமையும் உணவு குறித்து கவனம் செலுத்தியிருக்க மாட்டாய்”.

எவ்வளவு பெரிய உண்மையை அந்த அறிஞர் கூறியிருக்கின்றார் பாருங்கள்.

தொழுகை போன்ற வணக்கத்தில் ஈடுபடும் ஒருவர் அதன் நிபந்தனைகளை அடிபிசகாமல் கடைப்பிடிக்க வேண்டும் என்பதில் கவனம் செலுத்துகின்றார். நல்ல விஷயம்தான். அதேவேளை அந்த வணக்கம் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டுமெனில் உண்ணும் உணவும் நல்ல வழிமுறையினூடாக (ஹலால்) வந்திருக்க வேண்டும் என்பதில் எத்தனை பேர் கவனம் செலுத்துகின்றோம்?

அடுத்தவர் பொருளை அபகரித்துத் தின்றுவிட்டு முதல் வரிசையில் நின்று தொழுவதால் என்ன பயன்? அனுமதிக்கப்பட்ட உணவை உண்டபின் செய்யும் வணக்கங்களை மட்டுமே இறைவன் ஏற்றுக்கொள்வான் என்ற அடிப்படை அறிவை மனதில் இருத்த வேண்டாமா? அவ்வளவு ஏன் .. தவறான முறையில் ஈட்டிய உணவை உண்டபின் செய்யும் பிரார்த்தனைகளைக்கூட இறைவன் ஏற்றுக்கொள்வதில்லை.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “அல்லாஹ் தூய்மையானவன். தூய்மையானவற்றைத் தவிர வேறெதையும் அவன் ஏற்றுக்கொள்வதில்லை”. (முஸ்லிம்)

வெகு சிரமங்களுக்கு மத்தியில் நீண்ட பயணத்தில் ஈடுபட்டிருக்கும் ஒருவரைக் குறித்து இறைத் தூதர் (ஸல்) அவர்கள் இவ்வாறு கூறினார்கள்: “அவருடைய தலை முடி கலைந்துள்ளது. உடலில் புழுதி படிந்துள்ளது. வானை நோக்கி கரங்களை ஏந்தியவாறு, ‘என் இறைவா..! என் இறைவா..!” என்று இறைஞ்சுகின்றார். (ஆயினும் அவரது பிரார்த்தனை ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது)

இறைவன் எப்படிஅந்தப் பிரார்த்தனையை ஏற்றுக்கொள்வான்? அவனது உணவு ஹராம். அவனது பானம் ஹராம். அவனது உடை ஹராம். ஹராமிலேயே வளர்ந்திருக்கின்றான். பின் எப்படி அவனது பிரார்த்தனை ஏற்றுக்கொள்ளப்படும்?” (புகாரி)

பணிப்பெண்களிடம் நாள் முழுக்க வீட்டு வேலை வாங்கிவிட்டு, சம்பளத் தேதி வந்துவிட்டால் ‘பின்னர் ஆகட்டும், அப்புறம் பார்க்கலாம்’ என்று கூறுபவர் எந்த தைரியத்தில் இறைவனின் சன்னிதியில் பிரார்த்தனைக்காக இருகரம் ஏந்துகின்றாரோ தெரியவில்லை. அதிகாரிகளை லஞ்சம் கொடுத்து ஏமாற்றுவது போன்று ஆண்டவனின் உண்டியலில் எதையாவது போட்டுவிட்டால் ஆகவேண்டியதை அந்த ஆண்டவன் பார்த்துக்கொள்வான் என்று நினைத்துக்கொள்கின்றனரோ?

‘பூனையைக் கட்டிப்போட்டு உணவளிக்காமல் அதற்கு அநீதி இழைத்தமைக்காக ஒரு பெண்ணுக்கு இறைவன் நரகத்தைக் கொடுத்தான்’ என்ற செய்தி நாம் அறிந்ததுதானே. ஒரு மிருகத்துக்கு அநீதி இழைக்கும்போதே நரகம் எனில் மனிதனுக்கு அநீதி இழைப்பவருக்கு என்ன தண்டனை என்பதை எண்ணிப்பார்க்கவே மனம் அஞ்சுகிறது.

ஸஅத் பின் அபீ வகாஸ் (ரலி) அவர்கள் ஒருமுறை இறைத்தூதர் (ஸல்) அவர்களிடம் இவ்வாறு விண்ணப்பித்தார்: “இறைத்தூதரே! எனது பிரார்த்தனைகள் ஏற்றுக்கொள்ளப்பட வேண்டும் என்பதற்காக பிரார்த்தனை செய்யுங்கள்”.

‘இறைவா! ஸஅதுடைய பிரார்த் தனையை நீ அங்கீகரிப்பாயாக!’ என்று நபிகளாரும் பிரார்த்தனை செய்திருக்க முடியும். ஆயினும் தோழர்களுக்கு இந்த சந்தர்ப்பத்தில் ஒரு பாடத்தைக் கற்றுக்கொடுக்க முயன்றார்கள்.

ஆம். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “ஸஅதே! தூய்மையானவற்றை மட்டும் உண்ணுங்கள்! உங்கள் பிரார்த்தனை ஏற்றுக்கொள்ளப்படும்”.

பிரார்த்தனை ஏற்றுக்கொள்ளப் படாமல் இருக்கின்றது என்றால் பிரார்த்தனையில் கோளாறு கிடையாது. மாறாக பிரார்த்தனை செய்யும் நபரிடத்தில்தான் கோளாறு. ஒரு சில வேளைகளில் மனம் இதனை ஏற்றுக்கொள்வதில்லை.

நபிகளாரின் இந்த உபதேசத்திற்குப்பின் ஸஅத் (ரலி) அவர்கள் எந்த அளவுக்கு உணவில் தூய்மையானவற்றைக் கடைப்பிடித்தார் என்றால், அதற்குப் பின் அவர் ஹலாலான உணவை மட்டுமே உண்டு வந்தார். அவர் வீட்டில் ஆடு ஒன்று இருந்தது. அந்த ஆட்டின் பாலைத்தான் வீட்டில் உள்ளவர்கள் அருந்துவர். ஒருநாள் அந்த ஆடு அண்டை வீட்டுக்காரரின் நிலத்தில் அனுமதியின்றி நுழைந்து அங்கிருந்த புற்களை மேய்ந்துவிட்டது. இதை அறிந்த ஸஅத் (ரலி) அன்றுமுதல் ஆடு இறக்கும்வரை அதிலிருந்து கறக்கும் பாலை அருந்துவதை நிறுத்திவிட்டார். காரணம் அனுமதியின்றி நுழைந்து மேய்ந்த புல்லின் தாக்கம் அந்த ஆட்டின் பாலில் வெளிப்பட்டுவிடுமோ, அது அனுமதியில்லாத உணவாக மாறிவிடுமோ என்ற பயம்தான்.

அபூபக்கர் (ரலி) அவர்களுக்கு அடிமை ஒருவன் இருந்தான். அவன் அடிமை என்ற முறையில் தன் எசமானாகிய அபூபக்கர் (ரலி) அவர்களுக்குத் தனது சம்பாத்தியத்தில் நிர்ணயிக்கப்பட்ட தொகையைச் செலுத்தி வந்தான். அபூபக்கர் (ரலி) அவர்கள் அவன் செலுத்தும் தொகையிலிருந்து உண்டுவந்தார்கள்.

ஒருநாள் அவன் ஏதோ ஒரு பொருளைக் கொண்டு வந்தான். அதிலிருந்து அபூபக்கர் (ரலி) அவர்கள் சிறிது உண்டார்கள். அப்போது அந்த அடிமை, “இது என்ன என்று உங்களுக்குத் தெரியுமா?” என்று கேட்டான். அபூபக்கர் (ரலி) அவர்கள், “என்ன இது?” என்று கேட்டார்கள்.

அவன், “நான் அறியாமைக் காலத்தில் ஒரு மனிதருக்குக் குறி சொல்லி வந்தேன். எனக்கு நன்றாகக் குறி சொல்லத் தெரியாது. ஆயினும் குறி சொல்லத் தெரிந்தவன் போல் நடித்து அவரை நான் ஏமாற்றிவிட்டேன். அவர் அதற்காக எனக்குக் கூலி கொடுத்தார். நீங்கள் உண்டது (குறி சொன்னதற்காக) எனக்குக் கூலியாகக் கிடைத்த அந்தப் பொருளிலிருந்துதான்” என்று சொன்னான்.

உடனே அபூபக்கர் (ரலி) அவர்கள் கையை வாய்க்குள் நுழைத்து தம் வயிற்றிலிருந்த அனைத்தையும் வாந்தி எடுத்துவிட்டார்கள். (புகாரி).

பிரார்த்தனை அங்கீகரிக்கப்படுவதற்கான முதல் அடையாளம் உணவு தூய்மையாக இருத்தல்.

மவுலவி நூஹ் மஹ்ழரி, குளச்சல்.

#உணவு தொடர் பதிவுகள் இத்துடன் நிறைவு பெறுகிறது . 05—09-2020 +3

எங்கெங்கு காணினும் சக்தி 1

பிரபஞ்ச சக்திகள் 05-09-2020



பிரபஞ்ச சக்திகள் அனைத்தும் மனிதன் உட்பட அனைத்து ஜீவராசிகளிலும் நிறைந்துள்ளது. இதனால்தான் திருமூலர் "ஊண் உடம்பே ஆலயம் " என்றார்.

இந்த வாத, பித்த, கபம் எவ்வாறு மனித உடலில் உள்ளது என்பதையும் வாத பித்த கப நிலைப்பாட்டின் தன்மையை இந்த பிரபஞ்சத்தில் ஐம்பூதங்களான மண், காற்று, நீர், நெருப்பு, ஆகாயம் இவற்றின் பிரதிபலிப்பு ஒவ்வொரு உயிரிலும் நிறைந்துள்ளது.

அண்டத்திலுள்ளதே பிண்டம்
பிண்டத்திலுள்ளதே அண்டம்
அண்டமும் பிண்டமு மொன்றே
அறிந்து தான் பார்க்கும் போதே
என்று சித்தர் பாடுகிறார்.

இதையே " அல் இன்ஸானு சிர்ரீ வ அன சிர்ருஹு (மனிதன் என் ரகசியம் ;நான் மனிதனின் ரகசியம் " - என்று இறைவன் ஹதீது குத்ஸியில் கூறுகிறான் .

பொதுவாக எலும்புக்கூடு, நரம்பு, தசை, தமனி, முதலானவைகள் தான் மனிதன் என்று சொல்வது அறியாமை என்கின்றனர் சித்தர்கள். அண்டத்தில் அதாவது பிரபஞ்சத்தில் உள்ளது அனைத்தும் பிண்டத்தில் உள்ளது என்கிறார்.

பிண்டம் என்றால் உடம்பைக் குறிக்கும்.பிரபஞ்ச சக்தியானது உடலில் கரு உற்பத்திக்கு முக்கிய காரணமாகிறது.சுக்கிலமும் சுரோனிதமும் இணையும்போது, காற்று நீர், நெருப்பு மூன்றும் சேர்ந்து மண் உருவு கொண்டு உடலாய் மாறி உயிர் சேர்ந்து வாதம், பித்தம், கபம் என நிலைப்படுகின்றது.

இவ்வாறு பஞ்ச பூதங்களுள் அமைந்துள்ள உடலானது உலகில் உள்ள தாதுப்பொருட்கள் தாவரப் பொருட்கள் அனைத்தும் சங்கமமாகின்றது.

மனித உடல் ஐம்பெரும் பூதங்கள் அடங்கிய சிறிய பிரபஞ்சம் என்றே சித்தர்கள் கூறுகின்றனர்.மேலும் மனித உடலில் உள்ள ஒவ்வொரு உறுப்பும் பிரபஞ்சத்தில் உள்ள பொருட்களோடு தொடர்புடைய தாகவும், இந்த தத்துவங்களின் அடிப்படையில்தான் மனித உயிர் அனைத்து சக்திகளையும் அடக்கி ஆளும் தன்மை கொண்டுள்ளதாகவும் கூறுகின்றனர்.

பூமியில் இருந்து மண் எடுத்து , அதில் படைக்கப்பட்ட முதல் மாமனிதர் ஆதத்திடம் , மண்ணகமும், அதில் உள்ளவை அனைத்தும் பிரதிபலித்தன .

அவரின் உடலில் உள்ள எலும்புகள் மலைகளையும் , ரத்த குழாய்கள் ஆறுகளையும் ஓடைகளையும், வயிறு கடலையும் அதில் உள்ள உயிரினங்களையும், உடல்மீது உள்ள மயிர்கள் மரங்களையும் ,பற்கள் விலங்குகளையும், ஆன்மா பறவைகளையும் , முகம் மனிதர்கள் வாழும் பகுதியையும் , முதுகு மனிதர்கள் வாழாக் காடு , வனாந்தரங்களையும் பிரதிபலித்தன.

அதுமட்டுமின்றி அவர்களின் உடலில் பருவ காலங்களும் பிரதிபலித்தன. இளமை , வசந்த காலத்தையும் , வாலிபம் வேனிற் காலத்தையும் , முதுமை குளிர் காலத்தையும் , முடிவு இலையுதிர் காலத்தையும் பிரதிபலித்தன

இறுதியாக அவர்களின் வாழ்வில் சொர்க்கமும் , நரகமும் ஒளிந்து கொண்டிருந்தன .
செல்வமும் சுகமும் சொர்க்கமாகவும், நோயும் வறுமையும் நரகமாகும் அதில் இடம்பெற்றிருந்தன

அலீ (ரலி) அவர்கள் , " மனிதனே ! நீ சிறிய சடலம் என்றா நினைக்கிறாய் ? உனக்குள்ளே பெரிய உலகமே இயங்கிக் கொண்டிருக்கிறது " என்னும் கருத்தை உள்ளடக்கி,

"அதஸ்ஸிபு அன்னக ஜிஸ்முன் ஸகீருன் வஃபீக்கன்தவல் ஆலமுல் கபீரு " என்று கூறியுள்ளார்கள் .

இந்த பிரபஞ்சத்தின் மொத்த முழு சக்தியின் பிறப்பிடம் சூரியனே ஆகும் . சூரிய சக்தியானது மனிதனின் தமரகம் என்னும் இதயத்துடன் தொடர்புடையது என்றும், "கல்புல் முஃமினி அர்ஷுல்லாஹி (இறை நம்பிக்கையாளனின் இதயம் அல்லாஹ்வின் அரியாசனமாகும் - ஹதீஸ் )

மூளை நரம்புகள் அனைத்தும் சந்திரனோடு தொடர்பு உடையவை என்றும், பித்தப்பை இரத்தம், செவ்வாயோடு தொடர்பு உடையவை என்றும் உடலை பிரபஞ்சத்துடன் ஒப்பிட்டுள்ளனர்.

சூரிய சக்தி – தமரகம் (இதயம்)
சந்திர சக்தி – மூளை நரம்புகள்
செவ்வாய் – பித்தப்பை, இரத்தம் (செந்நீர்)
சுக்கிரன் – இடுப்புப் பகுதி
புதன் – நுரையீரல்
குரு (வியாழன்) – கல்லீரல்
சனி – மண்ணீரல்

ஆதத்தின் உடலில் விண்ணிலுள்ள 12 ராசிகளையும் இறைவன் பிரதிபலிக்கச் செய்தான் .
தலை மேஷசத்தையும் , கழுத்து ரிஷபத்தையும் , கைகள் மிதுனத்தையும், மார்புக்காம்புகள் கடகத்தையும் , மார்பு சிம்மத்தையும் , இதயம் கன்னியையும் , தொப்புள் தூலத்தையும் , இனஉறுப்பு விருச்சிகத்தையும் , தொடைகள் தனுஷையும் , இருப்பிடம் மகரத்தையும், கால்கள் கும்பத்தையும் , பாதங்கள் மீனத்தையும் பிரதிபலித்தன.

ஆகவே மனித உடலானது கிரகங்கள் (கோள்கள்) நட்சத்திரங்களின் ஆதிக்கத்தைப் பொறுத்து மாறுபாடு அடைகிறது என்பது புலனாகிறது.

இவ்வுண்மைகளை மெஞ்ஞானிகள் கஷ்பு ஞானத்தால் அறிந்தனர்.

செயலில் செயலின்மையையும், செயலின்மையில் செயலையும் ,
யார் காண்கிறானோ ,
அவனே மனிதருள் ஞானி,
அவனே யோகி.
அவன் எதைச் செய்தாலும்
அதை தவம் போல் செய்து முடிக்கிறான் .

## மண்ணின் விஸ்வரூப சக்தி எங்கெங்கு காணினும் சக்தி 2 05-09-2020



ஆதத்தை இறைவன் களிமண்ணில் படைத்தான் . . குர்ஆன் 3 :59

ஆதமுக்கு சிரம் பணியுங்கள் என்று ( ஒளியினால் படைக்கப்பட்ட ) மலக்குகளுக்கு கட்டளை இட்டோம்
இப்லீஸைத் தவிர மற்ற மலக்குகள் அனைவரும் பணிந்தார்கள் அவன் பணியவில்லை
இறைவன் இப்லீஸை நோக்கி . . . . நீ சிரம் பணியாதிருக்கும்படி உன்னைத் தடை செய்தது எது ?
அவருடைய நான் மேலானவன் ஏனென்றால் நீ என்னை நெருப்பால் படைத்தாய் அவரை களி மண்ணால் படைத்தாய் ( இயங்காத ) களி மண்ணை விட ( இயங்கும் ) நெருப்பு உயர்ந்தது என்று இறுமார்ப்புடன் கூறினான்
குர்ஆன் 7 : 11 12

இப்லீஸ் மண் இயங்காமல் மௌனமாக பதுங்கி இருந்ததால் அதுவால் ஒன்றும் செய்ய இயலாது என்று எண்ணினான் .
ஆர்ப்பரிக்கும் மொத்த பிரபஞ்சத்தையும் தன்னுள் அடக்கி இருக்கும் மௌனம் . பதுங்கி இருந்ததைப் பார்த்தவன் அது பாய்வதைப் பற்றி பராமுகமாக இருந்தான் .

1 மண் விஸ்வரூபம் எடுத்தது

மண்ணின் ரசாயன பெயர் சிலிக்கான் பூமியின் மேற்பரப்பில் 28 % சிலிக்கான் உள்ளது .

பூமியில் கிடைக்கும் படிக்கல் சிவப்பு அல்லது மஞ்சள் நிற மாணிக்கம் , பால் நிறக்கல் , கருநிறக்கல் , மைக்கா, ஆஸ்பெஸ்டாஸ ஆகியவை சிலிக்கானின் வெவ்வேறு வடிவங்கள் அதாவது மண்ணின் மாறுபட்ட முகங்கள்.

நவீன விஞ்ஞானம் மண்ணை நான்கு விதமான மண் யுகங்களாக நடந்துள்ளது
முதல் மண் யுகத்தில் மண்ணை உருக்கி கண்ணாடி செய்து , பின்னர் லென்ஸ் செய்து , டெலஸ்கோப் கண்டுபிடித்து வானில் உள்ள கிரகங்கள் நட்சத்திரங்கள் சற்று அருகில் பார்த்தான் இதிலிருந்து நவீன காஸ்மாலாஜி என்னும் பிரபஞ்ச இயல் துவங்கியது . விஸ்வரூபத்தின் முதல் அவதாரம் அரிதாரம் பூசாமலே வெளியானது.

2 வது மண் யுகத்தில் அதே லென்ஸ்களைத் திருப்பி போட்டு மைக்ரோஸ்கோப் செய்து நுட்பமான ஜந்துக்கள், பாக்டீரியா போன்ற உயிர்களை ஆராய அது மாலிக்யூலர் பயாலஜி என்ற இயல் உருவாகி உயிரின் ரகசியத்தை அதன் அருகிலேயே தேட ஆரம்பித்துள்ளான் மனிதன் .இது விஸ்பரூபத்தின் இரண்டாம் அவதாரம் .

3 வது மண் யுகத்தில் சிலிக்கான் சில்லு என்னும் I C உருவாக்கி தன் மன வேகத்தில் இயங்கும் கம்யூட்டர் வரை கண்டுபிடித்துள்ளான் மனிதன் .இது விஸ்வரூபத்தின் மூன்றாம் அவதாரம் .

4 வது மண் யுகத்தில் சிலிக்கான் சில்லுக்குள் மின்சாரத்திற்குப் பதிலாக ஒளியைப்புகுத்தி , ஆப்டிகல் கம்யுட்டிங் யை உருவாக்கி ஒளிக்கும் அப்பாலுள்ள வேகத்தில் இயங்க முயற்சிக்கிறான் மனிதன் . இதனால் வெப்பம் அதிகமாகும் போது சிலிக்கன் மண்ணைத் திடப்படுத்தி வெப்பத்தை எளிதாக வெளியேற்றி ஒளியை மண்ணுக்குள் பணிந்து போகும்படிச் செய்யலாம் என்கிறார்கள் மனித விஞ்ஞானிகள் . இந்த மண்ணிற்கு ஒளி சுஷூது செய்யும் . இத்தனை மண்ணின் விஸ்வரூபத்தை எண்ணிதான் மலக்குமார்களை சுஷூது செய்ய வைத்தானோ இறைவன் ?

மண்ணின் விஸ்பரூபம் ஒளியையும் மிஞ்சி இருக்கும்

உம் இறைவன் வானவர்களை நோக்கி நிச்சயமாக நான் பூமியில் ஒரு பிரதியை படைக்கப் போகிறேன் என்று கூறிய போது அவர்கள் இறைவா ! . . நீ அதில் குழப்பத்தை உண்டாக்கி இரத்தம் சிந்தக்கூடியவர்களைப் படைக்கப் போகிறாய் ?

அதற்கு இறைவன் , . . . "நீங்கள் அறியாதவற்றையெல்லாம் நிச்சயமாக நான் அறிவேன் " எனக் கூறினான் . குர்ஆன் 2 : 30 .

எவ்வளவு ஆத்மார்த்தமான பதில் !

"ஹலக்கல் இன்ஸான அலா சூரத்திஹி (மனிதனை அவன் தன் ( எண்ணத்தில் உண்டான) உருவில் படைத்தான் ) "

மனிதன் ரோபாட் என்னும் மனித இயந்திரத்தை தன்னைப்போல் படைத்தான் "

இடி - மின்னலின் சக்தி

எங்கெங்கு காணினும் சக்தி 4



இடி என்பது காற்றில் உள்ள மூலக்கூறுகளுடன் மேகங்கள் உராய்வதால் வானத்தில் மின்சாரம் உண்டாகிப் பூமியில் பாயும்போது உண்டாகிறது.

மின்னல் என்பது மழைக் காலங்களில் திரண்ட கார் மேகங்களின் இடையே ஏற்படும் மிகப்பெரிய தீப்பொறி போன்ற மின் பொறிக் கீற்றல்.

கண்ணைப்பறிக்கும் ஒளிவீச்சோடு, கோடுகளாய் வானில் கிளைத்து நொடிப்பொழுதில் தோன்றி மறையும் நிகழ்ச்சி தான் மின்னல்.

மின்னலோடு கூட பேரொலியாய் இடி இடிப்பதையும் கேட்கலாம். மழை மேகங்கள் தமக்குள் இருக்கும் அணுக்கள் பல வழிகளிலும் உராய்ந்து மின்னூட்டம் பெற்று விடுகின்றன.

மேகங்கள் எப்படி மின்னூட்டம் பெற்றன என்பதெல்லாம் முற்றிலுமாய் இன்னும் விஞ்ஞானத்தால் அறியப்படவில்லை.

ஆனால் இப்படி மின்னூட்டம் பெற்று அது அதிகமாகிவரும் பொழுது, எதிர் மின்னூட்டம் கொண்ட பிற மேகக் கூட்டங்கள் அருகே வரும் பொழுது, மின்னூட்ட ஈர்ப்பு விசையால் இடையே உள்ள காற்றின் வழியே மின் ஆற்றல் பாய்ந்து , காற்றை தாக்கி அதை வெளிச்சமாக்கி மேகங்கள் மின்னூட்டத்தை இழக்கின்றன.

இவ்வாறு காற்றின் வழியே மின்னூட்டம் பாயும் பொழுது மின்பொறியாய் தீப்பொறி போல ஒளிக்கீற்று ஒளி இழையாய் தெரியும் பகுதியில் காற்றுதான் மின் மயமாக்கப்
படுகின்றது.

மின்னல் மூன்று வகை உண்டு மேகத்துக்கு மேகம் தாவும் மின்னல் ஒருவகை.

மேகத்தில் இருந்து பூமிக்கு தாவும் மின்னல் இன்னொரு வகை .

மூன்றாவது பரிசோதனைச் சாலையில் கண்ணாடிப் பெட்டிக்குள் விஞ்ஞானிகள் உண்டாக்கும் மினி மின்னல் .

இடி விழுந்து மூன்று பேர் மரணம் என்று பேப்பரில் செய்தி வருகிறதே இடி எப்படி விழும் ? சொல்றேன்.

இடி என்பது எதுவும் இரும்புத்துண்டு போல விழுவதில்லை , மேகங்களில் சேர்ந்திருக்கும் ஆயிரக்கணக்கான கிலோ வோல்ட் மின் சக்தி பூமியில் உயரமான பொருட்களுடன் ஸ்பார்க் அடிக்கும் போது பாயும் மின்சாரம் தான் இடி . பச்சை மரத்தை கூட எரிக்கும்.
இடி சப்தம் கேட்பதற்குள் ஆள் காலி.

اَوْ كَصَيِّبٍ مِّنَ السَّمَآءِ فِيْهِ ظُلُمٰتٌ وَّرَعْدٌ وَّبَرْقٌ يَجْعَلُوْنَ اَصَابِعَهُمْ فِىْٓ اٰذَانِهِمْ مِّنَ الصَّوَاعِقِ حَذَرَ الْمَوْتِ وَاللّٰهُ مُحِيْطٌ بِالْكٰفِرِيْنَ
அல்லது (இவர்களுடைய உதாரணம்:) அடர்ந்த இருளும், இடியும், மின்னலும் கொண்ட மேகம் பொழியும் மழையில் அகப்பட்டுக் கொண்ட(வர்களின் உதாரணத்தை ஒத்திருக்கின்றது. இவ்வாறு அகப்பட்டுக் கொண்ட இ)வர்கள் இடி முழக்கங்களால் மரணத்திற்குப் பயந்து தங்களுடைய விரல்களைத் தங்களுடைய காதுகளில் நுழைத்து (அடைத்து)க் கொள்கின்றனர். அல்லாஹ் நிராகரிக்கும் இவர்களை (எப்பொழுதும்) சூழ்ந்துகொண்டு இருக்கின்றான். (அல்குர்ஆன் : 2:19)

இடி, மின்னல் இரண்டும் ஒரே நேரத்தில் ஏற்பட்டாலும் மின்னல் முதலில் நம் கண்ணுக்கு தெரியும். சிறிது நேரம் கழித்து இடியொலி கேட்கும். ஒளியின் வேகம் ஒரு நொடிக்கு 300000 கிலோமீட்டர்; ஒலியின் வேகம் ஒரு நொடிக்கு 330 மீட்டர் மட்டும் என்பதே இதன் காரணம் ஆகும்.

வீணாகும் மின்சாரம்

மின்னல் தோன்றுவதால் ஏற்படும் மின்சாரத்தைக் கொண்டு ஒரு நகரத்தின் ஒரு ஆண்டு முழுவதற்குமான மின் தேவையைப் பூர்த்தி செய்யமுடியும்.

ஆனால் மின்னலின் மின் சக்தியைச் சேமிக்கும் ஆற்றல், நம்மிடம் இல்லாததால் அது வீணாகப் போகிறது.

" உலகம் சுற்றும் வாலிபன் " என்ற திரைப்படத்தில் விஞ்ஞானி எம்.ஜிஆர் "மின்னலிலிருந்து மின்சாரத்தை சேமிக்க முடியுமா ? "என்றீர்கள்
" முடியும்" என்றேன் என்று சொல்லி , துப்பாக்கியில் மின்னலை மாத்திரையாக்கி அதை துப்பாக்கியில் போட்டு சுட்டுக் காட்டுவார்.காடே தீப்பற்றி எரியும். இது விஞ்ஞான உலகின் அதீத கனவு . ஆனாலும் மின்னலைப் பற்றி நாம் தெரிந்து கொண்டது மிகச் சொற்பம்

வானில் தோன்றும் மின்னல் மரங்களின் வழியே நிலத்தில் பாய்ந்துவிடும். விலங்குகளும், மனிதர்களும்கூட மின்னல் தாக்கி இறக்க நேரிடுகிறது. மின்னல் ஏற்படும் பகுதியைவிட உயரத்தில் விமானங்கள் பரப்பதால், அவை மின்னலால் பாதிப்படைவதில்லை. இருந்தாலும் சில சமயம் ஆகாய விமானங்களும் மின்னல் தாக்குதலுக்கு உள்ளாகின்றன.

وَيُسَبِّحُ الرَّعْدُ بِحَمْدِهٖ وَالْمَلٰٓـئِكَةُ مِنْ خِيْفَتِهٖ ‌ وَيُرْسِلُ الصَّوَاعِقَ فَيُصِيْبُ بِهَا مَنْ يَّشَآءُ وَهُمْ يُجَادِلُوْنَ فِى اللّٰهِ‌ ۚ وَهُوَ شَدِيْدُ الْمِحَالِ
இடிகளும் மற்ற மலக்குகளும் அவனுக்குப் பயந்து அவனைத் துதி செய்து புகழ்கின்றனர். அவனே இடிகளை விழச் செய்து, அதைக்கொண்டு அவன் நாடியவர்களைத் தாக்குகிறான். (இவ்வாறெல்லாமிருந்தும்) அவர்கள் அல்லாஹ்வை பற்றி (உங்களிடம்) தர்க்கிக்கின்றனர். அவனோ (அவர்களைத் தண்டிக்கக் கருதினால் அவர்கள்) நழுவாது மிக்க பலமாகப் பிடித்துக் கொள்பவன். (குர்ஆன் : 13:13)

ர.ரா

சமுத்திரங்களின் சக்தி

எங்கெங்கு காணினும் சக்தி 5



ஆயிரக்கணக்கான வருஷங்களாகவே கடலுக்கு அடியில் போய்ப் பார்க்க வேண்டும்' என்கிற ஆசை மனிதனுக்கு இருந்து கொண்டே வந்திருக்கிறது !

கிரேக்க தத்துவமேதை அரிஸ்டாட்டில் கடலுக்கடியில் இருகிற விஷயங்களைப் பற்றி சுவையாக எதையோ சொல்ல, அவருடைய சிஷ்யர் அலெக்ஸந்தர் (சுமார் கி.மு 300 வில்) அப்பவோ கண்ணாடியால் பலூன் மாதிரி ஒன்றை செய்து அதற்குள் உகார்ந்து கொண்டு கடலுக்கடியில் கொஞ்ச தூரம் சென்று பார்த்து விட்டு வந்திருக்கிறார் அப்போது மிகப் பிரமாண்டமான திமிலங்கிலத்தைப் பார்ததாராம்.

கரையிலிருந்து கடலுக்குள் ஓரிரு மைல் வரை இருப்பது கண்டங்களின் நிஜ எல்லைகள்தான் இதை "கான்டினெண்டல் ஷெல்ஃப்" என்கிறார்கள் இதன் சராசரி ஆழம் 600 அடி. அதன் பிறகு நிஜக் கடல் ஆரம்பமாகிறது ! ஆழமெல்லாம் கிலோ மீட்டர் கணக்கில் இருக்கும் .

இதற்குப் பிறகு ஆழம் ஒரேயடியாக
"ஜிவ்" வென்று சுமார் 13,000 அடிக்கு
(13 கி.மீ) இறங்குகிறது ! இங்கே இருப்பது ."Abyss" . என்றழைக்கப்படும் பிரமாண்டமான சமவெளிப் பிரதேசம் இதில் ஏகப்பட்ட மலைகள் , படுகுழிகள் எரிமலைகள், இன்னும் அறியப்படாத பகுதிகள் எல்லாம் உண்டு.

நபி மூஸா (அலை) அவர்கள் கடலைக் கடக்க தங்களது கைத்தடியால் கடலை அடிக்கிறார்கள் கடல் இரண்டாகப் பிரிந்து வழி கொடுக்கிறது

இதைக் கண்ணுற்ற பிர்அவ்னும் அவனது படைகளும் அந்தக் கடற் பாதையில் தாங்களும் செல்ல ஆரம்பிக்கிறார்கள் .பிரிந்த கடல் மெதுவாக சேர பிர்அவ்னும அவனது படை களும் ஜல சமாதியாகி விடுகிறார்கள்.

நிஜக் கடலின் ஆழத்தில் இறங்கி செங்கடலின் அக்கரைக்கு செல்லும் போது கடலின் ஆழம் சுமார் 13,000 அடி எனப் பார்த்தோம் . உயரயான இமயமலையை விட கடலின் தரைமட்ட ஆழம் மிக உயரம் எனவே தான் குர்ஆனில் அல்லாஹ்

"நாம் மூஸா நோக்கி, "நீங்கள் உங்களுடைய தடியினால் இந்தக் கடலை அடியுங்கள்" என வஹ்யி அறிவித்தோம், அவர் அடிக்கவே அது பல வழிகளாப் பிளந்து ஒவ்வொரு பிளைவு அலைகளும் பெரும் மலைகளைப் போல் இருந்தது " திருக்குர்ஆன் 26 : 63

கடல்களின் நீர்மட்டம் குறைந்தால் அல்லது முழுவதுமாக வற்றினால் என்ன ஆகும் என்பது பற்றி விஞ்ஞானிகளின் ஆய்வு மிகப் பயங்கரத்தை கண் முன் காட்டுகிறது !

நான்கு புறமும் கடலால் குழப்பட்ட ஜப்பான் . இலங்கை , ஆஸ்திரேலியா , அந்தமான் , நிகோபார் தீவுகள் 13,000 அடி முதல் 36,000 அடி உயரத்தில் இருக்குமாம் .(சர்வதேச விமானங்கள் 36,000 அடி உயரத்தில்தான் பறக்கிறது)

இந்தியா போன்ற தீபகற்பகங்களுக்கு கடல் வழியாகவும், தரைவழியாகவும் வரமுடியாது . வான்வெளியில் மட்டுமே வர முடியும்

இந்த நிலைமை கியாமத் நாளின் போது ஏற்படும் என்று குர்ஆனில் அல்லாஹ்

"கடல்கள் அகற்றப்படும் போது "
திருக்குர்ஆன் 82 : 03

கடல் இல்லாத உலகத்தில் தரைவழி பயணம் என்பது நினைத்துப் பார்க்கவே பயமாக இருக்கிறது !

இப்போது உலகில் முக்கால் பாகம் கடலால் சூழப்பட்டு இருப்பது கூட உலகின் கால் பாகத்தின் வாழும் மக்களுக்காகத்தான் . இது கடலின் கடலின் மாபெரும் சக்தியல்லவா ?

ர.ரா

சூரிய சக்தி எங்கெங்கு காணினும் சக்தி 6



அண்டார்டிகா கண்டமே மிக மிகக் குளிரான பெங்குயின், பனிகரடி தவிர மற்ற விலங்கினங்கள் அங்கு வாழ்வதில்லை . வாழவும் முடியாது.

பூமியின் இரு துருவங்களில் இரு கண்டங்கள் அண்டார்டிகா மற்றும் ஆர்டிக் இருப்பதால் இவ்விரு கண்டங்களை சூரியக் கதிர்கள் தொடுவதில்லை . எனவே பனிக்கண்டமாக இருக்கிறது .

இக்கண்டங்களில் வெப்பம் எப்போதுமே மைனஸ் டிகிரியில் தான் இருக்கும். எந்தவித தாவரங்களால் வளரமுடியாது .

இவ்வளவு பனிப்பொழிவும் எப்போதும் இருந்து கொண்டே இருக்கும் . கண்டத்தை இப்படி மகா குளிர் கொண்டதாக இயற்கை அமைத்த காரணத்தை விஞ்ஞானிகள் ஆராய்ந்தபோது தான் அவர்களுக்கு ஒன்று தெரியவந்தது .

அக்கண்டத்தை குளிர்பதன பெட்டியாய் பயன்படுத்த விஞ்ஞானிகள் ஆய்வு செய்கின்றனர் . அதாவது உலகத்தில் விளையும் உணவுப் பொருட்களை தேவைக்கு போக மீதி இருப்பதை அதில் சேமித்து , தேவைப்படும்போது எடுத்துப் பயன்படுத்திக் கொள்ளலாமே என்று யோசிக்கிறார்கள் ,

இக்கண்டத்தை பற்றி நினைக்கும் போது இன்னொன்றையும் சொல்ல தோன்றுகிறது .

சூரியனின் கதிர்கள் செங்குத்தாக விழும் பூமத்திய ரேகையின் நடுப்பகுதியில் 40 லட்சம் சதுர மைல் பரப்பில் " சஹாரா பாலைவனம் " ஏற்பட்டது .

இந்த சஹாரா பாலைவனத்தில் சூரிய சக்தியை பயன்படுத்தி மின் உற்பத்தி மற்றும் வெப்பம் அதிகமாக தேவைப்படக்கூடிய விஞ்ஞான சாதனங்களை உருவாக்கலாமே என யோசிக்கிறார்கள்.

இங்கு பெட்ரோலிய வயல்கள் நிரம்பிய நாடுகளின் வாழ்வாதாரம் பெட்ரோலியத்தை நம்பி இருப்பதால் , எந்த ஒரு புதுக் கண்டுபிடிப்பும் பெட்ரோலியத்தின் உபயோகம் இல்லாமல் சூரிய சக்தி மூலம் இயங்கக்கூடிய எந்த சாதனங்களையும் அவர்கள் விரும்புவதும் இல்லை .அதை ஊக்குவிப்பதும் இல்லை .

இது விஞ்ஞானத்திற்கு மிகப் பெரிய முட்டுக் கட்டை . அடித்த அத்தனை வெயிலும் விரயமாகிப் போகிறது .

சூரிய சக்தியைப் பொருத்த வரை அவர்களுக்கு கேலிக்குரியதாகிறது !

பூமியினுள்ளே உள்ள வெப்ப சக்தி

எங்கெங்கு காணினும் சக்தி 7     07-09-2020



இன்றுவரை, உலகில் இடப்பட்ட ஆழமான துளை - கோலா சூப்பர்டீப் போர்ஹோல் **(Kola Superdeep Borehole)** ஆகும். 1970-களில் துளையிடலை துவங்கி 20 ஆண்டுகளுக்கு பின்னர் 40,230 அடி (12,262 மீட்டர்) ஆழத்தை அடைந்தது. அதாவது சுமார் 7.5 மைல்கள் அல்லது 12 கி.மீ ஆழம். பூமியின் விட்டத்தோடு ஒப்பிடும்போது அது ஒரு முடி அகலம் கூட இல்லை.

சரி அதற்குமேல் ஏன் துளையிடவில்லை? அது ஏன் நிறுத்தப்பட்டது.?

புவியின் மையப்பகுதியை நாம் நெருங்கி வருகையில் விஷயங்கள் "சூடுபிடிக்கும்". ஏனென்றால் பூமியின் மையம், திரவ உலோகதினால் நிரம்பியுள்ளது . மற்றும் அதன் வெப்பநிலை 9700° ஃபாரன்ஹீட் (5400° செல்சீயஸ்) என்ற அளவை தாண்டிச் செல்கிறது.

ஆக சுமார் 7.5 மைல் ஆழத்தை அடைந்ததுமே 350° ஃபாரன்ஹீட் (170° செல்சீயஸ்) வெப்பத்தை விட அதிக வெப்பநிலைகளை எதிர்கொள்ள நேர்ந்தது. இதற்கு மேல் செல்ல முடியவில்லை .

பூமியினுள்ளே உள்ள வெப்பத்தை வெளியில் எடுப்பதைப் பற்றி விஞ்ஞானம் ஆராய்கிறது .

அணுஆயுதங்களை ஒழித்து விட்டாலும் அணு ஆற்றல் உற்பத்தி தொடரத்தான் போகிறது . அணுவை உலையில் இட்டு ஆற்றலைப் பெற்றாலும் ,இவற்றுக்குரிய செலவு அதிகம் ; ஆபத்து அதைவிட அதிகம் . அணுக்கழிவு விடாமல் துரத்தும் ஒரு பிசாசு . அதை ஒன்றும் அழித்து விட முடியாது .

எனவே அணுவிலிருந்து பெறக் கூடிய ஆற்றலை விட பூமியின் உட்பகுதியில் உள்ள வெப்பத்தை வெளியில் எடுத்து பயன்படுத்துவது பாதுகாப்பானதும் கூட என சோவியத் விஞ்ஞானிகள் கூறுகிறார்கள் .

பூமியின் உட்பகுதி வெப்பம் எதிர்காலத்தில் ஒரு முக்கிய வெப்ப ஆற்றல் தோற்றுவாயாக விளங்கப் போகிறது என்பது உண்மை என்று விஞ்ஞான உலகம் கருதுகிறது .

وَاِنْ مِّنْ شَىْءٍ اِلَّا عِنْدَنَا خَزَآٮِٕنُهٗ وَمَا نُنَزِّلُهٗۤ اِلَّا بِقَدَرٍ مَّعْلُوْمٍ

"ஒவ்வொரு பொருளுக்குமான பொக்கிஷங்கள் நம்மிடமே இருக்கின்றன; அவற்றை நாம் ஒரு குறிப்பிட்ட அளவுப்படி அல்லாமல் இறக்கிவைப்பதில்லை (குர்ஆன் : 15:21)

பச்சை மரத்தினுள் பற்றி எரியும் சக்தி !

எங்கெங்கு காணினும் சக்தி 9

நெருப்பு எனும் ஆற்றல் ஒவ்வொரு பொருளுக்குள்ளும் ஓரளவு வெப்ப சக்தியாக மறைந்து கிடக்கிறது என்பது விஞ்ஞானம் கண்டறிந்த உண்மை

பொருட்களில் மறைந்து இருக்கும் வெப்பம் ஒரு வகை தாது சக்தியே என்று விஞ்ஞானி எம்போர்ட் பிரபு கண்டறிந்தார்

நாம் உட்கொள்ளும் உணவு கூட உடலுக்கு எரிபொருளாகப் பயன்பட்டு அப்போது வெளிப்படும் வெப்பம் ஆற்றலாக பரிணமிக்கிறது
உடல்செல் உணவை எப்படி ஆற்றலாக மாற்றுகிறது என்பது இன்னும் விளங்காத புதிராகவே விஞ்ஞானத்திற்க இருக்கிறது !

பச்சை தாவரங்களிலும் எரிபொருள் உள்ளடங்கி இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது அதாவது மலையில் விளையும் மூலிகையான வெதும்படக்கி இலை, பிரமடங்கு இலை, அருவா மூக்கு இலை, கவிழ் தும்மை இலை , போன்ற பச்சிலைகள் தீப்பற்றினால் பற்றி எரிகிறது !

காரணம் இம்மூலிகைகளில் எத்தனால் செல்லுலோஸ் என்ற பொருள் பிரிக்கப்பட்டு எரிபொருளாக பயன்படுத்தப்படுகிறது ( ராமர் பிள்ளை மூலிகைப் பெட்ரோலுக்கு இவையெல்லாம் பயன்படுத்தினாரா எனக்குத் தெரியாது )

இதேப் போல் அமெரிக்காவில் சுவிட்ச்கிராஸ் (**switch grass)** என்ற புல்லும் செல்லுலோஸைப் பெற்றுள்ளது உயரி வாயுக்களை பயோ- பியூல்ஸ் (**Bio- Fuels**) பயன் படுத்தும் முயற்சியில் காட்டாமணக்கு இருந்து பெறப்படும் பயோ-டீஸல் ஏறத்தாழ நாட்டின் 20 சதவீத தேவையை பூர்த்தி செய்யும் என எதிர்பார்க்கப்படுகிறது !

பிரேசில் 50% வாகனங்கள் எத்தனாலையோ ( பெட்ரோல் எரிவாயுகளுக்கு மற்றொரு தாவரங்களில் இருந்து பெறக் கூடிய வாயு எரிபொருள் எத்தனால்) அல்லது எத்தனாலும் பெட்ரோலியமும் சேர்ந்த கலவை எரிபொருளான Gasohol பயன்படுத்துகின்றனர்.

اۨلَّذِىْ جَعَلَ لَـكُمْ مِّنَ الشَّجَرِ الْاَخْضَرِ نَارًا فَاِذَاۤ اَنْـتُمْ مِّنْهُ تُوْقِدُوْنَ

“பசுமையான மரத்திலிருந்து உங்களுக்காக நெருப்பை உண்டாக்குபவனும் அவனே; அதிலிருந்தே நீங்கள் (தீ) மூட்டுகிறீர்கள்.
(அல்குர்ஆன் : 36:80)

தண்ணீரே எரிபொருள் !

எங்கெங்கு காணினும் சக்தி 10




ஹைட்ரஜன் என்கிற ஜலவாயு நம்மிடம் நிறைய இருக்கிறது. பூமியின் கைவசம் உள்ள 3000 கோடி கனமைல் தண்ணீரில் கரைந்திருக்கும் இந்த ஹைட்ரஜன் வாயுவை எப்படியாவது எரிபொருளாக உபயோகிக்க முடிந்தால் நம் பிரச்சினைகள் எல்லாம் தீர்ந்துவிடும். இதனால் நம் வாயுமண்டலம் பாழாகாது. பூமி சூடேறாது !

ஜலவாயு தயாரிப்பின் யுக்தி , ஹைட்ரஜன் எரியும் போது அது விடுவிக்கிற பிராண வாயுவுடன் ஆக்ஸிஜனுடன் சேர்ந்து கொண்டு மறுபடியும் நீராவி ஆகிறது. வாகனம் நகர்கிறது . அவ்வளவுதான்.ஆனால் இந்த யுக்தி அத்தனை சுலபமில்லை .

ஜலவாயு ரொம்ப லேசானது . அதைச் சேமித்து வைப்பதற்கு ராட்சசக் குடுவைகள் வேண்டும் . அதாவது இடம் பெரிதாக வேண்டும்.

மேலும் ஜல வாயு முணுக்கென்றால் பற்றிக்கொள்ளும் . ஆரம்ப காலத்தில் ஹைட்ரஜன் நிரப்பின பிரம்மாண்டமான மிதக்கும் கப்பல்கள் பண்ணி பல பேர் எரிந்து போயிருக்கிறார்கள்! ஜாக்கிரதை

அதனால் பல மாற்று முறைகளை ஆராய்ந்து கொண்டிருக்கிறார்கள். இரும்பு , டைட்டேனியம் கலந்த ஒரு கலப்பு உலோகத்திற்கு ஜலவாயுவை உறிஞ்சிக் கொள்ளும் குணம் இருப்பதைக் கண்டுப் பிடித்திருக்கிறார்கள்.

அல்லது கார்பன்-டை-ஆக்சைடுடன் கலந்து மிதைல் சாராயம், மீதேன் என்று வேறு பொருட்களாக மாற்றிச் சேமிக்கலாம் . அதிலிருந்து அவைகளையே மறுபடியும் பெட்ரோலாகவும் பண்ணலாமா என்று கூட முயற்சி பண்ணிக் கொண்டிருக்கிறார்கள்.

இந்த பெட்ரோல் " சைவ பெட்ரோல் " இதை எரிப்பதால் முதலில் ஆரம்பித்த கார்பன்-டை-ஆக்சைடைத் திரும்பப் பெறுவோம் அவ்வளவே . ஆனால் சுத்தம் !

இவையாவும் பரிசோதனைச் சாலை கனவுகளாகவே இருந்தன. அந்தக் கனவை ஒரு தமிழர் நனவாக்கி இருக்கிறார். அடே !

திருப்பூர் மாவட்டம் வெள்ளகோவிலை சேர்ந்தவர் சவுந்தரராஜன் குமாரசாமி. இவர் ஹைட்ராஜனை எரிபொருளாக பயன்படுத்தும் புதிய தொழில் நுடப்பத்தை கண்டுபிடித்து அசத்தியுள்ளார்.

ஹைட்ரஜன் என்ற ஜலவாயுவை எரிபொருளாக உருவாக்கி இதன் மூலம் வாகனங்களையும், கப்பலையும் கூட இயக்க முடியும் என்று நிருபித்துள்ளார்.

இவர் தமிழன் என்பதால் இவரின் கண்டுபிடிக்கு இந்தியா முக்கியத்துவம் கொடுக்கவில்லை.

உலகில் பல்வேறு நாடுகளிலும் பெட்ரோல், டீசல், கேஸ் உள்ளிட்டவை எரிபொருளாக பயன்படுத்தப்படுகின்றது இதனால் வாகனங்களில் வெளியேறும் புகையினால் சுற்றுச்சூழல் பாதிப்பு ஏற்படுகின்றது. இதனால் மனிதன் சுவாசிக்கவும் பிரச்னை ஏற்படுகின்றது.

நீரை கொதிக்க வைத்து அதன் நீராவியை குளிரச் செய்வதால், டிஸ்டில்டுவாட்டர் கிடைக்கின்றது. இதை 10 லிட்டர் அளவுக்கு இன்ஜினில் ஊற்றினால் ஒரு கிலோ ஹைட்ரஜனை உற்பத்தி செய்ய முடியும். இதன் மூலம் 100 சிசி திறனுள்ள இரு சக்கர வாகனத்தை 200 கி.மீ தூரம் இயக்க முடியும் !

காரில் துவங்கி கப்பல் வரை இந்த தொழில்நுட்பத்தை பயன்படுத்த முடியும் என்று சவுந்தர்ராஜன் நம்பிக்கையும் தெரிவித்துள்ளார்.

ஹைட்ரஜன் வாயுவை உபயோகப்படுத்துவதில் பல்வேறு பிரச்னைகளும் இருக்கின்றன. விலை முதலில் அதிகம், கையாளுதல் கடினம், இருப்பு வைப்பதில் சிக்கல் என பிரச்னைகள் இருக்கின்றன.

இவர் கண்டுபிடித்துள்ள எஞ்சின், ஹைட்ரஜன் வாயுவை அதுவே உற்பத்தி செய்து, எரிபொருளாக மாற்றும். அந்த இன்ஜினில் இருந்து நீராவியும் ஆக்ஸிஜன் மட்டுமே வெளியேறும். இயற்கைக்கு எந்த பாதிப்பும் கிடையாது.

இந்த கண்டுபிடிப்பு குறித்து பல்வேறு கார், பைக் கம்பெனிகளை முதலில் அணுகினார். யாரும் கண்டுக் கொள்ளவில்லை. கடந்த 10 ஆண்டு கனவு கண்டு உருவாக்கியுள்ளதால், வீணாக விடமாட்டேன் என்று ஜப்பான் அரசு பார்வைக்கு கொண்டு சென்றார்.

இவரை உடனடியாக அழைத்து பாராட்டையும் தெரிவித்தது. பிறகு, இதை ஜப்பபானில் முதலில் உற்பத்தி செய்யும் திட்டமிட்டுள்ளார். இதற்கு முன்னதாக அவர் காப்புரிமையும் பெற்றுள்ளார்.

தான் 11ம் வகுப்பு வரை படித்து இருந்தாலும், கண்டுபிடிப்புக்கு படிப்பு முக்கியமல்ல என்பதையும். தமிழனால் எதையும் கண்டுபிடிக்கவும் சாதிக்க முடியும் என்று தற்போது தலைநிமிர்ந்து நிற்கின்றார் இவர்.

وَلَقَدْ كَرَّمْنَا بَنِىْٓ اٰدَمَ وَحَمَلْنٰهُمْ فِى الْبَرِّ وَالْبَحْرِ وَرَزَقْنٰهُمْ مِّنَ الطَّيِّبٰتِ وَفَضَّلْنٰهُمْ عَلٰى كَثِيْرٍ مِّمَّنْ خَلَقْنَا تَفْضِيْلًا

" ஆதமுடைய சந்ததியை நிச்சயமாக நாம் கண்ணியப்படுத்தினோம். கரையில் (வாகனங்கள் மீதும்) கடலில் (கப்பல்கள் மீதும்) நாம்தான் அவர்களைச் சுமந்து செல்(லும்படிச் செய்)கிறோம்....." (குர்ஆன் : 17:70)

ஆதமுடைய சந்ததியை அதே நீரை ஆவியாக்கி வாகனங்களை இயங்க வைத்தவனும் அவன்தான் !

நிலையான இயக்க சக்தி
(perpetual motion)

எங்கெங்கு காணினும் சக்தி 11






Impossibility of Perpetual Motion Shown at Chicago Fair

A "BALL power wheel" which is supposed to turn continuously because it is always unbalanced is just one of the many interesting "perpetual motion" models on exhibit in the Hall of Science of A Century of Progress.

In spite of the fact that centuries of effort have failed to produce a single working perpetual motion machine, inventors continue wasting time and money on the idea. This exhibit is intended to show in a convincing manner just why it is impossible to construct such a device. Though many of the models run a surprisingly long time, friction eventually stops every one.

"Ball power wheel" at Century of Progress shows impossibility of perpetual motion. Balls, making wheel always heavier on left side, are supposed to turn it counter-clockwise.

நிலையான இயக்க சக்தியை உருவாக்க மனிதர்கள் ஆதி நாளிலிருந்தே முயற்சி செய்துகொண்டிருக்கிறார்கள். சதா சுற்றிக் கொண்டிருக்க கூடிய சக்கரம் ஒன்றை பற்றி 1500 வருடங்களுக்கு முந்தைய சமஸ்கிருத நூல் ஒன்று சொல்கிறது !

பற்பல வினோத சக்கரங்கள் , வினோதமான சாதனங்கள் , நீர் இறைக்கும் இயந்திரங்கள் என்று சரித்திரம் பூராவும் இறைந்து கிடக்கிறது. இந்த இயந்திரங்களின் நோக்கமெல்லாம் வெளிச் சக்தி எதுவும் இல்லாமல் ஃப்ரீயாக , தானாகவே எப்போதும் சதா ஓடக்கூடிய சாதனத்தை கண்டுபிடிப்பதுதான் .

இந்த இலவச புத்தி நம் இரத்தத்தில் ஊறித்தான் இருக்கிறது. சம்திங் பார் நத்திங் **(Something for Nothing )** இதில் பணம் விட்டவர்கள் ஏராளம் .ஏமாந்து தொலைந்தவர்களும் எத்தனை எத்தனையோ பேர்.

அமெரிக்காவில் ஜோன்ஸ் என்பவருக்கு இதே தொழில் . நிலையான இயக்க சக்திக்கு 200 ஐடியா வைத்திருக்கிறார். 19ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் மட்டும் இந்த மாதிரி மெஷின்களுக்கு 600 பேட்டன்ட்டுகள் (அனுமதி ) வழங்கப்பட்டன. ஒன்று கூட சதா இயங்கவில்லை !

15 ஆம் நூற்றாண்டில் லியானார்டோ டாவின்சி கூட (மோனாலிசா படம் வரைந்தவர்) தானாக சதா ஓடிக் கொண்டே இருக்கும் ஒரு மெஷினுக்கு டிசைன் வரைந்திருக்கிறார் .

1659 இல் ஒருவர் " சூரியனும் சந்திரனும் சுற்றுவது நின்றால் கூட , இந்த மெஷின் சதா சுற்றுவது நிற்காது என்று "ஓவர் பாலன்ஸ்டு வீல் " என்று ஓவரா சீன் போட்டு பிலிம் காட்டினார். மெஷின் பிளானை வரைந்து "இப்படி செய்து பாருங்கள் வெளிச் சக்தி இல்லாமல் சதா சுற்றிக்கொண்டே இருக்கும் "என்று காசை வாங்கிக் கொண்டு ஒரே சுற்றில் ஓடி விட்டார் . பார்த்தால் சுற்றும் போலத்தான் தோன்றியது .செய்து பார்த்தால் ஊஹூம் - உருளைகள் ஏகப்பட்ட சத்தம் போட்டதோடு சரி ! கொஞ்ச நேரத்திற்குப் பிறகு அவை நின்றுவிட்டன.

1715-ல் ஜெர்மனியில் ஆர்ஃபைரியஸ் என்பவர் 12 அடி மரச் சக்கரத்தை பொருத்தி " சதா சுற்றுகிறது பார்" என்று எல்லோரையும் பிரமிக்க வைத்தார். கிட்ட பார்க்கலாமே என்றால் காட்ட மறுத்துவிட்டார். என்ன சல்லியடி வித்தை செய்திருந்தார் என்று தெரியவில்லை !

1813 நியூயார்க்கில் சார்லஸ் ரெட் ஹெஃபர் என்பவர் ஒரு தானாக "சதா சுற்றும் சக்கரத்தை செய்து காட்டினார். ஆனால் மறைமுகமாக பெல்ட் அமைத்து சுவர் வழியாக போய் அடுத்த அறையில் ஒரு தாத்தா ரொட்டியை மென்று கொண்டே கையால் அதை ராட்டை போலச் சுற்றிக் கொண்டிருப்பது கண்டுபிடித்துவிட்டார்கள் !

இதுவரை ஒரு மிஷின் கூட உண்மையாக நிரூபிக்கப்படவில்லை. இன்றைய தேதிக்கு கூட அமெரிக்காவில் ஜான்சன் என்பவர் "விஞ்ஞானிகள் சொல்வதெல்லாம் புருடா. நான் செய்து காட்டுகிறேன் இதோ இதோ " _ என்று பயமுறுத்திக் கொண்டிருக்கிறார் .

நிலையான இயங்கும் சக்தி என்பது விஞ்ஞான விதிகளின்படி சாத்தியமே இல்லை . தெர்மோ டைனமிக்ஸில் இரண்டு விதிகள்தாம் இந்த புருடாவை காட்டிக் கொடுத்து சதி செய்கின்றன !

பிரபஞ்சத்தில் ஒட்டுமொத்தமாக இருக்கும் சக்தியை வரம்பு மீறாமல் மனிதனால் ஓரளவு மட்டும்தான் பயன்படுத்த முடியும் .

புதிய சக்தியை சிருஷ்டிக்கவும் முடியாது , இருக்கிற சக்தியை அழிக்கவும் முடியாது. நம்மால் முடிந்ததெல்லாம் ஒருவித சக்தியை இன்னொரு வித சக்தியாக மாற்றலாம் . _அவ்வளவுதான் . இதைச் செய்ய மட்டும்தான் பிரபஞ்சம் நம்மை அனுமதிக்கிறது .என்ன புரிகிறதா ?

இயந்திரங்கள் யாவும் இந்த மாதிரி
சக்திமாற்றம் செய்யும் சாதனங்கள்தாம் . இப்படி மாற்றும்போது கொடுத்த சக்தி 100 சதவிகிதம் திரும்பப் பெற முடியாது என்கிறது தெர்மோடைனமிக்ஸ் இரண்டாவது விதி . கொடுப்பதைவிட கிடைப்பது குறைவு என்பது இன்ஷூரன்ஸ் எடுக்கும் மட்டுமல்ல ; பிரபஞ்ச நியதியும் அதுதான் !

مَا خَلَقْنَا السَّمٰوٰتِ وَالْاَرْضَ وَمَا بَيْنَهُمَاۤ اِلَّا بِالْحَقِّ وَاَجَلٍ مُّسَمًّى وَالَّذِيْنَ كَفَرُوْا عَمَّاۤ اُنْذِرُوْا مُعْرِضُوْنَ

வானங்களையும், பூமியையும் இவையிரண்டிற்கும் இடையே உள்ளவற்றையும் உண்மையையும், ஒரு குறிப்பிட்ட தவணையையும் கொண்டல்லாமல் நாம் படைக்கவில்லை; ஆனால் நிராகரிப்பவர்களோ, தங்களுக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்யப்பட்டதைப் புறக்கணிப்பவர்களாக இருக்கிறார்கள்.
(அல்குர்ஆன் : 46:3)

எங்கெங்கு காணினும் சக்தி 12 08-09-2020




மின்சார மோட்டார்களின் திறனை குதிரைகளுடன் ஏன் ஒப்பிடுகிறார்கள் ?

ஆரம்ப காலத்தில் மனிதன் எதிரிகளிடமிருந்தும் அபாயங்களில் இருந்தும் தப்பிக்க அவனுக்கு வேகம் தேவையாக இருந்தது .

வேகத்துக்கு அண்டை மிருகங்களில் எதைப் பழக்கலாம் என்று பார்த்தான். ஏமாந்த குதிரை அகப்பட்டது.

ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு முன் மனிதனின் மிக முக்கியமான கண்டுபிடிப்பு "குதிரைகளை பழக்கலாம்" என்பதே .இத்துடன் சக்கரத்தின் கண்டுபிடிப்பும் சேர்ந்துகொள்ள மனிதன் ஒருவகையில் நாகரிகப் பட்டான் . அவன் பயணம் விஸ்தாரம் அடைந்தது. மணிக்கு 20 மைல் சராசரியாக செல்ல முடிந்தது . அதனால் வியாபாரம் , பொருளாதாரம் , யுத்தம் எல்லாமே விருத்தி அடைந்தது .

இந்த " குதிரையை டெக்னாலஜி "யில் இருந்து சமீபத்தில்தான் நாம் வெளிப்பட்டிருக்கிறோம் . நூறு வருஷம் கூட ஆகவில்லை இந்த குதிரை சக்தியை "ஹார்ஸ் பவர் " **(Horse power)** என்னும் சொற்றொடரை இன்னும் மிச்சம் வைத்துக் கொண்டிருக்கிறோம்.

முதலில் மோட்டார் வாகனங்களுக்கு இந்த சொல் பயன்படுத்தப்பட்டது . அது எலக்ட்ரிக்கல் இன்ஜினியரிங்கிலும் ஒட்டிக்கொண்டது .

375 குதிரை சக்தி உள்ள ஒரு எஞ்சின் தோராயமாக 375 குதிரையின் சக்தியை பெற்று இருக்கும் .

( 375 குதிரைகளை எப்படி பூட்டுவார்கள் ? ஐந்து ஐந்தாக சேர்த்தால் சுமார் இரண்டு பர்லாங்கு நீளம் இருக்கும். வண்டிக்காருக்கு முதல் குதிரை தெரியாது . பின் பாரம் முன் பாரம் எல்லாம் எப்படி அட்ஜஸ்ட் பண்ணுவாரோ தெரியவில்லை. அதை விடுங்கப்பா ! )

ஒரு குதிரை சக்தி என்பது 746 வாட் . அதாவது 100 வாட் பல்பு ஏழரைக்குச் சமமானது .

ஆனால் மனிதர்கள் செய்யக் கூடிய வேலைகளை மனிதர்களின் உடல் உழைப்பால் கணக்கிடுகிறார்கள் .

8 பேர் 2 நாட்களில் செய்யக் கூடிய வேலையை 16 பேர் சேர்ந்து செய்தால் அந்த வேலையை எத்தனை நாட்களில் முடிப்பார்கள் ?
இப்படித்தான் வேலையின் பளுவை மனித சக்தியில் கணக்கிடுகிறார்கள் .

ஆனால் நபி (ஸல்) அவர்களின் உடல் சக்தியைப் பற்றி ...

நபி(ஸல்) அவர்கள் இரவில் அல்லது பகலில் தங்களின் மனைவிமார்களிடம் குறிப்பிட்ட நேரத்தில் தங்கக் கூடியவர்களாக இருந்தார்கள்.

'அவர்களின் மனைவியர் பதினோரு பேர் இருந்தார்கள்' என அனஸ் இப்னு மாலிக்(ரலி) கூறியபோது , "நான் அவரிடம், அதற்கு நபி(ஸல்) அவர்கள் சக்தி பெறுவார்களா? என்று நான் கேட்டதற்கு...

'நபி(ஸல்) அவர்களுக்கு முப்பது பேர்களுடைய சக்தி கொடுக்கப்பட்டுள்ளது' என நாங்கள் பேசிக் கொள்வோம்' என அனஸ்(ரலி) கூறினார்' என கதாதா அறிவித்தார்.

மற்றோர் அறிவிப்பில் 'நபி(ஸல்) அவர்களுக்கு (அந்நேரத்தில்) ஒன்பது மனைவியர் இருந்தனர்' என்று கூறப்பட்டுள்ளது. ஸஹீஹ் புகாரி : 268.

நபி (ஸல்) அவர்களின் உடல் சக்தி ஜின்களின் உடல் சக்தியைக் காட்டிலும் மிகைத்திருந்தது .

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

'இஃப்ரீத் என்ற ஜின் நேற்றிரவு என் முன் திடீரெனத் தோன்றி , என் தொழுகையைக் கெடுக்க முயன்றது. அதைப் பிடிப்பதற்கான சக்தியை இறைவன் எனக்கு வழங்கினான்.

காலையில் நீங்கள் அனைவரும் அதைக் காண வேண்டுமென இந்தப் பள்ளிவாசலிலுள்ள ஒரு தூணில் அதைக் கட்டி வைக்க எண்ணினேன்.

'இறைவா! எனக்குப் பின் வேறு எவருக்கும் நீ வழங்காத ஓர் ஆட்சியை எனக்கு நீ வழங்குவாயாக'(திருக்குர்ஆன் 38:35) என்ற என் சகோதரர் ஸுலைமான் (அலை) அவர்களின் பிரார்த்தனை எனக்கு நினைவு வந்தால் அதை விரட்டி அடித்து விட்டேன்.'

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.
ஸஹீஹ் புகாரி : 461.

ர.ரா

சந்திரனின் ஈர்ப்பு சக்தி

எங்கெங்கு காணினும் சக்தி 14



பூமி தன்னைத்தானே ஒருமுறை சுற்றி வந்தால் அது ஒரு நாள். சந்திரன் பூமியை ஒருமுறை சுற்றி வந்தால், அது ஒரு மாதம். பூமி சூரியனை ஒருமுறை சுற்றி வந்தால், அது ஒரு வருடம். அடிப்படையில் நேரத்தைப் பற்றிய நம்முடைய கணிப்பு, சூரியனைச் சுற்றி பூமியின் இயக்கம் மற்றும் பூமியைச்சுற்றி சந்திரனின் இயக்கம் ஆகிய இரண்டு விஷயங்களைப் பொறுத்தே இருக்கிறது.

மேலும் சூரியன் மற்றும் சந்திரனைப் பொறுத்து, அந்தந்தக் காலகட்டத்தில் பூமி இருக்கும் இடம், நம் உடல் மற்றும் மனதின் செயல்பாடுகளில் நேரடித் தாக்கத்தை ஏற்படுத்துகிறது !

இந்த பூமிக்கு முக்கியமாக சூரியனிலிருந்துதான் சக்தி கிடைக்கிறது என்பது உங்களுக்குத் தெரியும். உங்கள் உடல் என்பதும் அந்த பூமியின் ஒரு சிறு துகள்தான். எனவே உங்களுக்கும் முக்கியமாக சூரியனிலிருந்துதான் சக்தி கிடைக்கிறது. எனவே எவ்வளவு தூரம் உங்களால் சூரியனின் சக்தியை உள்வாங்கிக் கொள்ள முடியும் என்பதைப் பொறுத்து உங்கள் சக்தி தீர்மானிக்கப்படுகிறது !

ஆகவே சூரியனைச் சுற்றிவரும் பூமியின் நகர்வு, நேரத்தைத் தீர்மானிப்பதற்கான அளவுகோலாக மட்டும் அல்லாமல், நாம் எவ்வளவு சக்தியுடன் இருக்கிறோம் என்பதையும் தீர்மானிக்கிறது.

ஆகவே வாழ்க்கைக்கு அடிப்படையாக இருக்கும் இரண்டு அடிப்படை அம்சங்களான 'நேரம்' மற்றும் 'சக்தி' பெரும்பாலும் சூரியனாலேயே தீர்மானிக்கப்படுகின்றன !

இந்த உலகில் இருக்கும் அனைத்தின் மீதும் சூரியனுக்கு இருக்கும் ஆதிக்கம் மிகப் பெரியது. ஆனால் சந்திரனால் சூரியனைப் போல் சக்தியை வெளியிட முடியாது என்றாலும் அது பூமிக்கு மிகவும் நெருக்கமாக இருப்பதால் அதுவும் நம்முடைய உடல், மன அமைப்புகளின் மேல் அளப்பரிய தாக்கத்தை ஏற்படுத்துகிறது !

ஏதோ ஒரு இயந்திரத்தை சுழல வைத்துத்தான் நாம் மின்சக்தி தயாரிக்கிறோம். அதேபோல சந்திரன் பூமியைச் சுற்றிவரும்போது, அந்த சுழற்சியால் அங்கு சக்தி உருவாகிறது. எனவே சந்திரனுடைய ஆதிக்கம் பூமியின் மேல் காந்த ஈர்ப்பு சக்தியாக இருக்கிறது.

எனவேதான் நமக்கு நடக்கும் வெளிப்புற வாழ்வை புரிந்து கொள்ள சூரியனையும் உள்புற வாழ்வை புரிந்து கொள்ள சந்திரனையும் பார்க்கிறோம்.

அமாவாசை மற்றும் பௌர்ணமி நாட்களில், சந்திரன், கடலில் பேரலைகளை ஏற்படுத்தி மிகப் பெரிய தாக்கத்தை உருவாக்குவது உங்களுக்குத் தெரியும்.

அதாவது கடல் நீர் முழுதும் அந்த இரு நாட்களில் அல்லது அதைச் சுற்றியுள்ள நாட்களில் மேலெழும்புகின்றன. தண்ணீர் மட்டுமல்ல, அனைத்துமே மேலெழும்புகின்றன.

ஆனால் நீரில் அது கண்கூடாகத் தெரிகிறது. உங்கள் உடலில் கூட எழுபது சதவிகிதத்திற்கும் மேல் நீராக இருப்பதால், அந்த இரு நாட்களில் உங்கள் உடலில் இருக்கும் நீரும் வேகமாக மேலெழும்பலாம். குறிப்பாக உங்கள் மூளையில் எழுபத்தி எட்டு சதவிகிதம் நீராக இருக்கிறது. எனவே சந்திரனின் தாக்கம் மூளையின் மேல் அதிகமாக இருக்கும்.

மனோரீதியாக பலவீனமான மனிதர்கள் அன்றைய தினத்தில் மேலும் சமநிலை தவறுகிறார்கள் என்பதை நாம் கவனித்திருக்கிறோம்.

எனவே சந்திரனின் தாக்கம் கொண்ட இரு இரவுகளான அமாவாசை , பௌர்ணமி போன்ற இரவுகளில் திக்ரு - ராத்திபு மஜ்லீஸ் வைக்கப்படுகிறது !

அதாவது அமாவாசை மற்றும் பௌர்ணமி நாட்களில், மனிதனின் மேல் சந்திரனின் தாக்கம் இருக்கும்போது, மனிதன் எந்த தன்மையில் இருக்கிறானோ அந்த தன்மை மேலும் சிறிது அதிகமாகிறது. மேம்பட்ட தன்மையில் இருந்தால் மேலும் மேம்பாடு அடைகிறது. பாதிப்புத் தன்மையில் இருந்தால், அந்தப் பாதிப்பு இன்னமும் அதிகமாகிறது.

ஆனால் பாதிக்கப்படுவதை மட்டும் மனிதன் நன்றாக உணர்கிறான். தன்மை மேம்படும்போது அது நமக்குத் தெரிவதில்லை. ஏனென்றால் இது மனிதனின் குணம். உங்கள் உடலில் ஏதாவது நன்றாக நடந்தால் அது உங்கள் கவனத்திற்கு வருவதில்லை. ஆனால் உடல் ஏதாவது காயப்பட்டால் அது உடனே உங்கள் கவனத்திற்குள் வருகிறது.

சந்திரனின் சுழற்சிகளும், பெண் உடலில் இருக்கும் உயிரியல் சார்ந்த சுழற்சிகளும் நூறு சதவிகிதம் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை. அதில் எந்த சந்தேகமும் கிடையாது.
பெண்களின் மாதவிலக்கு மற்றும் பேறுகாலம் உட்பட சந்திரன் மாதக்கணக்கான 28 நாட்களை அடிப்படையாக இயற்கை வகுத்துள்ளது

எனவே நமது பிறப்பின் அடிப்படையே கூட சந்திரனின் சுழற்சிக்குத் தொடர்புடையதாக இருக்கிறது. எனவே நமது உடல், மனக் கட்டமைப்பின் மீது சந்திரனுக்குள்ள ஆதிக்கம் மறுக்க முடியாதது. எனவே உள்தன்மை பற்றி அக்கறை கொண்டிருக்கும் அத்தனை கலாச்சாரங்களும், இயல்பாகவே சந்திர நாள்காட்டி, மற்றும் சந்திரசூரிய நாள்காட்டியை பயன்படுத்தினார்கள்.

هُوَ الَّذِىْ جَعَلَ الشَّمْسَ ضِيَآءً وَّالْقَمَرَ نُوْرًا وَّقَدَّرَهٗ مَنَازِلَ لِتَعْلَمُوْا عَدَدَ السِّنِيْنَ وَالْحِسَابَ مَا خَلَقَ اللّٰهُ ذٰلِكَ اِلَّا بِالْحَـقِّ يُفَصِّلُ الْاٰيٰتِ لِقَوْمٍ يَّعْلَمُوْنَ
அவனே சூரியனை ஒளியாகவும் (பிரகாசமாகவும்), சந்திரனை (அழகிய) வெளிச்சம் தரக்கூடியதாகவும் ஆக்கி, ஆண்டுகளின் எண்ணிக்கையையும் (மாதங்களின்) கணக்கையும் நீங்கள் அறிந்து கொள்வதற்காக அவைகளுக்கு (மாறிமாறி வரக்கூடிய) தங்கும் இடங்களையும் நிர்ணயம் செய்தான். மெய்யான தக்க காரணமின்றி இவைகளை அல்லாஹ் படைக்கவில்லை. அறியக்கூடிய மக்களுக்காக(த் தன் ஆற்றலுக்குரிய) சான்றுகளை இவ்வாறு விவரிக்கிறான்.
(அல்குர்ஆன் : 10:5)

ர.ரா
இன்ஷா அல்லாஹ் ... 11-09-2020

அடுத்த தொடர் பதிவுகள்
"இஸ்லாத்தின் தேன் துளிகள் "

இத்தொடரின் ஒவ்வொரு பதிவும் தனித்துவம் வாய்ந்த இஸ்லாத்தின் துணுக்குச் செய்திகள் ,

ஒவ்வொன்றும் வேறுபட்டு மாறுபட்ட சிந்தனை கொண்ட பதிவுகள் !

அடிக்கடி கேள்விப்பட்ட , கேள்விப்படாத வரலாற்று பின்னணி செய்திகளின் நுட்பமான அடிநாதம் .

எதை எதையோ கிதாபுகளில் தேடிக் கொண்டிருக்கும் போது , அவ்வப்போது கண்ணில் பட்டு புருவத்தை உயர்த்திய துணுக்குகள் ,

மற்றும் பல கிதாபுகளில் அடிக்கோடிட்டும் , பின்குறிப்பு கொடுத்தும் , தனியாக எடுத்துக்காட்டிய செய்திகள்.

மொத்தத்தில் மஹா தொடராக எழுத நினைக்கும் பதிவுகள் .

வாரத்தின் நாட்களும் அவைகளின் சிறப்புகளும்
இஸ்லாத்தின் தேன்துளிகள் 01




அல்லாஹுத்தஆலா பூமியை சனிக்கிழமையும், மலைகளை ஞாயிற்றுக்கிழமையிலும் ,மரம் மட்டை போன்ற தாவர ஜாதிகளை திங்கட்கிழமையும் , பெருத்த கேடான காரியங்களை செவ்வாய்க் கிழமையிலும் , ஒளியை புதன்கிழமையிலும் , ஊர்ந்து திரியும் உயிர்ப் பிராணிகளை வியாழக்கிழமையிலும் , மனிதனை வெள்ளிக்கிழமை அஸருக்குப் பிறகும் படைத்தான் என்றும் ஹதீஸில் வந்திருக்கிறது !

உலகம் படைக்கப்பட்டதும் வெள்ளிக்கிழமை , உலகின் இறுதி நாளும் வெள்ளிக்கிழமைதான் !

வியாழக்கிழமையிலும், சனிக் கிழமையிலும் அல்லாஹ் பரக்கத் செய்திருக்கிறான் என்று ஹதீஸில் வந்திருப்பது குறித்து ஹஜரத் ஷேக் ஸத்துருதீன் கூனவி (ரஹ்) அவர்கள் வினவிய போது , " அந்த இரு தினங்களும் வெள்ளிக்கிழமைக்கு அடுத்து இருப்பதால்தான் " என்று பதில் கூறினார்கள்.

ஞாயிற்றுக்கிழமையை பற்றி நபிகள் நாயகம் (ஸல் ) அவர்களிடம் வினவப்பட்டது . அதற்கு அந்த நாள் மரங்கள் வைப்பதற்கும் , வீடு கட்டுவதற்கும் உரிய நாள் என்று பதில் கூறப்பட்டது . ஏனெனில் அந்த நாளில்தான் அல்லாஹுத்தஆலா இவ்வுலகை படைக்க ஆரம்பித்தான்.
சுவர்க்கலோகம் அன்று தான் கட்டப்பட்டது.

திங்கட்கிழமை குறித்து வினவப்பட்டதற்கு , "பிரயாணத்திற்கும் வியாபாரத்திற்கும் உரிய நாள் " என்று பதில் சொல்லப்பட்டது

இத்தினத்தில் தான் நபி ஷுஹைப் (அலை ) அவர்கள் வியாபாரத்திற்காக பிரயாணம் சென்று தக்க லாபத்தை அடைந்தார்கள் .

செவ்வாய்க்கிழமை பற்றி குறித்து வினவப்பட்டதற்கு " ரத்தத்தின் நாள் " என்று பதில் கூறப்பட்டது

இன்றைய தினத்தில் தான் ஹவ்வா அவர்கள் மாதாந்திர ருதுவை கண்டார்கள் . இத்தினத்தில் தான் ஹஜ்ரத் ஆதம் (அலை) அவர்களின் புதல்வர்கள் தனது சகோதரர் ஹாபீலைக் கொலை செய்தார்

ஜக்கரியா (அலை ) அவர்கள் புதல்வர் யஹ்யா (அலை) அவர்களை சூனியக்காரர்களால் கொல்லப்பட்டார் .

பிர்அவ்னின் மனைவி ஆசியா (ரலி) அவர்கள் ஷஹீதாக்கப்பட்ட நாளும் இதே நாளில்தான் .

இந்நாளில் இரத்தம் குத்தி வாங்குவதே நபிகள் நாயகம் ஸல் அவர்கள் பலமாக தடுத்திருக்கிறார்கள் . இது ஒரு 'ஸாஅத்து ' இருக்கிறது . அந்த ஸாஅத்தில் வெளிப்பட்ட உதிரம் நிற்பதே இல்லை . சிற்சில சமயங்களில் அந்த ஸாஅத்தில் வெளிப்பட்ட உதிரம் நின்றவுடன் அந்த மனிதர் இறந்து விடுவதும் உண்டு என்றும் சொல்லப்படுகிறது .

இன்றைய தினத்தில் தான் அல்லாஹுத்தஆலா இப்லீஸை பூமிக்கு அனுப்பினான் . இந்நாளில் தான் நரகம் உண்டாக்கப்பட்டது . ஆதமுடைய மக்களின் ஆன்மா கைப்பற்றும் அதிகாரத்தை மலக்குல் மவுத்திற்கு இன்றைய தினத்தில் தான் அல்லாஹ் கொடுத்தான்.

புதன்கிழமை குறித்து வினப்பட்டதற்கு , "நஹஸான நாள் " என்று பதில் கூறப் பட்டது . ஏனெனில் இந்த தினத்தில்தான் ஃபிர்அவனும் அவனைச் சார்ந்தவர்களும் கடலில் மூழ்கடிக்கப்பட்டனர் .

ஆது தமூது கூட்டத்தாரும் ஸாலிஹ் நபியின் சமூகத்தினரும் அழிந்த நாளும் இதுவே .

இன்றைய தினத்தில் நாம் நகம் வெட்டிக் கொள்வது குறித்து விலக்கப் பட்டிருக்கிறது . இவ்வாறு புதன் அன்று வெட்டிக்கொள்வது வெண்குஷ்டத்தை உண்டு பண்ணுமாம் .

புதன் அன்று நோயாளிகளை விசாரிக்கச் செல்வதை சிலர் அதிருப்தியாக கருதுகிறார்கள்.

புதன்கிழமையில் அடித்திரும்பிய பிறகிலிருந்து (நடுப்பகலிருந்து ) அஸருடைய நேரத்திற்குள் துஆ கபூலாக்கப்படும் என்பதாக மின்ஹாஜுல் ஹலீமீ என்ற நூலில் கூறப்பட்டிருக்கிறது .

ஏனெனில் இந்த தினத்தில்தான் இதே சமயத்தில்தான் "ஜங்கே அஹ்ஜரா"பைக் குறித்து நபிகள் நாயகம் (ஸல் ) அவர்கள் துஆ கேட்டு அது கபூலாயிற்று.

மற்ற தினத்தில் குளிக்கா விட்டாலும் இத்தினத்தில் குளிப்பது நல்லதென சொல்லப்பட்டிருக்கிறது .

புதன்கிழமை ஆரம்பிக்கப்பட்ட காரியம் பூர்த்தியாகாமல் போகவில்லை என்றும் சொல்லப்படுகிறது . எனவே கல்வி போன்றவைகளும் இத்தினத்தில் ஆரம்பிப்பது நல்லது .

இந்நாளில் நூல்களை எழுத ஆரம்பிக்க வேண்டும் என்பதற்காக இந்த நாள் வருவதை ' ஹிதாயா' என்ற நூலின் ஆசிரியர் எதிர்ப்பார்த்துக் கொண்டிருப்பாராம் .

வியாழக்கிழமை குறித்து வினப்பட்டதற்கு " நாட்டங்கள் நிறைவேற்றுவதற்கும் , அரசர்களிடம் செல்வதற்கும் உரிய நாள்" என்று கூறப்பட்டது .

ஏனெனில் இன்றைய நாளில்தான் ஹஜரத் இப்ராஹீம் (அலை) அவர்கள் எகிப்து அரசனிடம் சென்று தங்களது தேவைகளை அவனைக் கொண்டு நிறைவேற்றிக் கொண்டார்கள் .

அன்னை ஹாஜிரா (ரலி ) அவர்கள் ஹஜரத் இப்ராஹீம் (அலை) அவர்களுக்கு சமர்ப்பிக்கப்பட்ட நாளும் இதுவே.

வெள்ளிக்கிழமை குறித்து வினப்பட்டதற்கு " விவாகத்திற்குரிய நாள்" என்று கூறப்பட்டது

ஹஜரத் ஆதம் (அலை) அவர்கள் ஹவ்வா உம்மாவையும் , ஹஜரத் யூசுப் (அலை) அவர்கள் ஸுலைகா உம்மாவையும் , ஹஜ்ரத் மூஸா (அலை) அவர்கள் ஷுயைப் நபி அவர்களது புதல்வி ஸஃபூரா உம்மாவையும் , ஹஜ்ரத் சுலைமான் (அலை) அவர்கள் பல்கீஸ் உம்மா அவர்களையும் விவாகம் செய்த நாள் இதுவே ஆகும்

நமது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இத்தினத்தில் தான் உம்முல் மூமினீன் ஹஜரத் கதீஜா நாயகி (ரலி) அவர்களையும் , உம்முல் மூமினீன் ஆயிஷா ஸித்திக் கா நாயகி (ரலி) அவர்களையும் விவாதம் செய்தார்கள்

இந்த நாளில் நகம் வெட்டிக் கொள்பவரின் நோயை அல்லாஹுத்தஆலா குணமாக்கி அவருக்கு சுகத்தை கொடுக்கிறான் என்பதாக இப்னு மஸ்வூத் (ரலி) அவர்கள் ரிவாயத்துச் செய்திருக்கிறார்கள்.

குர்ஆனில் அல் ஜும்ஆ (வெள்ளிக்கிழமை ) என்று 62 -வது அத்தியாயத்திற்கு பெயரிட்டுள்ளான் . சனிக்கிழமை என்று குறிப்பிடும் அல்லாஹ் வெள்ளிக்கிழமையை " யவ்ம ஜும்ஆ ( 62 : 9 , 10 ) ஜும்ஆ உடைய நாள் என்பதாக குறிப்பிடுகின்றான்.

இதிலிருந்து ஜும்ஆ தினத்தின் சிறப்பை தெரிந்து கொள்ள முடிகிறது .

يٰۤاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْۤا اِذَا نُوْدِىَ لِلصَّلٰوةِ مِنْ يَّوْمِ الْجُمُعَةِ فَاسْعَوْا اِلٰى ذِكْرِ اللّٰهِ وَذَرُوا الْبَيْعَ ‌ؕ ذٰ لِكُمْ خَيْرٌ لَّـكُمْ اِنْ كُنْتُمْ تَعْلَمُوْنَ

ஈமான் கொண்டவர்களே! ஜுமுஆ உடைய நாளில் தொழுகைக்காக நீங்கள் அழைக்கப்பட்டால், வியாபாரத்தை விட்டுவிட்டு, அல்லாஹ்வைத் தியானிக்க (பள்ளிக்கு) விரைந்து செல்லுங்கள் - நீங்கள் அறிபவர்களாக இருப்பின் இதுவே உங்களுக்கு மிக மேலான நன்மையுடையதாகும்.

(அல்குர்ஆன் : 62:9)

فَاِذَا قُضِيَتِ الصَّلٰوةُ فَانْتَشِرُوْا فِى الْاَرْضِ وَابْتَغُوْا مِنْ فَضْلِ اللّٰهِ وَاذْكُرُوا اللّٰهَ كَثِيْرًا لَّعَلَّكُمْ تُفْلِحُوْنَ

பின்னர், (ஜுமுஆ) தொழுகை நிறைவேற்றப்பட்டு விட்டதும், (பள்ளியிலிருந்து வெளிப்பட்டு) பூமியில் பரவிச் சென்று அல்லாஹ்வுடைய அருளைத் தேடிக் கொள்ளுங்கள்; அன்றியும், நீங்கள் வெற்றியடையும் பொருட்டு, அல்லாஹ்வை அதிகமதிகம் தியானம் செய்யுங்கள்.
(அல்குர்ஆன் : 62:10)

அழகிய திருப்பெயர்கள்.
இஸ்லாத்தின் தேன் துளிகள் 07




" அல்லாஹ்வுக்கு அழகிய திருப்பெயர்கள் இருக்கின்றன. எனவே அவற்றைக் கொண்டு அவனை நீங்கள் அழையுங்கள் " என்று அல்லாஹ் நம்மை ஏவுகிறான்.

அவனுக்கு அழகிய திருப்பெயர்கள் இருக்கின்றன என்பது பற்றி குர்ஆனில் (17:10 ) (20 :8) (59 : 24 ) ஆகிய இடங்களிலும் கூறப்பட்டிருக்கிறது. அத்திருப்பெயர்கள் 99 .

அனைத்தையும் "ஹுவல்லாஹுல்லதீ லாஇலாஹ இல்லாஹு ... என்று துவங்கி .... அல்வாரி துர் ரஷீதுஸ் ஸபூர் "
என்று நிறைவடையும் .
ஒரு சுலோகத்தில் எளிதில் நினைவு படுத்திக் கொள்வதற்காக அமைக்கப் பெற்றுள்ளது

இவை போக முன்னுள்ள ஆகமங்களில் அல்லாஹ்வுக்கு 4 ஆயிரத்திற்கும் மேற்பட்ட திருப்பெயர்கள் கூறப்பட்டுள்ளன !

இறைநேசர் செல்வர் சுல்தானுல் ஆரிபீன் செய்யது அகமது கபீர் ரிபாயீ ரஹ்மத்துல்லாஹி அவர்களிடம்,

"அல்லாஹ்வுக்கு 5000 திருப்பெயர்கள் இருக்கின்றனவாமே ? " என்று கேட்டபொழுது , "ஐயாயிரம் என்ன உலகிலுள்ள படைப்பினங்களும், மரங்களும் , இலைகளும் ,எத்தனை இருக்கின்றனவோ அத்தனையும் அவனின் திருப்பெயர்கள்தானே.. " என்று பதிலளித்தார்கள்.

"அஸ்மாஉல் ஹுஸ்னா " பற்றி பல்வேறு மொழிகளில் மிகுதமான நூல்கள் வெளிவந்திருக்கின்றன.

எண்ணங்கள் ஈடேற, அச்சங்கள் அகல , திடுக்கங்கள் நீங்க , மன அமைதி உண்டாக , நற்பெயர் பெற்றிட இவற்றை முறைப்படி ஓதி வர வேண்டும் என்று சான்றோர்கள் கூறுகின்றனர் .

அழகிய திருப்பெயர்களை உடைய அல்லாஹ் ஒருவன் அழகை நேசிக்கிறவன் ; தான் அழகிய அமைப்பிலேயே மனிதனைப் படைத்ததாக தித்திக்கும் திருமறையில் அவன் கூறுகிறான். எனவே தான் குழந்தைகளுக்கு அழகிய பெயர்களை வைக்க வேண்டும் என்று நபிகள் நாயகம் (ஸல் ) போதித்துள்ளார்.

ஹஸன் (ரலி ) பிறந்தபோது ஹஸரத் அலி (ரலி) அவர்கள் குழந்தைக்கு
"ஹர்பு " (யுத்தம் ) என்று பெயர் வைத்திருந்தார்கள் பேரரைப் பார்க்க வந்த பெருமானார் (ஸல்) அவர்கள் இந்தப் பெயரை உடனே மாற்றி
" ஹஸன் " (அழகு ) என்று பெயர் சூட்டினார்கள்.

பலவீனமான ஆன்மா !

இஸ்லாத்தின் தேன் துளிகள் 08




ஒரு பெண் முதல் பிரசவத்தில் பெண் குழந்தை பெறுவது பரக்கத் உள்ளது.

பெண் குழந்தைகளால் ஒரு வஸ்துவை கொண்டு ஒருவர் சோதிக்கப்பட்டார் அப் பெண் குழந்தைக்கு உபகாரம் செய்யுங்கள் அப்பெண்கள் அவருக்கு நரகத்தை விட்டும் தூரமாக்கி வைப்பார்கள் .

சிரமம் இல்லாத குழந்தை வேண்டும் என அவனிடம் நான் கேட்டேன் எனக்கு பெண்மக்களை கொடுத்தான் நபி (ஸல்) கூறியுள்ளார்கள்

அல்லாஹுத்தஆலா இதையே தன் திருமறையில் 42 : 49 திருவசனத்தில் பெண் மகள்களைத்தான் தான் முதலில் குறிப்பிட்டு இவை எல்லாம் அல்லாஹ்வின் நன்கொடைகள் என்று அறிவுறுத்துகிறான் .

لِلّٰهِ مُلْكُ السَّمٰوٰتِ وَالْاَرْضِ‌ يَخْلُقُ مَا يَشَآءُ‌ يَهَبُ لِمَنْ يَّشَآءُ اِنَاثًا وَّيَهَبُ لِمَنْ يَّشَآءُ الذُّكُوْرَ ۙ

அல்லாஹ்வுக்கே வானங்களுடையவும் பூமியுடையவும் ஆட்சி சொந்தமாகும்; ஆகவே தான் விரும்பியவற்றை அவன் படைக்கின்றான்; தான் விரும்புவோருக்குப் பெண் மக்களை அளிக்கிறான்; மற்றும் தான் விரும்புவோருக்கு ஆண் மக்களை அளிக்கின்றான். (குர்ஆன் : 42:49)

"ஒருவருக்கு பெண் குழந்தை பிறந்து விட்டால் அந்த இடத்திற்கு அல்லாஹ் வானவர்களை அனுப்புகிறான். அவர்கள் அங்கு கூறுவார்கள்: "வீட்டில் உள்ளவர்களே! உங்கள் மீது சாந்தி உண்டாகட்டும்"

பின்னர் அக்குழந்தையை தன் இறக்கைகளால் அரவணைத்துக் கொள்கிறார்கள். மேலும் அதன் தலை மீது கரங்களால் தடவியவாறு கூறுகின்றார்கள் "இது ஒரு பலவீனமான ஆன்மாவாகும் இக்குழந்தையை பாதுகாத்து வளர்ப்பவருக்கு மறுமைநாள் வரையில் இறைவனின் உதவி கிடைத்துக் கொண்டே இருக்கும்" (அறிவிப்பாளர்: இப்னு ஷுரைத் ரளியல்லாஹு அன்ஹு, நூல்: அல்முஅஜமுஸ் ஸகீர் 243)

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்;

"யார் இரு பெண் குழந்தைகளை அவர்கள் பருவ வயது அடைகிற வரை பொறுப்பேற்று கருத்தாக வளர்க்கிறாரோ, அவரும் நானும் மறுமை நாளில் இப்படி வருவோம்" என்று சொல்லி தமது இரு விரல்களையும் இணைத்து காட்டினார்கள். (நூல்: முஸ்லிம் 5127)

"இந்த பெண் குழந்தைகளுக்கு யார் பொறுப்பேற்று கொள்கிறார்களோ, அவர்கள் நரகம் சென்று விடாமல் தடுக்கும் தடையாக இந்த குழந்தை இருக்கும்" என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (நூல்: புகாரி 5995)



அவன் எங்களை காப்பாற்றுவான் !

இஸ்லாத்தின் தேன் துளிகள் 09

காட்டில் ஒரு கிணறு இருந்தது . அக் கிணற்றிலிருந்து நீர் அருந்துவதற்காக ஒரு தர்வேஷ் கயிற்றையும் , நீர் இறைக்கும் வாளியையும் கொண்டு வந்தார் .

கிணற்றினுள் வாளியை விட்டதும் தண்ணீருடன் அதன் மேலே இழுத்தபோது , கயிறு அறுந்து கிணற்றில் வாளி விழுந்துவிட்டது .

ஆகவே நீர் எடுக்க வந்த அந்த தர்வேஷ் தனது வாளியை எடுத்துக் கொண்டு போக வேண்டும் என்பதற்காக கிணற்றின் அருகிலேயே உட்கார்ந்து கொண்டிருந்தார் .

அதற்குள்ளாக தாகம் அடைந்த ஒரு மான் அங்கு வந்தது . கிணற்றில் உள்ள நீர் மேலே பொங்கி வந்தது . அம் மான் அந்த நீரை அருந்திவிட்டு சென்றது. கிணற்று நீர் அந்த மானுக்காக மேலே பொங்கி வந்ததனால் அந்த வாளியும் மேலே வந்தது . அதனை அந்த தர்வேஷ் எடுத்துக்கொண்டு ,

"இறைவா...! எனது அந்தஸ்து இந்த மானின் அந்தஸ்து கூட இல்லையே " என்று பிரார்த்தித்தார் .

அப்போது " தர்வேஷ் ! இக் கிணற்றுக்கு நீர் வரும்போது கயிறு வாளி ஆகியவைகளுடன் வந்தீர். ஆனால் அந்தமான் நம் மீது தவக்குல் வைத்து அவ்வாறான உபகரணங்கள் ஏதும் இல்லாமல் வெறுமனே வந்தது " என்று ஒரு அசரீரி குரல் கேட்டது .

யாருமற்ற பாரா பள்ளத்தாக்கு. அந்த கொடும் பாலைவனத்தில் தன் மனைவியையும் , கைக்குழந்தையையும் தனியே விட்டு விட்டு புறப்பட்டபோது ,

" எங்களை தனியே விட்டுப் போவது இறைக்கட்டளையா ? " என்று அன்னை ஹாஜரா (அலை) தன் கணவர் நபி இப்ராஹீம் (அலை ) அவர்களிடம் கேட்டார்கள் .

"ஆம் " என்றார்கள் .

" அந்த இறைவன் மீது நம்பிக்கை (தவக்கல்த் ) வைக்கிறேன் .அவன் எங்களை காப்பாற்றுவான். நீங்கள் போகலாம் "

குழந்தை தண்ணீர் தாகத்தால் அழ ... தண்ணீர் யாரேனும் கொண்டு வருவார்களா...? மலையின் உச்சியில், தன்னைச் சுற்றி யாரும் இல்லாமல் தனியாக இருந்த அன்னை ஹாஜரா தூரத்தில் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார். ஒருவரும் தென்படவில்லை.

அவர் மலையிலிருந்து இறங்கி ஓடி பள்ளத்தாக்கின் குறுக்கே ஓடினார், பிறகு, இன்னொரு மலையின் மீது ஏறி மீண்டும் தூரத்தில் உற்றுப் பார்க்கிறார். யாரையும் காண முடியவில்லை.

தாகத்தை தணிப்பதற்கு ஒரு சொட்டு நீர் கூட இல்லை. பெற்றோர்கள் கேட்கக் கூடிய ஒலியிலேயே மிகவும் கஷ்டமான கடுமையான ஒலி தங்களுடைய குழந்தைகளுடைய அழுகுரல்தான்.

அல்லாஹ் வானவர் ஜிப்ரீல் (அலை) அவர்களை அனுப்பி பூமியை அடித்து, தாயுக்கும், குழந்தைக்கும் நீரை வரவழைத்தான்.

இன்று வரை, அன்னை ஹாஜரா (அலை) அவர்களின் ஜம்ஜம் கிணற்றிவிருந்து மில்லியன் கணக்கான ஹஜ், உம்ரா செய்பவர்கள் தண்ணீர் குடித்தும் சேமித்தும் கொண்டிருக்கிறார்கள்.

"இது தவக்கல்த்து அலல்லாஹ் ! "என்று இறைவன் மீது நம்பிக்கை வைத்தற்காக கிடைத்த இறைவன் கொடுத்த அருள் .

ஐங்காலத் தொழுகை

இஸ்லாத்தின் தேன் துளிகள் 10



ஹஜரத் ஆதம் (அலை) அவர்கள் முதன்முதலாக ஃபஜர் தொழுகையை இரண்டு ரக்அத்தாக நிறைவேறியவர்கள்.

ஹஜரத் இப்ராஹீம் (அலை ) அவர்கள் முதன் முதலாக லுஹர் தொழுகையை நான்கு ரக்அத்தாக நிறைவேறியவர்கள் .

ஹஜரத் யூனுஸ் (அலை ) அவர்கள் முதன் முதலாக அஸர் தொழுகையை நான்கு ரக்அத்துக்களாக நிறைவேற்றியவர்கள்

ஹஜரத் ஈஸா (அலை ) அவர்கள் முதன் முதலாக மஃரிப் தொழுகையை மூன்று ரக்அத்துக்களாக நிறைவேறியவர்கள்

ஹஸ்ரத் தாவூத் (அலை) அவர்கள் முதல் முதலாக மஃரிப் தொழுகையை மூன்று ரக்அத்துக்களாக நிறைவேற்றியவர் என்றும் சொல்லப்படுகிறது

ஹஜ்ரத் மூஸா (அலை) அவர்கள் முதன் முதலாக இஷா தொழுகையை நான்கு ரக்அத்துகளாக நிறைவேற்றியவர்கள் .

இறுதி நபியான நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள்தான் முதன் முதலாக வித்ரு தொழுகையை மூன்று ரக்அத்துக்கள் தொழுது , அன்றைய தினத்தின் தொழுகை வணக்கத்தின் முத்திரை பதித்தார்கள் .

ஐங்கால தொழுகையை பற்றி குறிப்பும் ஏவலும் திருக்குர்ஆனில் வருகிறதா... என்ற ஹஜரத் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களிடம் கேட்டதற்கு " ஆம் "என்று பதில் அளித்துள்ளார்கள் .

فَسُبْحٰنَ اللّٰهِ حِيْنَ تُمْسُوْنَ وَحِيْنَ تُصْبِحُوْنَ

ஆகவே, (முஃமின்களே!) நீங்கள் மாலையி(லாகும் பொழுதி)லும், நீங்கள் காலையி(லாகும் பொழுதி)லும் அல்லாஹ்வை துதித்துக் கொண்டிருங்கள்.
(அல்குர்ஆன் : 30:17)

وَلَـهُ الْحَمْدُ فِى السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَعَشِيًّا وَّحِيْنَ تُظْهِرُوْنَ

இன்னும் வானங்களிலும், பூமியிலும்; அவனுக்கே புகழனைத்தும்; இன்னும், இரவிலும் நீங்கள் ளுஹருடைய நேரத்திலாகும் பொழுதும் (அல்லாஹ்வைத் துதியுங்கள்).
(அல்குர்ஆன் : 30:18)

என்ற குர்ஆன் வசனங்களை ஓதிக் காண்பித்து , " தும்ஸூன " அதை பதத்தில் மஃரிபும் , இஷாவும் சேர்ந்து விடுகின்ற " துஸ்பிஹூன " என்ற பதத்தில் பஜ்றுடைய தொழுகையும் ,
"அஷிய்யன் " என்ற பதத்தில் அஸர்த் தொழுகை , " துல்ஹிரூன் " என்ற பதத்தில் லுஹர் தொழுகையும் கருத்தாகும் என்று விளக்கியுள்ளார்கள்.

"நம்பிக்கை கொண்டோர் மீது தொழுகை நேரம் குறிக்கப்பட்ட கடமையாகவுள்ளது"
அல்குர்ஆன் 4:103-

அக்காலத்தில் கடிகாரம் போன்ற நேரம் காட்டிகள் இல்லாததால் தொழுகையின் நேரங்கள் , சூரியக் கதிர் மற்றும் அதன் நிழல்களை வைத்துக் கணித்துக் கொண்டனர் .

சுப்ஹுத் தொழுகையின் நேரம் வைகறை நேரம் முதல் சூரியன் உதிக்கும் வரை உண்டு என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

லுஹர் தொழுகையின் நேரம் சூரியன் உச்சி சாய்ந்ததிலிருந்து ஒரு மனிதனின் நிழல் அவனது உயரம் அளவுக்கு ஆகும் வரை, அதாவது அஸ்ர் நேரத்திற்கு முன்பு வரை உண்டு என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அஸ்ர் தொழுகையின் நேரம் ஒவ்வொரு பொருட்களின் நிழலும் அது போல ஒரு அளவு ( அதாவது நிழல் இரு மடங்காக உயரும் போதும் ) வந்ததிலிருந்து சூரியன் மறையத் துவங்கும் வரை உண்டு.

மக்ரிப் தொழுகையின் நேரம் சூரியன் மறைந்தது முதல் செம்மை மறையும் வரை உண்டு என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

இஷாத் தொழுகையின் நேரம் இரவின் பாதி வரை உண்டு என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) நூல்: முஸ்லிம் 1074

இஷா தொழுகையின் நேரம் இரவின் பாதி வரை என்பதுதான் சரியானதாகும். சுப்ஹ் வரை நீடிக்கிறது என்பதற்கு எந்த ஆதாரத்தையும் நம்மால் காண முடியவில்லை.

சூரியன் 6 மணிக்கு மறைகிறது என்று வைத்துக் கொள்வோம். அப்போது முதல் இரவு ஆரம்பமாகி விடுகிறது. சுப்ஹ்5 மணிக்கு வருகிறது என்றால் காலை நேரம் வந்து விட்டது என்று பொருள்.

இதில் இரவின் பாதி என்பது இரவு 11.30 மணியாகும். இது போல் சூரிய அஸ்தமனம் மற்றும் சுப்ஹ் நேரம் ஆகியவற்றைக் கொண்டு இரவின் பாதியைக் கணக்கிட்டு அதற்குள் இஷாவைத் தொழுது விட வேண்டும் என்பதே சரியானதாக கருத்தாகத் தோன்றுகிறது.

ர.ரா

உறங்குபவனால் இன்னொரு உறங்குபவனை எழுப்ப முடியாது!

இஸ்லாத்தின் தேன் துளிகள் 11




“உங்கள் காதலிக்கான முத்தத்தை அவசரம் கருதி, உங்கள் வீட்டு வேலைக்காரரிடம் கொடுத்து அனுப்புவீர்களா?”

இந்தக் கேள்வியுடன் தொடங்குகிறது ‘சூஃபி வழி - இதயத்தின் மார்க்கம்’ என்ற நாகூர் ரூமி எழுதிய புத்தகம். முதல்முறையாக சூஃபித்துவம் பற்றி விரிவான, எளிய வாசகத் தெளிவு கொண்ட நல்ல புத்தகம் இது.

நாகூர் ரூமி இதற்கு முன் எழுதியுள்ள ‘இஸ்லாம் ஓர் எளிய அறிமுகம்’ புத்தகம், சிறப்பான வரவேற்பைப் பெற்றது. இந்தத் தத்துவ வரலாற்று மெய்யியல் புத்தகமும் அந்தப் பெருமையை அடைந்துள்ளது.

முத்தம் பற்றி எழுப்பப்பட்ட கேள்விக்கு பதில்:

முத்தத்துக்கும் சூஃபித்துவத்துக்கும் என்ன தொடர்பு? இரண்டும் ஒன்றுதான்! முத்தம் சூஃபித்துவம் இரண்டுமே காதலின் விளைவுதான். ஒன்று அறைக் காதல். இன்னொன்று இறைக் காதல். இரண்டுமே மெய்க்காதல்தான். முத்தம் ஒரு சுகானுபவம் என்றால், சூஃபித்துவம் ஒரு மகானுபவம்!

‘இறை வணக்கங்களிலேயே தலைசிறந்த இறை வணக் கம் காதல்தான்’ என்றார் சூஃபி மேதை இம்னு அரபி. காதலிக்காக தனது குணங்களை மாற்றிக் கொள்ள காதலன் தயாராகிறான். அவளது விருப்பமே அவனது விருப்பமாகிறது. அவள் வெறுப்பு அவன் வெறுப்பு. பூ, செடி, கொடி, மரம், மட்டை எதைப் பார்த்தாலும் காதலனுக்குக் காதலி நினைவைப் போல, ஒரு சூஃபிக்கு இறை நினைவு. இப்படி யான ஒரு முன்னுரைத்தலோடு சூஃபி வழியைப் பற்றி பேசத் தொடங்குகிறார் நாகூர் ரூமி.

பள்ளிச் சிறுவர்களைப் புல்வெளி, மலர்ப் பூங்கா, பழத்தோட்டங்கள் என்று சுற்றிக் காட்டும்போது குழந்தைகள் பெறும் மன மகிழ்ச்சி, வாசகருக்கும் கிடைக்கிறது என்பதைச் சொல்லவே வேண்டும். தோளில் விழும் ஒற்றை மழைத்துளி போல, நிறைய நிறைய ஞானச் சிதறல்கள் பக்கம்தோறும்.

இரண்டு என்பது எண்ணல்ல
சூஃபி வழியில் இரண்டு இல்லையாம். ஒன்று மட்டும்தான்! காதலர்கள் இருவர், ஒருவரே அல்லவா? இஸ்லாமும் சூஃபித்துவமும் ஒன்றுதான். அதன்பெயர் ஏகத்துவம்.

சூஃபி ஷெய்ருக்கு இரண்டு மாணவர்கள். ஒருவர் மகன், மற்றவர் மருகன். இருவரில் மருகனையே அவர் விரும்பினார். காரணம் மருகனின் ஞானம். மகனுக்கே பிரதிநிதித்துவம் தரப் படவேண்டும் என்பது அவர் மனைவியின் கனவாக இருந்தது. ஷெய்ரு ஒருநாள் இரண்டு பேர்களை யும் அழைக்கிறார்.

ஆளுக்கொரு புறாவைக் கொடுத்து, “யாரும் காணாத இடத்தில் வைத்து அறுத்து வாருங்கள்” என்று அனுப்பி வைக்கிறார். மகன் உடனே அறுத்துக் கொண்டு வந்தான். மருகன், உயிர்ப் புறாவுடன் திரும்பினான்.

‘ ‘ஏன்..?’’ என்றார் குரு ஷெய்ரு.

“இறைவன் எல்லா இடத்திலும் என்னைப் பார்க்கிறான். மறைவான இடம் கிடைக்கவே இல்லை” என்றான். மருகனே, குருவுக்குப் பின் குரு ஆகிறார்.

ஒரு ஞானகுரு இப்படிச் சொல்கிறார்: “நீங்கள் சாய்ந்துகொண்டிருப்பது நாற் காலி என்று நினைக்கிறீர்கள். ஆனால், அது இறைவனின் முதுகு என்பது உங்களுக்குத் தெரியவில்லை!”

பாமரர்கள் என்று ஒரு சாராரை மக்கள் குறிப்பிடுவார்கள். ஆன்மிகத் துறை பாமரர்கள் யார் என்று இப்படிச் சொல்கிறது: ‘இலக்கிய மேதைகள், இலக்கண நிபுணர்கள், சட்ட வல்லுநர்கள், திருக்குர்ஆன் விளக்கவுரை எழுதுபவர்கள் பாமரர்கள்’ என்கிறது சூஃபி ஞானம். பின் யார்? தன்னையும் இறைவனையும் அறிந்து கொள்கிற முயற்சியில் ஈடுபடாதவர்கள் அனைவரும் பாமரர்கள்.

துடைத்து வையுங்கள்
சூஃபித்துவம் அறிய ஒருவழிதான். சிலேட்டை மனதை, மூளையை, சேர்த்து வைத்திருக்கும் அனைத்தையும் கழு வித் துடைத்து காலியாக வைத்திருப்பது. முற்றிலும் புதிதா கத் தொடங்குவது. எது சரி, எது தவறு?

கடவுள் என்பது ஒரு பெயர். அது தரும் மூளைப் பதிவுகள் ஒன்று. பெயர்களும் அவை குறிக்கும் பொருட்களும் ஒன்று அல்ல. வெள்ளிக் காசு, தங்கக் காசிடம் சொன்னது: 'நானும் ஒரு காசுதான்'. தங்கக் காசு சொன்னது: 'கொஞ்சம் பொறு. உரைகல் வருகிறது'. உரைகல்லை அறிமுகப்படுத்துவது தான் - சூஃபித்துவம்.

'விழித்துக்கொள்ளும்' எந்த மனிதரும் சூஃபியே. சூஃபி த் துவம் சிந்தனையில் இருந்தோ, தத்துவத்தில் இருந்தோ பிறந்தது அல்ல; அது இதயத்தில் இருந்து பிறந்தது. 'தத்துவத்தை அழைக்காதே பாதையென்று; முட்டாளை அழைக்காதே மேதையென்று' என்கிறார் சா அதி.

சரி. சூஃபி என்ற சொல்லுக்கு என்ன பொருள்? தமிழில் 'இஸ்லாமிய மெய்ஞ்ஞானம்' என்றோ 'இஸ்லாமிய ஆன்மிகம்' என்றோ சொல்லலாம். ஒருவர் சூஃபி ஆவது, அவர் விருப்பம் அல்ல; இறைவனின் விருப்பம்.

சூஃபி மேதைகள் பற்றிய பதிவுகள் மிகவும் சாரம் பொருந்தியவை. இறைவன் 'ஒளிகளின் ஒளியாக' இருக்கிறான் என்ற இறைவசனத்துக்கு விளக்கம் சொல்ல, இமாம் கஸ்ஸாலி ஒரு நூலையே எழுதியிருக்கிறார். ஒருநாள் கஸ்ஸாலி காலை எழுந்தார்.

"இன்று என்னக் கிழமை?" என்றார். "திங்கள்கிழமை" என்றனர். தான் இறக் கும்போது உடலை மூட என்று வைத்திருந்த துணியைக் கொண்டுவரச் சொல்லி, அதை விரித்து அதன்மேல் படுத்துவிட்டார். "இறைவா... நான் என் விருப்பத்தோடு உனக்கு அடி பணிகிறேன்" என்றார். உடனே அவர் உயிர் பிரிந்தது, இரவு அவர் எழுதிய கவிதையில் சில வரிகள்:

'என்னை உயிரற்ற உடலாகப் பார்த்து /அழுது துக்கிக்கும் நண்பர்களிடம் சொல்லுங்கள்/ நீங்கள் பார்க்கும் இவ்வுடல் நானல்ல/ நானொரு பறவை/ இவ்வுடலோ ஒரு கூண்டு/ இப்போது எனக்கும் அவனுக்கும் இடையில்/ எந்தத் திரைகளும் இல்லை/ நேருக்கு நேர் பார்க்கிறேன்/ அவனை நானிப் போது விதிவசப் பட்டோலையில் இருந்தது/ இருப்பது, இருக்கப் போவது அனைத்தையும் படிக்கிறேன் நான்/ இறப்பென்பது இறப்பல்ல/ அதுநாம் கற்பனை செய்ய முடியாத வாழ்வு...'

துன்னூன் மிஸ்ரி பற்றிய செய்தி ஒன்று. அவர் சிறைப்பட்டு இருந்த காலத்தில், ஒரு சகோதரி ரொட்டி சமைத்துக் கொண்டு வந்து கொடுத்தாள். அவர் 40 நாட்களும் அந்த ரொட்டியை உண்ணாமல் இருந்தது, விடுதலை ஆன பிறகே தெரிந்தது.

"நான் நூல் நூற்று நேரிய வழியில் சம்பாதித்த பணத்தில்தானே ரொட்டி செய்து வந்தேன். ஏன் உண்ண வில்லை?"

துன்னூன் சொன்னார் : "சகோதரி... ரொட்டி கொண்டுவந்த பாத்திரம் தூய்மையாக இல்லையே!"

துன்னூன், ஒரு சமயம் பால் அருந்தினார். அது வட்டிக்கு விட்டுச் சம்பாதிப்பவன் பணத்தில் வாங்கிய பால் என்பதை அறிந்து, வாயில் விரலைவிட்டுப் பாலை வாந்தி எடுத்தார் என்பது பழைய வரலாறு.

அனைத்திலும் தூய்மை, சூஃபிக்களின் வாழ்க்கை முறை.

சூஃபிக்கள் கவிதை இலக்கியத்துக்குச் செய்த தொண்டு அளவு மிகக் கொண்டது. நாகூர் ரூமி சில அருமையான கவிஞர்களையும் கவிதைகளையும் அறிமுகம் செய்கிறார்.

அவனது வாசலில் முஸ்லிம் யார்? கிறிஸ்துவன் யார்?

நல்லவன் யார்? கெட்டவன் யார்?

எல்லோரும் தேடுபவர்; அவனோ தேடப்படுபவன்

- ஸனாய் - இ 1180.

ஒரு கதை...
சூஃபியை முழுக்கச் சொல்லும் மகாகவி ரூமின் காவிய மான 'மஸ்னவி'-யில் இருந்து ஒரு கதை.

கற்க வேண்டியதை எல்லாம் கற்றுவிட்டதாக நினைத்த சிஷ்யர், குருவின் வீட்டுக் கதவைத் தட்டுகிறார்.

"யாரது?"- குரு

"நான்தான்"- சிஷ்யர்

"போ...போ... இன்னும் நீ முழுமை அடையவில்லை" என் றார் குரு.

சூஃபியாக மிகு புகழ் - நியாயமான புகழ் - கொண்ட பெண்மணி ராபியா பற்றிய அறிமுகமான பகுதி. மிக அழகியது. அவர் எழுதுகிறார்.

'இறைவா.. நரகத்துக்குப் பயந்து உன்னை நான் வணங்கினால் என்னை நரகில் எரித்துவிடு. சொர்க்கத்தின் நம்பிக்கையில் உன்னை நான் வணங்கினால் எனக்கு சொர்க்கம் தராமல் விட்டுவிடு. உனக்காகவே உன்னை நான் வணங்கினால் உனது அழகை எனக்கு மறைக்காதே...'

சூஃபி உலகில், உலகம் கொண்டாடும் ஞானி அவர். அவரிடம் உண்மைக்கும் பொய்க்கும் என்ன வித்தியாசம் என்றார் ஒருவர்.

"நான்கு அங்குலங்கள்" என்று பதில் சொன்னார் ராபியா. கேள்வி கேட்டவர்க்கு ஒன்றும் புரியவில்லை. கண்ணுக்கும் காதுக்கும் இடையில் உள்ள தூரம்தான் உண்மைக்கும் பொய்க்கும் இடையில் உள்ள தூரம்.

கேட்கப்படுவதெல்லாம் பொய். பார்க்கப்படுவதெல்லாம் உண்மை என்றார் ராபியா. ( பார்க்கப்படுவது = அனுபவங்களை.)

சூஃபி பரிபாஷையின் ஒரு அம்சம்தான் சூஃபி கதைகள். முல்லா கதைகளில் வரும் முல்லா சூஃபிக்களால் உருவாக்கப்பட்ட கற்பனைப் பாத்திரம். முல்லா கதைகள், நகைச்சுவைக் கதைகள் அல்ல; ஆழ்மனதோடு தொடர்புடையவர் முல்லா. தன்னைத்தானே கிண்டல் பண்ணிக்கொள்வது சூஃபிக்களின் இயல்பு.

ஒரு படகில் முல்லாவும் அறிஞர் என தம்மைப் பாவிக்கும் ஒருவரும் பயணம் செய்கிறார்கள். முல்லா பேசியதைக் கேட்டு, ‘‘உங்களுக்கு இலக்கணம் தெரியவில்லையே... உங்கள் வாழ்க்கையின் பாதி வீண்’’ என்றார் அறிஞர்.

முல்லா, ‘‘உங்களுக்கு நீச்சல் தெரியுமா?’’ என்றார்.

‘‘தெரியாது, ஏன்?’’

‘‘படகு முழுகிக் கொண்டிருக்கிறது . உங்கள் முழு வாழ்க்கையும் வீண்’’ என்றார் முல்லா.

உங்களுக்கு நம்பிக்கை இருக்கலாம். இல்லாமலும் இருக்கலாம், என்றாலும், சூஃபிகளைப் படியுங்கள். உங்கள் வாழ்க்கை முழுமை அடையும். நாகூர் ரூமியின் இப்புத்தகம் உங்களை நிச்சயம் அடர்த்தி செய்யும்.சிக்ஸ்த் சென்ஸ் பதிப்பகம் வெளியிட்டுள்ள அழகிய பதிப்பு இது.

(நன்றி: தி இந்து)

ரஹ்மத் " என்னும் இரண்டு வகை அருட்கொடை !

இஸ்லாத்தின் தேன் துளிகள் 12




அருட்கொடை என்ற ரஹ்மத் இரண்டு வகை .

1) தேக சுகம் , மன அமைதி,இன்பமான உண்டி , இன்பமான பானம் அழகான உடை , நல்ல விவாதம் , செழிப்பான செல்வம் , சந்ததி விருத்தி முதலியகள் லாபத்தைத் தரக்கூடிய அருட்கொடைகள் . அடுத்து

2) ஒரு வகை நோய் , வறுமை கஷ்டம் துன்பம் முதலியவை கெடுதல்கள் வராமல் தடை செய்கின்ற அருட்கொடைகள் மற்றொரு வகை .

இவ்விரு அருட்கொடைகளில் அங்க ஹீனம் இல்லாமல் இருப்பதும் , ஞான அறிவு கிடைப்பதும் பெரும் அருட்கொடைகளாகும்.

தனக்கு கிடைத்துள்ள அருட்கொடைகளுக்கு நன்றி செலுத்தாதிருத்தல் , அவைகளைத் தகாத முறையில் உபயோகித்தல் , அவைகள் இல்லாது ஒழிப்பதற்கான காரியத்தை செய்து தனக்குத் தானே தீங்கிழைத்துக் கொள்ளல் போன்றவைகளும் ஜலூமுன் (மிக அநியாயஸ்தன் ) என்ற பதத்தைச் சார்ந்ததாகும் .

ஒரு பெரியவரிடம் ஏழை ஒருவர் சென்று தனது வறுமையைப் பற்றி முறையிட்டார்.
வறுமையை நீக்கி கொள்வதற்காக தான் எடுத்துக்கொள்கிற ஒவ்வொரு பிரயத்தனங்களையும் பட்டியலிட்டு கூறினார் .

அப்பெரியவர் " உமக்கு 16 ஆயிரம் வெள்ளி நாணயம் ஆஸ்தியாகக் கிடைத்து அதற்கு பதிலாக உமது கண்களையும் குருடாகிவிடுவதை நீர் பொருத்திக் கொள்வீரா ? " என்று வினவினார் .

அதற்கவர் "இல்லை" என்றார்.

" உனக்கு 20 ஆயிரம் வெள்ளி நாணயத்தை தருகிறேன். அதற்கு பதிலாக உமது இரு கால்களையும் கரங்களையும் நான் எடுத்துக் கொள்கிறேன் . இது உனக்கு சம்மதமா ?"

அதற்கு அவர் " இல்லை " என்றார்.

பிறகு " உமக்கு 16,000 வெள்ளி நாணயம் கிடைத்து அதற்கு பதிலாக நீர் பைத்தியக்காரனாக இருப்பது உனக்கு சந்தோஷமா ? " என்றார்

அதற்கும் அந்த ஏழை " இல்லை" என்று பதிலளித்தார் .

இப்பொழுது அப்பெரியவர் :

" 40 ஆயிரம் வெள்ளி நாணயங்களையும் பார்க்கினும் அதிக அருமையான பாக்கியங்களை அல்லாஹ் உமக்கு கொடுத்திருக்கும் போது , உமது எஜமானாகிய அல்லாஹ் தஆலாவின் மீது குறை கூறுவதை உனக்கு வெட்கமாக இல்லையா ? "என்று வினவினார் .

நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களின் கடைசி நேரம் .

இஸ்லாத்தின் தேன் துளிகள் 13



நபிகள் பெருமானார் ஸல் அவர்கள் இவ்வுலகை விட்டுப் பிரியும் காலம் நெருங்கியபோது , எங்கள் அன்னை ஆயிஷா சித்திக்கா (ரலி ) அவர்கள் இல்லத்தில் எங்களை ஒன்றுகூட்டி , எங்களை ஒரு பார்வை பார்த்தார்கள். அவர்களது கண்களிலிருந்து நீர் வழிந்தது .

" உங்களுக்கு எல்லா போற்றுதலும் ( மங்களம் ) உண்டாகட்டும். அல்லாஹ் உங்களை வாழ்விப்பானாக ! உங்களுக்கு அல்லாஹ் கிருபை செய்வானாக ! அல்லாஹ்வுக்கு தக்வா செய்ய வேண்டும் . அவனுக்கு வழிபட வேண்டும் என்பது உங்களுக்கு வஸியத்து செய்கிறேன் .

பிரிவு நெருங்கிவிட்டது . அல்லாஹ்வின்பால் சித்ரத்துல் முன்தஹா , ஜன்னத்துல் மர்வாவின்பால் திரும்புதல் அண்மையில் இருக்கிறது . என் வீட்டில் உள்ள ஆடவர்கள் என்னை குளிப்பாட்டி செய்விக்க வேண்டும் .

என்னுடைய இவ்வுடையிலேயே அவர்கள் நாடினால் எனக்கு கபன் அணிவிக்க வேண்டும். அல்லது என்னை குளிப்பாட்டி ஏமன் தேசத்து துணியில் எனக்கு "கபன் " அணிவித்த பிறகு என்னுடைய இவ்வீட்டிலே என் கட்டிலில் என்னை என் கபரின் ஓரமாக வைத்துவிட்டு ஒரு ஸாஅத் நேரம் வெளியேறிவிடுங்கள் . எனக்காக என் ஹபீபு ஜிப்ரயீல் முதலாக பின்னர் மீக்காயீல் பின்னர் இஸ்ராஃபீல் பின்னர் மலக்குல் மவ்த் தங்கள் பரிவாரங்களுடன் தொழுவார்கள் .

பின்னர் நீங்கள் என்னிடம் கூட்டம் கூட்டமாக வந்து எனக்காக தொழுங்கள்" என்று கூறினார்கள் .

நபிகள் பெருமானார் (ஸல் ) அவர்களது பிரிவை அவர்கள் கேட்ட பொழுது , "ஓ " வென்று சத்தமிட்டு அழுது , "அல்லாஹ்வின் தூதரே ! தாங்கள் எங்களது ரப்பின் தூதர் ! எங்கள் கூட்டத்தின் விளக்கு ! எங்கள் காரியத்திற்கு ஆதாரம் ! எங்களை விட்டு தாங்கள் சென்றுவிட்டால் எங்கள் காரியம் சம்பந்தமாக நாங்கள் யாரிடம் செல்வோம் என்று நபித்தோழர்கள் கூறினார்கள் .

அதற்கு நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் : " உங்களை தெளிவான பாதையின் மீது விட்டுச் செல்கிறேன் இன்னும் உங்களுக்காக பேசுபவனும் , ஊமையுமான இரு உபதேசிகளை விட்டுச் செல்கிறேன். பேசுபவன்தான் திருக்குர்ஆன் .ஊமைதான் மரணம் !

உங்களுக்கு ஒரு காரியம் சிக்கலாகி விட்டால் திருக்குர்ஆன் , ஸூன்னத்து ஆகியவைகளின்பால் திரும்புங்கள். உங்களது இருதயங்கள் கடின சித்தம் உள்ளவைகளாகி விட்டால் , மரித்தவர்களுடைய நினைவுகளைப் படிப்பினையாக கொள்ளும் விதத்தில் மரணத்தை நினைத்துக் கொள்ளுங்கள்" என்றார்கள்.

பிறகு அன்றைய தினத்திலிருந்து ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நோய்வாய்ப்பட்டார்கள். மக்கள் வந்து பார்த்துக் கொண்டிருந்தனர்.

அவர்களது பார்வை முகட்டை நோக்கியது. அவர்களது உதடுகள் அசைந்தன. அவர்கள் என்ன கூறுகிறார்கள், என ஆயிஷா (ரலி) செவிதாழ்த்திக் கேட்டார்கள். என்னை மன்னிப்பாயாக, என் மீது கருணை காட்டுவாயாக, உயர்ந்த நண்பனுடன் என்னைச் சேர்த்து வைப்பாயாக. (புகாரி)

இறுதியாக நபிப் பதவியை அடைந்த, மேலும் தாம் அவதரித்த நாளான திங்கட்கிழமை அன்று வபாத்தானார்கள். திரைமறைவு ஆனார்கள் .

ஹஜ்ரத் அலி (ரலி ) அவர்கள் குளிப்பாட்டினார்கள் . அப்பாஸ் (ரலி) அவர்களது புதல்வர் அல்பஜ்லு (ரலி) அவர்கள் நீர் வார்த்தார்கள் . புதன்கிழமை இரவில் நடுராத்திரியில் ஆயிஷா ( ரலி) அவர்கள் அறையில் நல்லடக்கம் செய்யப்பட்டார்கள் என்பதாக இப்னு மஸ்வூத் (ரலி ) அவர்கள் ரிவாயத்து செய்திருக்கிறார்கள்.

ர.ரா

விதி யாரை விட்டது !

இஸ்லாத்தின் தேன் துளிகள் 14

மறைவான கண்ணி ஒன்றை ஒரு சிறுவன் ஊன்று வகை கண்ட
ஹூது ஹூது பறவை " ஏன் கண்ணியை வைக்கிறாய் ? " என்று வினவியது

"ஒரு ஹூது ஹூது பறவையைப்
பிடிக்க" என்று அவன் பதிலளித்தான்.

" நீ செய்வதைத் தான் நான் பார்த்து விட்டேனே , என்னை நீ எப்படி பிடிக்க முடியும் ? " என்று அவனிடம் கேட்டு விட்டு, அது அங்கிருந்து வேறொரு மரக்கிளை ஒன்றுக்கு பறந்து போய்விட்டது .அத்துடன் அந்த விஷயமும் அதற்கு மறந்து போயிற்று .

பையன் தான் ஊன்றிய கண்ணியை மண்ணால் மறைத்து அதன் மீது தானியங்களைத் தூவி வைத்து விட்டான்.

அப்போது மீண்டும் அங்கே வந்த ஹூது ஹூது பறவை தானிய மணிகளை மட்டும் கண்டது . கண்ணியை காணவில்லை . இந்தக் காட்டில் விளையாத இந்த தானியங்கள் எப்படி வந்தது? என்று எண்ணிப் பார்க்காமல், அதைத் தின்பதற்காகக் கீழே கால்வைத்து கண்ணியில் சிக்கிக்கொண்டது.கண்ணி அதன் கழுத்தை நெருங்கியதும்,

"உன்னை பிடிக்க முடியாது என்றாயே இப்போது பார்த்தாயா ? என்று சிறுவன் வினவினான் .

"அது சரிதான் . ஆனால் விதிவசம் வந்ததும் யார் கண்ணும் குருடாகி போகிறது " என்று பறவை பதிலளித்தது.

இவ்வாறு மறைவான லௌஹிலிருந்து நேரடியாக எதையும் படிக்கும் பேறு பெற்றிருந்த ஞானத்தில் மலக்குமார்களையும் மிகைத்தவர்களாக இருந்த ஆதம் ( அலை ) அவர்கள் இறைவனின் பரிசுத்த இதயம் படைத்த திருத்தூதர்தான் .

இருந்தாலும், "இந்த மரத்தை நெருங்க வேண்டாம் " என்று தெய்வ கட்டளையைக் கேட்ட பின்னும் , அந்த கோதுமை கனியை கண்ட பின்னும் , கன்னி வைப்பவன் இப்லீஸ் என்பதையும் , தன் மீது பொறாமை கொண்டவன் என்பதையும் நன்கு அறிந்து கொண்ட பின்பும் , அவர்கள் எப்படி ஏமாற்றுக்கு ஆளாகிறார்கள் ? ஆக தெய்வத்தின் ஆதி ஏற்பாடு இருந்தாலன்றோ அதை எப்படி மீற முடியும் ? (மஸ்னவி)

ஸூர் ஊதல்

இஸ்லாத்தின் தேன் துளிகள் 15



ஆதிகால மனிதன் தொட்டு இன்று பிறக்கும் குழந்தை வரைக்கும் இசை என்பது தொப்புள் கொடி பந்தமாக இருந்து வருகின்றது. தமிழர்களுக்கும் இசை என்பது உயிரும் உடம்பும் போன்றது.

தமிழர்களின் வாழ்க்கையில் ஒரு தாய் கருவுற்றால் நலுங்குப் பாடல், குழந்தை பிறந்ததும் தாலாட்டுப் பாடல், சிறு வயதில் நிலாப்பாடல், இள வயதில் காதல் பாடல், திருமணத்திற்கு திருமணப் பாடல், மன்னரின் போர் படையில் வீர ஆவேசத்திற்கு , மரணமடைந்தால் ஒப்பாரி என தமிழனின் வாழ்வு பிறப்பு முதல் இறப்பு வரை இசையோடு ஒன்றியிருந்திருக்கிறது.

தற்போதைய நவீன காலகட்டத்தில் மேல்குறிப்பிட்ட நிகழ்வுப் பாடல்கள் வழக்கத்தில் இல்லாமல் போனாலும், அவ்வப்போது சில நாடகங்களும் திரைப்படங்களும் தமிழ் சார்ந்த இசையை நமக்கு ஞாபகப்படுத்துகின்றன.

அவ்வாறு நம் தமிழ் மூதாதையரகள் விட்டுச்சென்ற இசைக் கருவிகளில் ஒன்றுதான் "கொம்பு " அதாவது "ஸூர் "

'அஸ்ஸூர்' என்பது வானம் பூமி ஆகியவை அல்லாஹுத்தஆலா படைத்த பிறகு ஹஜரத் இஸ்ராஃபீல் அலைஹிஸ்ஸலாம் அவர்களிடம் எக்காளத்தை கொடுத்தான். அவர் அதனை வாயில் வைத்துக் கொண்டு தமது பார்வையை அர்ஷுக்கு நேராக உயர்த்தி அல்லாஹ்வின் கட்டளையை எதிர்பார்த்து வண்ணமாய் இன்னும் இருக்கிறார்!

நபிகள் நாயகம் (ஸல் ) அவர்களிடம் 'ஷூர் ' என்பது என்னவென்று கேட்டதற்கு அது ஒரு 'கொம்பு " என்று பதில் சொன்னார்கள் .

அந்த கொம்பு பூமி உடைய நீள அகலங்களை பார்க்கணும் பெரிது . அதில் சிருஷ்டி பொருட்கள் யாவற்றுக்கும் இருக்கிற ஆன்மாக்களின் எண்ணிக்கை எத்தனையோ அத்தனை துவாரங்கள் இருக்கின்றன !

ஹஜரத் இஸ்ராஃபீல் (அலை) அவர்கள் அந்த ஸூரை ஊதுவார்கள் ஆத்மாக்கள் எல்லாம் அந்தந்த துவாரங்களில் இருந்து வெளியாகி வானத்திற்கும் பூமிக்கும் இடையில் உள்ள தேன் குளவி போல் தத்தி நின்றுகொண்டிருக்கும் .

பிறகு நாயன் அவைகளை அவரருவக்குரிய சரீரங்களில் புகுந்து கொள்ளும்படி சொல்வான். அவைகள் அந்தந்த சரீரங்களில் புகுந்து கொள்ளும்.

பிறகு பூமியை பிளக்கும் முதலாவதாக நமது நபிகள் நாயகம் (ஸல் ) அவர்கள் வெளியாவார்கள் . பிறகு அவர்களுடைய உம்மத்துமார்கள் 33 வயது உள்ள வாலிபர்களாக வெளியாவார்கள் .

இந்தச் ஸூர் மூன்று முறை ஊதப்படும் முதலாவது முறை ஊதுவதற்கு " நஃப்கத்துல் பஜ்க் " அதாவது திடுக்கத்தின் ஊதுகை என்று பெயர் . முதல்முறையாக போதும் சத்தத்தைக் கேட்டவுடன் மரணம் வந்துவிடும் என்பதை யாவரும் உறுதியாக உணர்ந்துகொள்வார்கள் .

இனி சில தினங்களைத் தவிர அதிக நாள் ஜீவித்திருக்க முடியாது என்பதை அவர்கள் தெரிந்து கொள்வதால் அவர்களுக்கு திடுக்கமும் , பயமும் ஏற்படும்

இரண்டாவது முறை ஊதுவதற்கு "நஃப்கத்துஸ்ஸ அக்க் " அதாவது இடியோசை என்று பெயர் .

இது ஊதப்பட்டவுடன் எல்லாரும் மரித்து விடுவார்கள். அல்லாஹ்வைத் தவிர வேறு எவரும் இருக்காது .

மூன்றாவது ஊதப்படும் ஸூர் "நஃப்கத்துல் பஅது "அதாவது எழுப்புவது என்று பெயர் .இதனை ஊதும் போது யாரும் அவர்களிலிருந்து உயிர் பெற்று எழும்பி விடுவர் ஒருமுறை ஊதிய பின் மறுமுறை ஒருவருக்கு இடையில் 40 வருடங்கள் தவணை உண்டு .

இவ்விதமாக எழுதப்பட்டு எல்லோரும் மரித்த பிறகு அவர்களது ஆத்மாக்கள் அக்குழலிலுள்ள துவாரங்களில் வைக்கப்படும் .

பிறகு மூன்றாவது முறை ஊதிய பின் மேற்கண்டவாறு யாரும் உயிர் பெற்று எழுவார்கள்.

ஆனால் தஃப்சீர் இப்னு கஸீரில் 7/116

"பூமியிலுள்ள அனைத்தும் அழிந்தே போகும் மிக்க கண்ணியமும் பெருமையும் தங்கிய உம் இறைவனின் திருமுகம் மட்டும் (அழியாது) நிலைத்திருக்கும் "
திருக்குர்ஆன் 55 : 26, 27 28 : 88

ஸூர் ஊதப்பட்டால் வானங்களில் இருப்பவர்களும் பூமியில் இருப்பவர்களும் அல்லாஹ் நாடியவர்களைத் தவிர அனைவரும் மடிந்து வீழ்வார்கள்
மறுமுறை ஸூர் ஊதப்பட்டால் உடனே அவர்கள் அனைவரும் உயிர் பெற்று பார்ப்பவர்களாக எழுந்து நிற்பார்கள்
திருக்குர்ஆன் 39 : 68

இதில் அல்லாஹ் நாடியவர்கள் ஜிப்ரயீல் , மீக்காயீல் , இஸ்ராபீல் , இஸ்ராயீல் (அலைஹிஸ்ஸாம் ) இவர்கள் கடைசியில் மரிப்பார்கள் .அர்ஷை சுமக்கிற எட்டு மலக்குகளும் பின்னர் மரிப்பார்கள். இந்த 12மலக்குமார்களில் கடைசியில் மரிப்பவர் மலக்குல் மவ்த் என்பதாகும் .

படைக்கப்பட்டவர்கள் அத்தனை பேரும் மரணிப்பார்கள் இறுதியில் மரணத்தின் மலக்கும் மரணிப்பார என்பதாக இமாம் இப்னு கஸீர் (ரஹ் )கூறுகிறர்கள்

மேலும் இமாம் அவர்கள் "இறந்த பின் முதலில் உயிர் கொடுத்து எழுப்படுபவர் இஸ்ராஃபில்தான் மீண்டும் ஸூரை ஊதும்படி அவருக்கு அல்லாஹ் கட்டளை இடுவான்



மிஹ்ராஜில் நபி(ஸல்) அவர்களுடன் அல்லாஹ் உரையாடுதல் .

இஸ்லாத்தின் தேன் துளிகள் 16

,وَإِلَىٰ رَبِّكَ فَارْغَبْ
மேலும், முழு மனத்துடன் உம் இறைவன் பால் நீர் சார்ந்து விடுவீராக.
(அல்குர்ஆன் : 94:8)

"என் ஹபீபே ! முஹம்மதே ! நீர் கேட்பீராக உமக்கு கொடுக்க இருக்கிறேன் " என்பதாக மிஹ்ராஜ் சமயத்தில் குரல் வந்தது .

அப்பொழுது நபிகள் நாயகம் (ஸல் ) அவர்கள் "நாயனே ! ஒவ்வொரு நபியும் உன்னிடத்தில் ஒரு கொடையை அடைந்திருக்கின்றனர்.

இப்ராஹீமுக்கு 'கில்லத் ' தோழமையை அளித்திருக்கிறாய் !

மூஸாவுடன் நேருக்கு நேராக உரையாடி இருக்கிறாய் !

இத்ரீஸ்க்கு உயரமான இடத்தில் சேர்ப்பித்து இருக்கிறாய் !

தாவூதுக்கு பெரிய ராஜ்யத்தை தந்து அவரது தவறை பொறுத்து அருளினாய்!

சுலைமானுக்கு ஒரு அரசாங்கத்தையே தந்தாய் அவருக்குப் பிறகு எவருக்கும் அத்தகைய அரசாங்கத்தை நீ கொடுக்கவில்லை !

ஈஷாவுக்கு மாதாவின் வயிற்றில் அவர் இருக்கும்போதே தவ்ராத்தையும் , இஞ்சீலையும் கற்றுக்கொடுத்து, மரித்தவர்கள் உயிர்ப்பித்தல் அவர் கைக்கு சுலபமாக ஆக்கினாய், பிறவிக் குருடரையும் , வெண்குஷ்டர்களையும் சுகப்படுத்தும் தன்மையை நீ அவருக்கு அளித்தாய் " என்று பிரார்த்தித்தார்கள்.

அதற்கு அல்லாஹுத்தஆலா " "முஹம்மதே! இப்ராஹீமுக்கு (கில்லத் ) தோழமையை நாம் கொடுத்தோம் என்றால் , உமக்கு முஹப்பத்தை (நேசத்தை ) நாம் கொடுத்திருக்கிறோம்.

மூஸாவுடன் நேருக்கு நேராக நாம் பேசினோம் என்றால் , அவருடன் பேசிபவரை அவர் பார்க்கவில்லை . ஆனால் உம்முடன் திரையின்றி நாம் பேசுகிறோம் .பேசுபவரை நீர் காண்கின்றீர் !.

இத்ரீஸை நாம் வானுக்கு கொண்டு போனோம் என்றால் உம்மை வானில் "காபகவ்ஸைனி அவ் அத்னாவில் " கொண்டு போனோம் !

தாவூது பெரிய அரசாங்கத்தை கொடுத்து அவருடைய தவறுகளை மன்னித்தோம் என்றால், உமது உம்மத்துக்குப் போதுமென்ற
மனஅரசாங்கத்தைக் கொடுத்து , அவர்களுடைய பாவங்களை உமது ஷபாஅத்தால் , நாம் மன்னித்து விடுகிறோம் !

சுலைமானுக்கு அரசாங்கத்தை கொடுத்தோம் என்றால் உமக்கு ஸப்அமதானியையும், மகத்தான குர்ஆனையும் கொடுத்துள்ளோம் !

சூரத்துல் பகராவின் ஓரத்தை நாம் உமக்கு கொடுத்துள்ளோம் . வேறு எந்த நபிக்கும் அதனை நாம் கொக்கவில்லை .

சூரத்துல் பகராவில் கடைசியில் உமது பிரார்த்தனைகளை அங்கீகரிக்கிறோம்.

உமக்கு கவ்தரை கொடுத்திருக்கிறோம். மூன்று காரணங்கள் மூலம் புவியோர் , விண்ணவர் ஆகியவையும் பார்க்கினும் உனக்கு மேன்மை அளித்திருக்கிறோம்

ஒன்று "உமக்காக உமது இருதயத்தை நான் விரிவாக்க வில்லையா"
குர்ஆன் (94 : 2 )

இரண்டாவதாக "உமது சுமையை உம்மை விட்டும் நாம் இறக்கி விட்டோம்" குர்ஆன் (94 : 4 )

மூன்றாவதாக "உமக்கு உம்முடைய கீர்த்தியை உயர்த்தினோம்
குர்ஆன் (94 : 3) என்பது .

இன்னும் உமக்கு எட்டு பாக்கியங்களை கொடுத்துள்ளோம் 1) இஸ்லாம்
2 ) ஹிஜ்ரத் 3 )ஜிஹாது 4) தொழுகை
5) தர்மம் 6) ரமலான் நோன்பு
7 ) நன்மையை ஏவுதல் 8 ) தீமையை விலக்குதல்

ஜனங்கள் யாவருக்கும் உபதேசிப்பவராகவும் , அச்சுறுத்துபவராகவும் நாம் உம்மை அனுப்பி இருக்கிறோம் .

உம்மை ஜெயசீலராகவும் , இறுதி நபியாகவும் ஆக்கி இருக்கிறோம் என்று பதில் வந்தது .அல்ஹம்துலில்லாஹ் !

ர.ரா



விலாயத்து

இஸ்லாத்தின் தேன் துளிகள் 17

لَهُمُ الْبُشْرٰى فِى الْحَيٰوةِ الدُّنْيَا وَفِى الْاٰخِرَةِ‌ لَا تَبْدِيْلَ لِـكَلِمٰتِ اللّٰهِ‌ ذٰلِكَ هُوَ الْفَوْزُ الْعَظِيْمُ
அவர்களுக்கு இவ்வுலக வாழ்க்கையிலும், மறுமையிலும் நன்மாராயமுண்டு; அல்லாஹ்வின் வாக்கு(றுதி)களில் எவ்வித மாற்றமுமில்லை - இதுவே மகத்தான பெரும் வெற்றி ஆகும்.
(அல்குர்ஆன் : 10:64)

அல்லாஹுத் தஆலா தனது வலிமார்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் அளித்துள்ள பாக்கியங்களை பற்றி இந்த வசனம் விவரிக்கிறது

ஒலித்தனம் என்பது இரண்டு வகை . எல்லா மூமின்களுக்கும் பொதுவானது . ஒன்று இதனை குறித்து இறைவன் தன் திருமறையில் " அல்லாஹ் மூமின்களுக்கு ஒளியாக இருக்கிறான் இருள்களிலிருந்து பிரகாசத்தின்பால் அவர்களை வெளியாக்குகிறான் என்று கூறி இருக்கிறான்

மற்றொன்று அவனது நல்லடியார்களுக்கு மட்டும் சொந்தமானது. ஹக்கில் அடியான் அழிந்து , அவனுடன் ஸ்திரமாகுவதற்கு விலாயத்து என்று பெயர் . அற்புத செய்கைகள் இதற்குத் தேவை இல்லை

இவ்வாறான அற்புத செய்கைகள் அதாவது "கராமத்தே கவ்னியா"
(இப்பிரபஞ்சத்தை சேர்ந்த அற்புதச் செய்கைகள் ) முஸ்லீம் அல்லாத சமூகத்தினருக்கும் நிகழ்த்துவர்

ஆனால் பிரபஞ்சத்தில் கராமத்தே கல்பிய்யா அதாவது இருதய சம்பந்தமான அற்புதங்கள் இறைஞானம், வேதத்தின் ரகசியங்கள் போன்றவை இருக்க வேண்டியது அவசியமாகும். எனவே கராமத்தே கவ்னிய்யாவும் , கராமத்தே கல்பிய்யாவும் சிலரிடம் ஒன்று சேர்ந்து இருக்கவும் கூடும் .

ஹளரத் ஷெயகுனா செய்யிதுனா அப்துல் காதிர் ஜீலானி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களிடம், ஷெய்கு அபூ மத்யனில் மகுரிபிய்யி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களிடம் இரண்டும் பொதிந்திருந்தன .

கீழ் நாட்டிலுள்ளவர்களில் ஷெய்குனா அப்துல் காதிர் ஜீலானி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களைப் போன்றும் ,
மேல் நாட்டில் ஷெய்கு அபூ மத்யனில் மகுரிபிய்யி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களைப் போன்றும் அற்புதங்களை வேறு எவரும் செய்யவில்லை இவ்விருவருக்கும் இவ்விரு வகையான அற்புதங்களும் இருந்தன .

சிலருக்கு கராமத்தே கவ்னிய்யா இல்லாமல் இருக்கும் .கராமத்தே கல்பிய்யா அவர்களுக்கு நிறம்ப இருக்கலாம் . ஆனால் கராமத்தே கவ்னிய்யா இல்லாமல் இருக்கவும் கூடும் . இவ்வாறுதான் ஒலிமார்களில் "அஹுலுல் பனா " வைச் சேர்ந்தவர்களில் பெரும்பாலானவர்களுக்கு இருந்துவருகிறது .

தண்ணீரின் மீது நடத்தல் , வானத்தில் பறத்தல் , மிகவும் தூரமான இடத்தை ஒரு சொற்ப நேரத்தில் கடத்தல் போன்ற கராமத்தே கவ்னிய்யாவை ராஹிப்களுக்கும் (கிறிஸ்துவ பாதிரி மார்களுக்கும்) பல்ஸஃபீ (தத்துவ சாஸ்திரி) களுக்கும் கூட நடந்திருக்கின்றன இவ்விதமான கராமத்துகளை இவர்களுக்கு அளித்து இவர்களை இறைவன் கொஞ்சம் கொஞ்சமாக பிடித்து விடுவான்.

ரிஸாலத்து ( நுபுவ்வத்து)ம் , விலாயத்து (ஒலித்தன்மையு )ம் ஒரு அரசாங்கத்தை போல் உள்ளவை . இவை இறைவனுக்குச் சொந்தமானவை .இதில் அடியானுடைய முயற்சிக்கு கொஞ்சமும் சம்பந்தம் இல்லை .
விலாயத் என்பது அமைச்சர் பதவியை போன்றது.
"(நபியே!) உம்முடைய இறைவன் நிழலை எப்படி நீட்டுகின்றான் என்பதை நீர் பார்க்கவில்லையா? (குர்ஆன் : 25:45)

"நாம் இப்பூமியை விரிப்பாக ஆக்கவில்லையா?

இன்னும், மலைகளை முளைகளாக ஆக்கவில்லையா? " (குர்ஆன் : 78:6,7)

அல்லாஹ் தன் பரிசுத்த திருமறையில் அவ்லியாக்களை பற்றி " நிழல் (ளில்லூ ) என்றும் மலை (ஜிபால் ) என்றும் வர்ணித்து உள்ளான் (ரூஹுல் பயான் )

" என்னுடைய உம்மத்துகளில் 40 பேர்கள் நபி இப்ராஹிம் (அலை ) அவர்களுடைய இருதயத்தை உடையவர்களாக என்றும் வலம் வந்து கொண்டே இருப்பார்கள்

அல்லாஹுத்தஆலா அந்த நபர்களை கொண்டுதான் பூலோகத்தில் வாழ்பவர்களின் பிணிகளைப் போக்குவான் . அவர்களுக்காக மழையை பொழியச் செய்வான் அவர்களைக் கொண்டே தான் பூலோகத்திலுள்ளவர்களுக்கு உதவி புரியப்படும் என்பதாய் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் திருவாய் மலர்ந்தருளிய ஹதீஸ் தபறானீயில் காணக் கிடைக்கின்றது.

ர.ரா

அச்சத்தால் ஏற்படும் நரை

இஸ்லாத்தின் தேன் துளிகள் 18



புறநானூறு காலத்திலேயே நரையைப் பற்றி பேசப்படுகிறது !

"யாண்டு பலவாக, நரையில ஆகுதல்
யாங்கு ஆகியர் என வினவுதிர் ஆயின்,
மாண்ட என் மனைவியோடு மக்களும் நிரம்பினர், யான் கண்ட
அனையர், இளையரும், வேந்தனும்
அல்லவை செய்யான், காக்க அதன்தலை
ஆன்று அவிந்து அடங்கிய கொள்கைச்
சான்றோர் பலர், யான் வாழும் ஊரே "

பின்னணி: தனக்கு வயதாகியும் நரையின்றி வாழ்வதின் காரணங்களை இப்பாடலில் பிசிராந்தையார் கூறுகின்றார்.

பொருளுரை: ஆண்டுகள் பல ஆகியும் தலையில் நரை இல்லாதபடி எப்படி இவ்வாறு இருக்கின்றீர்கள் ? என்று நீங்கள் என்னைக் கேட்டால், சிறந்த என் மனைவியும், அறிவு நிறைந்த பிள்ளைகளும், நான் எண்ணுவது போல் எண்ணும் என்னிடம் பணிபுரிவோரும்,
#தீமைகளைச்செய்யாதமன்னனும்,
மேலும், பணிவும் அடக்கமும் கொண்ட உயர்ந்த கொள்கைகளின்படி வாழும் சான்றோர்கள் பலரும் நான் வாழும் ஊரில் இருப்பதாலும் தான்
வயதாகியும் நரையின்றி வாழ்வதின் காரணங்களாகும் .

فَكَيْفَ تَتَّقُوْنَ اِنْ كَفَرْتُمْ يَوْمًا يَّجْعَلُ الْوِلْدَانَ شِيْبَا

நீங்கள் (இதனை) நிராகரித்துவிட்டால், எவ்வாறு நீங்கள் (நம்முடைய பிடியிலிருந்து) தப்பித்துக் கொள்வீர்கள்? (நாம் பிடிக்கும்) அந்நாளில் (திடுக்கம்) சிறு குழந்தைகளையும் நரைத்தவர்களாக ஆக்கிவிடும்.
(அல்குர்ஆன் : 73:17)

' அஸா 'என்பது கைத்தடி . இது சொர்க்கத்திலிருந்து ஆதம் (அலை) அவர்கள் தம்மோடு கொண்டு வந்து வைத்திருந்தார்கள்.

அவருக்குப் பிறகு வந்த நபிமார்கள் இடத்தில் அது ஒருவருக்கு பிறகு மற்றொருவர் என்ற வகையில் வந்து நபி மூஸா (அலை ) அவர்கள் இடம் வந்தது.

அதனை பூமியின்மேல் அடித்தால் உடனே அங்கு தாவர வர்க்கங்கள் உண்டாகும் . கல்லின்மீது அடித்தால் அதிலிருந்து நீர் ஊற்று உண்டாகும். அதை வீசி எறிந்தால் பெரிய பாம்பாகும் .

இதை ஹஜ்ரத் மூஸா (அலை) அவர்கள் ஃபிர்அவுனுடைய வாசற்படியின் மீது அடித்தார்கள். இதனால் பயந்து நடுங்கினான் இந்த பயத்தால் அவன் தலையில் நரை உண்டாயிற்று . இந்த நரைத்த முடியை வைத்துக் கொண்டு வெளியில் வருவதற்கு வெட்கப்பட்டு கருப்பு சாயம் பூசிக் கொண்டான். முதன்முதலாக நரை முடிக்கு கருப்பு சாயம் பூசி அவன் ஃபிரஅவுன்தான்.

"கருப்புச் சாயம் பூசிக்கொள்வது ஹராமாகும் .இதனைச் செய்பவர் சுவர்க்கத்தின் வாடையைக் பெற்றுக் கொள்ள மாட்டார் " என்பதாக இப்னு அப்பாஸ் (ரலி ) அவர்கள் ரிவாய்த்துச் செய்திருக்கிறார்கள் .

மார்க்க யுத்தத்திற்கு செல்பவர்கள் அழகுக்காக இல்லாமல் பகைவர்களுக்கு இளமை தோற்றத்தோடு பயங்கரமாக இருப்பதற்காக நரை முடிக்கு கருப்பு சாயம் ஏற்றுவது ஹராம் இல்லை என்பதாக சில நபிமொழிகளில் காணமுடிகிறது.

நபித் தோழர் ஜாபிர் அவர்கள் கூறினார்கள்:

'மக்கா வெற்றி நாளில் நபித் தோழர் அபூபக்கர் அவர்களின் தந்தை அபூ குஹாஃபா அவர்கள் நபியவர்களிடம் கொண்டு வரப்பட்டார். அவரது தலை முடியும் தாடியும் தும்பைப் பூவைப் பொல வெள்ளை வெளேர் என்று இருந்தது.

அப்போது நபியவர்கள் 'இந்த வெள்ளை நிறத்தை ஏதேனும் சாயம் கொண்டு மாற்றுங்கள். கறுப்பு நிறத்தை தவிர்த்துக் கொள்ளுங்கள்.' என்று கூறினார்கள். முஸ்லிம்: 4270

இன்றைய நவீன உலகம் தற்போது ரசாயனம் கலக்கப்பட்ட கருப்பு டைகளை உபயோகப்படுத்துவதை தவிர்த்து வருகிறது. அதற்கு மாற்றாக மருதாணியையும், செம்பருத்தியையும் உபயோகிக்க ஆரம்பித்துள்ளனர்.

ஆனால் நம்மவர்களில் பலர் இந்த ரசாயன கலவையில் உள்ள ஆபத்தை உணராது கருப்பு கலரை விரும்பி அடிக்கின்றனர். இதன் கெடுதலை நபி (ஸல்) அவர்கள் உணர்ந்ததாலோ என்னவோ கருப்பு டை அடிக்க தடை விதித்துள்ளார்கள்.

ஆண்களானாலும் பெண்களானாலும் ரசாயனம் கலந்த கருப்பு டைகளை தவிர்த்து இயற்கையில் கிடைக்கும் மருதாணியையும், செம்பருத்தியையும் கொண்டு வெள்ளை முடிகளை சற்று அழகாக்கிக் கொள்ளலாம் .

ர.ரா

## வானவர் ஜிப்ரயீல் (அலை) அவர்களின் சங்கடங்கள் .

இஸ்லாத்தின் தேன் துளிகள் 19



"வானிலிருந்து நீ இறங்கி வருவதில் உமக்கு எப்போதாவது கஷ்டமும் சங்கடமும் ஏற்பட்டதா ? "என்று ஜிப்ரீல் (அலை ) அவர்களிடம் நபிகள் பெருமானார் (ஸல் ) அவர்கள் வினவினார்கள்.

அதற்கு ஜிப்ரீல் (அலை ) அவர்கள்
'ஆம் ' நான்கு முறை சங்கடம் ஏற்பட்டது .

"முதலாவது இப்ராஹிம் (அலை) அவர்களை நெருப்பில் போட்ட போது நான் அர்ஷுக்கு கீழ் இருந்தேன் . "எனது அடியாரை காப்பாற்றிக் கொள் " என்று அல்லாஹ் கட்டளையிட்டான் . உடனே அவரிடம் வந்து , " உமக்கு ஏதேனும் தேவை இருக்கிறதா ? என்று வினவினேன் .அதற்கு அவர் , "உம்மிடத்தில் என்றால் எனக்கு இல்லை என்று கூறினார் .

"இரண்டாவது இப்ராஹிம் (அலை) இஸ்மாயில் உடைய குரல்வளையில் கத்தியை வைத்த போது நான் அர்ஷுக்கு கீழ் இருந்து கொண்டிருந்தேன் "எனது அடியாரை காப்பாற்றிக் கொள் " என்று அல்லாஹ் கட்டளையிட்டான் .உடனே இமை கொட்டுவதற்கு நான் அவரை அடைந்து கத்தியை புரட்டி விட்டேன் .

மூன்றாவது யூசுப் கிணற்றினுள் தள்ளப்பட்ட சமயம் , "என் அடியாரை காத்துக் கொள் " என்று அல்லாஹ் கட்டளையிட்டான் .அவர் கிணற்றடியில் வருவதற்கு முன்னதாக நான் வந்து கிணற்றின் அடியில் இருந்து கல்லை வெளிப்படுத்தி அதில் அவரை அமரச் செய்தேன் .

நான்காவது உஹது சண்டை நிகழ்ந்தபோது , இறை நிராகரிப்பாளர்கள் உம்மை நெருங்கி உமது முன் பற்களை உதிர்த்த பொழுது , " என் ஹபீபின் உதிரத்தை தடுத்துக்கொள் ஏனெனில் அவரது உதிரத்திலிருந்து பூமியின் மீது ஒரு துளி விழுந்தால் அதிலிருந்து ஒரு செடியும் கூட முளைக்காது "என்றான் .

உடனே நான் உமது உதிரத்தை என் கையால் பிடித்து ஆகாயத்திலிருந்து விட்டேன் " என்றார்

ர.ரா

" உலுல் பஜ்லி " என்பது யாரை குறிக்கிறது ?

இஸ்லாத்தின் தேன் துளிகள் 20

"அல்பஜ்லு " என்பது அவசியத்துக்கு மேல் அதிகமாக இருப்பவையான _மிச்சத்தைக் குறிக்கிறது.

சன்மார்க்கத்தில் கூறப்பட்டுள்ள பர்ளு , வாஜிபு ,சுன்னத்துக்களை நிறைவேற்றி விட்டு ,அதற்கு மேலும் அதிகமாக நபில் நிறைவேற்றுவதற்கும் , தங்கள் குடும்ப செலவுக்கு மேல் அதிகமான வருவாய் உள்ளவர்களுக்கும்"உலுல் பஜ்லி (மிச்சம் உள்ளவர்கள் ) என்று கூறப்படும் .

அபூபக்கர் சித்தீக் ரலி அவர்கள் தங்கள் சிறிய தாயின் புதல்வரான மிஸ்தஹ் (ரலி) என்பவருக்கு பண உதவி செய்து வந்தார்கள் . இவர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தலைமையில் நிகழ்ந்த பத்ரு சண்டையில் ஒரு போர் வீரராக இருந்து , பகைவர்களை எதிர்த்து யுத்தம் செய்தவர், திருமக்காவை விட்டு ஹிஜ்ரத் செய்து மதீனா முனவ்வராவில் குடியேறியவர்களில் ஒருவர் . ஆனால் பரம ஏழை .

ஹஜரத் அபூபக்கர் சித்தீக் (ரலி ) அவர்கள் அவருக்கு அவர் உறவின் பொருட்டும் , அவரது இஸ்லாத்துக்கு உழைத்த தியாகத்தையும் கருதி உபகாரமாக அவருக்கு பண உதவி செய்து வந்தார்கள்.

அன்னை ஆயிஷா சித்திக்கா ரலி அவர்கள் மீது அவதூறு கூறப்பட்டதை உண்மை என நம்பி இவரும் அந்த அவதூறை கூறலானார் . ஆதலால் அபுபக்கர் சித்திக் (ரலி ) அவர்கள் மனம் வருந்தி , அவருக்கு அளித்துவந்த உதவியை நிறுத்திவிட்டார.ு இதை அல்லாஹ் தஆலா விரும்பவில்லை. பிறர் செய்த தவறை மன்னித்து ஒதுக்குவது நல்லது என்று அருளினான் இதுபற்றி திருக்குர்ஆனின் அல்லாஹ் :

وَلَا يَاْتَلِ اُولُوا الْـفَضْلِ مِنْكُمْ وَالسَّعَةِ اَنْ يُّؤْتُوْۤا اُولِى الْقُرْبٰى وَالْمَسٰكِيْنَ وَالْمُهٰجِرِيْنَ فِىْ سَبِيْلِ اللّٰهِ ۖ وَلْيَـعْفُوْا وَلْيَـصْفَحُوْا ؕ اَلَا تُحِبُّوْنَ اَنْ يَّغْفِرَ اللّٰهُ لَـكُمْ ؕ وَاللّٰهُ غَفُوْرٌ رَّحِيْمٌ

இன்னும், உங்களில் (இறைவனின்) கொடை அருளப் பெற்றவர்களும், தக்க வசதி உடையவர்களும், உறவினர்களுக்கும் ஏழைகளுக்கும், (தம்மிடங்களை விட்டு) அல்லாஹ்வின் பாதையில் ஹிஜ்ரத் செய்தவர்களுக்கும் (எதுவும்) கொடுக்க முடியாது என்று சத்தியம் செய்ய வேண்டாம்; (அவர்கள் தவறு செய்திருப்பின்) அதை மன்னித்து (அதைப்) பொருட்படுத்தாமல் இருக்கவும்; அல்லாஹ் உங்களை மன்னிக்க வேண்டும் என்று நீங்கள் விரும்ப மாட்டீர்களா? மேலும் அல்லாஹ் (பிழை பொறுப்பவன்) மிக மன்னிப்பவன்; அன்பு மிக்கவன்.
(அல்குர்ஆன் : 24:22)

திருவசனத்தை அருளியதை நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் அபூபக்கர் சித்தீக் (ரலி ) அவர்களிடம் ஓதி காட்டியவுடன் அவர் , " ஆம் " என்னை அல்லாஹ் மன்னிப்பதே விரும்புகிறேன்" என்று கூறி தம்மால் நிறுத்தப்பட்ட பண உதவியை மறுபடியும் புதுப்பித்து உதவிகளை தொடர்ந்தார் . அதுவும் முன்னர் கொடுத்து வந்ததைப் பார்க்கினும் இரட்டிப்பாக கொடுத்தவுடன், " இதை இனி ஒருபோதும் குறைக்க மாட்டேன்" என்று உறுதியும் செய்தார் .இதுதான் அல்பஜ்லு ஆகும் .

மேலும் அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்களை திருமறை வசனத்தின் மூலம் அவரது உயர்ந்த அந்தஸ்தை வெளியாக்கி அவர்களை அல்லாஹுத்தஆலா " உலுல் பஜ்லி "
என்று கூறினான் .

இதையே நபிகள் பெருமானார் (ஸல்) அவர்களும் அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்களை "உலுல் பஜ்லி " என்று கூறியுள்ளார்கள் .

இதன் மூலம் அவர் சன்மார்க்கத்தில் கண்ணியவான் என்ற கருத்தில் அழைக்கப்பட்டுள்ளார் . எனவே நபிகள் பெருமானார் (ஸல)ு அவர்களுக்கு அடுத்தபடியாக உள்ள கண்ணியவான் ஹஜரத் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்கள்தான் என்பதாக அறிஞர்கள் மேலே குறிப்பிட்டுள்ள வசனத்தை ஆதாரமாக கூறுகின்றனர் .

நாமும் ஹஜரத் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களை " உலுல் பஜ்லி "
என்று கூறுவோம் .

ர.ரா

இத்துடன் "இஸ்லாத்தின் தேன் துளிகள் "
தொடர்பதிவுகள் நிறைவு பெறுகிறது . இத்தொடரை பற்றிய விமர்சனங்கள் வரவேற்கப்படுகிறது .

ஏறு பூட்டாமல் சோறு சாப்பிடலாம் !

நவீன விஞ்ஞான யுக்திகள் 01






பூமியில் இன்றைக்கு 6.8 பில்லியன் பேர்கள் சோறு எங்கிருந்து வருகிறது என்பதை ஆராயாமல் சுவையாக சுயமாகச் சாப்பிட்டுக் கொண்டே செல்போனை நோண்டிக் கொண்டிருக்கிறோம்.

ஆனால் 2050 ஆம் ஆண்டில் 9.5 பில்லியன் பேர்களுக்கு சோறு போட வேண்டிவரும். அதற்கு பிரேசில் நாடு அளவுக்குப் புதியதாக வேளாண்மை நிலம் நமக்கு தேவைப்படும் . ஏற்கனவே குடிநீரில் 70% மும் , எரிபொருளில் 20 % சதவீதமும் உணவு உற்பத்திக்காகவே செலவாகிறது . மேலும் ஒரு 3 பில்லியன் மனிதர்களுக்குத் தேவையான நிலத்திற்கும் , நீருக்கும் எரிசக்திக்கும் என்ன செய்வது ? எங்கே போவது ? இதற்கு கலப்பையில்லாத இல்லாத கட்டிட விவசாயம்தான் ஒரே தீர்வு.

நிலத்தை ஒரே உழுது , பாசனம் செய்து , உரம் இட்டு இட்டு பூமி தாய் நொந்துபோய் மலட்டுத்தன்மையை அடைந்துவிட்டாள் . வேண்டிய அளவுக்கு காடுகளையும் வெட்டி நாசம் செய்து அவற்றை விவசாய நிலங்களாக ஆக்கிவிட்டோம் . பின் அந்த விவசாய நிலங்களையும் கார்ப்ரேட் சாமியார்கள் கான்கிரீட் காடுகளாக ஆக்கிவிட்டார்கள். அதன் காரணமாக புவியின் சூடும் அதிகரித்துவிட்டது.

இந்த நிலையில் எதையாவது புதிதாகச் செய்தால்தான் இந்த சிக்கலில் இருந்து விடுபட முடியும் என்பதாக நவீன விஞ்ஞானம் எண்ணியது .

முப்பது மாடி கட்டிடத்தில் ஒவ்வொரு தளத்திலும் மண்ணை பயன்படுத்தாமல் பயிர்களை வளர்க்கும் உள்ளரங்க பயிரியல் முறைதான் கட்டிட வேளாண்மை "வில்லியம் எஃப் பெரிக் என்பவர் 1929 மண்ணில்லாமல் தொட்டியில் தண்ணீர் நிரப்பி அதில் ஊட்டச்சத்து உப்புக்களை கரைத்து செடிகளை வளர்த்து காட்டினார். இதற்கு பெயர் "ஹைட்ரோ போனிக்ஸ் "

இந்த நவீன யுக்தி எங்கிருந்தது கிடைத்தது ?

தற்போதைய ஈராக்
நாட்டினுள் பாபிலோனில் கி.மு 600 அளவில் பாபிலோனின் தொங்கு தோட்டமும் (Hanging Gardens of Babylon) நெபுகாத்நேசர் **(Nebuchadnezzar)** என்ற அரசனால் கட்டப்பட்டதாகக் கருதப்படுகிறது .

கற்களால் வளைவுகளும் மொட்டை மாடிகளும் கட்டப்பட்டன. அவற்றில் செடிகளும் தாவரங்களும் பயிரிடப்பட்டன. மேலிருந்து கீழாக தொங்கின .

யூப்ரேட்ஸ் ஆற்றிலிருந்து கப்பி முறையில் தண்ணீரை இறைத்து குழாய்கள் வழியாகச் செடிகளுக்குப் பாய்ச்சினர்.

இசுட்ராபோ, டையோடோரஸ் சிகுலஸ் (Diodorus Siculus) போன்ற கிரேக்க வரலாற்று ஆசிரியர்களால் விரிவாகப் பதியப்பட்டுள்ள இத்தொங்குத் தோட்டம் பற்றி எழுதியுள்ளனர் .

இரண்டாம் உலகப் போரின்போது 8 மில்லியன் கிலோ காய்கறிகளை ஹைட்ரோ போனிக்ஸ் முறையில் பசிபிக் தீவுகளில் நாட்டோ நாடுகளின் சார்பில் நிலம் இல்லாமல் நேரடியாகவே நீர் தொட்டிகளில் வளர்த்து பெறப்பட்டது.

வேர்கள் கெட்டியாக மண்ணை பிடித்துக்கொண்டு தான் வளரும் என்று பலகாலம் நாம் நம்பி வந்திருக்கிறோம் . உண்மையில் மண் தேவையில்லை; அந்தப் பயிர்களுக்கு மண்ணில் உள்ள தாதுக்கள்தான் தேவை .

அப்போ, தண்ணீர் தொட்டியில் செடியினால் நிற்க இயலாதே.. என்று தாதுக்களை தூளாக்கிப் போட்டு பல ஆண்டுகளாக மண் போலவே திரும்பத் திரும்ப பயன்படுத்தலாம் . இது பயரின் வேர்களுக்கு தேவையான பிடிமானத்தை மட்டும் தாதுக்கள் வழங்கும் மற்றபடி இதற்கு வேறு வேலை ஏதும் கிடையாது.

"ஏரோபோனிக்ஸ்" என்கிற இன்னொரு முறையில் செடிகள் நூலில் கட்டப்பட்டு காற்றில் தொங்கியபடி வளரும் காற்றில் குறைவில்லாத ஈரம் நிரம்பி இருந்தால் போதும் . மார்கழி பனி போல அறை முழுவதும் நீர்த்திவலைகள் நிரப்பி அதில் ஊட்டச்சத்துக்களை கரைத்து கலந்துவிட்டால் செடிகள் ஜோராக வளரும்.

" யூரோஃபிரெஷ் "என்னும் காய்கறி நிறுவனம் அரிசோனா பாலைவனத்தில் 318 ஏக்கர் நிலப்பரப்புச் சமமான விவசாயத்தை அடுக்குமாடி கட்டிடத்தில் செய்து கொண்டு வளர்கிறது .

தக்காளி வெள்ளரிக்காய் மிளகு ஆகியவற்றை ஹைட்ரோபோனிக்ஸ் முறையில் பயிர் செய்தது.

அடுக்குமாடி கட்டிடத்தின் ஒவ்வொரு தளத்திலும் பல அடுக்குகளில் வரிசையாக தொட்டிகளை நிறுத்தி அவற்றில் பயிர் செய்வது "செங்குத்து வேளாண்மை " எனப்படும் .

செங்குத்து வேளாண்மை பல ஏக்கர் நிலம் வேண்டியதில்லை எங்கெல்லாம் காய்கறி வேண்டுமோ அங்காங்கே பயிர் செய்து கொள்ளலாம்

மூடிய கட்டிடத்தில் சுத்தமான முறையில் பயிர் செய்வதால் காய்கறிகளில் பூச்சிகள் அண்டாது மண் மூலமாக பயிர்களில் பரவும் கிருமிகள் இருக்காது. இதனால் பூச்சிக்கொல்லி மருந்து , நோய்க்கிருமிகள் இல்லாத காய்கறி தானியங்கள் கிடைக்கும் .

பருவகாலம், மழைபொழிவு, புயல், வெள்ளம் என்ற பிரச்சினைகள் ஏதும் இல்லாமல் ஆண்டு முழுவதும் பயிர் செய்து கொண்டே இருக்கலாம் தேவையான மின்சக்தியை பயிர்களின் காய்ந்த குப்பை கூளங்களை எரித்து அனல் சக்தியாகிப் பெறலாம் .

படிப்படியாக மண்ணுக்கு ஓய்வு கிடைக்கும் மீண்டும் அவை பழைய இயல்பு நிலையை அடையும் விரும்பினால் அவற்றை அப்படியே விட்டுவிடலாம் இதன் மூலம் இழந்த காடுகளை திரும்பப் பெறலாம் .

அமைதிக்கான நோபல் பரிசு பெற்ற வங்காரி மாத்தய் (2004) சொன்னது போல் நிலங்களை சும்மா விட்டு விட்டால் போதும் குளோபல் வார்மிங் தானாகவே சரியாகிவிடும். சோற்றுக்கு என்ன செய்வது என்றால் அதற்குத்தான் செங்குத்து வேளாண்மை இருக்கிறதே

30 அடுக்கு மாடியில் செய்யப்படும் மொத்த விளைச்சல் ஆனது 150 ஏக்கர் நிலப்பரப்பில் செய்யப்படும் வேளாண்மைக்கு சமமாக இருக்கும் .

குட்டை ரக பயிர்களாக இருந்தால் ஒரே தளத்தில் மூன்று நான்கு அடுக்குகளாக அவற்றைப் பயிர் செய்து 2400 ஏக்கர் நிலத்திற்கு சமமான விளைச்சலைப் பெறலாம் .

கிராமப்புறங்களில் நிலங்களை விட்டுவிட்டு புறநகர் பகுதிகளே கட்டிடங்களில் கட்டி அவற்றில் அதற்கு சமமான விளைச்சலை பெறமுடியும் பள்ளிக்கூடங்கள் பெரிய பெரிய ஆஸ்பத்திரிகள் மற்றும் ஐடி போன்ற கட்டிடத்தின் தளங்கள் போன்றவற்றில் கூட கூண்டு கட்டி அவற்றில் அவசியமான அளவுக்கு காய்கறி பயிரிடலாம்.

நான்கைந்து வாரங்களில் கீரை கிடைத்துவிடும் .கம்பு மக்காச்சோளம் போன்ற தானியங்கள் 4 மாதங்களில் கிடைக்கும் முயன்றால் எல்லா பயிர்களையும் கட்டிடத்திற்குள்ளையே வளர்த்துக் கொள்ளலாம் .

இது போன்று உலகில் நெருக்கடிகள் தோன்றும் போதெல்லாம் நவீன யுக்திகள் ஒவ்வொரு காலகட்டத்திலும் கையாளப்பட்டு பிரச்சனைகள் தீர்க்கப்படும் , (உ-ம்)

எகிப்து நாட்டில் ஏற்பட்ட 7 வருட கொடுமையான பஞ்சத்திலிருந்து மக்களை பாதுகாக்க எகிப்து அரசாங்கத்திடம் நபி யூசுப் (அலை) அவர்கள் செய்து காட்டிய விவசாய புரட்சி யுக்தியைப் பற்றி குர்ஆனில்..
قَالَ تَزْرَعُوْنَ سَبْعَ سِنِيْنَ دَاَبًا فَمَا حَصَدْتُّمْ فَذَرُوْهُ فِىْ سُنْۢبُلِهٖۤ اِلَّا قَلِيْلًا مِّمَّا تَاْكُلُوْنَ
(நபி யூசுப் (அலை)) அவர்கள் கூறியதாவது: "தொடர்ந்து (வழக்கம் போல் நல்லவிதமாக) ஏழு ஆண்டுகள் நீங்கள் விவசாயம் செய்வீர்கள். அதில் நீங்கள் அறுவடை செய்யும் விளைச்சல்களில் நீங்கள் புசிப்பதற்கு வேண்டிய ஒரு சொற்ப அளவைத்தவிர மற்ற அனைத்தையும் அதன் கதிர்களிலேயே விட்டு வையுங்கள்.
ثُمَّ يَاْتِىْ مِنْۢ بَعْدِ ذٰلِكَ سَبْعٌ شِدَادٌ يَّاْكُلْنَ مَا قَدَّمْتُمْ لَهُنَّ اِلَّا قَلِيْلًا مِّمَّا تُحْصِنُوْنَ
அதற்குப் பின்னர், கடினமான (பஞ்சத்தையுடைய) ஏழு ஆண்டுகள் வரும். நீங்கள் கதிர்களில் பத்திரப்படுத்தி வைத்திருந்தவைகளில் (விதைப்புக்கு வேண்டிய) சொற்ப அளவைத் தவிர, (நீங்கள் சேகரித்திருந்த) அனைத்தையும் (அப்பஞ்சம்) தின்றுவிடும்.
(அல்குர்ஆன் : 12:47, 48)

ஆக எந்த வழியிலும் மக்களை காப்பாற்ற , ஏக வல்லோன் தக்க ஏற்பாடுகளை செய்து கொண்டே இருப்பான் .

பூமிக்கடியில் தண்ணீர்

நவீன விஞ்ஞான யுக்திகள் 02




இந்திய வேளாண்மை முறையினை பற்றி ஆராய்ச்சி செய்து பார்த்ததில், நம்முடைய விவசாய முறைகள் அனைத்தும் இயற்கையை சார்ந்தே இருந்தது என்பது உண்மை.

பழங்காலத்தில் மனு, சரஸ்வத் மற்றும் பாஸ்கரா சூரி போன்றவர்கள் மிகத் துல்லியாமாக பூமிக்கடியில் இருக்கும் நீர்வழித் தடங்களைக் கண்டுபிடிக்கும் ஆற்றல் கொண்டிருந்தனர்.

அதற்கடுத்ததாக வந்த வராகமித்திரர் தன்னுடைய பிரிஹட் சம்ஹிதா என்ற புத்தகத்தில் 54-வது அத்தியாயத்தில் 125 வசனங்கள் மூலம் நிலத்தடி நீர் எங்கு உள்ளது என்பதை பற்றி மிக விரிவாக எழுதியுள்ளார். இவர் தன்னுடைய அத்தியாய வசனத்தில் பூமிக்கு அடியில் உள்ள நீரினை எளிதாக கண்டுபிடிக்கும் முறையினைப் பற்றி குறிப்பிட்டுள்ளார்.

வராகமித்திரர் தன்னுடைய புத்தகத்தில் பூமிக்கு அடியில் உள்ள தண்ணீரை பல்வேறு திசைகள் கொண்டு சுட்டிக் காட்டியுள்ளார். அத்திசைகளுக்கு பழங்காலத்தில் கடவுளின் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளதைப் பற்றியும் தெரிவித்துள்ளார்.

நாவல் மரம் உள்ள பகுதிகளில் கண்டிப்பாக நீர் இருக்கும் என்று குறிப்பிடப்படுகிறது. பெரும்பாலும் நாவல் மரம் இருக்கும் பகுதிகளில் மேற்கு மற்றும் கிழக்கு பகுதிகளில் சுவையான நிலத்தடிநீர் இருக்கும். ஏனென்றால் இந்த மரத்தின் வேர் பகுதிகள் மழைகாலங்களில் பெய்யும் தண்ணீரை தனக்குள் ஈர்த்து வைத்துக்கொள்ளும் ஆற்றல் கொண்டது என்று தற்போது அறிவியல் அறிஞர்கள் ஆய்வு செய்து நிரூபித்துள்ளனர்.

மேலும் புற்றுகள் உள்ள பகுதிகள் மற்றும் வெள்ளை நிற தவளை (தேரை) இருக்கும் இடங்களிலும், வெள்ளை நிற பூக்கள் கொண்ட காட்டு மரங்கள் வளரும் பகுதிகளிலும் கண்டிப்பாக நிலத்தடிநீர் இருக்கும் என்றும் கூறியுள்ளனர்.

மருதம் மற்றும் நாவல் மரம் மட்டுமல்லாது, அத்திமரம், கடம்ப மரம், நொச்சி மரம், அர்ச்சுனா மரம், பிலுமரம், புளியமரம், மருத மரம், வேம்பு மரம், வில்வம் போன்ற மரங்கள் இருக்கும் பகுதிகளில் கண்டிப்பாக தண்ணீர் இருக்கும் என்று வராகமித்திரர் தன்னுடைய புத்தகத்தில் குறிப்பிட்டுள்ளார்.

இயற்கைப் பொருள்களாக மரங்கள், மலைகளில் உள்ள எறும்புகள் அதன் புற்றுகள், பாறைகள், பாறைகளின் நிறம் மற்றும் மண்ணின் இயல்பு ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு நீர்வழித் தடங்களைக் கண்டறிய முடியும் என்கிறார்.

குர்ஆனில் நபி சுலைமான் (அலை) அவர்களின் படை பரிவாரங்களில் பெரிய ஜின் கணங்கள் முதல் சிறிய பறவைகள் வரை இருந்தன.

சிட்டுக்குருவி இனத்தைச் சேர்ந்த ஹுத்ஹுத் என்ற சிறு பறவை இனத்தின் தலைமைப் பறவைக்கு "யஃபூர் " என்று பெயர் .

நபி சுலைமான் (அலை) அவர்கள் காற்றில் மிதந்தவாறு ஆகாயத்தில் பறக்கும்போது மிகப் பசுமையான செழிப்பான பூமியைப் பார்த்தும் அங்கு இறங்குவார்கள் .ஆனால் அங்கு தண்ணீர் கிடைக்கவில்லை என்ற போது தண்ணீர் இருப்பதை காட்டிக் கொடுக்கும் ஹுத்ஹுத் பறவையை தேடினார்கள் .பளிங்குள் தண்ணீர் இருப்பதை மனிதர் பார்ப்பதுபோல் பூமி கீழ் தண்ணீர் இருப்பதை இந்த ஹுத்ஹுத் பார்த்துவிடும் .

தண்ணீர் பக்கத்தில் இருக்கிறதா ? தூரத்தில் இருக்கிறதா ? என்பதை அது அறிந்து கொள்ளும். அது தனது சொண்டால் தண்ணீர் இருக்கிற இடத்தில் பூமிக்கு மேலே கொத்தி கிளரும். உடனே ஜின் கணங்கள் அவ்விடத்தில் பூமியைத் தோண்டி தண்ணீரை வெளியே எடுப்பார்கள்.

ஆங்கிலத்தில் இப்பறவை 'ஹூப்போ' என்று அழைக்கப்படுகிறது. இது இஸ்ரேல் நாட்டின் தேசியப் பறவை. .

நபியவர்கள் பாலைவனப் பயணத்தின்போது, தண்ணீர் இருக்கும் இடத்தின் அருகில் தரையைக் கொத்தி, தன்னுடைய கொண்டையை ஆட்டி ஆடும். அங்கு தண்ணீர் இருக்கிறது என்று தெரிந்து, குழி தோண்டி தண்ணீர் எடுத்து தாகம் தீர்ப்பார்கள்.அதனால் தமிழில் கொண்டலாத்திப் பறவை எனப்படுகிறது.

நபி சுலைமான் (அலை) அவர்கள் அப்படி ஒரு தடவை பயணப்பட்டு போகும் போது ஹுத்ஹுத் பறவையைத் தேடியதாக குர் ஆனில் ...

وَتَفَقَّدَ الطَّيْرَ فَقَالَ مَا لِىَ لَاۤ اَرَى الْهُدْهُدَ ‌ۖ اَمْ كَانَ مِنَ الْغَآٮِٕبِيْنَ
அவர் பறவைகளை(ப் பற்றியும்) பரிசீலனை செய்து: "நான் (இங்கே) ஹுத்ஹுத் (பறவையைக்) காணவில்லையே என்ன காரணம்? அல்லது அது மறைந்தவற்றில் நின்றும் ஆகி விட்டதோ?" என்று கூறினார்.
(அல்குர்ஆன் : 27:20)

மிக சுபலமான முறையில் நிலத்தடி நீரை கண்டுபிடிக்கும் முறைகளில் ஒன்று தேங்காய் வைத்து பார்க்கும் முறையாகும். டாடா சோசியல் சயின்ஸ் அமைப்பு உலர் தேங்காயை பயன்படுத்தி நிலத்தடி நீரை கண்டுபிடிக்கும் யுக்தியினை கண்டுபிடித்துள்ளனர்.

அதாவது ஒரு தேங்காவை எடுத்து உறித்து (குடுமி மட்டும் உள்ளவாறு) மெதுவாக "எல்" (L) வடிவில் உங்கள் கையினை வைத்து உள்ளங்கையில் தேங்காவை வைத்துக்கொண்டு நிலத்திற்கு மேல் நடைபயிற்சி மேற்கொள்ள வேண்டும்.

அப்போது எங்கு பூமிக்கு அடியில் தண்ணீர் இருக்கிறதோ அந்தப்பகுதிக்கு தேங்காவை கொண்டு சென்றால் தேங்காயின் குடுமி 90 டிகிரி-ல் வானத்தை நோக்கி இருக்கும். இப்படி 90 டிகிரியில் தேங்காயின் குடுமி இருந்தால் அங்குதான் தண்ணீர் இருக்கிறது என்பதை நாம் அறிந்து கொள்ளலாம்.

ஹுத்ஹுத் பறவை தன் அழகான கொண்டை (குடுமி) யைப் பயன்படுத்தி பூமிக்கடியில் தண்ணீர் இருப்பதைக் கண்டு பிடிப்பதுப் போல் , மனிதர்கள் தேங்காய் குடுமியைப் பயன்படுத்தி பூமிக்கடியில் உள்ள தண்ணீரை கண்டுபிடிக்கிறார்கள் . எல்லாமே இயற்கையிலிருந்து மனிதர்கள் கற்றுக் கொண்ட பாடங்கள் !

" என்ன! இனி நீங்கள் தண்ணீரைத் தேடி எங்கும்அலையாமல் நீங்களே நீர் வழித்தடத்தை கண்டுபிடித்துக் கொள்ளலாம் என்கிறார்கள் டாடா சோசியல் சயின்ஸ் அமைப்பு .
அட , முயற்சி செய்து பாருங்களேன்.

ர.ரா

சலனமும், சப்தமும்

நவீன விஞ்ஞான யுக்திகள் 03



இயற்கையால் படைக்கப்பட்ட அனைத்திற்கும் ஆதியாக இருப்பது எது?

மனிதனால் உருவாக்கப்பட்ட எல்லா வஸ்துகளுக்கும் அடிப்படையாக இருப்பது எது ?

மனிதன் உள்ளிட்ட உயிரினங்கள் , விலங்கினங்கள் , செடி , கொடிகள் ஆகியவற்றின் தோற்றம், வளர்ச்சி , செயல்பாடு, அதன் மறைவு ஆகியவற்றிற்கு ஆதாரமாக விளங்குவது எது ?

பிரபஞ்சமும், அதில் உள்ள சகலமும் அதனதன் கால நியதிப்படி இடைவிடாமல் இயங்கிக் கொண்டே இருப்பதற்குக் காரணம் எது ?

இந்த அனைத்துக் கேள்விகளுக்கும் ஒரே ஒரு விடை " சலனமும் சப்தமும் "

சிறிய அளவிலோ , அல்லது பெரிய அளவிலோ ஏற்படும் சலனம் அல்லது அசைவு ஒவ்வொன்றும் அதற்குத் தக்கபடி ஒலியை ஏற்படுத்துகின்றன.

இதையே இன்னும் திருத்தமாக சொல்வது என்றால், குறிப்பிட்ட சப்தம், அதற்கேற்ற சலனத்திற்கு - இயக்கத்திற்குக் காரணமாக அமைகிறது.

அது இயக்கமாக மாறுவது எப்படி ?

இங்கே, சலனம் என்று சொல்லப்படுவது ஆங்கிலத்தில் வைப்ரேஷன் (Vibration) என்கிற அதிர்வு .

விஞ்ஞானிகள் பொருள்களைப் பகுத்துப் பார்த்து, அனைத்து பொருள்களின் மூல வடிவம் அணு என்பதைக் கண்டு பிடித்தார்கள் . அப்போதுதான் பிரபஞ்சத்திலுள்ள அனைத்துமே அணுக்களின் தொகுப்பு என்பது தெரிய வந்தது.

அந்த அணுவையும் பிளந்து பார்த்த போது , அணுவின் நடுவில் நியூக்ளியஸ் என்ற கருவும், அதனைச் சுற்றி எலக்ட்ரான்களும் இடைவிடாமல் ஒரே கால கதியில் நியூக்ளியசைச் சுற்றி வருவதையும் தெரிந்து கொண்டனர் .

இதை எலக்ட்ரான் மைக்ரோஸ்கோப் கருவி மூலம் அணுவைப் பார்க்கும் போது அது துடிதுடித்துக் கொண்டு இருப்பது போலத் தோன்றுகிறது. இயற்கை உருவாக்கிய இந்த துடிப்புதான் 'சலனம் ' எனப்படுகிறது .

சாதாரண கண்களுக்குப் புலப்படாத அந்த அணுவைப் பிளந்து, அதில் வேதியியல் மாற்றம் ஏற்படுத்தும்போது மிகப் பெரிய சக்தி, சப்தம் எல்லாம் ஏற்பட்டு, அது அணுகுண்டு என்று பெரும் ஆற்றலாக மாறுகிறது.

இயற்கை உருவாக்கிய இந்த அணுக்களின் தொகுப்பே உயிரினங்களாகவோ , செடி , கொடிகளாகவோ , ஜடப்பொருளாகவோ வெவ்வேறு வடிவமாகக் காட்சி அளிக்கின்றன .அத்தகைய அணுக்களின் தொகுப்பில் உருவான மனித உடல் , கோடிக்கணக்கான செல்களால் இயக்கம் பெறுகிறது !

ஒவ்வொரு செல்லும் அதில் உள்ள அணுக்களின் சலனத்தால், அதனதன் போக்கில் முறையாக இயங்கிக் கொண்டிருக்கின்றன .

ஒவ்வொரு அணுவுக்குள்ளும் இயற்கையாகவே நிகழும் இந்த சலனம் என்ற இயக்கம் அந்த செயல்பாட்டுக்கு ஏற்ப, மின்காந்த அலைவரிசையை (Magnetic Waves ) வெளிப்படுத்துகிறது .

இந்த மின்காந்த அலைவரிசையின் தாக்கம் அந்த அணுவுக்குள் மட்டும் அடங்கி விடாமல் , பிரபஞ்சமெங்கும் வியாபிக்கிறது .

(உ-ம்) குளத்தில் ஒரு கல்லை வீசினால், அதனால் அந்த இடத்தில் ஒரு சலனம் ஏற்படுகிறது .அது அந்த இடத்துடன் நின்று விடுவது இல்லை. கல்லை வீசியதால் ஏற்பட்ட சலனம், வட்ட வடிவ அலை போல உருவாகி , அடுக்கடுக்காக பெருகி , அந்த அலைகள் குளம் முழுவதையும் சென்றடைகின்றன.

அதுபோல அணுவுக்குள் ஏற்படும் சலனத்தின் தாக்கம் , பிரபஞ்சம் முழுவதும் பரவிக் கொண்டே இருக்கிறது !

ஒவ்வொரு வகையான அணுவிலும் ஒவ்வொரு வகையான சலனம் ஏற்படும் அந்த சலன மின்காந்த அலைவரிசையை தெரிந்துகொண்டு , அதில் மாற்றம் செய்வதன் மூலம் அணுக்கள் மற்றும் அவைகளால் உருவான செல்களின் செயல்பாட்டில் மாற்றத்தை ஏற்படுத்த முடியும் .

அணுக்களின் மின்காந்த அலைவரிசையில் , அதாவது அதன் சலனத்தில் மாற்றத்தை ஏற்படுத்த இயற்கை கையாண்ட வழிதான் சப்தம் .

சலனமும், சப்தமும் ஒன்றுக்கொன்று தொடர்புடையது என்ற அடிப்படையில் சப்தம், அதாவது குறிப்பிட்ட ஒலியை உருவாக்கி, அதன் மூலம் , அணுக்களால் ஆன செல்களின் சலனத்தில் விரும்பும் மாற்றத்தை ஏற்படுத்த முடியும் என்று இறைவன் விசேஷமான சப்த ஒலி ( திக்ரு) அமைப்புடன் கூடிய வார்த்தைகள் அடங்கிய புனித வேதமான திருக்குர்ஆனை அருளினான். அணுக்களின் சலனத்தில் மாற்றம் ஏற்படக்கூடிய சப்த ஒலிகள் திருக்குர்ஆனில் நிறையவே இருக்கிறது .

FM ரேடியோவில் 106.4 என்ற அலைவரிசைக்குச் சென்றால்தான் , ஹலோ எப்.எம்.நிகழ்ச்சிகளைத் துல்லியமாகக் கேட்க முடியும் .106.4 என்பதற்குப் பதிலாக 106.5 என்ற அலைவரிசைக்கு மாறிச் சென்றால் அந்த நிகழ்ச்சியை கேட்க முடிவதில்லை .

அதுபோல வானவெளியில் வியாபித்து இருக்கும் மின்காந்த அலைகளை அதற்குரிய சரியான ஒலியின் மூலம் பிடித்தால்தான் எதிர்ப்பார்க்கும் பலன் கிடைக்கும் . அந்த சரியான ஒலி அமைப்புகள் ( திக்ருகள்) திருக்குர்ஆன் எங்கும் வியாபித்திருக்கிறது .

பிரார்த்தனையும் திக்ரும் பலவிதமான உடல் மற்றும் உள்ளம் சார்ந்த நோய்களை குணமாக்குகிறது என்பதை 1400 ஆண்டுகளுக்கு முன்பே இறைவன் தன்னுடைய திருமறையில் கூறியிருக்கிறான் .

اَلَّذِيْنَ اٰمَنُوْا وَتَطْمَىِٕنُّ قُلُوْبُهُمْ بِذِكْرِ اللّٰهِ اَلَا بِذِكْرِ اللّٰهِ تَطْمَىِٕنُّ الْقُلُوْبُ

(நேர் வழி பெறும்) அவர்கள் எத்தகையோரென்றால், அவர்கள் தாம் (முற்றிலும்) ஈமான் கொண்டவர்கள்;

மேலும், அல்லாஹ்வை நினைவு கூர்வதால் அவர்களுடைய இதயங்கள் அமைதி பெறுகின்றன;

அல்லாஹ்வை நினைவு கூர்வது கொண்டு தான் இதயங்கள் அமைதி பெறுகின்றன என்பதை அறிந்து கொள்க! **(குர்ஆன் : 13:28)**

இதை இன்று ஆராய்ச்சியாளர்கள் மெய்ப்பித்திருக்கிறார்கள்.

"பிரார்த்தனை மனித உடல் ரீதியான நோய்களும் குணம் பெற உதவுகிறது என்று ஹார்வர்டு மருத்துவ பல்கலைக்கழக பேராசிரியர் டாக்டர் ஹெர்பெட் பென்சன் கூறியிருக்கிறார் .

பிராத்தனை திக்ரு போன்றவை மனித மனத்தை தூண்டி ஒரு மருந்தை போல் அதை செயல்பட வைக்கின்றன.

எய்ட்ஸ் நோயின் அறிகுறிகளை நீக்குகின்றன . உயர் ரத்த அழுத்தத்தையும் குறைக்கின்றன. கருத்தரிக்க இயலாத தன்மையை குணமாக்குகின்றன என்று டாக்டர் ஹெர்பெர்ட் பென்சன் கூறியிருக்கிறார்.

பிரார்த்தனைக்கு நோய்களை குணப்படுத்தும் சக்தி இருக்கிறது என்பதை டாக்டர்களுக்கு உணர்த்தும் நோக்கத்தில் பாஸ்டன் நகரில் ஒரு மாநாடு நடத்தப்பட்டது . இந்த மாநாட்டில் பேசிய டாக்டர் ஹெர்பர்ட்....

"திரும்ப திரும்ப பிரார்த்தனை செய்வதும் திக்ரு செய்வதும் புறச் சிந்தனைகளை அகற்றி மனதை ஒருமுகப்படுத்துவதும் மனிதனின் உடல் சம்பந்தமான பல்வேறு வியாதிகளை குணப்படுத்துகின்றன " என்று கூறினார்

"பிரார்த்தனை செய்யும் போதோ திக்ரு செய்யும் போதோ மனம் ஒருமுகப்படுத்தப் படுகிறது . இது மூளையின் செயல்திறனை அதிகரிக்கிறது . அப்படி மூளையின் செயல்திறன் அதிகரிக்கும் போது மனிதனை வருத்திக் கொண்டிருக்கும் நோய்கள் குணமாகின்றன .

அறுவைச் சிகிச்சை மற்றும் விலை கூடுதலான மருந்துகளின் தேவையை திக்ரு தவிர்க்கிறது என்று டாக்டர் ஹெர்பெர்ட் பென்சன் கூறியிருக்கிறார்

மனதை ஒருமுகப்படுத்தும் இந்த மாதிரியான பிரார்த்தனை திக்ரு போன்றவைகளில் ஈடுபடுபவர்கள் மருத்துவமனைக்குச் செல்வது மிகவும் அரிதாக இருப்பது என்னுடைய ஆராய்ச்சியில் கண்டறிந்து இருக்கிறேன் என்றும் கூறியிருக்கிறார் .

"நீண்ட நாட்களாக குழந்தை பாக்கியம் இல்லாத தம்பதிகள் இதில் 40% பேர் பிரார்த்தனையில் ஈடுபட்ட 6 மாதத்திற்குள் கருத்தரிக்கும் வாய்ப்பை பெற்று இருக்கிறார்கள் என்கிறார் அவர்.

தியானம் மற்றும் பிரார்த்தனை தொடர்ந்து ஈடுபட்டு வருபவர்கள் அதனால் ஏற்படும் உடல் ரீதியான மாற்றங்கள் குறித்து ஆராயுமாறு டாக்டர் ஹெர்பர்ட் பென்ஷனைக் கேட்டுக்கொண்டார்கள் .

அந்த வேண்டுகோளை ஏற்று 25 ஆண்டுகளாக இந்த ஆராய்ச்சியில் ஈடுபட்ட டாக்டர் கடைசியாக இந்த முடிவுக்கு வந்திருக்கிறார் . மருத்துவமனையில் இருக்கும் நோயாளிகளுக்கு மருந்து மற்றும் அறுவை சிகிச்சை மேற்கொள்ளும் அதே சமயத்தில் அவர்களை பிரார்த்தனை செய்வதும் நல்ல பலனை அளிக்கும் என்கிறார் டாக்டர் .

எனவே குறிப்பிட்ட சப்தம், அதற்கேற்ற சலனத்திற்கு - இயக்கத்திற்குக் காரணமாக அமைகிறது. அது திருக்குர்ஆனில் முழுமையாய் இருக்கிறது !

ர.ரா

ஜலதோஷத்திற்கு விஞ்ஞானத்தில் வைத்தியமே கிடையாதா ?

நவீன விஞ்ஞான யுக்திகள் 04



ஜலதோஷம் என்பது பாக்டீரியாவை விட நுட்பமான கிருமியை விடச் சிறுமி . இது வைரஸின் தாக்குவதால் ஏற்படுகிறது

டெம்பரேச்சர் அதிகம் இருந்தால் இந்த வைரஸ் பிழைக்காது. மூக்கில் மேலும் கீழும் புஷ் புஷ் என்று காற்று செல்கிறதல்லவா ? வைரஸ் வளர்வதற்கு அந்த இடம் சௌகரியமாக ஏர்-கண்டிஷன் ஆக இருப்பதால் சளி பிடிக்கிறது .

ஜலதோஷத்திற்கு மனித சரித்திரத்தின் ஆரம்ப காலங்களிலிருந்தே மருந்து சொல்லி வந்திருக்கிறார்கள் .

ரோமாபுரியின் தத்துவ ஞானி பிளினி ஒரு குதிரையின் மூக்கை முகர்ந்து முத்தமிட்டால் ஜலதோஷம் பட்டென்று போய்விடும் என்றார் . பெண் குதிரையா ? என்று கேட்க வேண்டாம்

உள்ளிப்பூண்டு , எலுமிச்சை , தேன் இவற்றை கலந்து சாப்பிட்டால் பறக்கும் என்பார் சிலர் .

"ஒரு மஞ்சளை எரித்து புகையை முகர்ந்து பார் " என்பர் சிலர் .

"வால் மிளகை ஊசி முனையில் கோர்த்துப் பற்ற வைத்து புகை பிடித்து பார் " என்பர் வேறு சிலர்.

இன்னும் சிலர் "பிராந்தி சாப்பிட்டால் போதும் "என்பார் உடனே வாந்தி வரும் வரை பிராந்தி சாப்பிடுவார்கள் ஜலதோசம் கூடுமே தவிர குறையாது

இப்படி வீட்டுக்கு வீடு வைத்தியம் ஜலதோஷத்திற்கு உண்டு .

'அலர்ஜி' வகைகள் தோஷம் வந்தார் ஆண்டி ஹிஸ்டமைன்களை உட்கொண்டால் நல்ல தூக்கம் வரும் .

ஜலதோஷத்துக்கு விஞ்ஞானிகளின் லேட்டஸ்ட் மருந்து ரொம்ப சிம்பிள் -"நீராவி " இதற்காக ரைனோதெர்ம் என்று குட்டியாக ஒரு மிஷின் பண்ணி இருக்கிறார்கள் . ஒரு டைப்ரைட்டர் அளவுக்கு இருக்கிறது . அதிலிருந்து இரண்டு டியூப் வருகிறது அதை மூக்குக்கு ஒன்றாக திணித்துக்கொண்டு மெஷினை இயக்கினால் சுமார் 109 டிகிரி பாராஹீட்டில் நீராவி அடிக்கும் . தாங்கிக் கொள்ளக்கூடிய சூடு என்றுதான் சொல்கிறார்கள்.

இப்படி இந்த ஆவியை அரை மணி நேரம் மூக்கு வழியாக பிடித்து வாய் வழியாக விடவேண்டும் அப்புறம் இரண்டு மூன்று மணி நேரம் இடைவெளிவிட்டு மறுபடி !

இவ்வாறு இரண்டு மூன்று தடவை செய்தால் 'ஜிகோ' என்று ஜலதோஷம் பறந்து போய்விடும் என்று சம்பந்தப்பட்ட மிஷின் தயாரிப்பாளர்கள் சத்தியம் பண்ணுகிறார்கள்.

இந்த சிகிச்சையின் நோக்கம் வைரஸை சூடு பண்ணியே கொலை பண்ணி விடுவது ! எப்படியோ ஜலதோஷம் விலகினால் சரி !

மனைவின் தலைவலி கணவருக்கு தொற்றுமா ? கீழே கொடுக்கப்பட்ட சம்பவத்தை படித்து விட்டு இதை நீங்கதான் சொல்ல வேண்டும் ..

காசிம் இப்னு முஹம்மத் இப்னி அபீ பக்ர் அஸ்ஸித்தீக்(ரஹ்) கூறினார்

(ஒருமுறை கடுமையான தலைவலியினால் சிரமப்பட்ட) ஆயிஷா(ரலி), 'என் தலை(வலி)யே!' என்று சொல்ல,

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் , நான் உயிரோடிருக்கும் போதே உனக்கு அது
(-இறப்பு-) ஏற்பட்டுவிட்டால் உனக்காக நான் (அல்லாஹ்விடம்) பாவமன்னிப்புக் கோரி உனக்காக (மறுமை நலன் கோரி) பிரார்த்திப்பேன்' என்று கூறினார்கள்.

ஆயிஷா(ரலி), 'அந்தோ! அல்லாஹ்வின் மீதாணையாக! நான் (விரைவில்) இறந்து போய்விடுவதையே நீங்கள் விரும்புகிறீர்கள் என்று எண்ணுகிறேன். நான் இறந்துவிட்டால் அந்த நாளின் இறுதியிலேயே (என்னுடைய இல்லம் சென்று) நீங்கள் உங்களுடைய (மற்ற) துணைவியரில் ஒருவருடன் மணவறை காண்பீர்கள். (என்னை மறந்து விடுவீர்கள்)' என்று

கூறினார்கள்.

நபி(ஸல்) அவர்கள் (புன்னகைத்துவிட்டு) 'இல்லை (உனக்கு ஒன்றும் ஆகாது); நான்தான் (இப்போது) 'என் தலை(வலி)யே!' என்று சொல்ல வேண்டியுள்ளது. (உண்மையில் உன் மீதும் உன் குடும்பத்தார் மீதும் அதிக மதிப்பு வைத்துள்ளேன். எனவேதான் உன் தந்தை) அபூ பக்ருக்கும் அவரின் புதல்வருக்கும் ஆளனுப்பி (வரவழைத்து எனக்குப் பின் என் பிரதிநியாகச் செயல்படும்படி) அறிவித்து விட விரும்பினேன். ஸஹீஹ் புகாரி : 5666..

நாக்கும் , மூக்கும்

நவீன விஞ்ஞான யுக்திகள் 05



ஒரு நாக்கு இத்தனை சுவைகளை எப்படி இனம் பிரிக்கிறது ?
ஒரு மூக்கு எத்தனை வாசனைகளை இனம் பிரிக்கிறது ?

நாக்குதான் ஐம்புலன்களிலேயே ரொம்பவும் வீக்கு ! அதற்கு நான்கு ஆதார ருசிகள் தான் தெரியும் . எலுமிச்சையின் புளிப்பும் , சர்க்கரையின் தித்திப்பு , காபியின் கசப்பு , உப்பு இதைத்தவிர ஸேவரி என்று சொல்கிற டேஸ்ட் எல்லாம் இந்த நான்கு ஆதார ருசிகளின் கலப்புதான் .

இந்த ருசிகளை தொட்டு அறிய நாக்கு வெவ்வேறு இடங்கள் உண்டு .
தித்திப்பு - நுனிநாக்கு உப்பு - பரவலாக குறிப்பாக நுனியில் , கசப்பு - உள்நாக்கு புளிப்பு , ஸேவரி நாக்கின் இடது வலது புறங்கள் !

ஒரு சராசரி மனிதனுடைய நாக்கில் 9000 சுவை அரும்புகள் உண்டு அலட்டல் வேண்டாம் . குழந்தையின் நாக்கு உடன் ஒப்பிடும்போது இது ஒன்றுமே இல்லை .

ஏதாவது ஒரு மருந்தை நாக்கில் தொட்டால் குழந்தைகள் என்னமா 'எக்ஸ்பிரஷன்' காட்டுகின்றன !

பிறந்த குழந்தை அம்மாவின் மார்பகத்தை நோக்கி முகம் தூக்குவது கூட 'பார்த்து ' இல்லை வாசனைதான் !

மேலும் சுவைக்கு வாசனையும் சேர வேண்டும் இரண்டும் ஒத்துழைத்தால் தான் பிரியாணி, பாதாம் அல்வா, ஐஸ்கிரீம் போன்றவை ருசிக்க முடியும் !

மூக்கை பிடித்துக்கொண்டு ஐஸ்கிரீம் சாப்பிட்டு பாருங்கள் ஜில்லென்று இருக்கும் அவ்வளவே கூடவே சூடும், உணவின் தோற்றமும் முக்கியம் .

மூக்குக்கு மொத்தம் 7 வாசனைகள் : கற்பூர வாசனை , பெப்பர்மிண்ட் வாசனை , மலர்களின் வாசனை , மஸ்க் என்னும் அரபு ஷேக் செண்ட் வாசனை, ஈத்தர் அல்லது பெட்ரோல் வாசனை, அழுகிய முட்டை வாசனை , காட்டமான அமில வாசனை .

இந்த ஏழு வாசனைகளின் கலப்புகளால்தான் நம்மால் ஆயிரக்கணக்கான வாசனைகளை உணரமுடிகிறது !

கீழ்க்காணும் வாசனைகளை யோசித்துப் பாருங்கள் .மரம் எரிவது, முடி எரிவது , கூவம் மணம் , மீன் நாற்றம் , கருவாட்டு நாற்றம் , ஷேவிங் சோப் குழந்தையின் வாய் , வியர்வை , மல்லிகை !

நபி யூசுப் (அலை) தன் சட்டையை பார்வை தெரியாமல் இருக்கும் தன் தந்தையாரின் முகத்தில் போட கொடுத்து விடுகிறார்கள் .

اِذْهَبُوْا بِقَمِيْصِىْ هٰذَا فَاَلْقُوْهُ عَلٰى وَجْهِ اَبِىْ يَاْتِ بَصِيْرًا وَاْتُوْنِىْ بِاَهْلِكُمْ اَجْمَعِيْنَ

“என்னுடைய இந்தச் சட்டையை நீங்கள் எடுத்துக் கொண்டு சென்று, என் தந்தையாரின் முகத்தில் போடுங்கள்; அவருக்குக் கண்பார்வை வந்துவிடும்; இன்னும் உங்களுடைய குடும்பத்தார் அனைவரையும் என்னிடம் கொண்டு வாருங்கள்” (என்று கூறினார்).
(அல்குர்ஆன் : 12:93)

وَلَمَّا فَصَلَتِ الْعِيْرُ قَالَ اَبُوْهُمْ اِنِّىْ لَاَجِدُ رِيْحَ يُوْسُفَ لَوْلَاۤ اَنْ تُفَنِّدُوْنِ

(அவர்களுடைய) ஒட்டக வாகனங்கள் (மிஸ்ரை விட்டுப்) பிரிந்த நேரத்தில், அவர்களுடைய தந்தை, “நிச்சயமாக நான் யூஸுஃபின் வாடையை நுகர்கிறேன்; (இதன் காரணமாக) என்னை நீங்கள் பைத்தியக்காரன் என்று எண்ணாமல் இருக்க வேண்டுமே!” என்றார். (அல்குர்ஆன் : 12:94)

நபிமார்களின் வாசனையை அல்லாஹ்வே அறிவான் ! காருண்ய நபி (ஸல்) அவர்களின் வாடை கஸ்தூரி !

ர.ரா

எரிமலைகள் என்னும் அக்கினி சாட்சிகள்

நவீன விஞ்ஞான யுக்திகள் 07



பூமியின் உள் விவகாரம் சிக்கலான சங்கதி அரசியல் போல ! நிறைய இடங்கள் கடினமாக இறுகி , ஒன்றும் பண்ணாத கல்லாகி கிடக்க , சில சில பகுதிகளில் சில சில காரியங்கள் நடக்கின்றன.

பூமியின் உள்ளே பொழுது போகாத சில வெப்ப வாயுக்கள் வெளியே போக திட்டம் போட்டு ஒன்று சேர்ந்து சாதுவாக கிடக்கும் பாறைகளை உருக்க ஆரம்பிக்கின்றன .

மகா மகா அழுத்தத்தோடும் , உஷ்ண தோடும் கொதிக்க கொதிக்க பாறைக்குழம்பு 'மக்மா' தயாராகி சமயம் பார்த்து வெளியே பாய காத்திருக்கிறது .

இந்த நிமிஷம் பூமியின் ஓட்டை உடைத்துக் கொண்டு வெளியே ஓடலாம் என்று மக்மாவுக்கு நம்பிக்கை வந்ததுமே சம்பந்தப்பட்ட வாயுக்கள் துணையுடன் உற்சாகமாக பொங்கி எரிமலை துவாரங்கள் வழியாக "பாங்" என்ற சத்தத்துடன் பீச்சி அடித்துக் கொண்டு வெளிநடப்பு செய்து வெடிக்கிறது !

பிறகு அந்த அக்கினிக் குழம்பு மட்டும் மலைச்சரிவுகளில் எல்லாவற்றையும் எரித்துக்கொண்டு "லாவா " என்ற பெயரில் மெள்ள மெள்ள படிய ஆரம்பிக்கிறது. ஒரு ஏழுமலையின் பிறப்பு ரகசியம் இதுதான் !

எரிமலைகள் எப்போது வெடிக்கும் எப்போது சாது என்றெல்லாம் சொல்லிவிடமுடியாது .புகைவிட்டு திடுதிப்பென்று ஜுவாலை ஜுவாலையாக கக்கிக் கொண்டு எல்லாவற்றையும் சாம்பலாக்க புறப்பட்டு விடும் .

சில எரிமலைகள் பொங்குவதில் ரெக்கார்ட் பிரேக் எல்லாம் கூட ஏற்படுத்தியிருக்கின்றன ! நூறு வருஷங்களுக்கு முன்னே இந்தோனேஷியாவில் கிராகடா எரிமலை வழக்கத்தை விட சற்று மிகையாக வெடித்தது .- அந்த சத்தம் தீவிலிருந்து 3,540 கிலோ மீட்டர் தள்ளி இருக்கும் ஆஸ்திரேலியாவை வரை எட்டியது . மூன்று நாளைக்கு சுற்றுப்புறம் முழுவதும் பிரமாண்டமான சாம்பல் புகை மேகம் மூடிக்கொண்டது 80 கிலோ மீட்டர் உயரத்திற்கு மக்மா பீச்சியதாக தகவல்

எரிமலைகள் இவ்வளவு தொந்தரவு தந்தாலும் லாவா படிவங்கள் நீண்ட நெடு நாளைக்கு பிறகு உரமாகப் பயன்படுவது தான் ஒரே ஒரு அனுகூலம்

வானங்களும், பூமியும் இணைந்திருந்தன என்பதையும், அவ்விரண்டையும் நாமே பிரித்தோம் என்பதையும், உயிருள்ள ஒவ்வொரு பொருளையும் தண்ணீரிலிருந்து அமைத்தோம் என்பதையும் (நம்மை) மறுப்போர் சிந்திக்க வேண்டாமா? அவர்கள் நம்பிக்கை கொள்ள வேண்டாமா? (அல்குர்ஆன் 21:30)

பின்னர் வானம் புகையாக இருந்த போது அதை நாடினான். விரும்பியோ விரும்பாமலோ நீங்கள் கட்டுப்பட்டு நடக்க வேண்டும் என்று அதற்கும் பூமிக்கும் கூறினான். விரும்பியே கட்டுப்பட்டோம் என்று அவை கூறின. (அல்குர்ஆன் 41:11)

என்ன அற்புதமான வார்த்தைகள்! பூமியும் இதர கோள்களும் இந்தப் பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தும் ஒரே பொருளாக இருந்தன என்பதையும் அதன் பிறகு புகை போன்றிருந்த நிலையில் தான் அனைத்தும் உருவாயின என்பதையும் இவ்விரு வசனங்களும் தெள்ளத் தெளிவாக எடுத்துரைக்கின்றன. மேலே நாம் கூறியுள்ள பெரு வெடிப்புக் கொள்கையையும் இந்த இரு வசனங்களையும் படித்துப் பாருங்கள்! உண்மையிலேயே நமது உடலைப் புல்லரிக்கச் செய்கின்றதல்லவா? இந்தப் பேருண்மை 1400 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த ஒரு மனிதருக்கு எப்படித் தெரியும்? படைத்த இறைவனின் வார்த்தையாக திருக்குர்ஆன் இருந்தால் மாத்திரமே இதைக் கூற முடியும். எனவே திருக்குர்ஆன் இறை வேதம் என்பதற்கு இதுவும் சான்றாக அமைந்திருக்கிறது.

அடுப்பிலிருந்து ஒரு தீக்கங்கை கிடுக்கியில் தனியாக எடுத்து ஓரிடத்தில் வைக்கின்றோம். நேரமாக நேரமாக அந்தத் தீக்கங்கின் மேற்பகுதி குளிர்ந்து விடுகின்றது. ஆனால் அதன் உட்பகுதியோ நெருப்புக் குழம்பாகக் கனன்று கொண்டிருக்கின்றது.

சூரியனிலிருந்து பிரிந்து வந்த பூமி மேற்பகுதியில் குளிர்ந்து, அதன் மீது தான் நாம் வாழ்ந்து கொண்டிருக்கின்றோம். ஆனால் அதன் உட்பகுதியோ நெருப்புக் குழம்பாகக் கொந்தளித்துக் கொண்டிருக்கின்றது. அதனால் தான் அது அவ்வப்போது எரிமலைகளைக் கொப்பளிக்கின்றது. இந்தப் பூமி ஒரு காலத்தில் சூரியனுடன் ஒன்றாக இருந்தது என்பதற்கு இந்த எரிமலைகள் அக்கினி சாட்சிகளாகத் திகழ்கின்றன!.

மாபெரும் வெடிப்பு




நவீன விஞ்ஞான யுக்திகள் 08




2006-க்கான இயற்பியலுக்கான நோபல் பரிசு ஜார்ஜ் ஸ்மூட் , ஜான் மேத்தர் என்னும் இரு அமெரிக்கர்களுக்கு கிடைத்திருக்கிறது .

அவர்கள் புதியதாக எதுவும் கண்டுபிடிக்கவில்லை " பிக் பாங்க் " ( Big Bang ) என்னும் பிரபஞ்சத்தின் பெரு வெடிப்பை ஆரம்ப கணத்தைப் பற்றிய சித்தாந்தத்தை மேலும் ஊர்ஜிதப்படுத்த கோபெ **(COBE- cosmic Background Explorer )** என்னும் பரிசோதனை சாட்டிலைட்டைப் பயன்படுத்தி, ராமலிங்க அடிகள் சொன்னதுபோல் "அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் " -பிரபஞ்சத்தில் விரவியிருக்கும் இன்ஃப்ரா ரெட் மற்றும் மைக்ரோவேவ் அலைவரிசைகளில் லேசான இளஞ்சூட்டை ஆரம்பகால கண வெடியின் விளைவைத் துல்லியமாக அளந்திருக்கிறார்கள் !

இந்த இளஞ்சூட்டைத் தற்செயலாக கண்டுபிடிப்பதற்காகத்தான் 1978-க் கான நோபல் பரிசு ஆர்னால்டு பென்ஸியாஸ் , வில்சன் இருவருக்கும் கொடுத்தார்கள் .

இந்த இளஞ்சூடு எங்கும் ஒரே சீராக பரவியிருப்பதாகத்தான் இதுவரை நம்பி வந்தார்கள் . இப்போது அது சமச்சீராக இல்லை . ஆங்காங்கே சிறு சிறு மாற்றங்கள் உள்ளன என்பதை (இதை anisotropy என்கிறார்கள் ) ஜார்ஜ் , ஜான் இருவரும் அளவிட்டிருக்கிறார்கள். இதனையும் பிரபஞ்சத்தில் பருப்பொருள் அங்கங்கே திரண்டு கேலக்ஸிகளாக உருவானதையும் இணைக்க முடிந்ததை அவர்கள் அறிவித்த போது , அரங்கமே எழுந்து கைதட்டியது.

அடுத்து பிரபஞ்சத்தின் வயதை 13 பில்லியனிலிருந்து 15 பில்லியன் வருடங்கள் வரை சொல்கிறார்கள். ( பில்லியன் என்பது 100 கோடி ) இதே நுட்பமாக கணக்கிட்டு, மஹா வெடிப்பு ஊர்ஜிதமாகி விட்டது

தானாக வெடித்தா ? யாராவது பற்ற வைத்தார்களா ? இந்தக் கேள்விதான் மிச்சம் இருக்கிறது !

اَوَلَمْ يَرَ الَّذِيْنَ كَفَرُوْۤا اَنَّ السَّمٰوٰتِ وَالْاَرْضَ كَانَتَا رَتْقًا فَفَتَقْنٰهُمَا‌ وَجَعَلْنَا مِنَ الْمَآءِ كُلَّ شَىْءٍ حَىٍّ‌ اَفَلَا يُؤْمِنُوْنَ

(ஆரம்பத்தில்) வானம் (என்றும்) பூமி (என்றும் தனித்தனியாக) இல்லாமல் இருந்ததை நாமே பிரித்தமைத்து (வானத்திலிருந்து மழையை பொழியச் செய்து அந்த மழை) நீரைக் கொண்டு (உயிருள்ள) ஒவ்வொன்றையும் வாழ்ந்திருக்கச் செய்தோம் என்பதையும் இந்நிராகரிப்பவர்கள் பார்த்தேனும் நம்பிக்கை கொள்ள மாட்டார்களா?
(அல்குர்ஆன் : 21:30)

ர.ரா

நீங்களேதான், அவன் - சுஜாதா
********************************

நவீன விஞ்ஞான யுக்திகள் 09



மனிதனின் எம்ப்ரியோ என்னும் கருவை க்ளோனிங் பண்ணியதாக அட்வான்ஸ் செல் டெக்னாலஜி **(ACT)** என்றும் அமெரிக்க நிறுவனம் அறிவித்ததையடுத்து உலகமெங்கும் இதற்கு மறுப்பும், வெறுப்பும் தெரிவித்திருக்கிறார்கள்.

அந்த நிறுவனம் “ எங்கள் ஆராய்ச்சியின் குறிக்கோள் மனித பிரதிகளை உருவாக்குவது அல்ல.... பிறவி வியாதிகளை நீக்குவதற்கான ஸ்டெம் செல்களை உற்பத்தி செய்வதே நோக்கம். இது என்று சொன்னாலும் ஏற்படுவதற்கான காரணங்கள் வலுவானவை.

ஜெனிடிக் மாடிஃபிகேஷன் **(Genetic Modification)** என்னும் முறை பத்து வருஷமாக இருந்து வருகிறது. முதலில் தாவர விதைகளை ஜெனிட்டிக்காக மாற்றி, நல்ல விளைச்சல், புஷ்டிஎன்று கொண்டு வந்தார்கள். தற்போது அமெரிக்காவில் தானிய விதைகளில் பாதி இவ்வாறு ஜெனிட்டிக்காக திருத்தப்பட்ட விதைகள்தான்.

அடுத்து, மிருகங்களுக்கு தாவினார்கள். முதலில் அகப்பட்டது எலி. ஒரு எலியின் உள்ளே ஒரு வகை ஜீனை விதைத்து, அடுத்த தலைமுறைகளை முழுவதும் மாற்றிவிடும் கலை இப்போது எளிதாகிவிட்டது. செயல்முறைகள் மிக மிக முன்னேறி விட்டன. **(Trans genetic mice)** மரபு மாற்றப்பட்ட எலிகள் மரபணு ஆராய்ச்சியில் முக்கிய பங்கு வகிக்கின்றன.

உள்ளே விதைக்கும் மரபணு ஒரு எலியினுடையதாகத்தான் இருக்க வேண்டும் என்று இல்லை. மனிதரிடமிருந்து கூட எடுத்து விதைக்கலாம். கேன்சர் வந்த எலிக்கு மனிதனின் 18-ம் நம்பர் க்ரோமோசோமை விதைத்தால் அது நோய் நீங்கி, நன்றி சொல்லிவிட்டு தேங்காய் பத்தையை நோக்கி ஓடுகிறது.

ஒரு எலியின் மூன்று நாள் கருவில் ஸ்டெம் செல் எனும் முதல் உயிரணுக்கள் உள்ளன. இதை பிரித்து ஒரு ஜீனுக்குள் செலுத்தினால், அந்த ஜீனை அதற்கான இடத்தில் வெட்டி, புதிய ஜீனை ஒட்ட வைக்க முடியும். இந்த முறையில் தான் ஜீனை ரிப்பேர் செய்ய ஸ்டெம் செல்கள் பயன்படுகின்றன. இதை ஹோமோலோகஸ் ரீகாம்பினேஷன் (homologus recombination) என்கிறார்கள்.

இம்முறையை பயன்படுத்தி ஆடு, மாடு, பன்றி, கோழி போன்றவற்றை மரபு மாற்றி அவற்றை மனிதர் வியாதிகளைக் குணப்படுத்துவதற்கேற்ற பொருட்களை உண்டாக்கிக் கொடுக்க முடியும். இதில் வியாபார சாத்தியங்களும் உண்டு.

ஒரு சிலந்தியிலிருந்து வலை பின்னும் ஜீனைத் தனிமைப்படுத்தி, ஆட்டுக்குள் விதைத்தால் ஆட்டுப்பாலிருந்து பட்டு நூர்க்கலாம் !

பசுக்கள் பலமடங்கு அதிகம் பால் வைட்டமின் சேர்த்துக் கொடுக்கும்படி செய்யலாம் பசுக்கள் பலமடங்கு அதிகம் பால் வைட்டமின் சேர்த்துக் கொடுக்கும்படி செய்யலாம். மட்டனில் நமக்கு வேண்டிய பதார்த்தங்களை சேர்க்குமாறு மாடுகளை மாற்றலாம். முட்டைகளை இன்னும் டேஸ்ட்டாகப் பண்ணலாம். மேட்டர் என்னவென்றால் மரபுக் குணத்தை மாற்றுவது.

இதையே ஒரு மனிதனுக்குச் செய்ய, ஒரு ACT போல நல்ல ஆராய்ச்சி சாலையும் உன்னதமான கருவிகளும் இருந்தால் செய்யமுடியும். செய்திருக்கிறார்கள். மனமுவந்து அன்பளித்த பெண்களின் கரு முட்டையில் இருந்து ந்யூக்ளியஸ் என்னும் நடுக்கருவை மட்டும் நீக்கிவிட்டு, அதற்கு பதிலாக டோனர் ஓர் ஆணின் செல்லின் உட்கருவை உள்ளே செலுத்தி, இன்குபேட்டர்களில் ஓரளவுக்கு அது தானே இரட்டிப்பாவதை கணித்திருக்கிறார்கள்.

கருவுக்குள் திரும்ப விதைக்கவில்லை. பார்த்தினோ ஜெனிசிஸ் **(Partheno genesis)** என்னும் இம்முறையில் அவர்கள் குறிக்கோள் டயபடீஸ், பார்க்கின்ஸன் போன்ற வியாதி உள்ளவர்களை இவ்வகையில் கொஞ்சம் லேட்டாக மறு பிறக்க வைத்தது, அவர்களுக்கு ஏற்ற வகையில் ஆரோக்கியமான செல்களை உற்பத்தி செய்து அளித்து வியாதியை நீக்குவதே. மற்றொரு மனிதனை உருவாக்குவதல்ல எங்கள் நோக்கம் என்கிறார்கள்.

இன்றைய டெக்னாலஜியில் உங்கள் உடம்பிலிருந்து ஒரு செல்லை எடுத்து, அதன் ஒரு குரோமோசோமில் ஒரு குறிப்பிட்ட மரபணுவில் செருக முடியும். இவ்வாறு மாற்றப்பட்ட மரபணுவின் நியூக்ளியஸ் எனும் உட்கருவை பெண்களுக்கான முட்டையிலிருந்து நியூக்ளியஸை நீக்கிவிட்டு, அதில் உட்கார வைக்க முடியும்.

15 நாள் வரை அந்த கருவுக்கு மனித அடையாளங்கள் ஏற்படுவதில்லை. அவை ஆதாரமான ஸ்டெம்செல்களைதான் உற்பத்தி செய்கின்றன. இந்த நிலையில் பரிசோதனையை நிறுத்திவிடுகிறோம் என்கிறார்கள். இதைத்தான் அமெரிக்காவில் சாதித்திருக்கிறார்கள்.

ஆனால், நாளடைவில் இந்த புதிய கருவிலிருந்து ஒரு புதிய மனிதனை உருவாக்க முடியும். பிறப்பவன் உங்களுடைய Transgenic Cloning ஆக இருப்பான். அச்சு நீங்களேதான். உங்களுக்கு வாழ்க்கை இருந்தால், சர்க்கரை வியாதி இருந்தால், அல்லது பார்க்கின்சன்ஸ் இருந்தால் அந்த மரபணுவை மட்டும் திருத்திவிட்டு வளர வைக்கலாம். மற்றபடி, நீங்களே தான் அவன்.

அந்த ஆசாமியிடம் இருந்தது **Embryo** செல்களை எடுத்து உங்களுக்கு **spare parts** - களுக்காக அவனை வைத்துக்கொள்ளலாம் - லிவர், கிட்னி என்று. அதைவிட உங்களுக்கு வாழ்க்கை வெறுத்துப் போய்விட்டால், அவனுக்கு சொத்து எழுதி வைத்துவிட்டு செத்துப் போகலாம். உங்கள் வாழ்க்கையை அவன் தொடரலாம். அவன் உங்கள் பிரதி மகன்.

ஆனால், அதே மனமா, குணமா என்று கியாரண்ட்டி கொடுக்க மாட்டேன். இதெல்லாம் உடனே நடக்கும் என்று சொல்வதற்கில்லை. ஆனால், கூடிய சீக்கிரமே வருவதற்கான கருவிகள் நம்மிடம் உள்ளன. அதனால் தான் பயப்படுகிறார்கள்.

**وَلَتَجِدَنَّهُمْ اَحْرَصَ النَّاسِ عَلٰى حَيٰوةٍ ۛ وَ مِنَ الَّذِيْنَ اَشْرَكُوْا ۛ يَوَدُّ اَحَدُهُمْ لَوْ يُعَمَّرُ اَ لْفَ سَنَةٍ وَمَا هُوَ بِمُزَحْزِحِهٖ مِنَ الْعَذَابِ اَنْ يُّعَمَّرَ وَاللّٰهُ بَصِيْرٌ بِمَا يَعْمَلُوْنَ**

அன்றி, (நபியே! அந்த யூதர்கள்) மற்ற மனிதர்களை விடவும் (குறிப்பாக இணைவைத்து வணங்கும்) முஷ்ரிக்குகளை விடவும் (நீண்ட நாள்) உயிர்வாழ மிகவும் பேராசை உடையவர்களாக இருப்பதை நிச்சயமாக நீங்கள் காண்பீர்கள்! அவர்களில் ஒவ்வொருவனும் "நான் ஆயிரம் ஆண்டுகள் உயிர்வாழ வேண்டுமே?" என்று விரும்புவான். (அவ்வாறு நீண்ட நாள்) யிருடன் இருக்க அவனை விட்டு வைத்தாலும் அது வேதனையிலிருந்து ஒரு சிறிதும் அவனைத் தப்பிக்க வைத்துவிட மாட்டாது. அல்லாஹ் அவர்கள் செய்வதை உற்று நோக்குபவனாக இருக்கின்றான்.

பிரபஞ்சத்தில் அணுக்களுக்கு அழிவில்லை !

நவீன விஞ்ஞான யுக்திகள் 10






பில் பிரைசன் பிரபஞ்சத்தின் ஆரம்ப கணத்தை விவரித்து எழுதி இருக்கிறார்.? **Big bong** என்று அவர்கள் சொல்லும் வெடித் தத்துவம் இப்போது அறிவியலாளர்களால் பொதுவாக ஒப்புக் கொள்ளப்பட்டு இருக்கிறது.

ஒரு புரோட்டான் என்பது எத்தனை சிறியது ? அதன் " ட் " டன்னாவின் புள்ளியின் பரிணாமத்தில் 500, 000 ,000 ,000 புரோட்டான்களை அடக்க முடியும் அல்லது ஐந்து லட்சம் ஆண்டுகளுக்கு எத்தனை செகண்டுகள் உள்ளனவோ , ஏறத்தாழ அத்தனை புரோட்டான்களை அடக்க முடியும் .

இந்த புரோட்டானை 100 கோடி பாகமாக்கினால் ஏற்படும் அவ்வளவு சிறிய இடைவெளியில் ஒரு அவுன்ஸ் மேட்டர் என்னும் பருப்பொருளை அடைத்துப் பாருங்கள் ...நீங்கள் ஒரு பிரபஞ்சத்தை சிருஷ்டிக்கத் தயார் !

பரிணாமற்ற அத்தனை சிறிய இடத்தில் பிரபஞ்சத்தின் அத்தனை பருப்பொருட்களின் சாத்தியங்களும் அடர்ந்திருந்த அந்த ஆரம்ப கணத்தை 'ஒருமித்த கணம் ' (சிங்குலாரிட்டி Singularity ) என்கிறார்கள்.அதிலிருந்து , காரணமின்றி திடீரென அத்தனை சக்தியும் வெடித்துச் சிதறிப் பரவியது .

இதே தள்ளி நின்று யாரும் பார்த்திருக்க முடியாது காரணம் , தள்ளி நிற்க இடம் எதுவும் இருந்திருக்காது . "ஸ்பேஸ்" என்னும் விண்வெளியை அந்த சிதறலின்போது உண்டானதுதான் . அந்தக் கணத்துக்கு முன் என்ன இருந்தது என்று சொல்ல முடியாது. காரணமும் , காலமும் அப்போதுதான் துவங்கியது !

மனதில் எண்ணி பார்க்க கஷ்டமாக இருக்கிறதல்லவா ? நம்மாழ்வார் முயற்சி செய்திருக்கிறார் "ஒன்றும் தேவும் உலகும் உயிரும் மற்றும் யாருமில்லா அன்று..." பிரபஞ்சம் அப்படித்தான் ஆரம்பித்தது என்கிறது

காஸ்மாலஜி "ஒன்றும் இல்லை" யில் இருந்து "எல்லாம் உண்டு " என்கிற மாறுதல் நிகழ்ந்த ஒரு மந்திர ( "குன் " ) உப உப உப கணத்தின் பிரிவில்தான் ஈர்ப்பு விசைகள் தோன்றின . இயற்பியல் விதிகள் தோன்றின.

முதல் நிமிஷத்தில் பிரபஞ்சம் பல கோடி நூறாயிரம் மைல்கள் பரவிவிட்டது இன்றுவரை விரிவடைந்துகொண்டே இருக்கிறது !

وَ السَّمَآءَ بَنَيْنٰهَا بِاَيْىدٍ وَّاِنَّا لَمُوْسِعُوْنَ

(எவருடைய உதவியுமின்றி) நம்முடைய சக்தியைக் கொண்டே வானத்தை அமைத்தோம். நிச்சயமாக நாம் (அதனை அவர்களின் அறிவிற்கெல்லாம் எட்டாதவாறு) மிக்க விசால மாக்கியும் வைத்திருக்கின்றோம்.
(அல்குர்ஆன் : 51:47)

அந்த பில்லியன் டிகிரி உஷ்ணத்தில் முதலில் ஹைட்ரஜன் ஹீலியம் போன்ற தனிமங்கள் தோன்றின. ஆரம்பித்த மூன்று நிமிடங்களில் மற்ற அத்தனை தனிமங்களும் உண்டாகி விட்டன இவைதான் பிரபஞ்சத்தில் இன்றும் புழக்கத்தில் உள்ளன .

எதற்கும் அழிவே கிடையாது. ஒன்று மற்றொன்றாக மாறுவதுதான் பருப்பொருள் சக்தியாக, சக்தி பரும்பொருளாக ...இதையெல்லாம் எப்படி கண்டுபிடித்தார்கள் ? பக்கத்தில் இருந்து பார்த்தது போலச் சொல்கிறார்களே... எப்படி ?

அந்த ஆரம்பக் கணத்தின் இன்றைய விளைவுகள் விண்வெளியில் எங்கு நோக்கினும் ஒரு காஸ்மிக் மைக்ரோவேவ் பின்புற வெளிச்சமாக தெரிகிறது . நட்சத்திரங்கள் அனைத்தும் விலகி விலகி செல்வதற்கு அத்தாட்சியாக விண்வெளியில் தூரத்து நட்சத்திரங்களின் ஒளியை ஸ்பெக்டராஸ்கோப் மூலம் பார்க்கும்போது, ரெட்ஷிஃப்ட் என்ற நிற மாலையின் சிவப்பு நிற இடமாற்றம் இருப்பது தெரிகிறது. இதிலிருந்து ஆரம்ப கணத்தைக் கணக்கிட்டிருக்கிறார்கள் .

"பல ஆயிரம் கல்ப காலங்களுக்கு முன்பே நாம் பிரிக்கப்பட்டோம்; இருந்தும் ஒரு கணம்கூட நாம் தனித்தனி ஆக்கப்பட்ட தில்லை.
நாள் முழுவதும் நாம் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருக்கிறோம் , இருந்தும் நாம் எப்பொழுதும் சந்திக்கவே இல்லை "

" ...எதற்கும் அழிவே கிடையாது. ஒன்று மற்றொன்றாக மாறுவதுதான் பருப்பொருள் சக்தியாக, சக்தி பரும்பொருளாக ... "

"ரூஹாக ஊதப்படுவதற்கு முன்பே இருந்தோமா ?"

" இருந்தோம் "

இன்றைக்கு ஏறத்தாழ 13.7 பில்லியன் ( 200 மில்லியன் முன்ன பின்ன இருக்கலாம் ) ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்ததுதாம்.
(பில்லியன் என்பது 100 கோடி. மில்லியன் பத்து லட்சம் )

## இஹ்ராம் கட்டியவர் கொசுக்களைக் கொன்றுவிட்டால் பரிகாரம் என்ன?



நவீன விஞ்ஞான யுக்திகள் 12

ரத்தத்தை உறிஞ்ச கொசுக்களுக்கு பற்கள் தேவையில்லை . ஆனால் கொசுவின் கண்களுக்கு கீழே நுட்பமான இன்ஜெக்ஷன் போன்ற ஊசி வைத்திருக்கிறது .உண்மையில் ஊசிகள் ! மொத்தம் ஆறு . இதெல்லாம் ஒன்றாக இணைந்து "சிங்கிள் " ஊசியாக உங்கள் தோலுக்குள்ளே இறங்கி ரத்தத்தை உறிஞ்சிக் கொள்கிறது . ரத்தம் உறைந்து போகாமல் இருக்க ஒரு கெமிக்கலைவேறு கொசு துப்பித் தொலைக்கிறது எச்சில் ரத்தத்துடன் கலக்கிறது உடனே சொரிகிறீர்கள் .

2700 வகைகளுண்டு. கொசு ஒரு 'பறக்கும் அற்புதம் ' தலைகீழாக கூட பறக்கும் . மழை பெய்யும் போது நனையாமல் இடுக்குகள் வழியாக கூட கொசுவால் பறக்க முடியும் என்று ஒரு பிரிட்டிஷ் ஆராய்ச்சியாளர் கண்டுபிடித்திருக்கிறார் .

பெண் கொசுக்கள் தான் ட்ராகூலாக்கள் . ஆண் கொசுக்கள் சாது புல் , தழை பூக்களில் இருக்கும் தேன் இவையெல்லாம்தான் சாப்பாடு .

கொஞ்சம் விசித்திரமாக இருந்தாலும் பெண் கொசுவுக்கு முட்டைகளைப் பொரிக்க ரத்தம் மிகமிகத் தேவை. அனேகமாக கணவனுடன் உடலுறவில் ஈடுபட்டு விட்டு நேராக உங்கள் ரத்தத்துக்காக மிஸஸ் கொசு வருகிறது .

கொசுவின் சிறப்பம்சம் இரண்டு போர்வை ஒரு கம்பளி போர்த்தி இருந்தால் கூட அதன் வழியாக ஊசியை செலுத்தி கடிக்கும்

கொசுவை அடிக்க சிறந்த கொசுறு வழி என்ன தெரியுமா ? பறந்து வந்து உட்கார்ந்த உடனே 'பளார் ' என்று அடிக்காதீர்கள் ...தப்பித்து விடும் போனால் போகிறது . உட்காரட்டும் . கொஞ்ச நாழிகை காலைகீலை தேய்த்துக்கொண்டு முதல் குத்து குத்தும்.... குத்தட்டும், தாங்கிக் கொண்டிருங்கள் . அப்புறம் ஸ்டாரை வைத்து ரத்தத்தை உறிஞ்சும் பாருங்கள் ! அப்போது நிதானமாக கை விரல்களால் கூட பொறுக்கலாம் . அப்படி ஒரு சுகப்தியில் அஜாக்கிரதையில் இருக்கும் .

அப்துர் ரஹ்மான் இப்னு அபீ நுஅம்(ரஹ்) அறிவித்தார்

"நான் அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) அவர்களுடன் இருந்தேன். அப்போது ஒருவர் அவர்களிடம், '(இஹ்ராம் கட்டியவர்) கொசுக்களைக் கொன்றுவிட்டால் பரிகாரம் என்ன?' என்று கேட்டார்.

அப்போது அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி), 'நீங்கள் எந்த நாட்டைச் சேர்ந்தவர்?' என்ற கேட்டார்கள்.

அவர், 'நான் இராக்வாசி' என்று பதிலளித்தார்.

அதற்கு அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி) (தம்மருகில் இருந்தவர்களிடம்), 'இவரைப் பாருங்கள். கொசுக்களைக் கொன்றால் பரிகாரம் என்ன? என்று இவர் என்னிடம் கேட்கிறார். ஆனால், (இராக்வாசிகளான) இவர்களோ நபி(ஸல்) அவர்களின் (புதல்வி ஃபாத்திமா(ரலி) அவர்களின்) புதல்வரைக் கொன்றுவிட்டார்கள். (ஆனால்) நபி(ஸல்) அவர்கள், '(ஹஸன் ஹுசைன் ஆகிய) அவர்கள் இருவரும் உலகின் இரண்டு துளசி மலர்கள் ஆவர்' என்று (பாராட்டிக்) கூறக் கேட்டேன்' என்று கூறினார்கள். புகாரி : 5994.

இஹ்ராம் கட்டியவர் கொசுக்களைக் கொன்றுவிட்டால் பரிகாரம் என்ன?

நீங்கள்தான் சொல்ல வேண்டும் .

கவச உடை

நவீன விஞ்ஞான யுக்திகள் 13



நபி தாவூத் அலை அவர்கள் ஆரம்ப காலகட்டத்தில் ஆடு மேய்ப்பவராக இருந்தார்கள். பின்பு போர் படையில் வீரராக இருந்து பின்னர் அரசராக இருந்தார்கள்.

வஹ்ப் பின் முனப்பிஹ் (ரஹ்) அவர்கள் கூறியதாவது

நபி தாவூத் அலை அவர்கள் தமது ஆட்சியின் போது தம்மை இனம் காட்டிக் கொள்ளாமல் மாறுவேடத்தில் வெளியே வந்து தம்மைப் பற்றியும் தமது நடத்தை பற்றியும் பயணிகளிடம் விசாரிப்பது வழக்கம் அவ்வாறு அவர்கள் யாரிடம் விசாரித்தாலும் அந்த நபர் நபி தாவூது அலைஹி அவர்களின் வழிபாடு, நடத்தை, நீதி ஆகியவை தொடர்பாக பாராட்டாமல் இருந்ததில்லை.

இந்த நிலையில் ஒரு நாள் உயர்ந்தோன் அல்லாஹ் வானவர் ஒருவரை மனித உருவில் அனுப்பி வைத்தான்.

அந்த வானவரை நபி தாவூத் அலை அவர்களை சந்தித்தார்கள் மற்றவர்களிடம் விசாரிப்பது போன்ற அவரிடமும் நபி தாவூது (அலை) அவர்கள் விசாரித்தார்கள்.

அதற்கு அவர் நபி தாவூத் அலை அவர்கள் மக்களிலேயே தமக்கும் தம் சமுதாயத்தாருக்கும் நல்லவர்கள்தான். இருந்தாலும் அவரிடம் ஒரே ஒரு பழக்கம் உள்ளது அது மட்டும் அவரிடம் இல்லை என்றால் அவர் முழுமை பெற்றவராகிவிடுவார் என்று பதிலளித்தார்கள்.

நபி தாவூது அலைஹி அவர்கள் அது என்ன பழக்கம் என்று கேட்டார்கள். அதற்கு அந்த வானவர் தமக்கும் தம் குடும்பத்தாருக்கும் ஆன உணவு ஆதாரத்தை முஸ்லிம்களின் நிதியான பொது நிதியிலிருந்தே அவர் பெறுகிறார் என்று பதிலளித்தார்.

அப்போது நபி தாவூத் அலை அவர்கள் வல்லமையும் மாண்பும் மிக்க இறைவனிடம் பிரார்த்தனையில் ஈடுபட்டு தனக்கும் தன் குடும்பத்தாருக்கும் தன்னிறைவை தரும்படியான கைத்தொழில் ஒன்றை நமக்கு கற்றுத் தருமாறு துஆ கேட்டார்கள்.

அரசராக மற்றும் நபியாக இருந்தும் தனக்காக வேண்டி ஒரு தொழிலை அல்லாஹ் அவர்களுக்கு கற்றுக் கொடுத்தான்.
وَاَلَـنَّا لَـهُ الْحَدِيْدَ ۙ

அவருக்கு இரும்பை (மெழுகைப் போல்) மெதுவாக்கித் தந்தோம்.
(அல்குர்ஆன் : 34:10)

அதனை அடுத்து அல்லாஹ் நபி தாவூது (அலை) அவர்களுக்கு இரும்பை இலகுவாக்கி வைத்தான் கவச ஆடைகள் தயாரிக்கும் தொழில்நுட்பத்தை கற்றுக் கொடுத்தான் அதன்பின் கவச ஆடை தயாரிக்கும் தொழிலை மேற்கொண்டார் கவச ஆடைகள் தயாரிக்கும் தொழிலில் ஈடுபட்டவர் இவரே முதலாமவர்.
(தஃப்சீர் இப்னு கஸீர்)

நபி(ஸல்) அவர்கள் (பத்ருப் போரின் போது) ஒரு கூடாரத்தில் இருந்தபடி,

'இறைவா! நான் உன் உறுதிமொழியையும் வாக்குறுதியையும் உன்னிடமிருந்து கோருகிறேன். இறைவா! உன்னுடைய நாட்டம் (முஸ்லிம்களாகிய) நாங்கள் தோற்றுப் போக வேண்டும் என்று) இருக்குமானால் இன்றைக்குப் பிறகு உன்னை வணங்குவது நின்று போய் விடும். (மக்கள் கற்பனையான பொய்க் கடவுள்களையே வணங்கிக் கொண்டிருப்பார்கள்)' என்று (முஸ்லிம்களுக்கு வெற்றியைத் தரும்படி) மன்றாடிப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்கள்.

அபூ பக்ர்(ரலி) நபி(ஸல்) அவர்களின் கையைப் பிடித்துக் கொண்டு, 'போதும், இறைத்தூதர் அவர்களே! தங்கள் இறைவனிடம் தாங்கள் நிறையவே மன்றாடி விட்டீர்கள்' என்று கூறினார்கள்.

அப்போது நபி(ஸல்) அவர்கள் கவச உடை அணிந்திருந்தார்கள்.

பிறகு 'இந்த (இறைமறுப்பாளர்) படை விரைவில் தோற்கடிக்கப்படும்; மேலும், இவர்கள் புறமுதுகிட்டு ஓடுவார்கள். ஆயினும், இவர்களின் (கணக்கைத் தீர்த்திட) வாக்களிக்கப்பட்ட நேரம் மறுமை நாளாகும். மறுமை நாளோ மிகக் கடுமையானதும், மிகக் கசப்பானதும் ஆகும்' என்னும் திருக்குர்ஆன் வசனத்தை (திருக்குர்ஆன் 54:45, 46) ஓதியபடி அங்கிருந்து நபியவர்கள் வெளியேறினார்கள்.
என இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.
ஸஹீஹ் புகாரி : 2915.

அக்காலத்தில் போரில் எதிரியின் கத்தித் தாக்குதலில் காயம் படாமல் இருக்க, மன்னர்கள் மற்றும் போர் வீரர்கள் இரும்பால் ஆன கவச உடையை அதுவும் யுத்தத்தத்தில் மட்டுமே அணிந்து யுத்தம் புரிந்தார்கள் .

ஆனால் நவீன காலத்தில் கண்ணுக்குத் தெரியாத கொரோனா வைரஸ்களிலிருந்து பாதுகாப்பு பெற எந்நேரமும் கவச உடை அணிய வேண்டிய கட்டாயத்தில் உலகம் மாறி விட்டது .

பாம்புச் சட்டை

நவீன விஞ்ஞான யுக்திகள் 14



பாம்பு சட்டை உரிப்பது என்பது இது ஒரு புதுப்பித்துக் கொள்ளும் முறை. அதன் உயிர் வாழ்தலுக்கு நிழலில் ஒளிந்துகொள்ள , தேய்த்து தேய்த்து நகர எல்லாவற்றிற்கும் தேவைப்படுகிறது . இத்தனை அவசியமான தோலை சீசனுக்கு சீசன் புதுப்பித்துக் கொள்கிறது.

பாம்பு மட்டும் இல்லை பல பறவைகள் , பூச்சிகள் , ஊர்வன , நீர்வாழ்வன, நிலம் வாழ்வன பலவும் இதைச் செய்கின்றன. இதற்கு "மோல்ட்டிங் " என்பார்கள் .

பாம்பு சட்டை உரிக்கும் விதம் வினோதமானது . பாம்பு தன் தோலை பூராவையும் உதிப்பதில்லை மேலான ஸெலஃபேன் உறை போன்ற பகுதியைத்தான் உரிக்கிறது .

முதலில் மூக்கை ஏதாவது சொரசொரப்பான பகுதியில் உரசிக் கொள்கிறது . பிளந்து லூஸ் பண்ணி கொள்கிறது . பிறகு இந்த தளர்ந்த பகுதியை ஏதாவது கல் அல்லது செடியில் சிக்கிக் கொள்ளும் படியாக செய்கிறது . பிறகு திறந்த பகுதி வழியே நெளிந்து நெளிந்து வெளியே பளபளவென்று கழன்று வந்துவிடுகிறது.

பழைய சட்டையை உள்புறம் வெளியாக சிங்கிள் பீஸில் விட்டுவிட்டு விட்டு 'ட்டுய்' என்று ஒரு வித சப்தத்தை எழுப்பிக் கொண்டு , தன் காரியத்தை பார்க்கப் போய் விடுகிறது !

முதுகில் இரண்டு வெள்ளைக் கோடுகள் உள்ள பாம்பையும் குட்டை வால் பாம்பையும் கொல்லுங்கள். ஏனெனில், அது பார்வையை பறித்துவிடும். கர்ப்பத்தைக் கலைத்து விடும் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பவர்: இப்னு உமர் (ரழி), நூல்: முஸ்லிம்-4491, புகாரி-3297)

இப்னு உமர் (ரழி) அவர்களது வீட்டில் பள்ளிவாசலுக்குச் சமீபமாகச் செல்லும் வகையில் ஒரு வாசல் அமைப்பது குறித்து இப்னு உமர் (ரழி) அவர்களிடம் பேசினார்கள். (வாசலமைக்கும் பணி நடைபெற்ற போது) பணியாளர்கள் பாம்பின் சட்டையொன்றைக் கண்டனர். அப்போது இப்னு உமர் (ரழி) அவர்கள் பாம்பைத் தேடிப் பிடித்துக் கொல்லுங்கள் என்று கூறினார்கள்.

அதற்கு அபூ லுபாபா (ரழி) அவர்கள், வீட்டிலுள்ள (மெல்லிய வெண்ணிறப்) பாம்புகளைக் கொல்ல வேண்டாமென அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை செய்துள்ளார்கள் என்று சொன்னார்கள். (அறிவிப்பவர்: நாபிஉ (ரழி), நூல்: முஸ்லிம்-4494)

7 தலை நாகத்தின் சட்டை ஒன்று கர்நாடக மாநிலத்தில் உள்ள மரிகோடனா டோடி என்ற கிராமத்தில் அங்குள்ள கோயிலுக்கு அருகே விவசாய நிலங்கள் உள்ளன. மிகச்சரியாக கோயிலில் இருந்து 10 அடி தூரத்தில் இந்த பாம்பு சட்டை கண்டெடுக்கப்பட்டது இதனை அறிந்ததும் அக்கம் பக்கத்து கிராம மக்கள் பாம்புச் சட்டை கண்டெடுக்கப்பட்ட கிராமத்தில் குவிந்தனர்.

“பாம்புக்கு எப்படி சட்டை வந்தது ?

“உடம்புல பழைய செல்கள் அழிந்து, புதுசு புதுசா செல்கள் உருவாவது எல்லா உயிரினங்களிலும் நடக்குது. அதே போலத்தான் பாம்புகளிலும், தோலோட மேல்புறத்தில இருக்கும் பழைய செல்கள் அழிந்து, புதிய செல்கள் வளருது. அப்படி அழிந்து போன பழைய செல்களைத்தான், பாம்பு சட்டை மாதிரி உரிச்சுப் போடுது. உடல் முழுவதும் உள்ள தோலின் மேலேயுள்ள அழிந்து போன செல்களை, பாம்பு மொத்தமா உரிச்சுப் போடுறதைப் பார்க்கும்போது, சட்டய கழட்டி வச்சது போலவே இருக்குது”

“அப்படின்னா நம்ம உடம்பின் தோலிலும் இப்படி பழைய செல்கள் அழிந்து, புதிய செல்கள் வளருதா? பாம்பு சட்டைய போல, நமக்கு ஏன் பழைய செல்கள் உரியல?”

“ஒவ்வொரு உயிரினத்துலேயும், உடம்பிலிருக்கும் பழைய செல்கள் ஒவ்வொரு மாதிரி வெளியேற்றப்படுது. பாம்புல அழிந்துபோன பழைய செல்களெல்லாம் ஒண்ணா இணைஞ்சு படலம்போல கழட்டி வைக்கப்படுது. நம்ம உடம்பின் மேல் பகுதியில கண்ணுக்குத் தெரியாத சிறுசிறு துகள்களாக பழைய செல்கள் வெளியேற்றப்பட்டு, புத்தம்புது செல்கள் வளர்ந்துகிட்டே இருக்கு”

“ தோட்டத்துல பாம்பு சட்டைய உரிச்சிருந்தா, இங்கே பாம்பு இருக்குமா?”

“இருக்கலாம். அப்படியே இருந்தாலும், அது நம்மள கொத்துறதால பாம்புக்கு என்ன கிடைக்கப் போகுது? நிச்சயமா ஒண்ணும் இல்ல. நம்மை தேடி வந்து எந்தப் பாம்பும் கொத்தாது. சொல்லப்போனா, நாம பக்கத்துல போறது தெரிஞ்ச உடனேயே பாம்புகள் பயந்து, நம்ம பார்வைலேர்ந்து மறைஞ்சிடும்.

தெரிஞ்சோ, தெரியாமலோ நாம தொந்தரவு செய்யறப்ப, நம்மிடமிருந்து தப்பிக்க முடியாதுன்னு பாம்புகள் நினைக்கற சூழல்லதான், கொத்துறதுக்கு முயலும். அப்போகூட நம்மள பயமுறுத்தி எப்படியாவது தப்பிச்சு ஓடவே பாம்புகள் முயற்சிக்கும்.

இப்படி பயந்த சுபாவமுள்ள பாம்புகளைப் பார்த்து நாம ஏன் பயப்படணும்? பாம்புகளை எதற்காகவும் தொந்தரவு செய்யக் கூடாது”

(ஒருநாள் மினாவிலுள்ள) ஒரு குகையில் நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தோம்.

அவர்களுக்கு அல்குர்ஆனின் 77ம் அத்தியாயம் அருளப் பெற்றது. அதை நாங்கள் நபி (ஸல்) அவர்களின் வாயிலிருந்து புத்தம் புதிதாகச் செவியேற்றுக் கொண்டிருந்தோம்.

அப்போது பாம்பு ஒன்று (புற்றிலிருந்து) வெளியேறி எங்களிடையே வந்தது. அப்போது நபி (ஸல்) அவர்கள் : "அதைக் கொல்லுங்கள் " என்றார்கள்.

உடனே அதைக் கொல்ல போட்டியிட்டுக் கொண்டு நாங்கள் விரைந்தோம். அது எங்களை முந்திக் கொண்டு சென்றுவிட்டது.

அப்போது நபி (ஸல்) அவர்கள் உங்களை அதன் தீங்கிலிருந்து அல்லாஹ் காப்பாற்றியதைப் போன்று அதையும் உங்கள் தீங்கிலிருந்து அல்லாஹ் காப்பாற்றி விட்டான் என்று கூறினார்கள்.
(அறிவிப்பவர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரழி), நூல்: முஸ்லிம்-4500)

"வலசை " எனும் இடம் பெயர்வு

நவீன விஞ்ஞான யுக்திகள் 15 26-9-2020



**"migration"** என்பது பறவைகள் ,மிருகங்கள், மீன்கள் மற்றும் உயிரினங்கள் தாங்கள் வாழும் இடத்திலிருந்து வேறொருஇடத்திற்கு இடம் பெயர்வதைக் குறிக்கும் இதே வார்த்தைக்கு முன் 'E 'சேர்த்தால் "Emigration " வேற்று நாட்டு குடியேறுதல் என்று அர்த்தப்படும்

உயிரினங்களுக்கு தாங்கள் வாழும் இடங்களிலுள்ள இருப்பிட சிக்கல் , கடுமையான தட்பவெப்ப நிலை , உணவுப் பற்றாக்குறை , இது போன்ற பல காரணங்களால் புலம்பெயர்வு அவைகளுக்கு அவசியமாகிறது அதுவும் உயிரைப் பணயம் வைத்து உலகம் சுற்றி வருகிறது.

பருவ காலங்களை ஒட்டி இடம்பெயர்கிறது. உயிரினங்கள் வெப்ப நிலை வேறுபாட்டை உள்ளூர உணர்கின்றன .

பூமியின் காந்த விசையால் ஏற்படும் மாற்றங்களை உணர்கின்றன . நாம் செயற்கை கோள்களால் இயக்கப்படும் GPS கருவியை பயன்படுத்தி பாதைகளை அறிவது போல் கால வெளியிருந்து வரும் செய்திகளை தங்கள் உள் உணர்வால் கிரகிக்கின்றன . வலசை தொடர்கின்றன

பகல் பொழுதுகளில் சூரியன் , மலைகள் மற்றும் நீர் நிலைகள் இவற்றை அடையாளங்களாகவும் , இரவில் நட்சத்திரங்கள் , சந்திரன் அதன் இருப்பிட திசைகளையும் பறவைகள் உள் வாங்கிக் கொள்கின்றன .

" (பகலில் திசைகளை அறிவிக்கக் கூடிய மலைகள் போன்ற) அடையாளங் கொண்டும் (இரவில்) நட்சத்திரங்களைக் கொண்டும் (பயணிகள் ) தங்கள் வழியை அறிந்து கொள்கின்றனர் "
திருக்குர்ஆன் (16 : 16 )
மேற்கண்ட வசனம் மனிதர்களுக்கும் மட்டும் அன்றி பறவைகளின் வலசைக்கும் பொருந்துகிறது . இது வியப்பான விஷயமே .

பறவைகள் , விலங்குகள் குழுக்களாகச் செல்லும் போது அவற்றைக் கொன்று தின்னும் உயிரிகளிடம் இருந்து தன்னையும் தன் குஞ்சுகள் / குட்டிகளையும்
பாதுகாக்கப்படுகிறது . மேலும் இளம் குஞ்சுகளுக்கு பிறந்த கொஞ்ச நாளிலே மிகவும் தூரமான தொலைவு பறக்க நேரிடுவதால் , அவை உள்ளூர் வந்த பிறகு அடிக்கடி பறப்பதற்கு அது பெரிய தொரு பயிற்சி களமாக வலசை அமைந்து விடுகிறது .

பறவைகள் 12 வகையான வான்வழிகளைப் பயன்படுத்துகின்றன. இந்த வான் பாதைகள் பூமியின் தீர்கக ரேகை ,.அட்சய ரேகைகளைச் சார்ந்து இருக்கிறது என்பதை நுண்ணிய மின் அலை பரப்பியினைப் பொருத்தி அதிலிருந்து எழும் அலைகளைக் கொண்டு செயற்கை கோள்கள் வழியாக கிடைக்கப் பெற்று அந்தப் பறவை உள்ள இடம், பறக்கும் உயரம் , வேகம் போன்ற தகவல்களை கண்டறிந்ததில் மேலும் பல ஆச்சரியப்படும்படியான பல விஷயங்கள் ஆய்வுக்குள்ளாகி இருக்கிறது . இந்த ஆய்வு பூமியின் சுற்றுப்புறத்தின் தாக்கங்களை அறிந்து கொள்ள உதவும் என எதிர்ப்பார்க்கப்படுகிறது .

வலசை என்னும் இடம்பெயர்வு உயிரினங்களில் மட்டும் அல்ல ஆதிகாலத்திலேயே மனிதர்களிர்களிடம் இருந்திருக்கிறது அவர்களுக்குள்ளே ஏற்பட்ட கருத்து வேறுபாடுகள் மற்றும் தட்பவெப்ப நிலை ,உணவு போன்ற புற காரணிகளையும் கொண்டும் வாழ்விடத்தை விட்டு வேறொரு இடத்திற்கு இடம்பெயர்வு நடந்திருக்கிறது

"உங்கள் இறை எண்ணியிருந்தால் மனிதர்கள் அனைவரையும் ஒரே வகுப்பினராக ஆக்கி இருப்பான் (அவ்வாறு அவன் நாடவில்லை ) அவர்கள் தங்களுக்குள் மாறுபட்டுக் கொண்டே இருப்பார்கள் "
திருக்குர்ஆன் (11 : 118 )
இதனால் இடம்பெயர்ந்தார்கள் .

இடம்பெயர்வு என்பது ரொம்ப சிரமானது வழிப் பயணம் மிகவும் ஆபத்தானது . இருந்தாலும் வலசை சென்றாக வேண்டும் மான்கள் ஆற்றைக் கடக்கும் போது முதலைகளால் உயிரிழக்கப்படலாம் .அவைகளின் எதிரிகள் மான்களை கண்காணித்துக் கொண்டே இருக்கும். இறைவனின் நாட்டத்தாலே மட்டுமே உயிர் பிழைக்க முடியும் .

எதிரிகளால் தாக்கப்படுவோம் என தெரிந்து மக்காவை விட்டு ஹிஜ்ரத் செய்த நபி (ஸல்) அவர்களும் தோழர் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களும் தௌர் குகையில் தங்கி இருக்கும் போது எதிரிகளால் சூழப்படுகிறார்கள் .

"நிச்சயமாக அல்லாஹ் அவருக்காக உதவி செய்தே இருக்கின்றான் குகையில் இருந்த இருவரில் ஒருவராக அவர் இருந்த போது (எதிரிகள் குழ்ந்த போது அவன் காப்பாற்றிய இருக்கின்றான் )......
திருக்குர்ஆன் ( 9 : 40 )

நபி (ஸல்) அவர்களின் மகளார் ஜைனப் (ரலி) அவர்கள் மக்கா விட்டு மதினாவிற்கு ஹிஜ்ரத் செய்த போது வழியிலே ஹப்பார் இப்னு அஸ்வத் என்பவன் கற்பகமாக இருந்த அவர்களின் வயிற்றில் ஈட்டி எரிந்து கொலை செய்தான் .

சகாராப் பகுதியில் கழுத்தில் அம்பு குத்தியும் சாகாத வெண் கொக்கு அந்த அம்புடனே நூற்றுக்கணக்கான கிமீ பறந்து வந்து ஜெர்மனியில் துப்பாக்கி குடு ஒன்றில் தப்பி அதே நபரின் அடுத்த குண்டில் பலியானது அந்த வெண்
கொக்கு . வலசையில் உயிர் பறிப்போனது .

வரலாற்றின் மிகப் பெரிய இடம்பெயர்வு நபி மூஸா( அலை ) அவர்கள் கொடியவன் பிர்அவ்னிடமிருந்து லட்சக்கணக்கான தம் இன மக்களைக் கூட்டிக் கொண்டு எகிப்தை விட்டு இடம்பெயர்வு செய்யும் போது பயணத்தின் வழியில் உள்ள ஆபத்தை குர்ஆனில்

"நீங்கள் என்னுடைய அடியார்களை அழைத்துக் கொண்டு இரவோடு இரவாக நடந்து ( சென்று) விடுங்கள் வழியில் குறுக்கிடும் கடலில் உங்களது தடியால் அடித்து உலர்ந்த வழியை ஏற்படுத்துங்கள்"
திருக்குர்ஆன் ( 20 : 77 )

எகிப்தில் இருந்து ஒரே ஒரு குடும்பம் இடம்பெயர்வு செய்தது அதுவும் பச்சயிளம் பாலகனோடு . நபி இப்ராஹீம் (அலை) இவர்கள் தன் மனவி ஹாஜராவுடன் யாருமற்ற வனாந்தர வெளியில் விட்டு விட்டு அவர்களின் பாதுகாப்பிற்காக இறைவனிடம் துஆ செய்கிறார்கள். குர்ஆன் (14 : 37 ) வசனம் பார்வையிடவும் .

......... இப்படி குர்ஆன் அநேக வலசை என்னும் இடம்பெயர்வு பற்றி பேசுகிறது.

நமமில் நிறைய போருக்கு இடம்பெயர்வு என்னும் வலசை நடந்து கொண்டுதானே இருக்கிறது . அதில் அவனின் தன்னிகரற்ற வல்லமை வெளிப்பட்டிருப்பதை உங்களால் உணர்ந்து கொள்ள முடிகிறதா ?

ர.ரா

இத்துடன் " நவீன விஞ்ஞான யுக்திகள் "
தொடர் பதிவுகள் நிறைவடைகின்றன !

" விசித்திர வரலாறுகள் "

இன்ஷா அல்லாஹ் !

துன்குவாங் கையெழுத்துப் பிரதிகள்
விசித்திரமான வரலாறுகள் 01








துன்குவாங் கையெழுத்துப் பிரதிகள் (**Dunhuang manuscripts**) என்பவை 20 ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் சீனாவின் துன்குவாங்கில் உள்ள மொகாவோ கற்குகைககளில் கண்டெடுக்கப்பட்ட முக்கியமான மத மற்றும் மதச்சார்பற்ற ஆவணங்களின் தொகுப்பு ஆகும்.

4 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி முதல் 11 ஆம் நூற்றாண்டின் ஆரம்பப் பகுதி வரையிலான காலப்பகுதியில் உருவாக்கப்பட்ட இந்த கையெழுத்துப் பிரதிகள் வரலாறு மற்றும் கணிதம் முதல் நாட்டுப்புறப் பாடல்கள் மற்றும் நடனம் வரையிலான பல்வேறுபட்ட தகவல்களைக் கொண்டிருந்தன.

இவற்றில் பல மதம் சார்ந்த ஆவணங்களும் அடங்கும். எனினும் அவற்றில் பெரும்பாலானவை புத்த மதத்தைச் சார்ந்தவையாகும்.

எனினும் தாவோயியம், நெசுத்தோரியக் கொள்கை, மற்றும் மானி சமயம் ஆகிய மதங்கள் சார்ந்த ஆவணங்களும் கிடைக்கப்பெற்றன. பெரும்பாலான கையெழுத்துப் பிரதிகள் சீன மொழியில் எழுதப்பட்டவை ஆகும். கோடனிய மொழி, சமஸ்கிருதம், சோக்டிய மொழி, தாங்குடு மொழி, பாரம்பரியத்

திபெத்தியம், பழைய உய்குர் மொழி, எபிரேயம் மற்றும் பழைய துருக்கிய மொழிகளிலும் எழுதப்பட்ட கையெழுத்துப் பிரதிகள் இங்கு கிடைத்துள்ளன.

வரலாறு, மத ஆய்வுகள், மொழியியல் மற்றும் கையெழுத்துப் பிரதி ஆய்வுகள் உள்ளிட்ட பல்வேறு வகையான துறைசார்ந்த கல்வி ஆய்வுகளுக்கு இந்த கையெழுத்துப் பிரதிகள் முக்கியமான ஆதாரங்களாக விளங்குகின்றன.

ஜூன் 25, 1900ஆம் ஆண்டு தாவோயியத் துறவி வாங் யுவான்லுவால் இந்த ஆவணங்கள் ஒரு மூடப்பட்டு முத்திரையிடப்பட்ட குகைக்குள் கண்டெடுக்கப்பட்டன.

1907 ஆம் ஆண்டு முதல் அவர் இந்த ஆவணங்களை ஆரல் ஸ்டெயின் மற்றும் பால் பெல்லியட் உள்ளிட்ட குறிப்பிடத்தகுந்த மேற்குலக நாடு காண் பயணிகளுக்கு விற்க ஆரம்பித்தார்.

ஜப்பானிய, உருசிய மற்றும் டென்மார்க் நாட்டைச் சேர்ந்த நாடு காண் பயணிகளும் இந்தக் கையெழுத்துப் பிரதிகளின் சேகரிப்புகளைப் பெற்றனர்.

அறிஞர் மற்றும் பழம்பொருள் திரட்டுபவரான லுவோ சென்யுவின் முயற்சிகளின் காரணமாக பெரும்பாலான சீனமொழிக் கையெழுத்துப் பிரதிகள், மொத்த கையெழுத்துப் பிரதிகளில் சுமார் ஐந்தில் ஒரு பங்கு, 1910 ஆம் ஆண்டு பெய்ஜிங்கிற்கு எடுத்துச் செல்லப்பட்டன. அவை தற்போது சீன தேசிய நூலகத்தில் உள்ளன.

பல்லாயிரக்கணக்கான திபெத்திய மொழி கையெழுத்துப் பிரதிகளின் பக்கங்கள் துன்குவாங்கிலேயே விடப்பட்டன. அவை தற்போது அப்பகுதியில் உள்ள பல்வேறு அருங்காட்சியகங்கள் மற்றும் நூலகங்களில் உள்ளன.

மேற்குலக அறிஞர்களால் விலைக்குப் பெறப்பட்ட ஆவணங்கள் தற்போது பிரித்தானிய நூலகம் மற்றும் பிப்ளியோதெக் நேஷனல் டி பிரான்ஸ் போன்ற நிறுவனங்களில் உலகம் முழுவதும் வைக்கப்பட்டுள்ளன. அனைத்து கையெழுத்துப் பிரதிகளின் சேகரிப்புகளும் தற்போது சர்வதேசத் துன்குவாங் திட்டத்தின் கீழ் மின்னுரையாக்கப்பட்டு வருகின்றன. அவற்றை இணையத்தின் மூலம் காணமுடியும்.

வாசிக்க முடியாத வாய்னிச் புத்தகம் !

விசித்திரமான வரலாறுகள் 02

வாய்னிச் கைப்பிரதி **(Voynich manuscript)** என்பது தெரியாத எழுத்து முறையில் கைகளால் எழுதப்பட்ட, படங்களுடன் விளக்கப்பட்டுள்ள ஒரு புத்தகம்.

இந்த புத்தகத்தின் மொழி தெரியாது , எழுதியவர் தெரியாது , ஆக்கியோர் தெரியாது , தொகுப்பு தெரியாது . இதன் சில பக்கங்கள் தொலைந்து விட்டன, மொத்த பக்கம் 272-ல் 240 பக்கங்கள் இன்னும் இருக்கிறது. இந்தப் பக்கங்கள் இரண்டாகவோ மூன்றாகவோ மடிக்கப்பட்டிருக்கின்றன. இது முழுக்க முழுக்க கையாலேயே எழுதப்பட்ட , வரையப்பட்ட புத்தகம். அட்டையில் தலைப்போ , புத்தகம் எழுதியவர் பெயரோ இல்லை !

மற்றும் பெரும்பாலான பக்கங்களில் வண்ணப்படங்களுடன் விளக்கப்பட்டுள்ளன ! ஆய்வின் முடிவில் இந்த புத்தகம் இத்தாலி மொழியில் எழுதப்பட்டிருக்கலாம் . ஆனால் இடது புறத்தில் இருந்து வலது புறமாக எழுதப்பட்டிருக்கிறது ! இதன் எழுத்து மை இரும்பு உப்புகளோடு தாவரங்களின் சாறுகள் சேர்த்துத் தயாரிக்கப்பட்டது. ஆனால் பூமியில் இல்லாத தாவரங்கள் !

இது 15 ஆம் நூற்றாண்டுக்கு
(1404–1438) முற்பட்ட காலத்தில்
எழுதப்பட்டிருக்கலாம் எனவும் ஆராய்ச்சியாளர்கள் கார்பன் டேட்டிங் மூலம் கண்டறிந்தனர்.

1912 இல் இந்த புத்தகத்தை வாங்கிய போலந்து நாட்டு வில்பிரடு வாய்னிச்சின் பெயர் வைக்கப்பட்ட்டுள்ளது.

அதன் பிறகு 2013-ஆம் ஆண்டு மான்ஸ்டர் பல்கலைக்கழகத்தை சேர்ந்த சொற்பொருள் ஆராய்ச்சியாளர்கள் இந்த புத்தகத்தை ஆராய்ச்சி செய்துவிட்டு இது ஏதோ கருத்தினை வெளிப்படுத்துவதாக இருக்கிறது .என்ன கருத்து என்பதுதான் தெரியவில்லை !

சில ஆராய்ச்சியாளர்கள் இது ஏதேனும் ரகசிய குறிப்புகளாக இருக்கலாம் எனவும் தெரிவித்தனர். எது எப்படியோ இன்றளவு இந்த புத்தகத்தின் குறிப்புகள் யாருக்கும் புரியவில்லை என்பதுதான் உண்மை.

இரண்டாம் உலகப் போர்களில் களத்தில் பணியாற்றிய நூற்றுக்கும் மேற்பட்ட குறியாக்கவியலாளர்கள் **(cryptographers)** புத்தகத்தை ஆராய்ந்து எதுவும் புரிந்து கொள்ள இயலாமல் தோல்வி கண்டுள்ளனர். இவர்கள் "மாபெரும் வாழ்க்கை தத்துவங்களை இப்புத்தகம் போதிக்கிறது " என்கிறார்கள் .

இதில் வரையப்பட்டிருக்கும் படங்களை வைத்து இந்தப் புத்தகம் என்னென்ன பிரிவுகள் எல்லாம் பேசுகிறது என்று யூகிக்க முடிகிறது ! உயிரியல், தாவரவியல் , வானவியல் , கணிதவியல், மருத்துவவியல் இதுபோன்ற சில பிரிவுகளும் , இன்னும் தெரியாத பல இயல்களைப் பற்றியும் இது பேசுகிறது . எனவே ஆய்வாளர்கள் இது ஒரு " பசுமைப் புரட்சிக்கான மாபெரும் புத்தகமாக " இருக்கலாம் என்கிறார்கள் !

சிலர் இது மருத்துவ புத்தகம் என்கிறார்கள் அதுவும் பெண்களின் படம் நிறையவே இருக்கிறது ! ஆகவே பெண்களுக்கான மருத்துவம் குறித்து இப்புத்தகம் பேசுகிறது . இன்னும் சிலர் "இது யாரோ

பைத்தியக்காரத்தனமாக கிறுக்கி வைத்தது .இது உள்ள எதற்குமே அர்த்தம் கிடையாது . இந்தப் புத்தகம் மதிப்பற்றது . இதே ஆய்வு செய்வதே வெட்டி வேலை " _என்று ஒரேயடியாக ஒதுக்கி வைக்கிறார்கள் .

நவீன காலத்தில் " இதெல்லாம் ஏலியன்களின் வேலை ! புத்தகத்தின் விஷயத்திலும் யாராலும் வாசிக்க முடியாத ஏதோ மர்மான கருத்தை இப்புத்தகம் பேசுவதாக இருக்கிறது !

இந்த உலகத்தில் இருந்த அல்லது இருக்கும் மொழிகளில் எழுதப்பட்ட புத்தகம் அல்ல ஏலியன்களின் வினோத மொழிகளில் எழுதப்பட்ட புத்தகம் . வேற்றுகிரகத்தில் வந்த யாரோ ஒரு ஏலியன் இதை இங்கே விட்டுச் சென்றிருக்கலாம் என்ற சுவராசியமான முடிவுக்கு வந்திருக்கிறார்கள்.

நீங்க முயற்சி செய்து பார்க்கலாமே , ஜின்களோ , ஏலியன்களோ ஏன் வானவர்களோ உங்க பக்கத்தில் இருந்தாலும் இருக்கலாம் . ஜாக்கிரதை !







மர்ம புத்தகங்கள்

விசித்திரமான வரலாறுகள் 03

💥 THE BOOK OF SOYGA :

இது நம்ம தி மம்மி படத்தில் வருகிறது போன்ற அமானுஷ்யம் ,ஆவி , மாந்திரீகம் ,பிளாக் மேஜிக் கொண்ட மர்ம புத்தகம்.15 ஆம் நூற்றாண்டை சார்ந்த இந்த ஆவி சார்ந்த மர்ம புத்தகத்தை முதல் முதலில் john dee எனும் கனிதவியலாளர் 1551 இல் கண்டெடுத்தார் ஆனால் அதன் பின் பல நூற்றாண்டுக்கு இது மர்மமாய் காணாமல் போய் 1994 ஆம் ஆண்டு திடீரென்று பிரிட்டிஷ் லைப்ரரியில் கண்டெடுக்க பட்டது.

இந்த 200 பக்கம் கொண்ட மர்ம புத்தகத்தில் முழுக்க முழுக்க ஆவிகளை வர வழிப்பதற்கான வழிமுறைகளும் ,மாந்திரீகம் செய்வதற்கான வழிமுறைகளும், வான சாஸ்திர குறிப்புகளும், மேலும் அதற்க்கு மேல் பலது நம்மால் புரிந்து கொள்ள முடியாத மர்மமான பல விஷயங்களையும் உள்ளடக்கி உள்ளது.

1551 ஆண்டு இதை கண்டெடுத்த ஜான் டீ ஒரு ஆவியுடன் பேசும் மீடியம் ஒருவரை உதவிக்கு அழைத்து இதில் என்ன இருக்கு என அறிய முற்பட்டார். புத்தகத்தில் சில இடங்கள் 'லேட்டின் ' மொழியில் ஏதோ ஓரளவு புரிந்து கொள்ளும்படி இருந்ததை படிக்க முடிந்தது ஆனால் அதில் 40000 வார்த்தைகள் மிக விசித்திரமான வகையில் 36 கட்டங்களில் அடுக்க பட்டிருந்தது எதை குறிக்கிறது என்பதை கண்டு கொள்ள முடியவில்லை. அதையும் மீறி இதில் ஒளிந்துள்ளதை புரிந்து கொள்ள முயன்றவர்கள் அடுத்த இரண்டரை ஆண்டுகளில் மர்மமான

முறையில் இறந்து போனதாக சொல்லப்படுகிறது. அந்த ஆவி புத்தகம் இன்றளவும் அமானுஷ்யமாகவே உள்ளது நமக்கேன் வம்பு என்று பெரும்பாலும் இப்போதெல்லாம் பலர் அதை படிக்க முயலுவதே இல்லை.

ROHONC CODEX :

448 பக்கங்கள் கொண்ட இந்த புத்தகம்

19 ஆம் நூற்றாண்டை சார்ந்தது. ஹங்கேரி நாட்டுக்கு சொந்தமானது.

இதில் ராணுவ சண்டை களம் முதல் மத குறியீடுகள் வரை பல வற்றை பற்றியும் வரைய பட்டு எழுத பட்டு இருக்கிறது. கிறிஸ்து... முஸ்லீம்...ஹிந்து என அனைத்து மத குறியீடுகளும் இதில் பயன்படுத்த பட்டிருகிறது ஆனால் என்ன எழுத பட்டு இருக்கிறது என்று தான் யாராலயும் படிக்க முடியவில்லை.. அப்படி ஒரு ரகசிய குறிஈடுகளை கொண்ட 200 எழுத்துக்களால் இது எழுத பட்டுள்ளது இதை எழுதியது யார் எதற்கு இதை எழுதினார்கள் என்ற எந்த தகவலும் யாரிடமும் இல்லை.

CODEX SERAPHINIAUS :

இந்த புத்தகத்தை... அதில் உள்ள படத்தை பார்க்கும் நபர்கள் தாங்கள் ஒரு வித்தியாசமான கற்பனை உலகிற்கு செல்வதை தவிர்க்க முடியாது. அந்தளவு வித்யாசமான பல படங்களை கொண்டது பலது பார்க்க ரொம்ப விபரீத கற்பனை போலவும் தெரிகிறது.. யாரோ கிறுக்கு விஞ்ஞானி தனது விபரீத உயிரியல் ஆய்வை பதிவு செய்தது போலவும் இருக்கிறது. (உதாரணம் ஒரு படுத்திருக்கும் பெண் அவள் மேல் ஒன்றிணைந்து இருக்கும் ஆன் பார்க்க ஒரு முதலை போன்ற வடிவத்தில் இருக்கிறார்கள்...பின் அடுத்தடுத்த படத்தில் அவர்கள் முதலையாகவே மாறிவிடுகிறார்கள். ) ஆனால் பலர் இதை ஒரு மருத்துவ நூலாக இருக்கலாம் என்கிறார்கள்.

படங்கள் பார்க்க ஏதோ உயிரற்றதையும் உயிருள்ளதையும் ஒன்றாக கலந்து ஆய்வு செய்தது போலவும்... விலங்குகளையும் தாவரங்களையும் ஒன்று கலந்து ஆய்வு செய்தது போலவும் பல விசித்திரங்கள் நிரம்பி உள்ளது இந்த புத்தகத்தில்.

360 பக்கம் கொண்ட 1981 இல் பதிவிட பட்ட இந்த புத்தகம் நல்ல வேலை இதை எழுதியவர் யார் என்று நமக்கு தெரியும்.

இது இத்தாலிய ஆர்ட்டிஸ்ட் மற்றும் வடிவமைப்பாளர் உருவாக்கிய கற்பனை உலகம் இது. அவர் இதை பற்றி கூறுகையில் தனக்கு சின்ன வயதில் வந்த பல விச்சித்திர கற்பனைகளுக்கு விடை தெரியவில்லை அதை தான் இந்த வித்யாசமான என்சைக்ளோபீடியாவில் பதித்து இருக்கிறேன் என்றார். அந்த படங்களை பார்க்கும் போது ஒரு சிறுவனுக்கு இந்தளவு வித்யாசமான கற்பனைகள் எப்படி வந்தது என்ற கேள்வி உண்டாகிறது.

VOYNICH MANUSCRIPT :

மேலே நாம் பார்த்த புத்தகங்களிலேயே மிக விசித்திரமான.. உள்ளத்தை கொள்ளை கொள்ள கூடிய ...அழகிய மற்றும் அறிவை குழப்ப கூடிய மர்மத்தை உள்ளடக்கிய புத்தகம் தான் voynich manuskript.

ஏதோ ஒரு வேற்றுகிரக விஞ்ஞானியின் ஆராய்ச்சி கையேடை திருடி வந்ததை போல அப்படி ஒரு வித்யாசமான படங்களை கொண்ட புத்தகம் (அதிலும் குறிப்பாக அந்த விஞ்ஞானி தாவரவியளில் அதிக ஆர்வம் போல தெரிகிறது ) புத்தகம் முழுக்க முழுக்க கைகளால் வரைய பட்ட அழகிய வண்ண வண்ண சித்திரம் மற்றும் கைகளால் எழுத பட்ட எழுத்துக்களை கொண்டது.

அந்த படங்கள் ..அதன் வண்ண கலவைகள் அவ்வளவு துல்லியமாக அழகாக இருக்கின்றன ..ஒவொரு படங்களும் விளக்க முடியாத விசித்திரங்களை கொண்டுள்ளன. ஒவொன்றும் மிக ஆழமாக எதையோ சொல்ல வருவது தெளிவாக தெரிகிறது. சில பக்கங்கள் இடம் பற்றாமல் பெரிய சைஸ் பக்கங்களில் வரைய பட்டு அந்த பக்கங்கள் மட்டும் மடித்து வைத்து இணைக்க பட்டுள்ளது. அதை எழுதியவன் அறிவியலில் உயிரியலில் ஆழ்ந்த அறிவு கொண்டவனாக தெரிகிறது. அந்த எழுத்துக்கள் இந்த கால அச்சு களுக்கு சவால் விடும் வகையில் அவ்வளவு நேர்த்தியாக செதுக்க பட்ட எழுத்துக்களை போல மிக அழகிய கையெழுத்தை கொண்டது. வானவியல் உயிரியல் தாவரவியல் ,மருத்துவம், என்று பல தலைப்புகளில் அந்த ஓவியங்கள் வரைய பட்டுள்ளன. ஓவியங்களின் தரமும் பார்க்க இன்றைய கிராபிக்ஸ் ஓவியங்களை ஒத்த அளவில் அவ்வளவு தரமாக வரைய பட்டுள்ளது. ஆனால் அந்த புத்தகம் என்ன சொல்ல வருகிறது என்று யாருக்கும் தெரியவில்லை அதில் எழுத பட்ட எழுத்துக்கள் ஒன்று கூட உலகில் எந்த வகை எழுத்துகளுடனும் ஒத்து போக வில்லை மிக மர்மமான வேற்றுகிரக எழுத்துக்கள் போல அவை தோற்றம் அளிக்கின்றன.

இந்த புத்தகத்தை டீகோட் செய்ய FBI முதல் பெரிய பெரிய ப்ரொபெசர்கள் வரை... டீகோட் நிபுணர்கள் வரை.. இரண்டு உலக யுத்தங்களில் வேலை செய்த டீ கோடர்கள் வரை முயன்று தோற்று இருக்கிறார்கள். பலர் இது ஏலியன்களால் எழுத பட்டது என்று நம்புகிறார்கள்.

15 ஆம் நூற்றாண்டை சார்ந்த இந்த புத்தகத்தை 1912 இல் வாங்கிய பழம் புத்தக விற்பனையாளர் Wilfrid M. Voynich, அவர்களின் பெயரால் இது வழங்க படுகிறது. இதன் நிஜ பிரதி இன்று yale இல் உள்ள Beinecke Library இல் உள்ளது. இதில் பல பக்கங்கள் தொலைந்தது போக இப்போது 240 பக்கங்கள் உள்ளது.

இந்த மர்ம புத்தகத்தை யார் எழுதியது ஏன் இப்படி யாருக்கும் புரியாத மொழியில் எழுத பட்டது ? அதில் பயன்படுத்த பட்டுள்ள மொழி என்ன ? அந்த புத்தகதம் சொல்ல வரும் மகா அறிவியல் என்ன என்பது இன்று வரை தீர்க்க முடியாத மர்மமாக இருக்கிறது.

இந்த வரிசையில் இது போன்று உலகில் பல மர்ம புத்தகங்கள் உண்டு இதோ மேலும் சில மர்ம புத்தகங்களின் பெயர்கள் :

- The Dead Sea Scrolls
- The Oera Linda Book
- Prodigiorum ac Ostentorum Chronicon

◙ The Smithfield Decretals
◙ The Ripley Scrolls
◙ The Story Of The Vivian Girls
◙ Codex Mendoza
◙ The Popol Vuh
மற்றும் விற்பனையில் செக்க போடு போடும் நாஸ்டர்டாமின்...
◙ Prophecies of Nostradamus

(நண்பர்களே இந்த மர்ம புத்தகங்களை படிக்க உங்களுக்கு ஆர்வம் உண்டாகுமாயின் ஒன்றும் பிரச்னை இல்லை இவைகளின் காபி பிரதிகள் இன்று சாதாரணமாக ஆன் லைன் விற்பனையில் கிடைக்கிறது. வாங்கி எதையாவது டீகோட் செய்ய முடிகிறதா என்று முயன்று பாருங்களேன். ஏதேனும் பாதிப்புகள் ஏற்பட்டால் கம்பெனி பொறுப்பல்ல ) - ரா.பிரபு

ஒரே இரவில் எழுதப்பட்ட உலகின் மிக ஆபத்தான புத்தகம்.. யார் எழுதியது என்பது தான் செம ட்விஸ்ட்..

விசித்திரமான வரலாறுகள் 04

கிறிஸ்தவர்களின் புனித நூலாக கருதப்படும் பைபிள் குறித்து நாம் அனைவருக்கும் நிச்சயம் தெரிந்திருக்கும்.. ஆனால் இந்த உலகத்தில் 'சாத்தானின் பைபிள்' என்று ஒரு புத்தகம் உள்ளது.. இதனை பற்றி நம்மில் எத்தனை பேருக்கு தெரிந்திருக்கும்..? அந்த புத்தகத்தை பற்றி தான் நாம் இன்று பார்க்கப் போகிறோம்..

இந்த உலகின் மிகவும் மர்மமான புத்தகமாக இது கருதப்படுகிறது. ஏனெனில் இப்புத்தகத்தில் முதல் பக்கத்திலேயே சாத்தானின் உருவம் உள்ளது. மற்ற பக்கங்களிலும் அந்த உருவங்களே உள்ளதாகவும் கூறப்படுகிறது.

இந்த மர்மமான பேய் புத்தகம் 'கோடெக்ஸ் கிகாஸ்' என்றும் அழைக்கப்படுகிறது. மேலும் இந்த உலகின் மிக ஆபத்தான புத்தகமாகவும் இது கருதப்படுகிறது. ஏனெனில் இந்த புத்தகம் யாரால் எழுதப்பட்டது..? ஏன் எழுதப்பட்டது என்பது குறித்த மர்மத்திற்கு இன்றுவரை விடை கிடைக்கவில்லை.

இப்புத்தகம் தற்போது ஸ்வீடனில் உள்ள நூலகத்தில் பாதுகாக்கபப்ட்டு வருகிறது. மனிதர்களின் மனதில் உள்ள ஆர்வத்தை தூண்டும் வகையில் இந்த புத்தகம் உள்ளதாகவும் கூறப்படுகிறது. இந்த பேய் புத்தகம், பேப்பர் பக்கங்களினால் ஆனது அல்ல, தோல் பொருட்களை கொண்டு உருவாக்கப்பட்ட பக்கங்களை கொண்டுள்ளது.

160 பக்கங்கள் கொண்ட இப்புத்தகம் மிகவும் கடினமானதாக இருக்கின்றன. சுமார் 85 கிலோ எடை கொண்ட இந்த புத்தகத்தை தூக்க குறைந்தது 2 பேர் தேவை என்றும் கூறப்படுகிறது. இந்த புத்தகம் ஒரே இரவில் எழுதப்பட்டது என்றும் நம்பப்படுகிறது.

இந்த புத்தகம் உருவானது குறித்து ஒரு கதையும் கூறப்படுகிறது. 13-ம் நூற்றாண்டில் வாழ்ந்த துறவி ஒருவர், தனது துறவற சபதங்களை மீறிவிட்டாராம். அதனால் அவருக்கு மரண தண்டனை வழங்கப்பட்டதாம். மரண தண்டனையில் இருந்து தப்பிக்க, அந்த துறவி, ஒரே இரவில் தான் ஒரு புத்தகத்தை எழுதுவதாக உறுதியளித்துள்ளார். எல்லா மனித அறிவைக் கொண்ட ஒரு மடமாக அப்புத்தகம் இருக்கும் என்றும் அவர் கூறினாராம்.

ஆனால் ஒட்டுமொத்த புத்தகத்தையும் அவர் ஒருவரால் மட்டும் எழுத முடியவில்லையாம்.. அதன்பிறகு சிறப்பு பிரார்த்தனைகளை செய்து, ஒரு பேயை (ஜின்னை) அழைத்து உதவி கேட்டாராம்.. தனது ஆன்மாவிற்கு பதிலாக அந்த புத்தகத்தை முடித்துக் கொடுக்க வேண்டும் என்று அந்த பேயிடம் (ஜின்னிடம்) வேண்டினாராம்.. அதற்கு ஒப்புக்கொண்ட பேய் ( ஜின்) , ஒரே இரவில் அந்த புத்தகத்தை எழுதியதாம்.

குறிப்பு :-

விசித்திர (புத்தக ) வரலாறுகள் இன்னும் 12 புத்தகங்களைப் பற்றி எழுதலாம் என எண்ணி இருக்கும் போது ,நண்பர் **Meeran Sahib** அவர்கள் செல்போனில் அவசர அவசரமாக தொடர்பு கொண்டு, இந்த புத்தக வரலாற்றை உடனடியாக நிறுத்தும்படி கேட்டுக் கொண்டார் .

......" மேலும் மந்தரா மல்லி வாசமும் , முடி கருகிற வாசமும் , மயான புகை தென்பட காட்சியும் வைத்த இடத்தில் நாலு முழம் தள்ளி வடகலையில் தெற்கு சூலத்தில் ஒய்யார நிழலும் நிச்சயம் தெரியும் பார்"

" உளுந்தை வறுத்த வாசனை 6 முழ தூரத்தில் அரவம் இருப்பது பார் ,

மீன் கவுச்சி வாசனை அடிக்கும் தூரத்தில் என்னையும் பார் ; என் அழகையும் பார் ".

என்று ஒரு பில்லி சூனிய உரை நடை புத்தகத்தையும் சொல்ல நினைத்தேன் .நண்பரின் வேண்டுகோளுக்கிணங்க இந்த விசித்திர ( புத்தக ) வரலாற்றை இத்துடன் நிறைவு செய்கிறேன் .

ர.ரா






திப்புவின் புலி

விசித்திரமான வரலாறுகள் 05



திப்புவின் புலி மைசூர் அரசின் அரசர் திப்பு சுல்தானுடைய ஒரு தானியங்கி பொம்மை.

இது ஒரு புலி பிரித்தானிய கிழக்கிந்திய நிறுவனத்தின் படை வீரர் ஒருவரைக் கடித்துக் குதறுவது போல அமைக்கபட்டுள்ளது.
18ம் நூற்றாண்டைச் சேர்ந்த இப்பொம்மை தற்போது லண்டனில் உள்ள விக்டோரியா மற்றும் ஆல்பர்ட் அருங்காட்சியகத்தில் உள்ளது.

மைசூரின் புலி என்றழைக்கப்பட்ட திப்பு, தனது சின்னமாக புலியைப் அனைத்து இடங்களிலும் பயன்படுத்தினார். அவருடைய படை வீரரகளின் சீருடைகள், மாளிகை அலங்காரங்கள் ஆயுதங்களில் புலிகள் இடம் பெற்றிருந்தன.

இந்த புலி பொம்மை 1795 இல் திப்புவுக்காக செய்யப்பட்டது. கையினால் திருப்பப்படும் ஒரு சுழற்றியால் இதனுள் உள்ள பல இயங்குமுறைகள் இயக்கப்படுகின்றன.

படை வீரனின் தொண்டையில் உள்ள ஒரு குழாயின் வழியாக இரு துருத்திகள் காற்றை வெளியேற்றுகின்றன. இதனால் படை வீரன் ஓலமிடுவது போன்ற சத்தம் உருவாகுகின்றது.

அதே நேரம் இன்னொரு எந்திர இணைப்பு, வீரனின் இடது கை மேலும் கீழும் அசையும்படி செய்கிறது. வீரனின் கை அசைந்தால், அவன் ஓலத்தின் சுருதி மாறுகிறது.

புலியின் தலையினுள் உள்ள இன்னொரு இயங்குமுறை இரு குழாய்களின் மூலம் காற்றினை வெளியேற்றுகிறது. இதனால் புலி உறுமும் ஓசை எழுகிறது. புலி உடலின் ஒரு பக்கத்தில் தந்தத்தால் ஆன ஒரு இசை விசைப்பலகை மறைத்து வைக்கப்பட்டுள்ளது. அதன் விசைகளை அழுத்தினால் ஆர்கன் குழாய்கள் வழியாக காற்று வெளியேறி இசை உண்டாகுகிறது.

இந்த ஆர்கன் குழாய்களின் பித்தளை உள்ளடக்கத்தை ஆராய்ந்ததிலிருந்து இந்த பொம்மை இந்தியாவில் தான் தயாரிக்கப்பட்டிருக்க வேண்டுமென்று தெரிகிறது.

பிரெஞ்சு கைவினைக் கலைஞர்களும் படைத்துறைப் பொறியாளர்களும் திப்புவிடம் பணி புரிந்து வந்ததால் இந்தப் பொம்மையை உருவாக்குவதில் அவர்களது பங்கும் இருந்திருக்குமென பல வரலாற்றாளர்கள் கருதுகிறார்கள். பொம்மையின் மர ஓடு இந்து சமய கைவினைக் கலைமரபுகளின் தாக்கத்தால் இருக்கக் கூடும்.

ஆங்கில-மைசூர் போர்களின் திப்புவைத் தோற்கடித்த ஆங்கிலத் தளபதி சர். ஹெக்டர் மன்ரோவின் மகன் ஹூக் மன்ரோவின் மரணம் இப்பொம்மையைச் செய்யத் தூண்டுகோலாக இருந்திருக்கலாம் எனக் கருதப்படுகிறது. காரணம் டிசம்பர் 22, 1792 அன்று சாகர் தீவில் ஹூக் மன்ரோ ஒரு புலியால் தாக்கப்பட்டு கொல்லப்பட்டார்.

நான்காவது ஆங்கில-மைசூர்ப் போரின் முடிவில் மே 7, 1799 அன்று திப்பு கொல்லப்பட்டு அவரது தலைநகரான ஸ்ரீரங்கப்பட்டணம்
கோட்டை கம்பெனி படையினரால் கைப்பற்றப்பட்டது. அப்போது இந்த பொம்மையும் கம்பனி வசமானது. அப்போதைய இந்தியத் தலைமை ஆளுனர் ரிச்சர் வெல்லஸ்லியின் துணை அதிகாரிகளுள் ஒருவர், இப்பொம்மை கம்பெனி படைகளால் கைப்பற்றப்பட்டதை பின்வருமாறு விவரிக்கிறார்:

இசைக் கருவிகளுக்காக ஒதுக்கப்பட்டிருந்த ஒரு அறையில் ஒரு புதிரான பொருள் கண்டெடுக்கப்பட்டது. திப்பு சாகிப் ஆங்கிலேயரின் பால் கொண்டிருந்த கடும் வெறுப்புக்கு அது சான்றாக இருந்தது. இந்த இயங்குமுறை கீழே விழுந்து கிடக்கும் ஒரு ஐரோப்பியரை ஒரு ராயல் புலி விழுங்கும் காட்சியை சித்தரிக்கிறது.

ஆர்கன் இசைக்கருவியனுடையது போல சில குழாய்கள் புலியின் உடலுக்குள் உள்ளன. அது உண்டாக்கும் ஓசை புலியின் உறுமலும் ஐரோப்பியனது ஓலமும் கலந்து வரும் ஒசையைப் போல் உள்ளது. ஓசை எழும் போது ஐரோப்பியனின் கையாலாகாத் தனத்தை வெளிப்படுத்தும் வகையில் அவனது கை அடிக்கடி மேலெழுகிறது.

இந்த வடிவமைப்பு திப்புவின் ஆணைப்படி உருவாக்கப்பட்டுள்ளது. திப்புவின் திமிருக்கும் கொடூரத்துக்கும் நினைவுப் பொருளாக அமைந்துள்ள இந்த பொம்மை லண்டன் கோபுரத்தில் வைக்கத் தகுதியானது என்று கருதலாம்.

கிழக்கிந்திய கம்பெனியின் ஆளுனர்கள் இப்பொம்மையை பிரித்தானிய முடியிடம் ஒப்படைக்க வேண்டாமென்று முடிவு செய்தனர்.

ஆரம்பத்தில் லண்டன், லெடன்ஹால் தெருவில் அமைந்திருந்த கிழக்கிந்திய கம்பெனி அருங்காட்சியகத்தில் இது காட்சிக்கு வைக்கப்பட்டது. அங்கு இதனைக் கண்ட கவிஞர் ஜான் கீட்ஸ் தனது அங்கதக் கவிதை யொன்றில் இதனைக் குறிப்பிட்டார்.

புலி பிரித்தானியப் போர் அதிகாரியைக் குதறும் காட்சி இங்கிலாந்தில் பிரபலமானது. 1820 இல் ஹெக்டர் மன்ரோ இறந்த போது அவர் நினைவாக, இது போன்ற மண்பாண்டங்கள் உருவாக்கப்பட்டன.

தற்போது இந்த பொம்மை லண்டன் விக்டோரியா மற்றும் ஆல்பர்ட் அருங்காட்சியகத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளது. ஒரு கண்ணாடி கூண்டில் வைக்கப்பட்டுள்ளதால், பார்வையாளர்களால் இதனை இயக்கிப் பார்க்க முடியாது. இதன் ஒரு சிறிய மாதிரி வடிவம், பெங்களூரில் உள்ள திப்பு சுல்தானின் மர மாளிகையில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளது.

இங்கிலாந்தின் பெர்க்ஷையரைச் சேர்ந்த ஒரு தம்பதி, தங்கள் வீட்டில் உபயோகப்படுத்தாமல் இருந்த அறையை சுத்தம் செய்தபோது பொக்கிஷமாக சில பொருட்கள் சிக்கின

திப்பு சுல்தானின் தந்தை "ஹைதர் " என்று பொறிக்கப்பட்ட வாள் உட்பட சில வாள்கள் , துப்பாக்கி , பாக்குவெட்டி, தங்கமோதிரம், கேடயம் போன்றவை கிடைத்தன அந்த தம்பதி "ஆண்டனி கிரிப் " என்ற ஏல நிறுவனத்தில் இந்தப் பொருட்களை ஒப்படைத்தது .

அவர்கள் ஹைதர் அலி மற்றும் திப்பு சுல்தான் காலத்தை சேர்ந்தவை என்று உறுதி செய்தனர் . திப்புசுல்தான் பொருட்கள் இந்தியாவிற்கு திரும்பி செல்ல வேண்டும் என்று விரும்புவதாக அந்த தம்பதி கூறியது .

இந்திய அரசும், India Pride Project என்ற அமைப்பும் இந்த பொருட்களை இந்தியாவிடம் அளிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர். ஆனால் 2019 மார்ச் மாதம் திப்புசுல்தானின் பொக்கிஷங்கள் ஏலம் விடப்பட்டன !

திப்புவின் எந்த பொக்கிஷமும் இந்தியாவுக்குத் திரும்பி வரவில்லை !

ர.ரா

இது திப்புவின் ஏவுகணை அமெரிக்கா, ரஷ்யாவெல்லாம் தள்ளி நில்லு!

விசித்திரமான வரலாறுகள் 06





இந்திய விடுதலைப் போராட்டத்தில் வீர வரலாறு படைத்தவர் திப்பு சுல்தான். ஆங்கிலேயரை நடுநடுங்க வைத்த அந்த மாவீரன், போர் வியூகத்திலும், படைக்கலத் தயாரிப்பிலும் சிறந்து விளங்கினார்.

சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்பாகவே ராணுவத் தொழில்நுட்பத்திலும், வல்லமையிலும் திப்பு சுல்தான் படை சிறந்து விளங்கி ஆங்கிலேயப் படைகளை திணறடித்தது. இதில், எதிரிகளின் முகாம்களை சீர்குலைத்து சின்னாபின்னமாக்கும் வகையிலான திப்புவின் ஏவுகணைகள் குறிப்பிடத்தக்கது. இன்று அந்த ஏவுகணைகள் மீண்டும் வெளியாகியிருப்பது உலக நாடுகளுக்கு பேரதிர்ச்சியே.

ஏவுகணையின் தந்தை

சக்தி வாய்ந்த ராக்கெட் மற்றும் ஏவுகணை தொழில் நுட்பத்தை முதன் முதலில் பயன்படுத்தியவர் திப்புசுல்தான். இதனாலேயே ஏவுகணைகளின் தந்தை என்ற புனைப் பெயரையும் இவர் கொண்டுள்ளார். இரண்டாம் உலகப் போரில் ஜெர்மனி பயன்படுத்திய வி2 ராக்கெட்களுக்கு முன்னோடியாக திப்புவின் ராக்கெட் தொழில்நுட்பம் இருந்தது வரலாற்றுச் சிறப்பே.

இந்தியாவை சிறப்பாக ஆட்சி செய்த மன்னர்களில் முக்கிய பங்கு வகிப்பவர் திப்பு சுல்தான். ஹைதர் அலியின் இரண்டாவது மனைவியான ஃபாத்திமாவிற்கு மகனான இவர், தந்தையின் மரணத்திற்கு பிறகு ஆட்சியில் அமர்ந்தார். திப்புவை இவரது நெருங்கிய வட்டம் மைசூரின் புலி என்று புனைப்பெயர் வைத்து அழைப்பார்கள். ஆம், உண்மையில் போரின் போதும், தன் மக்களை பாதுகாப்பதிலும் புலியாகவே செயல்பட்டார்.

ஆடம்பரமற்ற அரசர்

நாம் கதைகளிலும், வரலாற்று புத்தகத்திலும் பார்க்கும் ஆடம்பரமான அரசர் திப்பு இல்லை என்றுதான் கூற வேண்டும். பொதுவாக நாடாளும் அரசர்களுக்கு என அந்தப்புரம், கோட்டை முழுவதும் தன் பெயர், சிலை, ஆடம்பரம் என அனைத்தும் அற்றவர் இவர். ஆங்கிலேயர்களிடமும், சர்வாதிகாரத்திற்கு எதிராகவும் போரிட்டே தன் வாழ்நாளை கழித்து வந்தார்.

அதிரச் செய்யும் பெயர்

இந்தியாவை ஆட்டுவித்த கிழக்கிந்திய கம்பெனியும் குலை நடுங்கி அதிர்ந்தது திப்பு சுல்தான் என்ற பெயருக்கே. இன்றளவும் திப்புவின் பெயர் ஆங்கிலேயர்களை அதிர்ச்சியில் தான் வைத்திருக்கிறது. அவர் போர்க்கோலம் கொண்டு களம் கண்ட வயது 16. 1767-இல் வாணியம்பாடியில் நடந்த போரில் ஆங்கிலேயரைத் தோற்கடித்து தனது முதல் வெற்றியை பதிவு செய்த போது அவரது வயது 17. தொடர்ந்து ஆற்றிய சிறப்பு மிக்க பணிகள், மக்கள் நலன் காத்தல் என 1782-யில் அவர் அரசுரிமையைப் பெறும்போது திப்புவின் வயது 32.

நவீன யுத்திகள்

வலிமையான அதே சமயம் நவீன ராணுவத்தை உருவாக்க அரசுக்கான வருவாய் விவசாயம் மூலம்தான் வரும் என உணர்ந்த திப்பு சுல்தான் விவசாயிகளின் நலனிலும், விவசாயத்திலும் அதிக கவனம் செலுத்தினார்.

ஆங்கிலேய காலனியாதிக்கத்தை எதிர்த்து நிற்க முறையான பயிற்சியும், நவீன ஆயுதங்களும் கொண்ட ஒரு படை தேவை என்பதை உணர்ந்த திப்பு அந்த இக்கட்டான சூழலை எதிர்கொள்ள புதிய கண்டுபிடிப்புகளையும் உருவாக்க முனைந்தார்.

ஏவுகணைப் பிரிவு

திப்புவின் தந்தை ஹைதர் அலி படைத்தலைவராக இருந்த காலத்திலேயே 50 பேர் கொண்ட ஒரு ஏவுகணைப் பிரிவுக்கு அவர் தலைவராக இருந்தார். ஹைதர் அலி காலத்தில் மூங்கில்களால் செய்யப்பட்ட இறக்கைகளை மேம்படுத்திய திப்பு தனது ஆட்சியில் இரும்பால் செய்யப்பட்ட இறக்கைகள் அமைத்து கூடுதல் திறன் கொண்டதாக மாற்றினார். அதன் காரணமாக உலகிலேயே போர்க்களத்தில் ஏவுகணையை முதன்முதலில் பயன்படுத்தியவர் என்ற சிறப்பை திப்பு பெற்றுக் கொண்டார்.

இங்கிலாந்தில் திப்பு ஏவுகணை

திப்புவின் ஆரம்பகால ஏவுகணைகள் இரண்டு கிலோமீட்டர் தூரம் வரை துல்லியமாக சென்று தாக்கும் ஆற்றல் பெற்றதாக இருந்தது. அது பற்றிய ஆவணங்கள் இன்றும் லண்டனில் பத்திரமாக உள்ளன. திப்புவின் ஏவுகணைகள் 2.2 கிலோ கிராம் முதல் 5.5 கிலோ கிராம் வரை இருந்தது.

நான்காம் மைசூர் போரில் திப்பு கொல்லப்பட்டபோது கைப்பற்றப்பட்ட திப்புவின் ஏவுகணைகளை ஆங்கிலேயர்கள் இங்கிலாந்துக்கு எடுத்துச் சென்று ஆராய்ந்து ஏவுகணைத் தொழில் நுட்பத்தை வளர்த்து மேம்படுத்தி கான்கிரீவ் ராக்கெட்களை உருவாக்கினார்கள்.

கிணற்றில் ஏவுகணைகள்

போரின் போதே திப்புவினுடைய ஏவுகணைகளை கைப்பற்றுவதில் ஆங்கிலேயர்கள் முனைப்புடன் செயல்பட்டனர். அவர்களிடம் இருந்து ஏவுகணைகளை பாதுகாக்க திட்டமிட்ட திப்பு ஆயிரத்திற்கும் மேற்பட்ட ஏவுகணைகளை எளிதில் காண முடியாதவாறு தன் கோட்டையின் கிணற்றில் மறைத்து வைத்தார். தற்போது அந்த ஏவுகணைகள் தொல்பொருள் ஆராய்ச்சியாளர்களால் உலக நாடுகளை வியப்பில் ஆழ்த்தியுள்ளது.

எந்தக் கோட்டை

திப்பு தனது அட்சிக் காலத்தில் பல்வேறு கோட்டைகளையும், அரண்மனைகளையும் நிர்மாணித்திருந்தார். அவற்றுள் ஷிவப்பநாய்க்கா கோட்டையினை போர்த் தளவாடங்களை பாதுகாக்கும் பகுதியாக செயல்படுத்தினார். அக்கோட்டையில் உள்ள கிணற்றிலேயே தற்போது ஆயிரத்திற்கும் மேற்பட்ட ஏவுகணைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

ஷிவப்பநாய்க்கா கோட்டை

இயற்கை எழில்மிகுந்த அம்சங்கள் பல குவிந்திருக்கும் ஷிமோகாவில் வரலாற்று பின்னணிக்கான ஒரு முக்கிய அடையாளமாக இருப்பது ஷிவப்பநாய்க்கா கோட்டை. இன்று ஷிவப்பநாய்க்கா பேலஸ் மியூசியம் ஆக செயல்பட்டு வருகிறது. கேலடி ராஜவம்சத்தின் பாரம்பரிய ஞாபகார்த்தப்பொருட்கள் காட்சிக்கு வைக்கப்பட்டிருக்கின்றன.

ஷிவப்பநாய்க்கர்

இக்கோட்டை ஷிவப்பநாய்க்கர் என்பவரால் கட்டப்பட்டதாக வரலாறு. பின் இக்கோட்டை திப்பு சுல்தான் வசம் வந்து பிரிட்டிஷாரிடம் இருந்து இன்று தொல்பொருள் துறையிடம் உள்ளது. இராணுவ தளவாடங்கள் பாதுகாக்கும் கிடங்காய் இருந்த இக்கோட்டையின் பிரம்மாண்டம், பாதுகாப்பு அம்சங்கள் இன்றும் வரலாற்றை நினைவுகூறுகிறது.

ஆயிரத்திற்கும் அதிகமான ஏவுகணைகள்

எத்தனை எதிரிகள் படைசூழ வந்தாலும் அப்படைகளை தகர்தெரியும வகையில் இருந்தது இந்த ஏவுகணைகள். பிடமனூர்க் என்னும் ஷிவப்பநாய்க்கா கோட்டையினை பாழடைந்த கிணற்றைத் தூர்வாரிய போது அவற்றில் ஆயிரத்திற்கும் மேற்பட்ட இரும்பு உருளைகள் கண்டெடுக்கப்பட்டன. அவற்றை ஆய்வு செய்த தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் இவை திப்பு சுல்தான் காலத்திய ஏவுகணைகள் என்பதை உறுதி செய்தனர்.

அடங்கிப் போகும் ஆங்கிலேயர்

இன்று உலக நாடுகளுக்கு இடையே உள்ள மிகப் பெரிய அச்சமே அணுகுண்டு தாக்குதல் தான். அமெரிக்கா, ரஷ்யா உள்ளிட்ட நாடுகள் ஏவுகணைத் தாக்குதலுக்கான சோதனையில் ஈடுபடும் போதே ஒவ்வொரு நாட்டிற்கும் இடையே போர் பயணம் எழுகிறது. இந்நிலையில், 18ம் நூற்றாண்டிலேயே ஆங்கிலேயரை அடக்கி வைத்த பெருமை திப்புவைச் சேர்கிறது.

நெப்போலியன் திருடிய 80 ஆயிரம் கிலோ தங்கத்தை தேடும் ரஷ்யா !

விசித்திரமான வரலாறுகள் 07




1812 ஆம் ஆண்டில் ரஷ்யாவின் தலைநகர் மாஸ்கோவில் ஏற்பட்ட பேரழிவுகரமான பின்வாங்கலின் போது பிரெஞ்சு ராணுவ தளபதி நெப்போலியனால் திருடப்பட்டதாக கூறப்படும் பொக்கிஷத்தை பற்றிய புராணக்கதை குறித்து ஒரு புதிய கோட்பாட்டை ரஷ்யாவை சேர்ந்த வரலாற்றாசிரியர் ஒருவர் உருவாக்கியுள்ளார்.

200 ஆண்டுகளாக புதையல் வேட்டைக்காரர்கள் தவறான இடத்தில் புதையலைத் தேடிக்கொண்டிருப்பதாக கூறும் விகாஸ்லேவ் என்னும் அந்த வரலாற்றிசிரியர், பெலாரஸ் எல்லையோரத்திற்கு அருகே உள்ள தனது சொந்த நகரமான ருட்னியனுக்கு தங்கள் கவனத்தை அவர்கள் திருப்ப வேண்டுமென்று உள்ளூர் செய்தித்தாளிடம் தெரிவித்துள்ளார்.

ஐரோப்பாவின் பல பகுதிகளை தனது "கிரேட் ஆர்மி" என்ற பெயர் கொண்ட படையினால் வென்ற நெப்போலியன், ரஷ்யாவின் மாஸ்கோ நகரின் மீது நடத்திய படையெடுப்பில் படுதோல்வியுற்றவுடன் அங்கிருந்து திரும்பும்போது 80 டன் தங்கத்தையும், ஏனைய மதிப்புமிக்க பொருட்களையும் திருடியதாகவும், பிரான்சுக்கு அவற்றை கொண்டுசெல்வது மிகவும் கடினமானதாக இருந்ததால் அவற்றை செல்லும் வழியில் புதைத்துவிட்டதாகவும் கடந்த 200 ஆண்டுகளுக்கு மேலாக கூறப்பட்டு வருகிறது.

நெப்போலியனின் படையை சேர்ந்த பிலிப் டி செகூர் என்பவர் சூறையாடப்பட்ட மதிப்புமிக்க பொருட்கள் ஸ்மோலென்ஸ்க் பிராந்தியத்திலுள்ள செம்லேவோ என்ற ஏரியில் புதைக்கப்பட்டுள்ளதாக கூறியிருந்தார். எனினும், இதுவரை அதற்கான எந்த தடயமும் கண்டுபிடிக்கப்படவில்லை.

பிரெஞ்சு இராணுவம், பெரிய அளவில் ஆயுதங்களையும் வெடிமருந்துகளையும் அவர் கூறிய இடத்தில் விட்டுச்சென்றதால் அது நம்பகமானதாக தோன்றியது. எனவே, 1830களில் ரஷ்யாவின் அரசு அதிகாரிகளும், தொல்லியலாளர்களும், புதையல் வேட்டைக்காரர்களும் அங்கு புதையல் வேட்டையை நடத்தினர். ஆனால், அவர்களுக்கு ஏமாற்றமே மிஞ்சியது.

அதற்கடுத்து, அந்த புதையலை அடைய விரும்புகிறவர்களை திசை திருப்புவதற்காகவே தவறான இடத்தை அந்த அதிகாரி தெரிவித்ததாக கூறிய மற்ற வரலாற்றாசிரியர்கள், அந்த புதையல் பெலாரஸிலுள்ள பேரெஜினே என்ற ஏரியில் மறைந்து வைக்கப்பட்டிருக்கலாம் என்று கூறினர்.

ரஷ்யா உளவாளிகளை குழப்புவதற்காகவே, புதையல் செம்லேவோ ஏரியில் மறைக்கப்பட்டதை போன்ற பிம்பத்தை நெப்போலியன் தனது ஆட்களை அனுப்பி ஏற்படுத்தியதாக வரலாற்றாசிரியர் விகாஸ்லேவ் கூறுகிறார். இந்நிலையில், தங்கம் உள்ளிட்ட விலை மதிப்புமிக்க பொருட்கள் ருட்னியன் நகருக்கு அருகியுள்ள போல்ஷியா ருடாவெச் ஏரிப் பாலத்தின் வழியே கொண்டுசெல்லப்பட்டு அதன் மையப்பகுதியில் புதைக்கப்பட்டதாக கூறுகிறார்.

விலை மதிப்புமிக்க பொருட்கள் புதைக்கப்பட்ட சில ஆண்டுகளிலேயே அந்த பாலம்அரித்துப் போய்விட்டதாகவும், அதுமட்டுமின்றி 1989ஆம் ஆண்டு மேற்கொள்ளப்பட்ட்ட ஆய்வு ஒன்றில் அந்த ஏரியின் தண்ணீரில் வெள்ளித் துகள்கள் அதிக அளவில் காணப்படுவது கண்டறியப்பட்டது என்றும் விகாஸ்லேவ் மேலும் கூறுகிறார்.

இந்நிலையில், இந்த வரலாற்றாசிரியரின் கோட்பாட்டை அடிப்படையாக கொண்டு பார்க்கும்போது, ஏரியின் படுகையில் சிக்குண்டுள்ள புதையலை சரியான உபகரணங்கள், வல்லுநர்களை கொண்டு மீட்க முடியுமென்று அங்குள்ள உள்ளூர் பத்திரிகைகள் செய்தி வெளியிட்டு வருகின்றன.

இருந்தபோதிலும், மேற்கண்ட கூற்றை அனைவரும் ஏற்றுக்கொள்ளவில்லை. புதையலைத் தேடுவதை முழுநேர பணியாக மேற்கொள்பவரும், நெப்போலியன் புதைத்து சென்றதாக கூறப்படும் இந்த புதையலை தேடுவதில் நீண்டகாலத்தை செலவிட்டவருமான விளாடிமிர் போரிவாயேவின் கருத்துகள் முற்றிலும் வேறுபட்டதாக உள்ளன.

"இந்த புதையல் ஒரு புனைவு. நெப்போலியனின் ரஷ்ய படையெடுப்பின் ஒவ்வொரு நாளையும் வரலாற்றாசிரியர்கள் பல நூற்றாண்டுகளாக பதிவு செய்து வந்துள்ளனர். இந்நிலையில், நெப்போலியன் தனது மொத்த படையினரையும் கைவிட்டுவிட்டு, தங்கத்தை கொண்டுசென்றதாக கூறுவது முற்றிலும் சாத்தியமற்றது" என்று விளாடிமிர் போரிவாயேவ் கூறுகிறார்.

துட்டன்காமனின் (காரூன் ) செல்வம்

விசித்திரமான வரலாறுகள் 08









ஹோவர்ட் கார்டெர், பிரிட்டனைச் சேர்ந்த தொல்பொருள் ஆய்வாளர். அவரது வாழ்நாளில் பெரும்பாலான ஆராய்ச்சிகளை எகிப்தில் மேற்கொண்டவர். 1922-ல் எகிப்தின் நைல் நதியோரம் இருக்கும் தீப்ஸ் பகுதியில் தனது ஆராய்ச்சிகளை மேற்கொண்டிருந்தார் ஹோவர்ட்.

சில வாரங்கள் தேடியும் எதையும் கண்டறிய இயலவில்லை. அங்கிருந்து கிளம்பலாம் என்று முடிவெடுத்தார்கள். தங்குவதற்காகப் போடப்பட்டிருந்த கூடாரங்களை எல்லாம் கலைத்துக்கொண்டிருந்தார்கள். அப்போது அங்கே தண்ணீர் சுமந்து வந்த எகிப்தியச் சிறுவன் ஒருவன், கல் தடுக்கிக் கீழே விழுந்தான்.

என்ன கல் இது என்று குழுவினர் அந்தப் பகுதியைக் கொஞ்சம் தோண்டினர். அது வெறும் கல் அல்ல. கீழே இறங்கிச் செல்லும் படிக்கட்டின் ஒரு பகுதி என்பதைக் கண்டுகொண்டனர். அந்தப் படிக்கட்டுகளை மேலும் தோண்டியபோது, பழமையான எகிப்திய ஓவிய எழுத்துகள்கொண்ட கல்வெட்டு ஒன்றைக் கண்டார் ஹோவர்ட். நிச்சயம் இது ஓர் அரசரின் கல்லறையாகத்தான் இருக்க வேண்டும் என்று உணர்ந்தவர், லார்ட் கார்னர்வோனுக்கு இது குறித்துத் தகவல் அனுப்பினார்.

கார்னர்வோன் பிரிட்டனின் பெரும் பணக்காரர். ஹோவர்டின் ஆராய்ச்சிக்கு நிதி உதவி செய்துகொண்டிருந்தார். அவர் இரண்டு வாரங்களுக்குப் பிறகு அங்கே வந்துசேர்ந்தார். ஹோவர்ட், கார்னர்வோன் தலைமையில் அவர்களது குழுவினர் அந்தப் பகுதியைத் தோண்ட ஆரம்பித்தனர். கதவு ஒன்று புலப்பட்டது. அதைத் திறந்து உள்ளே செல்லப் பயந்தார்கள்.

காரணம், ‘இந்தக் கல்லறையைத் திறந்து செல்பவர்கள், சிங்கம், குதிரை, நைல் நதியில் வாழும் முதலையால் மரணமடைவார்கள்’ என்று அங்கே மிரட்டலான ஒரு குறிப்பு எழுதப்பட்டிருந்தது. எகிப்தியச் சிறுவன் ஒருவனை உள்ளே அனுப்பினார்கள். அவன் உள்ளே சென்று, உயிரோடு திரும்பி வந்தான். பின்பு, ஹோவர்ட், கார்னர்வோன் குழுவினர் உள்ளே சென்றார்கள். அது ஏராளமான புதையல்களைக் கொண்டிருந்த ஓர் எகிப்திய அரசரின் கல்லறை. அந்த அரசரின் பெயர், துட்டன்காமன்.

கி.மு. 1333 முதல் 1324வரை ஆட்சி செய்த எகிப்தின் பதினெட்டாவது வம்ச அரசர், துட்டன்காமன். தனது ஒன்பதாவது வயதிலேயே பதவியேற்ற அவர், 19-வது வயதில் இறந்து போனார். மோசமான எலும்பு முறிவு, கடுமையான மலேரியா என்று இறப்புக்குச் சில காரணங்கள் முன் வைக்கப்படுகின்றன. எகிப்திய மக்கள், தங்கள் அரசர்களைக் கடவுளாக வழிபடும் நம்பிக்கைகொண்டவர்கள்.

இறப்புக்குப் பிறகு அந்த அரசர்கள் தங்களது ‘மறுவாழ்வில்’ சகல வசதிகளுடனும் வாழ வேண்டும் என்பதற்காக ஏராளமான நகைகளையும் பொருட்களையும் கல்லறைக்குள் வைத்துப் புதைக்கும் வழக்கம்

வைத்திருந்தார்கள். அப்படித்தான் துட்டன்காமனின் உடலும் நீண்ட காலம் கெட்டுப் போகாதபடி ‘மம்மி’ ஆக்கப்பட்டது. ஏராளமான செல்வங்களுடன் அவரது உடல் புதைக்கப்பட்டு, பிரமிடு உருவாக்கப்பட்டது.

பத்தொன்பது, இருபதாம் நூற்றாண்டுகளில் எகிப்தில் ஏராளமான தொல்பொருள் ஆய்வாளர்களும், புதையல் வேட்டைக்காரர்களும் பிரமிடுகளைத் தேடும் பணியில் தீவிரமாக ஈடுபட்டிருந்தனர். ஏனென்றால் கிடைக்கும் செல்வத்தில் பாதியை, அதைக் கண்டெடுப்பவர்களே வைத்துக்கொள்ளலாம் என்று அனுமதி வழங்கப்பட்டிருந்தது.

இன்னொரு பக்கம், கொள்ளையர்களும் பிரமிடுகளைக் கண்டறிந்து சூறையாடிக்கொண்டிருந்தனர். இப்படிப்பட்ட சூழலில்தான் சுமார் 3,200 வருடப் பழமையான, துட்டன்காமனின் கல்லறை, ஹோவர்டால் கண்டுபிடிக்கப்பட்டுத் திறக்கப்பட்டது. எகிப்தில் கண்டறியப்பட்டதிலேயே முழுமையான, முக்கியமான கல்லறை இது.

சரி, துட்டன்காமனின் கல்லறையில் கண்டெடுக்கப்பட செல்வம் என்னென்ன?

துட்டன்காமனின் கல்லறை முகமூடி. அதாவது புதைக்கப்படும் எகிப்து அரசர்களின் முகங்களை உலோகத்தில் அழகான முகமூடியாகச் செதுக்கி, மம்மியின் மீது வைத்துப் பொருத்தி, சவப்பெட்டியை மூடிவிடுவார்கள். துட்டன்காமனின் முகமூடி முழுவதும் தங்கத்தால் ஆனது.

குள்ளநரியின் முகம் கொண்ட அனுபிஸ் என்ற கடவுள் சிலை. கல்லறைகளை இந்தக் கடவுளே பாதுகாப்பார் என்பது எகிப்தியர்களின் நம்பிக்கை. துட்டன்காமனின் முக வடிவம் கொண்ட நான்கு ஜாடிகள். இவை ஒவ்வொன்றிலும் அரசரது உள்ளுறுப்புகள் பத்திரப்படுத்தப்பட்டிருந்தன. மறுபிறவியில் அரசர் அந்த உறுப்புகளைப் பொருத்திக்கொள்வார் என்பது அவர்களது நம்பிக்கை.

எகிப்து வெப்பம் நிறைந்த தேசம் அல்லவா? கல்லறைக்கு உள்ளும் வியர்க்கும் அல்லவா? எனவே தங்கத்தாலான, கலைநயமிக்க விசிறி ஒன்றும் அங்கே வைக்கப்பட்டிருந்தது. செனட் என்ற சதுரங்கம் போன்ற விளையாட்டுப் பலகையும், அதற்கான காய்களும் வைக்கப்பட்டிருந்தன.

எகிப்தியர்கள் வலிமையின் அடையாளமாகக் கருதியதும், எகிப்திய அரசர்கள் விரும்பி வளர்த்த செல்லப்பிராணியும் சிறுத்தைதான். துட்டன்காமனின் கல்லறையில் தங்கத்தாலான சிறுத்தையின் தலை ஒன்று வைக்கப்பட்டிருந்தது.

எகிப்தியர்கள் பூமராங் போன்ற வளைந்த கம்புகளை வைத்து பறவைகளை வேட்டையாடி வந்தார்கள். அவையும் கல்லறையில் இருந்தன. இந்தப் பிரபஞ்சத்தை, இந்த உலகத்தை, உயிர்களை, மனித இனத்தை எல்லாம் படைத்ததாக எகிப்தியர்கள் வழிபடும் நீலத்தொப்பி அணிந்த ’ப்டா’ என்ற கடவுளின் சிலை அங்கே இருந்தது. வேறு சில கடவுள்களின் சிலைகளும் இருந்தன. அரசர் அமர்வதற்குத் தங்கத்தாலான அரியணை ஒன்றும், நகர்வலம் செல்ல தங்கத்தாலான ரதம் ஒன்றும் வைக்கப்பட்டிருந்தன.

பளிங்குக்கல்லில் செதுக்கப்பட்ட அலங்கார வேலைப்பாடுகள் அமைந்த நறுமணத் திரவியம் நிரப்பும் ஜாடி ஒன்றும் இருந்தது. துட்டன்காமனின் தங்கத்தாலான காலணி அங்கே வைக்கப்பட்டிருந்தது. தவிர, அவரது கால் விரல்கள் ஒவ்வொன்றின் மீதும் தங்கத்தாலான அச்சுகள் பொருத்தப்பட்டிருந்தன.

இவை தவிர ஓவியங்கள், கலைப்பொருட்கள், நகைகள், ஆயுதங்கள் போன்றவை கல்லறையில் கண்டெடுக்கப்பட்டன. ஆயுதங்களில் அலங்கார வேலைப்பாடுகள் அமைந்த இரண்டு கத்திகள் இருந்தன. அதில் துட்டன்காமனின் சவப்பெட்டியில் வைக்கப்பட்டிருந்த ஒரு கத்தி தனித்துவமாகத் தெரிந்தது. 35 செ.மீ. நீளமாக இருந்த அந்தக் கத்தி நிக்கல், கோபால்ட் போன்ற உலோகங்களால் செய்யப்பட்டிருந்தது.

விண்கல்லின் துண்டிலிருந்து அந்தக் கத்தி செய்யப்பட்டிருப்பதாக ஆய்வாளர்கள் சில ஆண்டுகளுக்கு முன்பு கண்டுபிடித்துள்ளனர். இதை நிரூபிக்கும்விதமாக ‘வானத்திலிருந்து உலோகம் வந்தது’ என்று எகிப்தியர்களின் பண்டைய நூல் ஒன்றில் குறிப்பும் காணப்படுகிறது.

இத்தனை ஆயிரம் ஆண்டுகள் ஆகியும் துட்டன்காமனின் விண்கல் கத்தி துருப்பிடிக்கவில்லை. அப்போதே உலோகத்தை வார்க்கும் தொழில்நுட்பத்தில் எகிப்தியர்கள் சிறந்து விளங்கியதை இந்தக் கத்தி உறுதிசெய்கிறது.

துட்டன்காமன் கல்லறையில் எடுக்கப்பட்ட பொக்கிஷங்கள் பலவும் கெய்ரோ நகர அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ளன. சரி, உங்களுக்கு ஏலியன்கள் பிடிக்கும் என்றால் இறுதியாக ஒரு தகவல். நிரூபிக்கப்படாத தகவல்தான்.

எகிப்தியர்களுக்கும் ஏலியன்களுக்கும் தொடர்பு இருந்தது. வேற்றுகிரகத்திலிருந்து எகிப்துக்கு வந்த ஏலியன்களே, அரசர் துட்டன்காமனுக்கு அந்தக் கத்தியைப் பரிசாக வழங்கினார்கள்.

(பொக்கிஷங்களைத் தேடுவோம்!)கட்டுரையாளர், எழுத்தாளர்தொடர்புக்கு: mugil.siva@gmail.com

ர.ரா

முகலாய மன்னர்கள்

விசித்திரமான வரலாறுகள் 09



இந்து இளவரசியை மணந்த அக்பர்!
முகலாயப் பேரரசர் அக்பர் ஆஜ்மீருக்குச் சென்று திரும்புகையில் சாம்பர் (Sambhar) என்ற ஊரில் ஆம்பர் (Ambar)மன்னர் ராஜா பார்மலின் மகளை இந்து மரபுப்படி திருமணம் செய்தார். அக்பரின் முகலாய வழியும், இராஜபுத்திர வழியும் இத்திருமணத்தால் ஒன்று சேர்ந்தது.
க.வெங்கடேசன், அக்பர்,சென்னை.
1972 –Page 47,48

ஷா பாய் என்று ஜெய்ப்பூர் ஆவணங்களில் அழைக்கப்படும் இராஜபுத்திர இளவரசியை, அக்பரை திருமணம் செய்து கொண்டதற்கு பின் மரியம்-உஸ்-ஸமானி (**Mariam-uz-zamani)** என்று அழைக்கப்பட்டார்.
**Ashirbadilal Srivastava, Akbar The Great, volume 2, Agra, 1973, Page 59**.

இந்து இளவரசிக்குப் பிறந்த ஜஹாங்கீர்!

முகலாயப் பேரரசர் அக்பரின் வாரிசான ஜஹாங்கீர் இராஜபுத்திர ராணி ஷாபாய் என்ற மரியம் உஸ் ஸமானிக்குப் பிறந்தவர். ஓர் இந்துப் பெண்ணுக்குப் பிறந்தவர் என்பதால் முகலாயப் பேரரசில் ஜஹாங்கீர் அரசுரிமையை இழக்கவில்லை. அக்பருக்குப் பின் ஜஹாங்கீரே அரசப் பொறுப்பிற்கும் வந்தார். **Laurence Binyon, Akbar, Edinburgh, 1932, page 59.**

இராஜபுத்திர இளவரசிக்குப் பிறந்த ஷாஜஹான்!

முகலாயப் பேரரசர் ஜஹாங்கீர் மார்வாடா மன்னர் ராஜா உதயசிங்கின் மகளை திருமணம் செய்தார். அந்த இராஜபுத்திர இளவரசி ஜகத்கஸாயினி என்பவரின் வயிற்றில் பிறந்தவர்தான் முகலாயப் பேரரசர் ஷாஜஹான்.

ஷாஜஹானின் தந்தையார் ஜஹாங்கீர், அக்பருக்கும் இராஜபுதன இளவரசிக்கும் பிறந்தவர். ஜஹாங்கிருக்கும் இராஜபுதன இளவரசிக்கும் பிறந்தவர் ஷாஜஹான். ஷாஜஹானின் உடலில் ஓடிய ரத்தத்தில் முகலாய ரத்தத்தை விட இந்திய ரத்தமே அதிகமாக இருந்தது என்பர் வரலாற்றாசிரியர் லேன்பூல்.
குலாம் ரசூல், இந்தியாவை ஆண்ட முஸ்லிம் மன்னர்கள், தஞ்சாவூர்.
1998, page 461.

ஹிந்து ராணியின் பேரன் ஔரங்கஜேப்!

இத்தகைய ஷாஜஹானுக்கு மகனாகப் பிறந்த மஹா சக்ரவர்த்தியாகிய ஔரங்கஜேப் ஒரு ஹிந்து ராணியின் பேரனாயிருந்தும் மதத் துவேஷிகள் அவரையும் சும்மா விடவில்லை. அபாண்டப் பழிகளை அவர் மீது அடுக்கிக் கொண்டே செல்கிறார்கள் என்பதனை அறிகிறபோது வேதனையான விசித்திரமாகத்தான் இருக்கிறது. அது மட்டுமா?

நவாப் பாயின் கணவர் ஔரங்கஜேப்!

ஔரங்கஜேப்புக்குப் பின் முகலாயப் பேரரசில் அரியணை ஏறிய பகதூர்ஷாவின் தாயார் நவாப் பாய் (Nawab Bai)காஷ்மீர் இந்து அரசரின் மகள். (She was the daughter of Raja Raju of the Rajuari State of Kashmir) இராஜ புதன வழியில் வந்த நவாப் பாயின் (ரஹ்மத்துன்னிஷா) கணவர் யார் தெரியுமா? மாமன்னர் ஔரங்கஜேப்தான்.
பருக்கி, இந்தியாவை ஆண்ட முஸ்லிம் மன்னர்கள், page 545.

உதயபுரி மஹல் அல்லது பாய் உதயபுரி (Udai Puri Mahal) என்ற மனைவியும் ஔரங்கஜேப்பிற்கு இருந்ததாகச் சொல்லப் படுகிறது. (Kam Baksh) காம்பக்ஸ்என்ற ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தவர் இவர்தான்.
டி.எப்.ஆர். மஆலிசாஹிப், முஸ்லிம் மன்னர்களின் இந்து ராணிகள், பத்ஹூல் இஸ்லாம்.1957, November, Chennai.

ஔரங்கசீப்

இந்தியாவை ஆட்சி செய்த நேர்மையான அற்புதமான முகலாய மன்னர்

ஔரங்கசீப் (1618-1707) முகலாய பேரரசின் ஒரு குறிப்பிடத்தகுந்த பேரரசர்களில் ஒருவர் ஆவார்.

ஷாஜகான் மற்றும் மும்தாஜ் தம்பதியர்
களின் ஐந்தாவது வாரிசாவார். இவர் ஆலம்கீர் (பாரசீக மொழியில் ஆலம்கீர் எனில் பிரபஞ்சத்தை ஆளப்பிறந்தவன் என பொருள்) என அழைக்கப்பட்டார்.

கி.பி 1657 ம் ஆண்டு ஷாஜகான்
நோயினால் படுத்த படுக்கையானார். அரசர் தரிசனம் கிடைக்காததால் அரசர் இறந்துவிட்டதாக வதந்தி பரவியது. ஔரங்கசீப்பின் சகோதரர் தாராசிகாவும் ஷாஜஹானின் பெயரால் சில மோசடிகளில் இறங்கியதும், எதிரிகள் ஆட்சியை கைப்பற்ற தீவிர முயற்சிகள் நடைபெறுவதையும் அறிந்த ஔரங்கசீப் தன் சகோதரர் தாராசிகாவின் மேல் படையெடுத்தார். இந்தசெய்தி அறிந்த தாராசிகாவும் ஷாஜகானும் படையை அனுப்பினார்கள். ஆனால் விதி ஔரங்கசீப்பிற்கு ஆசி வழங்கியது. மிக மோசமாக தோல்வியை சந்தித்தது தில்லி படை.

ஆக்ராவை கைப்பற்றியவுடன் சிறிதும் தாமதிக்காமல் ஔரங்கசீப்பின் படை தில்லி விரைந்தது. தில்லியில் தாரசிகாவின் படையை வெற்றி கொண்டார். தாராசிகா சிந்து பகுதியை நோக்கி பின்வாங்கினார். ஷாஜஹான் சிறைபிடிக்கப்பட்டார். தனது மற்ற இரு சகோதரர்களான சுஜாவையும் முராத்தையும் முழுவதுமாக வெற்றிகொண்டு ஆலம்கீர் முடிசூட்டிக்கொண்டார்.

இவரது ஆட்சிகாலம் வரலாற்று ஆய்வாளர்களால் மிகுந்த விமரிசனத்திற்கு உட்பட்டதாகும். தனது ஆட்சியை கந்தகாரிலிருந்து தெற்கே செஞ்சி வரை விரிவுபடுத்தினார்.

இராசபுத்திரர் சில காலங்களாக முகலாயப் பேரரசோடு நட்புறவு கொண்டே இருந்தனர். ஆனால் அவுரங்கசீப் ஆட்சியில் நிலை மாறியது. சமகாலத்தில் சிவாஜியின் கீழ் மராட்டியர் தக்காணத்தில் ஒரு பலமிக்க அரசை நிறுவியிருந்தனர். இவரின் ஆட்சிக் காலத்தில், மராட்டிய மன்னர் சத்ரபதி சிவாஜி இறந்ததால், மராட்டியர் நாட்டைப் பிடித்ததோடு சிவாஜியின் மகனான சம்பாஜியைச் சிறைப் பிடித்தார். சம்பாஜியின் மகனான சாகுவைக் கவனித்து வந்த இராசாராமோடு போரிட்டு மராட்டியத்தில் சில கோட்டைகளை அவுரங்கசீப் பிடித்துக் கொண்டார்.

இராசாராம் தமிழகத்தில் இருந்த செஞ்சிக் கோட்டைக்கு வந்துவிட்டார். இவ்வாறு சிவாஜியின் கீழ் இருந்த மராட்டியரோடு ஏறக்குறைய தென்னிந்தியாவில் 25 வருடங்களுக்கு மேலாக அவுரங்கசீப் பல போர்களைச் சந்திக்க வேண்டி இருந்தது.

தென் இந்தியாவின் நிலப்பகுதிகளை
தக்காண பீடபூமி என்பர். வட இந்தியாவையும், தென் இந்தியாவையும் பிரிக்கும் விந்திய மலைத்தொடர்களைத் தாண்டி முகலாயப் படை தென்னிந்தியாவை வென்றுக் கொண்டிருந்தது. 1698-பிப்ரவரி 7-இல், அவுரங்கசீப்பின் தளபதி, சூல்பிகார்கான் தமிழகத்தின் செஞ்சியை வென்றார்.

அகமகிழ்ந்த பேரரசர் அவுரங்கசீப் அத்தளபதியையே அப்பகுதிக்கு ஆளுநராக (நவாப்) ஆக்கினார். வெற்றிகொண்ட தென்னிந்தியப் பகுதிகளுக்கு தலைநகர் ஐதராபாத் என அறிவித்தார்.அத்தலைநகரில் இருந்து தென்னிந்தியாவை, தில்லியின் அவுரங்கசீப்பின் கீழ், அதிபராக (நிஜாம்=நிசாம்) இருந்து ஆட்சி செய்தவர்களே, ஐதராபாத் நிசாம்கள் என அழைக்கப் பட்டனர்.

செஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டாலும், இன்றைய தமிழகம்,
ஆந்திரம், கன்னட மாநிலங்களின் பகுதிகளும் அதில் இணைந்திருந்ததால், ஜீல்பிகார் கான் கர்நாடக நவாபு என்றே அப்போது அழைக்கப்பட்டார்.

பின்னர், 1710 ஆம் ஆண்டில், ஆளுநராக (நவாப்) வந்த சதாத்துல்லாகான் (முகம்மது செய்யது) செஞ்சிக்குப் பதிலாக, ஆற்காட்டைத் தலைநகரமாக மாற்றினார். அதனால், கர்நாடக நவாபு, ஆற்காட்டு நவாபு என அழைக்கப்பட்டார்.

இத்தகைய சிறப்பான ஆட்சி
மேலாண்மை காரணமாகவே, அவுரங்கசீப் பேரரசரால், இந்தியாவின் பெரும்பகுதியைக் கட்டி ஆளமுடிந்தது. அதனாலேயே இப்பேரரசர், இந்தியாவை ஒருங்கிணைந்த முதல் பேரரசர் என்ற வரலாற்றுப் புகழை அடைந்தார்.

'ஆலம்கீர்' எனில் பெர்சிய மொழியில் 'பிரபஞ்சத்தை வெல்லப் பிறந்தவன்' என்று பொருள். 1695ல் அவுரங்கசீபை நேரில் பார்த்த இத்தாலியைச் சேர்ந்த பயணி 'கேர்ரி' என்பவர் எழுதியுள்ள குறிப்புகளின்படி அவுரங்கசீப் அதிக உயரம் இல்லை. அவரது மூக்கு பெரியது. கொஞ்சம் ஒடிசலான உடல்வாகு. எளிமையான தோற்றம். 'நிக்கோலா'வின் கூற்றுப்படி, அவுரங்கசீப் தலைப்பாகையில் ஒரே ஒரு கல் மட்டும் தான் பொருத்தப்பட்டிருக்கும். அதிக அலங்காரங்கள் கிடையாது. பெரும்பாலும் வெள்ளை நிற உடைகளையே அணிவார். அவையும் விலை உயர்ந்தது இல்லை.

"ஆலம்கீரின் சொந்தவாழ்க்கை மிக எளிமையானதாகும். தன்னை எப்பொழுதுமே கடவுளின் அடிமையாக பாவித்துக்கொண்டார். இஸ்லாத்தினை நன்றாகக் கடைபிடித்த ஒரே முகலாயமன்னர் இவர் மட்டுமே. எந்த சூழ்நிலையிலும் ஐந்து வேளையும் தொழத் தவறியதில்லை அரசு கஜானாவை தனது சொந்த செலவிற்கு இவர் பயன்படுத்தியது கிடையாது. தனக்காக ஆடம்பரச் செலவில் மாளிகைகள் கட்டியது இல்லை.

1707ம் ஆண்டு வெள்ளிக்கிழமை ஃபஜ்ர் (அதிகாலை) தொழுகையை நிறைவேற்றிவிட்டு கலிமாவை (இஸ்லாமிய மூலமந்திரம்) உச்சரித்த வண்ணம் ஔரங்கசீபின் உயிர் பிரிந்தது. அவர் உண்மையில் எப்படிப்பட்டவர் என்பதை அவருடைய உயில் காட்டுகிறது:

அவுரங்கசீப்பின் உயில்

நான் என் கையால் செய்து விற்ற தொப்பிகளுக்கான பணம் நான்கு ரூபாய்களும் இரண்டு அனாக்களும் ஆய்பேகா என்னும் நபரின் வசம் உள்ளன. அதைக்கொண்டு என்னுடல் மீது போர்த்தவேண்டிய கஃபன் துணியை வாங்கிக்கொள்ளுங்கள்.

தன் கையால் திருக்குர்ஆனை எழுத்துப்பிரதி எடுத்து விற்றதன் மூலம் கிடைக்கப்பெற்ற முன்னூற்று ஐந்து ரூபாய்கள் என் வசமுள்ளன. நான் இறக்கும் அன்று அந்தப் பணத்தை ஏழைகளுக்கு தானமாகக் கொடுத்துவிடுங்கள். (முகலாயர்கள், நூலாசிரியர் -முகில், பக். எண் 307-312).

என் தலையை எதைக்கொண்டும் மூடாமல் திறந்து வைத்துவிடுங்கள். இறைவன் எனக்கு கருணை காட்ட அது உதவும்.

என் உடலை அருகில் உள்ள இடுகாட்டில் ஆடம்பரங்கள் ஏதுமின்றி அடக்கம் செய்யுங்கள்.

ர.ரா

கோ-ஹி - நூர் வைரம் : மலையளவு ஒளி

இது பிரித்தானியாவின் உத்தியோகபூர்வக் களவாடல்

விசித்திரமான வரலாறுகள் 10



முகலாயர்களைப் பற்றி சொல்லும் போது கோஹிநூரைப் பற்றி சொல்ல விட்டால் அவர்களின் வரலாறு முழுமையடையாது.

செல்வம் எங்கிருந்தாலும் அங்கே சர்ச்சைகளும் ஆபத்துக்களும் சேர்ந்தே இருப்பது சகஜம். வரலாறு நெடுகிலும் செல்வங்களுக்காக நேர்ந்த கொடூரங்கள் ஏராளம்; தந்தை மகன், அண்ணன் தம்பி, உற்றார் உறவினர் என செல்வத்தோடு நோக்குகையில் உறவு மெலிந்து அற்றுப்போன வரலாறுகளே அதிகம்.

இப்படி கொள்ளை, அபகரிப்பு என கண்டம் விட்டுக் கண்டம், நாடு விட்டு நாடு அபகரித்துச் செல்லப்பட்டு, வேற்று நாடுகளின் அரும்பொருட் காட்சியகங்களிலும், அரச பீடங்களிலும் இன்றையநாள்வரை தஞ்சம் கிடக்கும் செல்வங்கள் எத்தனை எத்தனை. திருட்டைக்கூட பெருமைமிக்க வரலாறாய் விளம்பரம் செய்வது அரசியலின் அடிப்படையோ என்னவோ!

1850இல் கிழக்கிந்தியக் கம்பெனியால் கைப்பற்றப்பட்டு விக்டோரியா இளவரசிக்கு அனுப்பப்பட்டதன் பின்னர் இதுகாறும் இந்தியாவைப் பிறப்பிடமாகக் கொண்ட விலைமதிப்பற்ற கோஹினூர் வைரத்தை இந்தியாவினால் மீளப் பெற்றுக்கொள்ள முடியவில்லை. “எங்களிடம் இருந்துதான் மேற்குலகத்திற்கு அது சென்றது, இது சென்றது” என்ற நம்மவரின் குற்றச்சாட்டுகள் உண்மைதான் பாருங்களேன்.

இன்றைக்கு ஐயாயிரம் வருட வரலாறு உள்ளதாகக் கருதப்படும் இவ்வைரம், பல மன்னர்கள் மற்றும் ராஜியங்களுக்குக் கைமாறி, இறுதியாக பிரித்தானியாவின் வசம் சென்றிருக்கிறது. இந்த வைரத்தின் பிறப்பிடம் இந்தியாவின் ஆந்திரப் பிரதேசம் மாநிலத்தில் குண்டூர் மாவட்டம் கொல்லூர் என்ற கோல்கொண்டா இடத்தைப் பிறப்பிடமாகக் கொண்டது
என்று வரலாறு சொல்கிறது.

ஆந்திர மாநிலத்தில் வாழ்ந்த காக்கத்தீய பேரரசின் வசம் இருந்த இவ்வைரம் பதின் நான்காம் நூற்றாண்டில் தில்லி மன்னன் அலாவுதீன் கிஜ்லி காக்கத்தீய பேரரசின்மீது நடத்திய தொடர் தாக்குதல்களின் இறுதியில் தில்லி மன்னர்கள் வசமானது.

தில்லி வம்சாவளியில் பல தலைமுறைகள் கோஹிநூர் வைரத்தை உரிமையாக வைத்திருந்தன.இறுதியாக தில்லி வம்சத்தை தோற்கடித்த பாபர் மன்னரின் கைகளுக்கு 1526 ஆம் வருடம் இவ்வைரம் வந்து சேர்க்கிறது. ‘பாபர்நாமா’ என்கின்ற தனது குறிப்பேட்டில் இதுபற்றி மன்னர் பாபர் குறிப்பிடுகிறார்.

மேலும் இந்த வைரத்தின் விலைமதிப்பு இன்றுவரை அறியப்படவில்லை. காரணம், இதுவரை இவ்வைரம் யாராலும் பணம் கொடுத்து வாங்கப்படவில்லை. ஆக்கிரமிப்புக்களாலும், கையாடல்களாலும்,

பலவந்தத்திலுமே இது ராஜியத்துக்கு ராஜியம், கண்டத்திற்குக் கண்டம் இடம்மாறியிருக்கின்றது என்பது ஒரு சுவாரஸ்யமான உண்மை.

பாபரைத் தொடர்ந்து அவரது மகனான ஹுமாயூனின் கைகளுக்கு வந்துசேர்ந்த அந்தக் கல், தொடர்ந்தும் முகலாயர்கள்வசம் இருந்தது. தந்தையிடம் இருந்து மகன் என்ற அடிப்படையில் பல முகலாய மன்னர்கள் இவ்வைரத்தை தம் வசம் வைத்திருந்தனர். முகலாய மன்னர் ஷாஜஹான் தனது மயில் சிம்மாசனத்தில் கோஹிநூர் வைரத்தை வைத்திருந்ததாகவும் கூறப்படுகின்றது.

மகன் ஔரங்கஸிப்பினால் சிறைப்படுத்தப்பட்ட மன்னன் ஷாஜஹான், தனது கடைசிக் காலத்தில் தான் இருந்த அறையின் ஜன்னல் வழியே இக்கோஹிநூர் வைரத்தில் தாஜ்மஹாலின் பிம்பத்தை பார்த்துக்கொண்டிருந்தார் என்ற வரலாறும் நாம் அறிந்ததே.

ஔரங்கஸிப் காலத்திலேயே முதன்முதலாக கோஹினூர் வைரத்தின் தோற்றம் படமாக வரையப்பட்டது. பிரான்சிலிருந்து விலைமதிப்பற்ற கற்கள் தொடர்பான ஆராய்ச்சியில் ஈடுபட்டு இந்தியாவுக்கு வந்த ஒரு நாடோடிக்கு இதனைக் காட்சிப்படுத்திய ஔரங்கஸிப், அவரைக்கொண்டே அந்த வைரத்தின் உருவ அமைப்பை படமாக வரையவைத்தார்.

கோஹிநூரின் மேற்பரப்பில் ஒரு கறை இருந்ததாகக் கூறப்படுகிறது. அக்கறையினால் வைரத்தின் ஒளித்தெறிப்பு முற்றுமுழுதாக வெளிப்படுத்தப்படுதல் தடைப்படும். இதனால் அதன் முழு அழகும் வெளிப்படாது போகும் என எண்ணி, அதனைப் பட்டைதீட்டும் எண்ணம் கொண்ட ஔரங்கஸிப், ஹோர்ட்டேன்சோ போர்கியா எனப்பட்ட வைரக்கல் நிபுணரை கோஹிநூரை பட்டைதீட்டுவதற்காக நியமிக்கிறார்.

தனது கவனக்குறைவால் 793 காரட் நிறையுள்ள வைரத்தை 186 கேரட் நிறைக்குக் குறையுமளவு தவறாக வெட்டிவிடுகிறார் போர்கியா. அதற்காக ஔரங்கஸிப்பின் தண்டனைக்கும் ஆளாகிறார்.

ஔரங்கஸிப்பின் பேரனான முஹம்மது ஷாஹ் வினது காலப்பகுதியில் பாரசீக மன்னனான நாதிர் ஷாஹ் இந்தியா மீது படையெடுத்து வந்ததைத் தொடர்ந்து வலுவற்றிருந்த முகலாய சாம்ராஜியம் வீழ்ச்சி அடைந்ததோடு மட்டுமல்லாது, முகலாய சாம்ராஜியத்தின் விலைமதிக்க முடியாத பல சொத்துக்கள் பாரசீகத்துக்கு பலவந்தமாகக் கொண்டுசெல்லப்பட்டன.

இறுதியில், மிகுந்த பாதுகாப்பில் தனது தலைப்பாகையில் முஹம்மது ஷாஹ் வைத்திருந்த வைரத்தை, நல்லுறவு பேணும் பாங்கில் நாதிர் ஷாஹ் சூழ்ச்சியோடு கைப்பற்றி பாரசீகம் கொண்டு சென்றார். கண்ணைப்பறிக்கும் ஒளி பொருந்திய இவ்வைரத்தைக் கண்ட நாதிர் ஷாவின் மனைவி கோ-ஹி-நூர் என்று இதனை விழிக்கிறார். அதாவது மலையளவு ஒளி என்பதே அதன் அர்த்தம்.

அப்பொழுதிருந்தே, இந்த வைரம் கோஹிநூர் என்று பெருமையோடு அழைக்கப்பட்டது. அதுவரையில் அது பாபரின் வைரம் என்ற பெயரிலேயே அழைக்கப்பட்டது.

பலம் பொருந்திய ஒரு மனிதன் நான்கு திசைகளில் நான்கு கற்களையும் தலைக்குமேலே ஒரு கல்லையும் தனது பலம் முற்றும்கொண்டு எறிந்தானாகில், அக்கற்கள் அடைகின்ற இடைவெளி எவ்வளவோ, அதனைத் தங்கத்தால் நிரப்பினால் கூட இவ்வைரத்தின் பெறுமதியை எட்டாது எனக்கூறினார் நாதிர் ஷாஹ். அந்த அளவு பெறுமதிவாய்ந்த ஒரு பொருளாக, கண்ணைப்பறிக்கும் வசீகரத்தோடு இருந்தது கோஹிநூர்.

பாரசீகம் சென்ற சில காலத்திலேயே நாதிர் ஷாஹ் இறந்துபோக, அவரது பிரதானிகளில் ஒருவரான அஹமத் ஷாஹ் அப்தலி என்பவரின் கைகளுக்கு செல்கிறது கோஹிநூர். அவரே பின்னாளில் ஆப்கானிஸ்தானின் அமீராக வருகிறார். ஆப்கானிஸ்தானில் இருந்தே மீண்டும் இந்தியாவை அடைகிறது கோஹிநூர்.

அஹமத் ஷாஹ் அப்தலியின் வம்சாவளியில் வந்த ஷாஹ் சுஜா துர்ரானி இக்கல்லை மீண்டும் இந்தியாவுக்கு கொண்டுவருகிறார். ஆப்கானிஸ்தானில் வீழ்ச்சியடைந்த தனது ஆட்சியை மீண்டும் கைப்பற்றுவதற்கு லாகூர் மன்னன் ரஞ்சித் சிங் இனது உதவியைப் பெற்றுக்கொண்டதற்கு பகரமாக 1813 இல் சீக்கியர்கள் வசம் கோஹினூர் வைரம் கையளிக்கப்படுகிறது.

ரஞ்சித் சிங் அதனைத் தனது கையில் ஆபரணமாக அணிந்து தான் செல்கின்ற விழாக்களுக்கெல்லாம் அதனைத் தன்னுடனேயே கொண்டுசென்றார்.

ரஞ்சித் சிங்கின் மகன் துலீப் சிங்கின் காலத்தில் கிழக்கிந்தியக் கம்பெனியால் லாகூர் கைப்பற்றப்பட்டதன் விளைவாக, லாகூர் சாம்ராஜியத்தின் அனைத்துச் சொத்துக்களும் பிரித்தானியாவின் வசம் போய்ச் சேர்ந்தது. லாகூர் சாசனத்தில் குறிப்பிடப்படுவதாவது;

"The gem called Kohinoor which was taken from Shah Shuja-ul-Malik by Maharaja Ranjit Singh shall be surrendered by the Maharajah of Lahore to the Queen of England."
"ஷாஹ் சுஜா உல் மாலிக் இடமிருந்து மகாராஜா ரஞ்சித் சிங்கினால் பெறப்பட்ட கோஹிநூர் எனப்படும் வைரம் லாகூரின் மகாராஜாவினால் பிரித்தானியாவிடம் கையளிக்கப்படுகிறது"

1850 ஆம் வருடம் ஏப்ரல் மாதம் ஆறாம் திகதி இந்திய மண்ணைவிட்டு பிரிந்துசென்ற கோஹிநூர் இங்கிலாந்தின் ஹைட் பார்க்கில் நிகழ்த்தப்பட்ட கோலாகலமான விழாவில் கிழக்கிந்தியக் கம்பெனியின் அதிகாரிகளால் விக்டோரயா மகாராணியிடம் உத்தியோகபூர்வமாகக் கையளிக்கப்பட்டது.

முகலாயப் பாணியில் இருந்த கோஹிநூர் வைரத்தை விக்டோரியா இராணியும், அவரது கணவரான ஆல்பர்ட்டும் புதியவடிவில் வெட்டியெடுக்க முடிவுசெய்து ஒல்லாந்த நகை வடிவமைப்பாளர் ஒருவரைக்கொண்டு அதனை மீள் வடிவமைப்புச் செய்தனர். தவிர்க்கமுடியாத பாரிய நிறை குறைப்பின்

முடிவில் முப்பத்தி எட்டு நாட்கள் மேற்கொண்ட கடின வேலைப்பாட்டின் பின்னர், தற்போதைய கோஹிநூர் வைரம் பெறப்பட்டது.

சுவாரசியமாக இவ்வைரத்தை உரிமைப்படுத்தும் எந்த மனிதனும் தனது வாழ்நாளில் பெறற்கரிய செல்வங்கள் மற்றும் சுபீட்சங்களைப் பெற்று வாழ்வான் எனவும், அவனது இறுதிக்காலம் விரும்பத்தகாத ஒரு முடிவாக இருக்கும் என்றும், அதற்கு அவ்வைரத்தின் மேலுள்ள சாபமே காரணம் என்றும், அது சபிக்கப்பட்ட வைரம் எனவும் பல கதைகள் கூறப்பட்டு வந்திருக்கின்றன.

அதனாலேயே, பலர் தங்களது வசமிருந்த வைரத்தை கடவுளின் சந்நிதானத்தில் வைத்துப் பாதுகாத்திருக்கின்றனர். விக்டோரியா இராணியின் கூற்றுப்படி,

“He who owns this diamond will own the world, but will also know all its misfortunes. Only God, or a woman, can wear it with impunity.”

“இவ்வைரத்தை வைத்திருக்கும் ஆணுக்குத்தான் அந்த நிலை, ஒரு பெண் இவ்வைரத்தை உரிமையாக வைத்திருப்பதில் அச்சம்கொள்ளத் தேவையில்லை” என்று சொல்லி, அதற்கான ஒரு சாசனத்தையும் எழுதுகிறார்.

“தனக்குப்பின்னால் வருகின்ற அரச வம்சத்தில், எந்தவொரு ஆணும் இவ்வைரத்தை அணியக்கூடாது. ஒரு ஆண் மன்னராக வரும் பட்சத்தில், அவரது மனைவி இதனை அணியலாம்”

இப்படி சாசனம் எழுதிச் செல்லுமளவு உலக வரலாற்றில் பல சாம்ராச்சியங்களைப் புரட்டிப்போட்ட இந்தக்கல் பெருமைமிக்கதா? சபிக்கப்படவேண்டியதா?? இந்த விலைமதிப்பற்ற வைரம் இந்திய மண்ணுக்கு மீண்டு வருமா? வராதா??

எவருக்கும் தெரியவில்லை

போர் வீரனும், அவனுடைய வாளும் .
(அல்லாஹ்வின் வாள்)

விசித்திரமான வரலாறுகள் 11




பண்டைய ஜப்பானில் போர் வாட்களை உருவாக்குவது ஒரு புனிதத் தன்மை உடைய செயலாகப் பார்க்கப்படுகிறது அதே புனிதத்தன்மையை போன்ற வாளைப் பயன்படுத்தும் போர் வீரர்களான சாமுராய்களும் புனிதத் தன்மையுடன்தான் உருவாகிறார்கள் என்ற கோட்பாடு ஜப்பானில் இன்றும் உள்ளது !

போர் வீரர்களான சாமுராய்கள் பயன்படுத்தும் வாட்களை
பாரம் பரியம் மிக்க முறையில் தயாரிக்கும் பணியில் ஈடுபட்டுள்ள எஞ்சிய குடும்பங்களில் ஒன்று, ஜப்பானின் கியூஷு தீவில் வசித்து வருகிறது.

சாமுராய் வாள் தயாரிக்கும் சிக்கலான பணி பல மாதங்கள் பிடிக்கும். இறுதியில் அழகிய புனித வாள் உருவெடுக்கும். இப்பணியில் கோயிமா குடும்பம் ஈடுபட்டு வருகிறது.

சாமுராய் வீரர்கள் கடைப்பிடிப்பதற்கு என புஷிடோ என்ற தனியான நடத்தைக் குறியீடு உள்ளது. அது சுய ஒழுக்கம் சார்ந்தது . இதன் இதயமாக சாமுராய் வாள் விளங்குகிறது. இந்த வாள் சாமுராய் வீரர்களுக்கு ஒரு ஆன்மீகப் பொருளாகும். நீடித்த சகிப்புத்தன்மையை அடையாளம் காட்டும் விதமாக வாய்ந்த சக்தியாகவும் இது கருதப்படுகிறது !

சாமுராய் வாள் தயாரிக்கும் பணியில் ஈடுபட்டுள்ள கோயிமா குடும்பத்தைச் சேர்ந்த ஷிரோ குனிமிட்ஸு கூறுகையில், "சாமுராய் வாட்களை தயாரிக்கும் பணியில் நாங்கள் ஈடுபடும்போது, அதனோடு தொடர்புடைய புனிதத்தன்மையையும் அதில் அழுத்தமாக சேர்க்க விரும்புகிறோம்" என்று தெரிவித்தார்.

பல தலைமுறைகளை கடந்த வந்துள்ள சாமுராய் வாள் தயாரிக்கும் பணியில் ஈடுபட்டுள்ள கடைசி குடும்பங்களின் ஒன்றான கோயிமா குடும்பத்தில், வாள் தயாரிக்கும் பணிக்கு தலைமையேற்பவருக்கு "ஷிரோ குனிமிட்ஸு " என்ற கௌரவப் பெயர் வழங்கப்படுகிறது.

மிகவும் அழகிய சாமுராய் வாட்களைச் செய்வதற்கு கோயிமா குடும்பம் ஒன்றிணைந்து பணிபுரிகிறது. உருகிய எஃகு துண்டை நன்கு அடிப்பதில் தொடங்கி, கடுமையான உழைப்பால் இறுதியில் "ஹமோன் " என்றழைக்கப்படும் அழகிய வேலைப்பாடுடன் கூடிய வாள் உருவாகும்.

சாமுராய் வாள் உருவாக்கத்தின் படிகள்:

1. மூலப் பொருள்: தாமாஹாகானே

சாமுராய் வாள் செய்வதற்கு தேவையான மூலப்பொருள் தாமாஹாகானே. இப்பொருளை ஒரு தயாரிப்பாளரிடமிருந்து 100 மைல்களுக்கு அப்பால் இருந்து கோயிமா குடும்பம் வரவழைக்கிறது.

அதே வேளையில், பண்டைய காலத்தில் சாமுராய் வாள் உருவாக்கத்திற்கு நகங்கள் அல்லது உடைந்த கலப்பைகள் போன்றவை பயன்படுத்தப்பட்டன.

2. உலோகத்தை கட்டும் அடிப்படை (ஷிடா-கிட்டே)

"நீண்ட நேரமாக உலோகத்தை அடித்துக் கொண்டிருந்தால், ஒருவரின் கை நடுங்கக்கூடும். சாப்பிட பயன்படுத்தப்படும் ஷாப்ஸ்டிக் குச்சியை கூட பிரிக்க முடியாது" என்று ஷிரோ குனிமிட்ஸு தெரிவித்தார்.

மிகவும் கடுமையான உடல் பளுவுள்ள பணியில் கோயிமா குடும்பத்தை சேர்ந்த ஏராளமான உறுப்பினர்கள் ஈடுபட்டுள்ளனர்.

வாள் உருவாகும்முன், சேர்த்து வைக்கப்பட்டிருக்கும் தாமாஹாகானேவை சூடாக்க அடுப்பின் வெப்பநிலை அதிகரிக்கப்படுகிறது. தாமாஹாகானேவை பலமுறை நன்றாக தட்டி அடிப்பது, அதில் உள்ள அசுத்தங்களை நீக்குவதற்காக ஆகும்.

3. மடித்து உருக்கப்படும் உலோகம் (ஒருகேஷி டான்ரென்)

தாமாஹாகானே உலோகத்தின் நகல் பகுதி குறுக்கு, நெடுக்காக பலமுறைகள் மடிக்கப்படுகிறது. தாமாஹாகானே உலோகம் சூடாக்கப்பட்டு, பின்னர் தண்ணீரால் ஒவ்வொரு கட்டத்திலும் குளிர்விக்கப்படுகிறது.

பின்னர், இதுவே எஃகு தளத்தை வலுயேற்றுகிறது. உலோகத்தின் இறுதி வடிவம் பில்லட் என்றழைக்கப்படுகிறது.

4 ஹிஸுகுரி வாள் உருவாக்கம்

பெரிய மற்றும் சிறிய சுத்தியல்களால் மிகுந்த சிரத்தையுடன் ஹிஸுகுரி வாளின் வடிவம் உருவாக்கப்படுகிறது. வாள் தயாரிப்பவர்கள் அதன் நுனிகளை வெட்ட மிகவும் சிரத்தை எடுத்துக் கொள்கின்றனர்.

5. களிமண் கொண்ட பூச்சு (சூசி-ஓகி மற்றும் யாக்கிபா-சூசி)

அசுத்தங்களை அகற்ற வாள் சுத்தப்படுகிறது. பின்னர் அதன் மேற்புறத்தில் கல் மற்றும் களிமண் கலவையால் பூசப்படும்.இக்கலவையின் விகிதம்தான் சாமுராய் வாள் உருவாக்குபவர்களின் தொழில் ரகசியங்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது.

6 இறுதிவடிவம் மற்றும் மெருகூட்டல் (ஷிப்டாஜி டோகி மற்றும் ஷியாகி டோகி)

உறுதியாக்கப்பட்ட உலோகத்தை இறுதியாக தலைமை வாள் தயாரிப்பவரின் மேற்பார்வைக்கு உட்படுத்தப்படும். மாறுதல்கள் இருந்தால் அவை சரிசெய்யப்பட்டு, மெருகூட்டப்படும்.

சாமுராய் வாட்களை எவ்வாறு மெருகூட்டுவது என்பதைக் கற்றுக்கொள்ள மிட்ஸுடோஷி கோமியா டோக்கியோவில் பத்தாண்டுகள் செலவழித்தார்.

கையெப்பமிடப்படும் சாமுராய் வாள் புனித வாளாக கருதப்படும். கையொப்பமிடப்படும் வாள் (மே-கிரி)

ஒரு சிறிய உளியைக் கொண்டு வாளில் தனது பெயரை தலைமை வாள் தயாரிப்பவர் கையொப்பமிடுவார். இக்கையெழுத்து வாளின் தரம் மற்றும் அமைப்புக்கேற்றார் போல மாறுபடும்.

பண்டைய ஜப்பானில் போர் வாட்களை உருவாக்குவது ஒரு புனிதத் தன்மை உடைய செயலாகப் பார்க்கப்படுகிறது அதே புனிதத்தன்மையை போன்ற வாளைப் பயன்படுத்தும் போர் வீரர்களான சாமுராய்களும் புனிதத் தன்மையுடன்தான் உருவாகிறார்கள் என்ற கோட்பாடு ஜப்பானில் இன்றும் உள்ளது !

இஸ்லாத்திலும் சாமுராய் அந்தஸ்தில் போர் வீரர்களை அழைப்பதுண்டு . அந்தப் போர் வீரர்களில் சிலரை "அல்லாஹ்வின் வாள் " என்ற அடைமொழியுடன் நபி (ஸல் ) அவர்கள் அழைத்தார்கள்.

அல்லாவின் வாளும் , ஜூர்ஜாவும்

"தங்களுக்கு அல்லாஹ் வானுலகில் இருந்து ஒரு வாள் வழங்கியதாகவும் , அதனை அவர்கள் தங்களிடம் கொடுத்திருப்பதாகவும் கேள்விப்பட்டேன் . இது உண்மையா ?"

"உண்மை இல்லை" - காலித் இப்னு வலீத் பதில் பகர்ந்தார்கள்.

"அப்படியானால் தங்களை "அல்லாஹ்வின் வாள் "என்று அழைப்பதற்கு என்ன காரணம் ?

மேற்கண்ட கேள்விகளைக் கேட்பது கிறிஸ்துவப் படையை சேர்ந்த ஜூர்ஜா என்பவராவார் .

இடம் : யர்முக் யுத்தக் களம்

அணி வகுத்திருந்த கிறிஸ்தவ படையில் இருந்து வெளியே வந்த ஜூர்ஜா முஸ்லிம் படை தளபதி காலித் இப்னு வலீத் (ரலி) அவர்களை சந்திக்க வேண்டும் என்று கோரினார்.ஜூர்ஜாவை காலித் அவர்கள் சந்தித்தார் .ஜூர்ஜா பேச ஆரம்பித்தார் .

"காலித் ! தாங்கள் உண்மையை மட்டுமே சொல்ல வேண்டும். காரணம் தாங்கள் சுதந்திர மனிதர் .சுதந்திர மனிதர்கள் பொய் பேசுவதில்லை . தாங்கள் ஏமாற்றவும் கூடாது. காரணம் கண்ணியமிக்கவர்கள் ஏமாற்ற மாட்டார்கள்"

தாங்கள் என்ன வேண்டுமானாலும் கேட்கலாம் என்ற பொருளில் காலித் (ரலி) ஜூர்ஜாவைப் பார்த்தார் . காலித் (ரலி) அவர்களை "அல்லாஹ்வின் வாள் " என்று அழைப்பதற்கு என்ன காரணம் என்பது ஜூர்ஜா முதல் கேள்வியாக இருந்தது .

காலித் (ரலி) அவர்கள் இவ்வாறு பதிலளித்தார்கள் .

"நாங்கள் இருளில் கிடந்தோம் இறைவன் எங்களுக்கு ஒரு சிறந்த வழிகாட்டியை வழங்கினான் . ஆனால் நாங்கள் அவரை புறக்கணித்தோம். பின்னர் நிறைய பேர் அவரது வார்த்தைகளை செவிமடுத்தார்கள் . அல்லாஹ்வின் தூதர் அவர்களையும் அவர்களை ஏற்றுக் கொண்டவர்களையும் நாங்கள் பெரும் தொல்லைகளுக்கு ஆட்படுத்தினோம் . எங்களுக்கிடையில் சண்டைகளும் நடந்தன . கொஞ்சம் கொஞ்சமாக எங்கள் மீது இறைத்தூதர் அவர்களின் பிடி இறுகியது . எங்களுடைய இதயங்களும் தலைகளும் அல்லாஹ்வுக்கு அடி பணிந்தன. முஹம்மது நபி (ஸல் ) அவர்கள் வழியாக அல்லாஹ் எங்களை நேர் வழியில் ஆக்கினான் .அவரோடு சேர்ந்து நாங்களும் தீமைகளுக்கு எதிராக போராடினோம்.

ஒரு தடவை அண்ணலார் அவர்கள் "அல்லாஹ் வெளியில் எடுத்த நிறைய வாள்களில் ஒரு வாள் நீ " _என்று கூறினார்கள் .அதற்குப் பிறகுதான் நான் "அல்லாஹ்வின் வாள்" என்று அழைக்கப்பட்டேன்.

ஜூர்ஜா கேட்டார் : " என்ன விஷயத்திற்காக எங்களை நீங்கள் அழைக்கிறீர்கள் ? "

காலித் : "வணக்கத்திற்குத் தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்ற சத்தியத்தை நீங்கள் அங்கீகரிக்க வேண்டும். முஹம்மது (ஸல்) அவர்கள் காட்டித்தந்த வழியில் வாழ்ந்திடவும் வேண்டும் .

ஜூர்ஜா : "இன்று உங்களோடு சேர்பவர்களுக்கு என்ன அந்தஸ்து வழங்குவீர்கள் ? "

காலித் : " இஸ்லாமில் எங்களுக்கு என்ன அந்தஸ்து உள்ளதோ அதே அந்தஸ்து அவர்களுக்கும் கிடைக்கும். அல்லாஹ் எங்களுக்கு கடமையாக்கிய காரியங்கள் அவர்களுக்கும் கடமையாகும் . எங்களுக்கிடையில் பிரமுகர்கள் , சாதாரண மனிதர்கள் , முதலில் வந்தவர் கடைசில் வந்தவர் என்ற வித்தியாசமே இல்லை"

ஜூர்ஜா : " இப்பொழுது வருபவர்களுக்கு அதே பிரதிபலனும் அனுகூலங்களும் கிடைக்குமா ? "

காலித் : "ஆம் . கிடைக்கும் . ஒருவேளை எங்களை விட அதிகமாகவே அவர்களுக்கு கிடைக்கும் .

ஜூர்ஜா : " காரணம் ? "

காலித் : " நாங்கள் நிறைய தியாகங்கள் செய்து இருக்கிறோம் என்பது உண்மைதான் . ஆனால் இறைத்தூதர் அவர்கள் வாழ்ந்திருந்த சமயத்தில் நாங்கள் இஸ்லாமினுள் நுழைந்தோம் . அவர்களுக்கு இறைச்செய்தி வருவதை நாங்கள் நேரில் கண்டோம் . இறை அத்தாட்சிகள் பலவற்றை அவர்கள் எங்களுக்கு காண்பித்து தந்தார்கள். ஆனால் நீங்கள் அப்படி அல்ல . அனைத்தையும் கேட்கும் வாய்ப்பு மட்டுமே உங்களுக்கு உள்ளது . அதனால் மனதறிந்து இஸ்லாமினுள் நுழைபவர்கள் உண்மையில் எங்களை விட சிறந்தவர்கள் "

ஜூர்ஜா : " தாங்கள் சொன்னது அனைத்தும் உண்மை "

ஜூர்ஜா இதனைச் சொல்லிவிட்டு , முஸ்லிம் அணியில் வந்து நின்றார் . கலிமாவை உரக்க மொழிந்தார். ஸுபஹானல்லாஹ் !

பின்னர் முஸ்லிம்களோடு சேர்ந்து கொண்டு எதிரிகளை எதிர்த்துப் போராடினார். ஒரு தடவை மட்டும் தான் அவர் காலித் இப்னு வலீத் (ரலி) அவர்களோடு தொழுதார் . அல்லாஹு அக்பர் ! அன்று மாலையே அவர் ஷஹீதானார் .

இவரும் சிறந்த போர் படை வீரர்தான் . சிறந்த போர்வாள்தான் .

மம்மி விசித்திரமான வரலாறுகள் 12









மம்மி என்றால் என்ன? ஆங்கிலேயர்கள் போல சிலர் அம்மாவை மம்மி என்று அழைப்பார்கள் அல்லவா, அந்த மம்மிக்கும் இந்த மம்மிக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. இங்கு மம்மி என்று சொல்வது உயிரற்ற உடலைத்தான். ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு முன்பு இறந்தவரின் சவம். இந்த மம்மிகள் எகிப்தில் உள்ளன.

பிரமிடுகள் கட்டப்படுவதற்கு எத்தனைக் காலம் ஆகியிருக்கும்! எத்தனை எத்தனை வேலையாட்கள் இதற்காக உழைத்திருப்பார்கள்! வருடக்கணக்காக பல்லாயிரக்கணக்கான அடிமைகளைக் கொண்டு கட்டி எழுப்பப்பட்டவைதான் ஒவ்வொரு பிரமிடும். பிரமிடுகள் என்பது வெறும் கல்லறைகள்தான் என்பது உங்களுக்குத் தெரியும்.

புராதன எகிப்தின் சக்கரவர்த்திகள்தான் பாரோக்கள். இவர்களின் சவங்களையும், மற்ற ராஜாக்களின் சவங்களையும் பிரமிடுகளில் பாதுகாத்து வைத்தார்கள். அந்த சவங்கள்தான் மம்மிகள்.

ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு முன்பு பிரமிடுகளில் அடக்கம் செய்யப்பட்ட மம்மிகள் இப்போதும் கெட்டுப்போகாமல் இருக்கின்றன. சவ உடல்கள் கெட்டுப்போகாமல் பாதுகாப்பதற்கான முறை புராதன எகிப்தியர்களுக்குத் தெரிந்திருந்தது. அழுகச் செய்கின்ற அணுக்களிலிருந்து அவர்கள் சவ உடலைக் காப்பாற்றினார்கள். அதற்காக அவர்கள் "ஆஸ்பல்ட்', "ப்ளாஸம்', எனும் பாதுகாக்கும் பொருள்களை பிரயோகப்படுத்தினார்கள். இவை சில ரசாயனப்பொருட்களாகும்.

சவ உடலிலிருந்து குடல் முதலிய உறுப்புகளை நீக்கிய பிறகுதான் பிரஸர்வேட்டிவ்களைப் பிரயோகிப்பார்கள். உடல் பக்குவப்படுவதுவரை இப்படிச் செய்வார்கள். பிறகு, எகிப்தின் காவல் தெய்வமான ஒஸீரஸின் முகமூடியை சவ உடலுக்கு அணிவிப்பார்கள். இப்படி பக்குவப்படுத்தப்பட்ட மம்மியை ஒரு மரப்பெட்டியில் வைப்பார்கள். அந்த மரப்பெட்டியை ஒரு கல்லறையில் பத்திரமாக அடக்கம் செய்வார்கள்.

சவ உடலிலிருந்து எடுத்த குடல் முதலிய பொருட்களை ஒரு கற்பாத்திரத்தில் இட்டு இந்தக் கல்லறையிலேயே அடக்கம் செய்வார்கள். விரைவாக அணுச்சேர்க்கை நடக்கிற குடல்களைக் காப்பாற்றுவதற்கு ரசாயனப் பொருட்களால் இயலாது. அதனால்தான், குடலைத் தனியாகப் பிரிக்கிறார்கள்.

இப்படி மம்மியாக்கப்பட்ட சவ உடல்கள் எந்த மாற்றமும் இன்றி இப்போதும் நிலைத்திருக்கின்றன.

சவ உடல்களை ஏன் இப்படிப் பாதுகாக்கிறார்கள்? மனிதன், மரணத்திற்குப் பின்னும் வாழ்வதாக எகிப்தியர்கள் நம்பினார்கள். சவ உடலை சற்றும் சேதமடையாமல் பாதுகாத்தால், அந்த உடலுக்குரியவருக்கு மேல் உலகத்தில் புதிய வாழ்க்கை கிடைக்குமாம்!

ஆனால், எல்லா சவ உடல்களையும் இப்படிச் செய்ய மாட்டார்கள். சவ உடலை மம்மியாக மாற்ற நிறையச் செலவு செய்ய வேண்டிவரும். அதனால், ஏழைகளின் சவ உடல்கள் மம்மியாக மாற்றப்படுவதில்லை.

சக்கரவர்த்திகளாலும் ராஜாக்களாலும், மேல் உலகில் சேவகர்களும் படைவீரர்களும் இல்லாமல் வாழ முடியுமா? இதற்கு அவர்கள் என்ன செய்தார்கள்? இறந்த சேவகர்களின், படை வீரர்களின் உருவங்களை, மம்மியைப் பாதுகாத்த கல்லறைக்கருகில் செதுக்கி வைத்தார்கள். அப்படி அவர்களுக்கும் மேல் உலகில் புதிய வாழ்க்கை கிடைக்குமாம்!

'மம்மி'யுடன் தங்கப் புதையல் கண்டுபிடிப்பு

எகிப்து நாட்டில் பழம் 'மம்மி'க்களுடன் தங்கப் புதையல் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

எகிப்து நாட்டில் பழம் 'மம்மி'க்களுடன் தங்கப் புதையல் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது.

எகிப்தில் உள்ள மின்யா பகுதியில் தொல்லியல் ஆய்வாளர்கள் அகழாய்வுப் பணியில் ஈடுபட்டிருந்தனர். அப்போது, தோண்டத்தோண்ட மம்மிக்களும், தங்கத்தால் ஆன ஆணிகலன்களும் வெளிப்பட்டது அவர்களுக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்தியிருக்கிறது.

எகிப்து நாட்டில் தொடர்ந்து மம்மிக்கள் கண்டெடுக்கப்பட்டு வருகின்றன. பண்டைக் காலத்தில் அந்நாட்டு மன்னர்கள், முக்கியமானவர்கள் இறந்தவுடன் அவர்களின் உடல்களைப் பதப்படுத்தி பிரமிடுகளில் புதைத்து வைப்பது வழக்கம்.

அப்படி அடக்கம் செய்யப்பட்ட மம்மிக்கள்தான் தற்போது கண்டுபிடிக்கப்பட்டு வருகின்றன. அதனால் தொல்லியல் ஆய்வாளர்களும், வரலாற்று ஆர்வலர்களும் எகிப்தில் எப்போதும் குவிந்தவண்ணம் உள்ளனர்.

தற்போது எகிப்தின் மத்தியப் பகுதியில் உள்ள டவுனா காபால் மாவட்டத்தில் இருக்கும் பழமையான பிரமிடுகளில் 17 மம்மிகளை ஆராய்ச்சியாளர்கள் கண்டறித்துள்ளனர்.

மம்மிக்களுடன் தங்கத்திலான தகடுகளையும் அவர்கள் கண்டுபிடித்துள்ளனர். இந்த மம்மிக்கள் எத்தனை ஆண்டுகள் பழமையானவை என்று இன்னும் கண்டறியப்படவில்லை.

புதிதாய் கண்டுபிடிக்கப்பட்ட மம்மிக்கள் அரச குடும்பங்களைச் சேர்ந்தவை போன்று இல்லை. ஆனாலும், இது ஒரு முக்கியமான, அவசியமான கண்டுபிடிப்பு என தொல்லியல் ஆய்வாளர்கள் தெரிவித்துள்ளனர். இப்பகுதியில் முதன் முறையாக மம்மிக்கள் கண்டறியப்பட்டுள்ளதாகவும் ஆய்வாளர்களில் ஒருவர் கூறினார்.

ˆபெரு நாட்டில் பெண் மம்மி உட்கார்ந்த நிலையில் கண்டெடுப்பு

பெரு நாட்டின் தலைநகர் லிமா அருகே பச்சா கமக்கில் உள்ள சுடுகாட்டில் உட்கார்ந்த நிலையில் புதைக்கப்பட்ட பெண் மம்மி கண்டெடுக்கப்பட்டுள்ளது.

லிமாவிற்கு தெற்கே, பழமையான நகரமான பச்சா கமக்கில் உள்ள கோவிலில் கண்டெடுக்கப்பட்ட இந்த 50 வயது பெண் மம்மி புதைக்கப்பட்டு தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் தெரிவித்துள்ளனர். ஆனால் அதன் தலைமுடி மட்டும் இன்று வரை கொட்டாமல் அப்படியே உள்ளது ஆச்சர்யத்தை அளிக்கிறது. பிரான்ஸ் நாட்டில் உள்ள முசி டி கான்புளுயன்ஸ் மியூசியம் இம்மாத இறுதியில் மீண்டும் திறக்கப்படும் போது அதில் இந்த மம்மி காட்சிக்கு வைக்கப்படும் என்று தெரிவிக்கப்பட்டுள்ளது.

லிமாவில் இருந்து 25 மைல் தொலைவில் உள்ள பச்சா கமக்கில், கடந்த 2012 ஆம் ஆண்டு கல்லறையை தோண்டிய போது எலும்பு கூடுகளாக 80 மம்மிக்கள் கண்டெடுக்கப்பட்டது. அவர்கள் பச்சா கமக் என்ற கடவுளை வழிபட்டிருக்கவேண்டும் எனவும் ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர். உலகின் முதல் ஆண் மற்றும் பெண்ணை படைத்தது தங்களது கடவுளான பச்சா கமக் தான் என்பது இவர்களது நம்பிக்கையாகும் என்பது குறிப்பிடத்தக்கது.

எகிப்தில் கண்டறியப்பட்ட நகைகள் அணிந்த "மம்மி" – ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடிப்பு

கெய்ரோ: எகிப்தின் கல்லறை ஒன்றில் நகைகள் அணிந்திருந்த பெண் "மம்மி" ஒன்று கண்டறியப்பட்ட சம்பவம் பெரும் பரபரப்பினை ஏற்படுத்தியுள்ளது.

எகிப்தின் தென் பகுதியில் நைல் நதிக்கரையில் உள்ள பழங்கால கல்லறைகளை ஸ்பெயின் புதை பொருள் ஆராய்ச்சியாளர்கள் தோண்டி ஆய்வு மேற்கொண்டனர்.

அதில் ஒரு கல்லறையில் அழகிய பூ வேலைப்பாடுகளுடன் கூடிய சவப் பெட்டி கண்டெடுக்கப்பட்டது. அதன் உள்ள 30 வயதான பெண் மம்மி இருந்தது.

அந்த பெண் மம்மி கடந்த 4 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தது என ஆராய்ச்சியாளர்கள் கணித்துள்ளனர்.

அதன் உடலில் தங்க மற்றும் வெள்ளி நகைகள் அணிவிக்கப்பட்ட நிலையில் இருந்தது. அந்தக் காலத்திலேயே அவ்ளோ நகை நெக்லஸ், பிரேஸ்லெட்டுகள் மற்றும் தொங்கல்கள், டாலருடன் கூடிய தங்க நகைகள் அணிவிக்கப்பட்டிருந்தது.

புதைக்கப்பட்ட பெட்டி சீல் வைத்து மூடப்பட்டிருந்தது. இது புதைக்கப்பட்ட கல்லறை மிகவும் சேதமடைந்த நிலையில் இருந்தது.

அதை உடைத்து அதற்குள் புதைக்கப்பட்ட மம்மியிடம் இருந்து திருட கொள்ளையர்கள் முயன்று இருக்கலாம் என தெரிய வந்துள்ளது.

ர.ரா

வர்னா இடுகாடு ( Varna Necropolis )
பல்கேரியா

விசித்திரமான வரலாறுகள் 13








கி.மு. 4569–4340 காலகட்டத்திய தொல்லியல் சிறப்புவாய்ந்த ஒரு இடுகாடு ஆகும். இது வர்னா ஏரிக் கரையில் இருந்து அரை கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது.

அக்காலகட்டத்தைச் சேர்ந்ததும், உலகின் பழமையான தங்கப் புதையலும், இந்தத் தளத்தில் கண்டுபிடிக்கப்பட்டது.

சரி, அந்த வர்னா மனிதர்கள் வாழ்ந்த காலம் எது?

கரிமக்காலக் கணிப்புப்படி **(Carbon dating)** அந்தக் கல்லறைகள் கி.மு.4569-க்கும் கி.மு.4340-க்கும் இடைப்பட்ட காலத்தைச் சேர்ந்தவை. அதாவது சுமார் 6,500 ஆண்டுகளுக்கு முந்தையவை.

மனிதனின் பண்பாட்டு வளர்ச்சியில் உலோகத்தினால் செய்யப்பட்ட கருவிகளின் பயன்பாடு தொடங்கிய செப்புக்காலம் என்று இதைச் சொல்லலாம். அப்போதே அந்தப் பகுதியில் அமைந்த வர்னா ஏரிக்கரையை ஒட்டி அந்த மனிதர்கள் வாழ்ந்திருக்கிறார்கள்.

மனிதன் அறிந்த வரலாற்றில் இதுவரை மெசபடோமியா, எகிப்து, சிந்து சமவெளி போன்றவையே பண்பாடுமிக்க பண்டைய நாகரிகங்களாகக் கருதப்பட்டு வந்தன.

நல்ல கட்டமைப்பு கொண்ட நகரம், சமூக அமைப்பு, கலாச்சாரம், நிர்வாகம் என்று மனிதன் நாகரிக வாழ்க்கைக்கு நகர்ந்தது இந்த நாகரிகங்களில்தாம் என்று ஆய்வாளர்கள் நம்பினர்.

ஆனால், சுமார் 7 ஆயிரம் ஆண்டுகளுக்கும் முன்பே கருங்கடல் பகுதியில் பல்கேரியாவில் இப்படி ஒரு மனித நாகரிகம் தழைத்தோங்கியிருக்கிறது என்ற கண்டுபிடிப்பு ஐரோப்பிய வரலாற்றை மாற்றியமைத்து ,பலரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தியது !

இந்த தளமானது தற்செயலாக 1972 அக்டோபரில் அகழ்வாராய்வாளர் ரோகோ மாரினோவ்னால் கண்டுபிடிக்கப்பட்டது. இந்த வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த பொருட்களின் மதிப்பை முதலில் உணர்ந்தவர் டால்கோபாலின் வரலாற்று அருங்காட்சியகத்தை உருவாக்கிய டிமிடார் ஜல்டர்கி ஆவார்.

உள்ளூர்காரர்கள்தான் அவற்றை ஆராய்வதற்காக அவரை அழைத்துவந்திருந்தனர். இந்தக் கண்டுபிடிப்பானது எவ்வளவு முக்கியம் வாய்ந்தது என்பதை அவர் உணர்ந்தார்,

எனவே அவர் வர்னா வரலாற்று அருங்காட்சியகத்தை தொடர்பு கொண்டார். அரசாங்க ஆவணங்களில் கையெழுத்திட்டபின், மிஹைல் லாசாரோவ் (1972-1976) மற்றும் இவான் இவனோவ் (1972-1991) ஆகியோர் ஆராய்ச்சியை மேற்கொண்டார். இன்னும் 30% பகுதியில் அகழ்வாராய்ச்சி முடிக்கப்படவில்லை.

வர்னா அகழ்வாராய்ச்சியில் 1972 தொடங்கி இதுவரை 294 கல்லறைகள் தோண்டப்பட்டுள்ளன.

இதில் பல பழங்கால உலோகவியல்
(தங்கம் மற்றும் செப்பு) பொருட்கள் மட்பாண்டங்கள் (சுமார் 600 துண்டுகள், தங்க வண்ணப்பூச்சுகள் பூசப்பட்டவை உட்பட), உயர்தரமான சிறு கத்திகள், சிறிய அணிகலன்கள் போன்றவை கண்டறியப்பட்டன.

2006 ஆம் ஆண்டு நடத்தப்பட்ட கதிரியக்கக் கரிமக் காலக்கணிப்பு மூலம் இந்தக் கல்லறைகள் கி.மு 4569-4340 காலத்தவை என கணிக்கப்பட்டன

மற்றும் இந்த வர்னா நாகரீகமானது செப்புக்காலத்தைச் சேர்ந்தது என அறியப்பட்டது

உலகின் பழமையான தங்க நகைகள் சிலவற்றுடன் கி.மு 4,600 - 4,200 காலகட்டத்தில் வர்னாவில் அடக்கம் செய்யப்பட்டுள்ள ஒரு ஆணின் கல்லறை.

இந்தக் கல்லறைகளைத் தோண்டியபோது, சில கலைப் பொருட்கள், பழைய மட்பாண்டங்கள், எலும்புக்கூடுகள், மண்டை ஓடுகள், களிமண் பொம்மைகள் போன்றவை கிடைத்தன.

அங்கே தோண்டப்பட்ட எல்லா கல்லறைகளிலும் எலும்புக்கூடுகள் இல்லை. சிலவற்றில் சுட்ட மண்ணால் ஆன பொம்மைகளும், சிலவற்றில் களிமண்ணால் ஆன, ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்ட பொம்மைகளும், சிலவற்றில் மனிதனின் முக உருவங்களும் காணப்பட்டன. இவ்வாறானவை சடங்குகளுக்காக அமைக்கப்பட்ட அடையாளக் கல்லறைகள் ஆகும்.

இவற்றில் சுமார் 3,000 தங்கத்தாலான பொருட்கள் (ஏறத்தாழ 6 கிலோ எடை) கண்டெடுக்கப்பட்டன. இவற்றில் குறிப்பாக 43வது கல்லறையில் கண்டெடுக்கப்பட்ட தங்கத்தின் அளவானது, அன்றைய காலகட்டத்தில் உலகத்தின் பிற பகுதிகளிலிருந்த தங்கத்தைக் காட்டிலும் அதிகமானது என்று கருதப்படுகிறது. மூன்று குறியீட்டு கல்லறைகளில் சுடப்படாத களிமண்ணின் முகமூடிகள் இருந்தன.

அந்த மனிதர்கள் வர்னா ஏரியைப் பயன்படுத்தி, கருங்கடல், மத்தியத்தரைக்கடல் வழியாகச் செழிப்பாகக் கடல் வணிகமும் செய்திருக்கிறார்கள் என்பதைக் காட்டியது. ஒருவேளை உலோக பொருட்கள் மற்றும் உப்புச் சுரங்கங்களில் இருந்து உப்பை ஏற்றுமதி செய்திருக்கலாம்.

கல்லறைகளில் காணப்பட்ட மத்தியதரைக்கடல் ஸ்பலண்டிலஸ் குண்டுகள் பழங்காலத்தில் நாணயமாக பயன்படுத்தப்பட்டிருக்கலாம்.

இதில் உள்ள 43வது கல்லறையில் அந்தப் பகுதியில் வாழ்ந்த அரசன் அல்லது தலைவனை மிகவும் மரியாதையுடன் புதைக்கப் பட்டிருக்கிறான் என்று சான்றுகள் தெரிவிக்கின்றன. இந்தக் கல்லறையில் உள்ள ஆண் எலும்புக்கூடைச் சுற்றி ஏகப்பட்ட தங்க ஆபரணங்கள், அந்த எலும்புக்கூட்டின் கையில் தங்கத்தாலான ஒரு செங்கோல், கோடாரி போன்ற ஓர் ஆயுதம் என்று அந்தக் கல்லறை தனியாக மிளிர்வதே அதற்கு சான்றாகும்.

ர.ரா

டெரகோட்டா வீரர்கள் !

விசித்திரமான வரலாறுகள் 14




அந்தக் காலத்தில் வாழ்ந்த சீன மன்னர்களும் அவரது குடும்பத்தினரும், இறப்புக்குப் பிறகான வாழ்க்கை குறித்து மிகவும் கவலைப்பட்டிருக்கிறார்கள். உயிரோடு இருக்கும்போது, வாழ்ந்த சுகபோக வாழ்க்கைக்கு, இறந்த பின்பு இம்மியளவும் பங்கம் வந்துவிடக் கூடாது என்று நினைத்திருக்கிறார்கள்.

எனவே சீன மன்னர்கள், மன்னர் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள், அமைச்சர்கள் எல்லாம் உயிருடன் இருக்கும்போதே, தங்கள் மேற்பார்வையிலேயே தக்க வசதிகளுடன் தங்களுக்கான கல்லறைகளைக் கட்டிக்கொண்டார்கள். அவற்றைக் ‘கல்லறை’ என்று சொல்லாமல் ‘இறப்புக்குப் பிறகு வாழும் அரண்மனை’ என்றுதான் சொல்ல வேண்டும். ஒவ்வொன்றுமே பிரம்மாண்டமானது.

உதாரணத்துக்கு, சீனாவின் சாங் பேரரசை ஆண்ட பல்வேறு மன்னர்களின் கல்லறைகளை எடுத்துக்கொள்வோம். ஒவ்வொரு கல்லறையும் சில ஏக்கர் பரப்பளவு கொண்டது. நிலத்துக்கு மேலாக ஓர் அரண்மனை, நிலத்துக்குள் ஒரு பாதாள அரண்மனை என்று உருவாக்கப்பட்டவை.

பூமிக்கு மேலும் கீழும் தலா பத்தடி உயரத்தில் எழுப்பப்பட்ட வலிமையான சுவர்கள். நான்கு பக்கங்களிலும் நான்கு 'தெய்விக' வாசல்கள். அவற்றைப் பாதுகாக்கும் கற்சிலை சிங்கங்கள். தீய சக்திகளைச் சிங்கங்கள் விரட்டியடிக்கின்றன என்பது சீனர்களது நம்பிக்கை. அந்தப் பகுதி எங்கும் பைன் மரங்கள். அந்த மரங்கள் ஆயுளை அதிகரிக்கும் சக்தியுடையவை என்று கருதப்பட்டது.

அந்தப் பாதாள உலகில் மன்னர் நகர்வலம், நடைப்பயிற்சி செல்வதற்கு எல்லாம் தனித்தனிப் பாதைகள் அமைக்கப்பட்டிருந்தன. நிலத்தினுள் சுமார் 30 மீட்டர் ஆழத்தில் நீல நிறச் செங்கற்களால் மன்னருக்கான கல்லறை கட்டப்பட்டிருந்தது. அருகிலேயே அரசிக்கான கல்லறை. மன்னர் குடும்பத்தினருக்குத் தனியே. மந்திரிகளுக்குத் தனியே. அழுகி மக்கிப் போகும் உடலோடு சேர்த்து ஏராளமான செல்வத்தைச் சேர்த்துதான் புதைத்தார்கள்.

விலைமதிப்பு மிக்க இந்தக் கல்லறைகளைக் கொள்ளையர்கள் நேசித்தார்கள். 'ஒரு கல்லறையை உருப்படியாகக் கொள்ளையடித்தால், வாழ்க்கை முழுவதும் உட்கார்ந்து சாப்பிடலாம். உல்லாசமாக வாழலாம்' என்று திட்டம் போட்டுக் கொள்ளையடித்தார்கள்.

அகழாய்வு செய்வது என்றால் நிறுத்தி நிதானமாகத் தோண்டலாம்; இவர்கள் கொள்ளையர்கள் அல்லவா, அத்தனை ஏக்கர் பரப்பளவில், மன்னருடைய உடல் எங்கே புதைக்கப்பட்டிருக்கும் என்று கணக்கிட்டு, நேரம் பார்த்து தோண்டி, இறங்கி, செல்வத்தைக் கொள்ளையடிப்பதற்குள்... அப்பப்பா!

மன்னர்களுக்கும் இந்தக் கொள்ளையர்கள்தாம் பெரிய சவாலாக இருந்தார்கள். பார்த்துப் பார்த்துச் செதுக்கும் கல்லறையை, யாரோ கொள்ளையர்கள் வந்து தோண்டி கொள்ளையடித்து விட்டுப் போனால், அது எவ்வளவு பெரிய அவமானம். மன்னரது ஒட்டுமொத்த புகழையே சிதைக்கும் விஷயமல்லவா.

தவிர, அவர்களது நம்பிக்கையின்படி, இறப்புக்குப் பிறகான வாழ்க்கையும் பாதிக்கப்படுமே. எனவேதான் சீன மன்னர்கள் தங்கள் கல்லறையை 'ஏகப்பட்ட ரகசியங்களுடன்' யாருமே எளிதில் அணுக முடியாதபடி அமைத்துக்கொண்டார்கள்.

1974. சீனாவின் சென்ஷி மாகாணத்தில் ஷியான் நகருக்கு 30 கி.மீ. வெளியே, யாங் ஷிஃபா என்பவரும் அவரது சகோதரர்களும் கிணறு வெட்ட நிலத்தைத் தோண்டினார்கள். அந்தப் பகுதிக்குச் சற்று தள்ளிதான் மன்னர் சின் ஸி ஹுவாங்கின் **(Qin shi huang)** கல்லறை அமைந்திருந்தது.

சின் ஸி ஹுவாங், கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் சீனாவின் சின் மாகாணத்தை ஆட்சி செய்தவர். சிதறிக் கிடந்த சீன மாகாணங்களை ஒரு குடையின்கீழ் கொண்டு வந்து பேரரசாக உருவாக்கியவரும் இவரே. சீனாவின் முதல் பேரரசராக கி.மு. 221-லிருந்து கி.மு. 210 வரை ஆட்சி செய்தார். சீனப் பெருஞ்சுவர் இவர் காலத்தில்தான் கட்ட ஆரம்பிக்கப்பட்டது.

அந்த விவசாயிகள், நிலத்தைத் தோண்டத் தோண்ட சில மீட்டர்கள் ஆழத்தில், சுட்ட செங்கற்கள் கிடைத்தன. சில பழைய அம்புகள் கிடைத்தன. சுட்ட செங்கற்களை ஊர் மக்கள் தலைக்கு வைத்துப் படுக்க எடுத்துச் சென்றார்கள். பழைய அம்புகளை அந்தச் சகோதரர்கள் ஓரிடத்தில் கொடுத்து, காசாக்கிக்கொண்டார்கள். விஷயம் அங்கும் இங்கும் பரவியது. தொல்பொருள் துறையினர் அந்த அம்புகளையும் சுட்ட செங்கற்களை யும் பார்த்துவிட்டு, தேடி வந்தார்கள்.

அந்த இடத்தைக் கவனமாகத் தோண்ட ஆரம்பித்தார்கள். சில அடிகள் ஆழத்தில் டெரகோட்டா (மண்ணால் செய்யப்பட்ட) மனித உருவம் ஒன்று கிடைத்தது. அருகிலேயே இன்னும் சில உருவங்கள் கிடைக்கத் தொடங்கின. தோண்டும் பணி தொடர்ந்தது. சுமார் 8,000 டெரகோட்டா மனிதர்களோடு, பல வரலாற்று உண்மைகளும் வெளிவந்தன.

மன்னர் சின் ஸி ஹுவாங்குக்குத் தன் கல்லறை குறித்த கனவுகள் சிறுவயதிலேயே ஆரம்பித்துவிட்டன. தனது பதிமூன்றாவது வயதில் சின் மாகாணத்தின் மன்னராகப் பொறுப்பேற்ற சின் ஸி ஹுவாங், அப்போது முதலே தனக்கான, பிரம் மாண்டமான கல்லறையைக் கட்டும் வேலையை ஆரம்பித்துவிட்டார்.

நிபுணர்கள் குழு மாய்ந்து மாய்ந்து திட்டம் போட்டது. நிலத்தின் மேல் மன்னர் எப்படிப்பட்ட வசதிகளை அனுபவிக்கிறாரோ அவை எல்லாம் நிலத்தின்கீழ் அமைக்கப்படும் அரண்மனையிலும் இருக்கும்படியாகக் கட்டமைத்தார்கள். மன்னர் யார் யாருடன் வாழ்கிறாரோ, யாரெல்லாம் மன்னரைச் சார்ந்து இருக்கிறார்களோ அவர்கள் எல்லாருமே நிலத்துக்கு அடியிலும் தம் சேவைகளைத் தொடரும்படியாக வசதி செய்தார்கள்.

அது எப்படி? மன்னரைச் சார்ந்தவர்கள், மந்திரிகள், படைவீரர்கள் எல்லோருமே அவர்களது உருவத்திலேயே டெரகோட்டா பொம்மைகளாக உருவாக்கப்பட்டனர். அவர்கள் என்ன உயரத்தில் இருக்கிறார்களோ, அதே உயரத்திலேயே அவர்களது பொம்மைகளும் உருவாக்கப்பட்டன. அதாவது மன்னர் இறந்த பிறகு, வேறு உலகத்துக்குச் சென்று அந்த ராஜ்யத்தை ஆள ஆரம்பித்த பின்னர், அந்த உருவங்கள் எல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக உயிர் பெற்றுவிடும் என்பது அவர்களது நம்பிக்கை.

தவிர, கல்லறையின் அமைவிடத்தைச் சுற்றிலும் ஆயுதம் ஏந்திய வீரர்களின், தளபதிகளின் பொம்மைகள் நிறுத்தி வைக்கப்பட்டன. அதாவது
கொள்ளையர்களோ, எதிரிகளோ மன்னரது கல்லறையைத் தாக்க வந்தால் அந்தக் களிமண் வீரர்கள் பாதுகாப்பார்கள் என்றும் நம்பினார்கள்.

இந்தக் கல்லறை கட்டுவதற்கான ஒட்டுமொத்தப் பணிகள் முடிய 36 வருடங்கள் பிடித்தன. கட்டுமானப் பணியில் மொத்தம் ஏழு லட்சம் கைதிகள், அடிமைகள் ஈடுபடுத்தப்பட்டார்கள். உலகின் மிகப் பெரிய கல்லறைகளில் இதுவும் ஒன்று. ஏனென்றால் அது வெறும் கல்லறை அல்ல.

சின் ஸி ஹுவாங் ஆண்ட தலைநகரமான ஸியான்யங்கின் மாதிரி நகரே மண்ணுக்குள் புதைக்கப்பட்டிருக்கிறது என்பது அகழாய்வில் கண்டுபிடிக்கப்பட்டது. அதுவும் உள்நகரம் (சுமார் 2.5 கிமீ பரப்பளவு), வெளிநகரம் (சுமார் 6.3 கிமீ பரப்பளவு) என்று விரிந்து காணப்படுகிறது. உள்நகரத்தின் தென்மேற்கில் அரசரின் கல்லறை அமைக்கப்பட்டுள்ளது.

டெரகோட்டா மனிதர்கள் மட்டுமன்றி குதிரைகள், அவை பூட்டப்பட்ட ரதங்கள், ஆயுதங்கள், கலைப்பொருட்கள் இப்படிப் பலவும் அகழாய்வில் கிடைத்திருக்கின்றன. இதுவரை சின் ஸி ஹுவாங்கின் கல்லறை நகரம் முழுமையாகத் தோண்டி எடுக்கப்படவில்லை. இன்னமும் பூமிக்குள் அதிசயங்களும் மர்மங்களும் நிறைந்திருக்க நிறைய வாய்ப்பு உண்டு.

இதுவரை உலகில் மேற்கொள்ளப் பட்ட அகழாய்வுகளில் சின் ஸி ஹுவாங் கல்லறை நகரக் கண்டுபிடிப்பு மிகப் பெரியது.

(பொக்கிஷங்களைத் தேடுவோம்!)கட்டுரையாளர், எழுத்தாளர்தொடர்புக்கு: mugil.siva@gmail.com

மாயன் நாகரிகம்

விசித்திரமான வரலாறுகள் 15






FIG. 14—The month symbols.



உலகில் பல நாகரீகங்கள் தோன்றி மறைந்துவிட்ட காலத்தில் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றி இன்றளவும் தனக்கென தனி சட்ட திட்டங்களோடும் சில அதிசயங்களையும் பல அமானுஷ்யங்களையும் தன்னகத்தே கொண்டு உலகின் பல நாகரீகங்களுக்கு முன்னோடியாய் திகழும் ஒரு நாகரீகமே மாயன் எனப்படும் மர்ம நாகரீகம்.

மாயா நாகரிகம் என்பது பண்டைக்கால மத்திய அமெரிக்க நாகரிகம் ஆகும். இப்பகுதி, தற்காலத்தில் இருக்கும் மெக்சிகோ, குவாத்தமாலா,
ஹொண்டுராஸ் போன்ற நாடுகள் விரவியிருக்கும் மத்திய அமெரிக்கப் பகுதிகளை உள்ளடக்கியது.

கொலம்பசுக்கு முந்தியகால அமெரிக்காவின் முழு வளர்ச்சிபெற்ற ஒரே எழுத்து மொழியைக் கொண்டிருந்தது . இந்த நாகரிகத்தைச் சேர்ந்த மக்களே. கி.மு. 2600 வாக்கில் மாயன் நாகரிகம் தோன்றியது.

மாயன் இனத்தவர் கணிதம்,
எழுத்துமுறை, வானியல் போன்ற துறைகளிலெல்லாம் மேம்பட்டிருந்தனர். மிக விசாலமான, நுணுக்கமான கட்டிடக்கலை மாயன் இனத்தவரின் சிறப்பாகும்.

மாயன் வானியல்

சூரியன், சந்திரன், வெள்ளி
போன்றவற்றின் நகர்வுகளைப் பற்றி நாம் அறிந்திருப்பது குறைவு .ஆனால் 10,000 ஆண்டுகள் முன்னரே அவற்றின் பாதையை அறிந்து வானவியலில் புது புரட்சியை உருவாக்கி ஒரு வருடத்திற்கு 365 நாட்கள் என்றும் 4 வருடங்களுக்கு ஒரு முறை நம் பூமியின் பாதை சிறிது மாற்றம் பெற்று 365.24 நாட்களாக நீள்வதையும் துல்லியமாய் கண்டு கூறினார்.

2012ம் ஆண்டு மாயன்கள் உருவாக்கிய நாள்காட்டி முடிவுறுவதாகவும் ஆதலால் உலகம் அழிய போகிறது என்றும் பரவிய வதந்தி நாம் அறிந்ததே. ஆனால் அதன் பின் மாயன் நாள்காட்டியின் ஒரு பாகம் மட்டுமே முடிவுற்று இருப்பதாகவும். இன்னும் பல லட்ச ஆண்டுகளுக்கான நாள்கட்டி உள்ளதாகவும் அறிவியலாளர்கள் கூறினார்.

**Hieroglyphic System** என்று கூறப்படும் உருவரை எழுத்துமுறை இந்த மாயன்கள் தந்ததே. முந்தய காலகட்டத்தில் இந்த முறை எழுத்துக்களே பழக்கத்தில் இருந்தது. இன்று மத்திய அமெரிக்காவில் வாழும் மாயன் இனத்தின் சந்ததியினர் இன்றளவும் இவ்வகை எழுத்துக்களை மறவாமல், அழியாமல் பாதுகாத்து வருகின்றனர்.

மாயா நாகரிகமானது மெக்சிகன் மாநிலங்களான சியாபஸ்,டபாஸ்கொ மற்றும் குய்ன்டானா ரோ, காம்பெசி மாநிலங்களிலும் இன்றைய குவாதமாலா, பெலிஸ், மேற்கு ஹோண்டுராஸ் மற்றும் வடக்கு எல் சால்வடோர் நாடுகளிலும் நீட்டிக்கப்பட்டுள்ளது.

மாயன் எண் முறைமை

20 அடிமான (base-20) எண் முறையை மாயன்கள் பயன்படுத்தினர் மாயன்களின் கணிதத் திறமைக்கு சான்று அவர்களின் பூஜ்ஜியம் பயன்பாட்டு முறையாகும் . மிக வளர்ச்சியடைந்ததாகக் கருதப்படும் கிரேக்க நாகரிகங்கள் கூட பூஜ்ஜியம் பயன்பாட்டுமுறையை அராபியர்களிடம் இருந்தே அறிந்து கொண்டார்கள். மாயன்கள் எண்களை குறிப்பிட மிக எளிமையான அதே சமயத்தில் மிகப் பெரிய எண்களைக் கூட எழுதவல்ல ஒரு குறியீட்டு முறையைக் கையாண்டார்கள். இக்குறியீட்டு முறை ஒரு "_" மாதிரியான கோடு ஒரு புள்ளி ஒரு நீள்வட்டக் குறி ஆகியவற்றை மட்டுமே உள்ளடக்கியது.

மாயன் கட்டிடங்கள்

மனிதனின் வளர்ச்சி ஒரு ஒரு காலகட்டத்திற்கு எவ்வாறு மாறுபடும் என்றும் அதை மனிதன் எவ்வாறு எதிர்கொள்வான் என்ற கூற்றையும் அவர்கள் அளித்துள்ளனர். விவசாயம், மனித வாழ்வில் விலங்குகளின் பங்கீடு, இயந்திரங்களின் பங்கீடு என்று இன்றளவு நடக்கும் மாற்றங்களையும் அன்றே கணித்தனர் மாயன்கள்.
கட்டிடக்கலை வல்லுனர்களாக திகழ்ந்த மாயன் இனத்தவர்கள் கட்டிய கட்டிடங்கள் இன்றளவும் மத்திய அமெரிக்காவில் தலைநிமிர்ந்து நிற்கிறது.

மற்ற தொல் நாகரிகங்களைப் போல் அல்லாமல், மாயன்கள் இரும்பு போன்ற உலோகங்கள் மற்றும் சக்கரங்களைப் பயன்படுத்தாமலேயே மிகப் பெரிய மத சடங்குகளுக்கான இடங்களையும், பிரமிடுகளையும் இருப்பிடங்களையும் கட்டியுள்ளனர். மிக நுணுக்கமான வேலைப்பாடுகள் நிறைந்த சிற்பங்களையும் அவர்களின் கலாசார சின்னங்களாகக் காணலாம்.

மாயன் நம்பிக்கைகள்

ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய நாகரிகம் என்பதற்கேற்ப மாயன்கள் பல்வேறு மத சடங்குகளையும் நம்பிக்கைகளையும் கொண்டிருந்தனர். ஒவ்வொரு ஆண்டும் ஒரு முறை சிற்றரசர்கள் அவர்களுடைய கடவுளிடம் பேசி ஆலோசனை பெறும் ஒரு சடங்கை நடத்துவர்.

இலக்கியம்/நூல்கள்

ஹைரோகிளிப்ஸ் என ஆங்கிலத்தில்
அழைக்கப்படும் பட எழுத்து முறையை மாயன்கள் பயன்படுத்தினர். கல்வெட்டுக்கள்
சிற்பங்கள் போன்றவற்றில் எழுதியது மட்டுமில்லாமல், ஒரு வகையான புத்தகம் தயாரிக்கும் முறையையும் அவர்கள் பயன்படுத்தி வந்தனர். இவ்வாறு பல புத்தகங்களை அவர்கள் எழுதியிருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

ஸ்பானிய ஏகாதிபத்தியத்துடன் வந்த அடிப்படைவாத கிருத்துவர்கள் பல மாயன் நூல்களை அழித்துவிட்டார்கள். இதில் தப்பியவை நான்கே நான்கு நூல்கள்தாம்.

கணிதம், வானவியல், வாழ்வின் நெறி, விளையாட்டு என்று அவர்கள் இவர்கள் கால்பதியா துறை இல்லை என்றே கூறலாம். ஆனால் ஒரு ஆதிகால மனிதனுக்கு 10000 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த மனிதனுக்கு எப்படி இவ்வாறான சிந்தனைகள் உதித்தது?. அம்மக்களின் IQ எனப்படும் நுண்ணறிவு திறனின் அளவு கண்டறிய முடியவில்லை.

ஆனால் இவ்வளவு மதிப்பும் தொன்மையும் கொண்ட இந்த நாகரிகம் தானாக எதையும் கற்கவில்லை,

என்ன? தானாக எதையும் கற்கவில்லையா ? ஆம் . இந்த மாயன் நாகரீகத்திற்கும் முன் தோன்றிய ஒரு நாகரீகம் அதே மத்திய அமெரிக்காவில் புதையுண்டு கிடக்கிறது. அதுவே OLMEC எனப்படும் மாயன் மக்களை விட பழமையான மக்கள் கூட்டம். இவர்களிடம் இருந்தே மாயன்கள் அனைத்தையும் கற்றுக்கொண்டனர்.

அறிவியலாளர்கள் இன்றும் OLMEC இனத்தவர்களின் அழிவுக்கான காரணத்தை கண்டறிய முடியவில்லை. மேலும் இம்மக்கள் மத்திய அமெரிக்காவில் 19ம் நூற்றாண்டு வரை வாழ்ந்து வந்ததாக தொல்பொருள் ஆராச்சியாளர்கள் ஒரு ஆய்வை கூறினாலும், அகழ்வாயப்பட்டது OLMEC மக்கள் தானா என்ற சந்தேகம் இன்றும் உள்ளது. வேளாண்மை, வேட்டையாடுதல், சேகரிப்பது, போக்குவரத்து போன்றவை OLMEC மக்கள் வழக்கமாக இருந்தது. ஆனால் நதி ஓட்டங்களின் மாற்றம் விவசாயத்திற்கு பொருந்தாத சுற்றுசூழல் மாற்றம் இவையே இவர்கள் மறைவுக்கு காரணமாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது.

1997ம் ஆண்டு Santley என்பவர் அளித்த ஆய்வில், Olmec மக்கள் வாழ்ந்த நிலம் சுற்றிலும் எரிமலைகள் நிறைந்த பகுதியாக இருந்ததாகவும் அதை உணர்த்த மக்கள் அடிக்கடி தங்கள் இடங்களை மாற்றி வந்ததையும் தெரிவித்துள்ளார். இவ்வாறு குறுகிய காலகட்டத்தில் அதிக அளவிலான இடமாற்றமே இம்மக்கள் முழுமையாய் மறைந்ததின் காரணமாக அவர் கூறுகிறார்.

அம்மக்கள் முழுமையாய் அழிந்துவிட்டதாக அறிஞர்கள் நினைத்தாலும் அவர்கள் வாழ்ந்த மத்திய அமெரிக்கா பகுதியில் இருந்து 330 மைல் தொலைவில் Olmec இனத்தில் மூதாதையரான Epi-Olmec இனத்தவர்கள் இடம்பெயர்ந்த காட்சிகளை சிலர் கண்டுள்ளனர். ஆனால் அவர்கள் எங்கு சென்றனர் என்னவாயினர் என்பது எல்லாம் மர்மமே.

இதை போன்ற மர்மங்கள் ஆச்சர்யங்கள் நிறைந்த பல இனமக்கள் இன்னும் நம் கண்ணில் படாமல் வாழ்ந்துகொண்டு தான் உள்ளனர்.

ஏன் இந்த Epi-Olmec இனத்தவரே தெற்கிலிருந்து வந்த ஒரு நதிக்கரை நாகரீகம் அறிந்த மக்கள் கூட்டத்திடம் இருந்தே பல விஷயங்களை கற்றுள்ளனர். அந்த நதிக்கரை நாகரீக மக்கள் யாரென்றே ஆய்வு இன்றும் ஆய்வுக்கு உட்பட்டே உள்ளது.

ர.ரா

மூன்று கப்பல்கள் மூழ்கியும் மூழ்காத பெண் (Unsinkable Women )

விசித்திரமான வரலாறுகள் 16



ஒரு பெண் மூன்று கப்பல் விபத்துக்களில் சிக்கி மூன்றிலிருந்தும் உயிர் தப்பியுள்ளார் அவரை பற்றி தான் இந்த பதிவில் பார்க்கப்போகிறோம்.

டைட்டானிக் கப்பல் கடலில் முழ்கியது பற்றி நாம் அனைவருக்கும் தெரியும் அதே போல பல கப்பலகள் நீரில் முழ்கியுள்ளன. கடல் குறித்து பெரியதாக அறிவியல் கண்டுபிடிப்புகள் இல்லாத காலம் என்பதால் அன்று இது மிக அதிகமாக நடந்தது. ஒரு நபர் ஒரு கப்பல் விபத்திலிருந்து தப்பினாலே பெரிய அதிர்ஷ்டசாலி தான். ஆனால் ஒரு பெண் ஒன்றல்ல இரண்டல்ல மூன்று கப்பல் விபத்துக்களில் சிக்கியுள்ளார். அத்தனையிலிருந்து அவர் உயிர் தப்பியுள்ளார். அந்த பெண் பற்றி தான் இந்த பதிவில் முழுமையாக பார்க்கப்போகிறோம்.

வயலெட் ஜெசப்

1887ம் ஆண்டு அர்ஜெண்டினாவின் பெஹா பிளாங்கா என்ற பகுதியில் வாழ்ந்த கேத்ரின் ஜெசப் ஆகிய தம்பதிக்குச் சரியாக அக்டோபர் 2ம் தேதி ஒரு பெண் குழந்தை பிறந்தது. இந்த குழந்தைக்கு அவர்கள் வயலெட் கான்ஸ்டென்ஸ் ஜெசப் எனப் பெயர் வைத்தனர். அதன் பின் இந்த தம்பதி 9 குழந்தைகளைப் பெற்றெடுத்தனர் அதில் 6 பேர் மட்டுமே உயிர் பிழைத்து வளர்ந்தனர். ஜெசப் தனது இளமைக் காலத்தில் தனது சகோதர சகோதரிகளைக் கவனிப்பதிலேயே அதிக கவனம் செலுத்தினார். இந்நிலையில் ஒரு கட்டத்தில் அவருக்குச் சிறு வயதில் டிபி நோய் வந்தது. அப்பொழுது டாக்டர்கள் தீவிர முயற்சியால் வயலெட் டிபி நோயிலிருந்து தப்பினார். இந்நிலையில் ஜெசப் 16 வயதாக இருக்கும் போது அவரது தந்தை ஒரு அறுவை சிகிச்சையின் போது உயிரிழந்துவிட்டார். பின்னர் அவரது குடும்பம் பிழைப்பு தேடி இங்கிலாந்திற்குக் குடி பெயர்ந்தது.

இங்கிலாந்திற்கு தன் குழந்தைகளுடன் வந்த கேத்ரின் அவர்களைப் பள்ளியில் சேர்த்துப் படிக்க வைத்தார். பின்பு தன் குடும்ப வருமானத்திற்காக கேத்ரின் ஒரு வேலையைத் தேட துவங்கினார். அவருக்கு ஸ்டுவடிரஸ் பணி கிடைத்தது.

ஸ்டுவாடிரஸ் என்றால் கப்பலில் செல்லும் பயணிகளுக்கு பணிவிடை செய்யும் பெண்கள் என அர்த்தம். விமானத்தில் ஏர் ஹோஸ்டிரஸ் இருக்கிறார்களே இது போலக் கப்பலில் பணியாற்றுபவர்களுக்குப் பெயர் தான் ஸ்டுவடிரஸ்.

இந்நிலையில் ஒரு கட்டத்தில் கேத்ரினிற்கு உடல் நிலை சரியில்லாமல் போனது. அதனால் அவர் பணியைத் தொடர முடியவில்லை. ஆனால் வீட்டிற்கு வருமானம் தேவைப்பட்டதால் வயலெட் தன் படிப்பை விட்டு விட்டு வேலைக்குச் செல்லும் சூழ்நிலைக்குத் தள்ளப்பட்டார். படித்துக்கூட முடிக்காத வயலெட்டிற்கு என்ன வேலை செய்வது என்று தெரியவில்லை. பின்னர் தான் தாயின் வழியையே தேர்வு செய்ய முடிவு செய்தார்.

தன் தாயைப் போலக் கப்பலில் ஸ்டுவடிரஸ் பணியைச் செய்ய எண்ணிப் பல கப்பல் நிறுவனங்களில் வேலைக்கு விண்ணப்பித்தார். கப்பலில் நிறுவனங்கள் இவரை நேர்முக தேர்வு செய்த போது இவர் பார்க்க அழகாக இல்லை. அழகாக இருக்கும் பெண்கள்தான் இந்த பணிக்குச் சரிப்பட்டுவருவார்கள் எனக் கூறி பலர் நிராகரித்தனர்.

ஆனால் இவரை நேர்முகத் தேர்வு செய்யும் போது ஆர்எம்ஸ் என்ற கப்பல் கட்டும் நிறுவனம் இவரது தாய் கப்பலில் பணியாற்றியதை ஒரு ப்ளஸ் பாயிண்டாக எடுத்துக்கொண்டது.

இந்த நிறுவனமும் இவரது அழகை யோசித்தாலும் இவரை நேரடியாகப் பயணிகள் பணிவிடை பணியில் ஈடுபடுத்தாமல் அவர்களுக்கு மருத்துவ உதவி செய்யும் செவிலியராக இவரை நியமிக்க முடிவு செய்து வேலைக்கு எடுத்தது.

அதன்படி இவருக்கு நர்ஸிங் பயிற்சி கொடுக்கப்பட்டது. நடுக்கடலில் கப்பல் செல்லும் போது ஒருவருக்கு ஆபத்து ஏற்பட்டால் அவரை எப்படிக் காப்பாற்ற வேண்டும் என் பயிற்சியையும் கப்பல் பயணம் குறித்த பயிற்சியையும் கொடுத்தது.

அதன் பின் இவர் தனது 21வது வயதில் தனது ஸ்டுவடிரஸ் பணியை ராயல் மெயில் லைன் என்ற கப்பலில் 1908ம் ஆண்டு துவங்கினார். இந்த கப்பல் மட்டும் ஏற்றிச் செல்லும் கப்பலாக இருந்தாலும் அதில் உள்ள ஊழியர்களுக்கு மருத்துவ உதவி செய்வதற்காக வயலெட் முதல் முதலில் நியமிக்கப்பட்டு தனது பணியைத் தொடர்ந்தார்.

இந்நிலையில் வயலெட் சிறப்பாக பணியாற்றியதால் அவரை பயணிகள் கப்பலில் பணியாற்ற வாய்ப்பு வழங்க அந்நிறுவனம் முயற்சி செய்தது. இந்நிலையில் 1911ம் ஆண்டு ஒயிட் ஸ்டார் வெஷல் என அழைக்கப்படும் ஆர்எம்எஸ் ஒலிம்பிக் எனப்படும் கப்பலில் இவருக்குப் பணி வழங்கப்பட்டது. இது அந்த காலத்தில் மிக அதிகமான பயணிகள் பயணிக்கும் வசதியுள்ள மிகப்பெரிய சொகுசு கப்பலாக இருந்தது.

இந்த கப்பல் தனது பயணத்தை 1911ம் ஆண்டு செப 20ம் தேதி சவுதாம்டன் துறைமுகத்திலிருந்து கிளப்பியது. இந்த கப்பல் கிளம்பி சிறிது தூரப் பயணத்திலேயே இந்த கப்பல் பிரிட்டிஷ் போர்க் கப்பலான எச்எம்எஸ் கவிக்கே என்ற கப்பலுடன் விபத்தில் சிக்கியது.

.

இதில் கப்பலுக்குச் சேதம் ஏற்பட்டது. ஆனால் யாருக்கும் உயிரிழப்பு ஏற்படவில்லை. கப்பல் மூழ்கவில்லை. மீண்டும் துறைமுகத்திற்குத் திரும்பும் நிலையிலிருந்ததால் கப்பல் பத்திரமாகத் துறைமுகத்திற்குத் திருப்பி அனுப்பப்பட்டது. அதிர்ஷ்டவசமாகக் கப்பலில் பயணித்த அனைவரும் உயிர் தப்பிவிட்டனர்.

இந்நிலையில் அந்த கப்பல் கட்டுமான நிறுவனம் இந்த உலகிலேயே யாராலும் உடைக்க முடியாத அதே நேரத்தில் அதிக மக்கள் பயணிக்கக்கூடிய மிகப்பெரிய கொகுசு கப்பலைக் கட்ட தீர்மானித்தது. அந்த கப்பல் தான் உலகம் முழுவதும் பிரபலமான டைட்டானிக் கப்பல். அந்த கப்பலிலும் வயலெட்டிற்கு நர்ஸ் பணியை வழங்கியது அந்நிறுவனம் இந்நிலையில் தனது 24 வயதில் டைட்டானிக் கப்பலில் புறப்படத் தயாரானார்

1912ம் ஆண்டு ஏப் 10ம் தேதி டைட்டானிக் கப்பல் தனது பயணத்தைத் துவங்கியது. பயணம் துவங்கி 4வது நாள் அதாவது ஏப் 14ம் தேதி டைட்டானிக் அட்லாண்டிக் பெருங்கடலில் நடுக்கடலில் திடீரென ஏற்பட்ட பனிப்பாறையில் மோதியதில் நீரில் மூழ்கத் துவங்கியது.

நிலைமையை உணர்ந்து கொண்ட வயலெட் அவருக்கு அளித்த பயிற்சியின் படி ஆங்கிலம் பேசத் தெரியாத மக்களிடம் அவசரக் காலத்தில் எப்படி அவர்களை வழி நடத்த வேண்டும் என்ற ரீதியில் வழி நடத்தி கப்பலில் உள்ள உயிர்காக்கும் படகில் மக்களை ஏற்றினார்.

படகு எண் 16 வது படகில் இவரையும் ஏற கப்பல் நிர்வாகம் அனுமதித்தது. மேலும் இவரிடம் ஒரு குழந்தையைக் கொடுத்து அந்த குழந்தையைப் பத்திரமாகக் கரைக்குக் கொண்டு சேர்க்கும்படி உத்தரவிடப்பட்டது. அதன்படி வயலெட்டும் மற்ற சில பயணிகளும் உயிர்காக்கும் படகில் ஏறி அமர்ந்தனர். படகு தரையில் கடலில் இறக்கப்பட்டது.

இந்நிலையில் டைட்டானிக் கப்பல் முழுமையாக நீரில் மூழ்கியது. இவர்கள் உயிர்காக்கும் படகில் உதவிக்காகக் காத்திருந்தனர். கப்பல் மூழ்கிய செய்தியை அறிந்து ஆர்எம்எஸ் கார்ப்பாத்தியா என்ற கப்பல் உதவிக்கு வந்தது. அந்த கப்பலில் வந்தவர்கள் வயலெட் இருந்த உயிர்காக்கும் படகு எண் 16 இருந்தவர்களைப் பத்திரமாக மீட்டனர். அவர்கள் வயலெட்டை அந்த குழந்தையின் தாயாக இருக்கும் எனக் கருதினர். பின்னர் இவர்கள் பத்திரமாகக் கரைக்குக் கொண்டு சேர்க்கப்பட்டனர்.

இந்நிலையில் முதல் உலகப்போர் வந்தது. இந்த காலகட்டத்தில் வயலெட் பிரிட்டிஷ் செஞ்சிலுவைச் சங்கத்தில் பணியாற்றினார். அப்பொழுது எச்எம்எச்எஸ் பிரிட்டானிக் என்ற கப்பல் மருத்துவ வசதிகள் பொருந்திய கப்பலாகப் போருக்காகத் தயார் செய்யப்பட்டது.

இந்த கப்பல் தனது பயணத்தை 1916ம் ஆண்டு நவம்பர் 21ம் தேதி துவங்கியது. இந்த கப்பலில் செவிலியராக வயலெட் தனது அடுத்த கடல் பயணத்தைத் துவங்கினார்.

இந்த கப்பல் புறப்பட்டு ஏகியன் கடற்பகுதியில் பயணிக்கும் போது ஏற்பட்ட ஒரு வெடிவிபத்தில் சிக்கியது. இந்த விபத்தால் கப்பல் நீரில் மூழ்கத் துவங்கியது கப்பலிலிருந்தவர்கள் உயிர் காக்கும் படகு மூலம் தப்பிக்கத் துவங்கினர்.

இந்த விபத்திலும் சிக்கிய வயலெட்டும் உயிர் காக்கும் படகில் தப்பித்தார். இந்த வெடிவிபத்து நடந்து 55 நிமிடங்களில் கப்பல் முழுமையாக நீரில் மூழ்கியது. இந்த கப்பலில் பயணித்த 1066 பயணிகளில் 30 பேர் பலியாகிவிட்டனர். மற்றவர்களை உயிர்காக்கும் படகிலிருந்து பிரிட்டிஷ் அரசாங்கம் மீட்டது.

இந்த கப்பல் எந்த விபத்தில் சிக்கியது எப்படி மூழ்கியது என்பது பெரும் புதிராகவே இருந்தது. இந்த கப்பல் மூழ்கியது குறித்துப் பல முரண்பாடான தகவல்கள் வெளியாகத் துவங்கியது.

பெரும்பாலும் ஜெர்மானியர்கள் கடலில் வைத்த கன்னி வெடியில் இந்த கப்பல் சிக்கியிருக்கலாம் என்றே கருதப்பட்டது. எனினும் இதற்குப் பிரிட்டிஷ் அரசாங்கம் தான் பொறுப்பு எனக் கூறப்பட்டது.

எப்படியே வயலெட் இந்த விபத்திலிருந்தும் தப்பித்துவிட்டார். உலகில் ஏற்பட்ட மிகப்பெரிய கப்பல் விபத்துக்களின் இந்த விபத்துகள் மிக முக்கியமானவை.

இந்த 3 விபத்திலும் ஒரு பெண் சிக்கி அந்த பெண் 3 விபத்திலிருந்தும் தப்பித்தார். பின்னர் வயலெட் ரெட் ஸ்டார் லைன், ராயல் மெயில் லைன் உள்ளிட்ட பல கப்பல் நிறுவனங்களில் பணியாற்றி இரண்டு முறை உலகையே சுற்றிவந்துவிட்டார்.1950ம் ஆண்டு இவர் தன் பணியிலிருந்து ஓய்வு பெற்று விட்டார்.

அதன் பின் ஒரு சுவாரஸ்யமான சம்பவம் நடந்தது. அவர் ஓய்வு பெற்ற பின் ஒரு நாள் இரவு அவருக்கு ஒரு போன் கால் வந்தது. அதில் ஒரு பெண் பேசினார். அந்த பெண் வயலெட்டிடம் ,

"நீங்கள் டைட்டானிக் கப்பல் மூழ்கிய போது ஒரு குழந்தையைக் காப்பாற்றினீர்களா?" எனக் கேட்டுள்ளார்.

அதைக் கேட்டதும் அதிர்ச்சியடைந்த வயலெட் "ஆம் " எனக் கூறியுள்ளார்.

அதற்கு மறுமுனையில் பேசிய அந்த பெண் "அந்த குழந்தையே நான் தான்" எனப் பேசிவிட்டுச் சிரித்துக்கொண்டே போனை வைத்துவிட்டார்.

இந்த தகவல்கள் எல்லாம் வயலெட்டின் நண்பரும் ஜான் மேக்ஸடோன் கிரகம் என்பவர் எழுதிய புத்தகத்தின் மூலம் தான் வெளி உலகிற்குத் தெரியவந்தது.

இப்படி ஒரு பெண் இருக்கிறார். அவர் 3 முறை கப்பல் விபத்துக்களில் சிக்கித் தப்பித்தவர் என்பது தெரிய வந்தது. அதற்கு முன்னர் வரை வயலெட் யாரிடமும் தன் முழு வாழ்க்கை கதையைப் பகிர்ந்தது இல்லை.

ஜான் கடல் குறித்து அதிகம் எழுதுபவர் அவர் புத்தகங்களுக்காகக் கடலில் நடந்த விபத்துக்கள் குறித்து ஆய்வு செய்த போது கப்பலிலிருந்து உயிர் பிழைத்தவர்கள் பட்டியலில் ஒரே பெயர் மூன்று கப்பலிருந்து உயிர் பிழைத்தவர்கள் பட்டியலிலும் இருந்தது.

இது எப்படியோ ஜானின் கண்ணில் சிக்க அவர் அந்த வயலெட்டை தேடி அவரிடம் பேசிய போது தான் அத்தனை விஷயங்களும் வெளியே வந்துள்ளது.

டைட்டானிக்கிலிருந்து வயலெட் ஒரு குழந்தையுடன் வந்த நிலையில் அந்த குழந்தையின் தாயும் டைட்டானிக்கிலிருந்து காப்பாற்றப்பட்டார். கரைக்கு வந்த பின் அந்த குழந்தை உரியத் தாயிடம் ஒப்படைக்கப்பட்டுவிட்டது. அதன் பின் வயலெட்டிற்கும் அந்த குழந்தைக்கும் சம்மந்தம் இல்லாமல் இருந்தது.

இந்த சம்பவம் குறித்து யான் புத்தகம் எழுதியதும். பலருக்கு இதுபெரும் ஆச்சரியத்தை ஏற்படுத்தியது. பல ஊடகங்கள் வயலெட்டை பேட்டி எடுத்தனர். வயலெட் பற்றிய ஆச்சரியம் பெரிய அளவில் பேசப்பட்டது. இந்நிலையில் 1971ம் ஆண்டு தனது 83வது வயதில் வயலெட் உயிரிழந்துவிட்டார்.

இந்த விஷயத்தில் தீராத மர்மம் என்னவென்றால் வயதுட் தான் அந்த குழந்தையைக் காப்பாற்றினார் என்பது யான் எழுதிய புத்தகத்திலிருந்துதான் வெளி உலகிற்குத் தெரியவந்தது.

அதற்கு முன்பு யாருக்கும் இது குறித்துத் தெரியாது அப்படி என்றால் வயலெட்டிற்கு போன் செய்து அந்த குழந்தை குறித்துப் பேசியது யார்?

அப்படிப் பேசியது உண்மையாகவே அந்த குழந்தையாக இருந்தாலும் அவருக்கு எப்படி வயலெட்டின் போன் நம்பர் கிடைத்தது? இவை எல்லாமே தீராத மர்மம்தான்.

ர.ரா

## கொலம்பஸை மிஞ்சிய ஐந்து தமிழர்களின் கடற்பயணம்!

## விசித்திரமான வரலாறுகள் 16

ஈழத்தமிழர்கள் அமெரிக்காவுக்கே கப்பல் விட்டிருக்கிறார்கள் என்றால் ஆச்சரியமாகத்தான் இருக்கும். ஆனால் உண்மை. அதுவும் 1930களிலேயே!

அந்த காலகட்டத்தில், வல்வெட்டித்துறையில் செட்டியார்கள் பெரும் அளவில் பாய்மரக்கப்பல் வணிகம் செய்து வந்தனர். கொச்சின், ரங்கூன் முதல் அரபு நாடுகள் வரை அவர்களின் பாய்மரக்கப்பல்கள் சென்று வந்தன

அப்போது, வல்வெட்டி துறையை சேர்ந்த சுந்தர மேஸ்திரியார் என்வர் கப்பல் கட்டுவதில் தேர்ந்தவராக இருந்திருக்கிறார். இவரால் 1930ம் ஆண்டு கட்டப்பட்டது தான் இந்த அன்னபூரணி அம்பாள் கப்பல்.

இக்கப்பல் இந்தியாவின் கரையொர நகரங்களுக்கும் பர்மா, பாகிஸ்தான், இந்தோனேசியா போன்ற நாடுகளுடன் வர்த்தகத்தில் ஈடுபட்டு வந்தது.

அந்த சமயத்தில் ஈழத்து பகுதிக்கு வந்தார் ரோபின்சன் என்ற அமெரிக்கர். பெரும் செல்வந்தரான இவர், தனது சிறு கப்பலில் உலகை வலம் வந்தார். பிரபல நாவலாசிரியரும், ஆராச்சியாளரும், கடலோடியுமாவார்.

அவர் அன்னபூரணியை கப்பலை பார்க்க நேர்ந்தது. அக்கப்பலின் பாய்மரக்கப்பலின் அழகிய அமைப்பையும் அதன் உறுதியையும் எந்த நீரோட்டத்திலும் இலகுவாகப் பயணம் செய்யும் தன்மையையும் கண்ட ரோபின்சன் இதை அமெரிக்காவுக்கு கொண்டு சென்றால் அது காட்சிப் பொருளாக வைக்கலாம், பலரும் கண்டுகளிப்பார்கள் என்று நினைத்தார்.

இதையடுத்து 1936ம் ஆண்டு அன்னபூரணியை விலை கொடுத்து வாங்கினார்.

அதை அமெரிக்காவின் பாஸ்டன் துறைமுகத்துக்கு கொண்டு சேர்க்கும் பொறுப்பு ஐந்து தமிழ் மாலுமிகளுக்கு வழங்கபட்டது.

கனகரத்தினம் தம்பிப்பிள்ளை தலைமையில் கிளம்பிய அக்கப்பல் மாலுமிகள் யாருமே அதற்கு முன் அமெரிக்காவை கண்டதில்லை. சூயஸ் கால்வாய் வழியாக சென்று ஐரோப்பா வழியே அமெரிக்கா செல்லவேண்டிய நெடும் பயணம்.

கொலம்பஸின் கடல்பயணத்தை மிஞ்சிய தூரம்.

கொலம்பஸிடம் மூன்று கப்பல்களும் நூற்றுக்கணக்கான மாலுமிகள் இருந்தனர்.

இவர்களோ வெறும் ஐந்தே பேர்.

பெரும் கடற்சீற்றங்களையும் இதர தடைகளையும் தாண்டி பாஸ்டன் துறைமுகத்துக்கு மூன்று மாதத்தில் கப்பலை கொண்டு சென்றுவிட்டனர் இவர்கள்.

சட்டை அணியாமல் திருநீறு, குடுமியுடன் கூடிய ஐந்து பேர் பாஸ்டன் துறைமுகத்தில்பாய்மரக் கப்பலில் இறங்கிய காட்சியை காண பாஸ்டன் நகரமே கூடியது.

அதன்பின் அந்த ஐந்து மாலுமிகளும் ஈழம் திரும்பாமல் பாஸ்டனில் தங்கிவிட்டதாக தெரிகிறது !

இந்த கப்பல் குறித்து, 1938 ஆகஸ்ட் 2ம் தேதி வெளியாகிய அமெரிக்க தினசரியான போஸ்ரன் குளோப் பத்திரிகையில் முதல் பக்கத்தில் பரபரப்பாக செய்தி வெளியானது.

அந்த அளவுக்க கப்பல் கட்டும் தொழில் நுட்பத்தில் சிறந்து விளங்கியிருக்கிறார்கள்
ஈழத்து மக்கள்.

ர.ரா


"Annapoorani in the Suez-Canal



காணாமல் போன முகம்

விசித்திரமான வரலாறுகள் 17



இத்தாலியின் ஃப்ளோரன்ஸ் நகரம். கி.பி. 1489. சிறுவன் ஒருவன் சிறிதும் கவனம் பிசகாமல் ஒரு சிலையைச் செதுக்கிக்கொண்டிருந்தான். மார்பிள் கல்லில், அவன் கையிலிருக்கும் உளி லாகவமாக விளையாட, முகம் ஒன்று உயிர் பெற்றுக்கொண்டிருந்தது. சிலர் அங்கே நின்று அவன் செதுக்குவதை ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

'இவனுக்குப் பதினைந்து அல்லது பதினாறு வயது இருக்குமா? இப்போதே இவன் இவ்வளவு அருமையாகச் செதுக்குகிறானே!' – அங்கே நின்றுகொண்டிருந்த பெரியவர் ஒருவர் ஆச்சரியத்தில் வாய்பிளந்தார். அவன் செதுக்கிக்கொண்டிருந்த முகத்தின் வாயும் புன்னகையுடன் பிளந்தபடிதான் இருந்தது.

அது ரோமானியப் புராணக்கதைகளில் வரும் ஒரு கடவுளின் முகம். மரங்களையும் கிராமங்களையும் காக்கும் அந்தக் கடவுளின் பெயர் ஃபான் (Faun). ஆட்டின் கண்கள், மான்களுக்கு இருப்பது போன்ற கொம்புகள், நீண்ட மனிதக் காதுகள், அகலமான மூக்கு, மூடியிருக்கும் வாய், அடர்த்தியான புருவம், தொங்கும் மீசை - தாடி, கழுத்திலிருந்து இடுப்புவரை மனித உடல், அதற்குக் கீழ் புசுபுசுவென ரோமம் கொண்ட ஆட்டின் உடல். இதுதான் ஃபானின் கற்பனை உருவ அமைப்பு.

அந்தச் சிறுவன் பழைய ஃபானின் சிலை ஒன்றைப் பார்த்துப் பார்த்து, புதிதாக ஃபானின் முகத்தை மட்டும் அப்போது செதுக்கிக் கொண்டிருந்தான். கடவுள் ஃபான் இளமையானவர். சிறுவன் செதுக்கிய ஃபானின் முகம், கிழவருடையது போன்றிருந்தது. கடவுள் ஃபானின் வாய் மூடியிருக்கும். சிறுவனோ வாய் பிளந்த புன்னகையுடன், நிறைய பற்களுடன் அந்த முகம் இருப்பதுபோலச் செதுக்கி முடித்தான். அப்போது அங்கே ஃப்ளோரன்ஸ் அரசர் லொரென்ஸோ டி' மெடிஸி வந்தார். அவர் கலைகள் மீது அதிக ஆர்வம் கொண்டவர். கலைஞர்களை ஆதரித்தவரும்கூட.

அந்தச் சிறுவன் செதுக்கிய ஃபானின் முகம் லொரென்ஸோவை கவர்ந்தது. அவரது புருவங்கள் அனிச்சையாக உயர்ந்தன. 'பழைய சிலையைப் பார்த்து அப்படியே செதுக்காமல், தன் கற்பனையையும் கலந்து செதுக்கியிருக்கிறான். ஃபானைக் கிழவனாக, புன்னகை நிறைந்த முகத்துடன் படைத்திருப்பது அவ்வளவு அருமையாக இருக்கிறது என்று லொரென்ஸோ, அசந்து நின்றார்.

அதேநேரம் அவருக்குள் ஒரு கேள்வியும் எழுந்தது. அந்தக் கேள்வியைச் சிறுவனிடம் கேட்டார். "தம்பி, இந்தக் கிழட்டு ஃபானுக்கு எப்படி இத்தனைப் பற்கள் இருக்கின்றன? ". அந்தச் சிறுவன் யோசிக்கவே இல்லை. தன் உளியைக் கொண்டு அந்தச் சிலையின் மேல் தாடைப் பல் ஒன்றைத் தட்டி எடுத்தான். இப்போது பொக்கை வாய்ச் சிரிப்புடன் அந்தச் சிலை மேலும் அழகாக, அர்த்தத்துடன் தெரிந்தது. லொரென்ஸோ, அந்தச் சிறுவனுக்குள் மாபெரும் கலைஞன் ஒருவன் இருக்கிறான் என்பதை உணர்ந்துகொண்டார்.

கி.பி. 1475-ல் இத்தாலியில் பிறந்த அந்தச் சிறுவனின் பெயர் மைக்கேலாஞ்சலோ. அவன் செதுக்கிய முதல் சிலை அது. சான் மார்கோ என்பது லொரென்ஸோ உருவாக்கிய கலைப்பள்ளி. அங்கே சேர்ந்து படிப்பது சாதாரண விஷயமல்ல. அதில் மைக்கேலாஞ்சலோ படிப்பதற்கான ஏற்பாடுகளை லொரென்ஸோ செய்தார்.

மைக்கேலாஞ்சலோ மென்மேலும் தன் திறமையைக் கூர்தீட்டிக் கொள்ள பல உதவிகளைச் செய்தார். பின்பு, இத்தாலியின் மிகச் சிறந்த சிற்பியாக, ஓவியராக, கட்டிடக்கலை நிபுணராக, கவிஞராக மைக்கேலாஞ்சலோ புகழ்பெற்றார்.

லியானார்டோ டா வின்சியும் மைக்கேலாஞ்சலோவும் ஒரே காலத்தில் வாழ்ந்தவர்கள். இவர்கள் இருவரும் இணைந்து இத்தாலியக் கலைப்படைப்புகளில் புதுமையைப் புகுத்தி மறுமலர்ச்சியை உண்டாக்கினர். அதில் மைக்கேலாஞ்சலோவின் படைப்புகளான பியேட்டா சிலை, டேவிட் சிலை, சிஸ்டின் ஆலய மேற்கூரை ஓவியங்கள், சிஸ்டின் மண்டப பலிபீடத்தில் கடைசித் தீர்ப்பு சுவரோவியம் போன்றவை இன்றைக்கும் உலகப் புகழுடன் திகழ்கின்றன.

மைக்கேலாஞ்சலோ தனது முதல் ஓவியத்தை வரையத் தொடங்குவற்கு முன்பாக, சுமார் பன்னிரண்டு ஆண்டுகள் மனிதனின் உடற்கூறு இயல் (Anatomy) குறித்துப் படித்தார். அதனால்தான், இவரது ஓவியங்களில் மனிதனின் எலும்பு, தசை, தோலின் நிறம் உள்ளிட்ட ஒவ்வொன்றும் அவ்வளவு நேர்த்தியாக, இயற்கைத்தன்மை மாறாமல் அமைந்திருக்கின்றன.

மைக்கேலாஞ்சலோ செய்த சிற்பங்கள், வரைந்த ஓவியங்கள் உள்ளிட்ட பெரும்பாலான படைப்புகள் இன்றைக்கும் பத்திரமாகப் பாதுகாக்கப்படுகின்றன. ஆனால், அந்த ஒன்று மட்டும் எங்கே போனது என்று யாருக்கும் தெரியவில்லை. எந்த ஒன்று?

மைக்கேலாஞ்சலா முதன் முதலில் செதுக்கிய ஃபானின் முகம். பல காலமாக ஃப்ளோரன்ஸ் நகரத்தின் பார்கெல்லோ அருங்காட்சியகத்தில்தான் காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தது. இரண்டாம் உலகப் போர் காலத்தில் நாஜிகள் பல நாடுகளிலும் புகுந்து கலைச்செல்வங்களைக் கொள்ளையடித்தனர். அப்போது பார்கெல்லோ அருங்காட்சியத்திலிருந்த பல்வேறு கலைப்பொருட்களை, இத்தாலியின் போப்பி நகரத்தின் கோட்டைக்கு இடம் மாற்றி வைத்தனர்.

இருந்தாலும் நாஜிப்படையினர், போப்பி கோட்டையிலிருந்து கலைப்பொருட்கள் பலவற்றையும் கொள்ளையைடித்துச் சென்றனர். அதில் ஃபானின் முகம், பத்தாவது எண் கொண்ட டிரக்கில் ஏற்றப்பட்டது. இத்தாலியின் ஃபோர்லி நகரத்துக்கு அந்த டிரக் சென்றது. பின்பு அந்த டிரக்கிலிருந்த கலைப்பொருட்கள் என்னவாயின, மைக்கேலாஞ்சலோ செதுக்கிய ஃபானின் முகம் என்னவாயிற்று என்பதைக் கண்டறியக் கடும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. பெரிய அளவில் விசாரணைகள் நடத்தப்பட்டன. கண்டுபிடிக்க முடியவில்லை.

மைக்கேலாஞ்சலோ, ஃபான் முகத்தைச் செதுக்குவது போன்ற சிலை ஒன்றை, பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஸோச்சி என்ற சிற்பி உருவாக்கினார். அது ஃப்ளோரன்ஸ் நகரத்தின் இன்னோர் அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. தவிர, மைக்கேலாஞ்சலோ செதுக்கிய ஃபான் முகத்தின் நகல் ஒன்று பார்கெலோ அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டிருக்கிறது.

அசல் ஃபான் கிழவர் பொக்கை வாயுடன் எங்கே சிரித்துக் கொண்டிருக்கிறார் என்பது மட்டும் இன்னும் தெரியவில்லை.

(பொக்கிஷங்களைத் தேடுவோம்!)கட்டுரையாளர், எழுத்தாளர்தொடர்புக்கு: **mugil.siva@gmail.com**

## பதினான்காம் லூயி - பிரான்ஸ்

விசித்திரமான வரலாறுகள் 18




1643-ல் இருந்து 1715 வரை பிரான்ஸை ஆண்ட மன்னன் பதினான்காம் லூயி தன் முத்திரையை சரித்திரத்தில் அழுத்தமாகவே பதிய வைத்தார்.
சூரிய மன்னன் **(SUN KING)** என்றும் அறியப்பட்ட இவர்தான் ஐரோப்பியச் சரித்திரத்திலேயே மிக அதிக வருடங்கள் ஆட்சி செய்த மன்னர். 72 வருட ஆட்சி!

பதிமூன்றாம் லூயி மன்னனுக்கும், ஆஸ்திரிய இளவரசி ஆனேவுக்கும் பிறந்தவர் இவர். எதிர்பாராத கட்டத்தில் தந்தை இறந்து விட, தன் இளம் வயதிலேயே முடிசூட்டிக் கொண்டார் பதினான்காம் லூயி. இளம் வயது என்றால் ? நான்கே வயது!

பிரான்சின் பதின்மூன்றாம் லூயி மன்னனுக்கும், ஆஸ்திரிய இளவரசி ஆனேவுக்கும் 1638 ,செப்டம்பர் 5 ஆம் நாள் பிறந்தார்.

இவர்கள் திருமணத்திற்கு பிறகு 23 வருடங்கள் கழிந்திருந்தது. 1619 ஆண்டிற்கும் 1631 ஆம் ஆண்டிற்கும் இடையில் ஆனேவுக்கு நான்கு முறை குறை பிரசவம் ஏற்பட்டது. இவ்வாறு ஒரு சிக்கலான தருணத்தில் பிறந்ததால், இவர் இறைவனின் கொடை "லூயிஸ் டையூடோன்" (Louis dieudonne) என்றே அழைக்கப்பட்டு அவ்வாறே பெயர் சூட்டப்பெற்றார்.

இந்தக் காலகட்டத்தில், அவரது தாயுடன் லூயியின் உறவு அசாதாரணமான அளவு பாசம் கொண்டதாக இருந்தது. சமகாலத்தவர்களும், கண்ணால் பார்த்தவர்களும் லூயியின் தாய் ஆன் தனது நேரம் முழுவதையும் லூயிசுடன் கழித்ததாகக் கூறுகின்றனர்.

இருவரும் உணவு மற்றும் நாடகக்கலையில் மிகவும் ஆர்வமாக இருந்தனர். மேலும் லூயிசு தனது தாயாருடன் கொண்டிருந்த நெருக்கமான உறவின் காரணமாக இவ்வித ஆர்வங்களை வளர்த்துக் கொண்டார். இந்த நீடித்த, அன்பான உறவு லூயிசின் சஞ்சிகைகளிலிருந்து எடுக்கப்பட்ட பின்வரும் பகுதிகளிலிருந்து ஆதாரப்பூர்வமாக அறியப்படலாம்.

"என் தாயிடம் என்னை கட்டிவைத்திருந்த முதல் முடிச்சுகளுக்கு இயற்கையே பொறுப்பு. ஆனால், ஆன்மாவினாலும் உணர்வினாலும் பகிர்ந்து கொள்ளப்பட்ட பண்புநலன்கள் இரத்த உறவால் உருவான பிணைப்புகளை விட பிரிக்க முடியாத அளவு உறுதியான பிணைப்புகளாக அமைந்திருக்கின்றன."

முடியாட்சியின் மீதான முழுமையான மற்றும் தெய்வீக சக்தியை லூயிசுக்கு அவரது தாயாரே அளித்தார்.

ஒருமுறை தவறி குளத்தில் விழுந்து உயிருக்கே போராடி அந்தக் குழந்தை தப்பித்தபோது ''கடவுளுக்கு எதிராக நீ எப்போதாவது குற்றம் இழைத்திருப்பாய். அதனால்தான் இப்படி நடந்தது'' என்று தாய் ஆனே கடிந்து கொண்டாளாம்.
அது மன்னன் மனதில் ஆழமாகவே பதிந்துவிட்டது. தீவிர கத்தோலிக்கராக வளர்ந்தார் அவர்.

கார்டினல் ரிசேலியு என்பவர் அப்போது முதல் அமைச்சராக விளங்கினார். செல்வாக்கு மிக்கவர். பிரான்ஸை அதிக அதிகாரமுள்ள மைய ஆட்சி கொண்டதாக ஆக்கியதிலும் தலைசிறந்த உளவு நிறுவனத்தை அங்கு உருவாக்கி சிறப்படையச் செய்ததிலும் அவருக்கு முக்கியப் பங்கு உண்டு.

ஸ்பெயினுடனான போரில் பிரான்ஸ் வெற்றி பெற, ஸ்பெயினின் பிடியிலிருந்த நெதர்லாந்தின் ஒரு பகுதி பிரான்ஸின் வசம் வந்தது. ஐரோப்பாவின் சக்தி மிகுந்த நாடாக பிரான்ஸ் உருவானது.

ஸ்பெயினை ஆண்ட நான்காம் பிலிப்பின் மகள் மரியா தெரசாவை பிரான்ஸ் மன்னன் பதினான்காம் லூயி திருமணம் செய்து கொண்டபோது அரசியல் உலகம் கொஞ்சம் ஆட்டம் கண்டது. அவர்களுக்குப் பல குழந்தைகள் பிறந்தாலும் ஒரே குழந்தைதான் பெரியவனாகும்வரை உயிர் வாழ்ந்தது.

பிரான்ஸுக்கு முதல் அமைச்சர் என்ற ஒருவர் இருப்பதும் அவர் முக்கிய முடிவுகள் எடுப்பதில் முக்கிய பங்கு வகிப்பதும் வழக்கமாக இருந்த ஒன்றுதான். ரிசேலியுவுக்குப் பிறகு மஸாரின் என்பவர் முதல் அமைச்சராகி தன் பங்குக்கு பிரான்ஸில் கலைகளை வளரச் செய்தார். அரசுக்கும் தனக்கும் எதிரான புரட்சிகளை வெற்றிகரமாக ஒடுக்கினார். ஆனால் அவரது மறைவுக்குப் பிறகு மன்னர் ஒரு எதிர்பாராத அறிவிப்பைச் செய்தார்.

''அடுத்த முதல் அமைச்சர் என்று யாரும் கிடையாது. நான்தான் மன்னன். எனக்கு நானேதான் முதல் மந்திரி'' என்று அறிவித்துக் கொண்ட பதினான்காம் லூயி இறுதிவரை அதை கடைப்பிடித்தார். ஒப்புக்குச் சில அமைச்சர்கள் இருந்தார்கள். ஆனால் அவர்களை அவர் எப்போது நியமிப்பார், எப்போது நீக்குவார் என்பது யாருக்குமே தெரியாது.

ஆனால் ஒன்றில் மட்டும் மிகத் தெளிவாக இருந்தார் லூயி. தன் அமைச்சரவையில் தன் குடும்பத்தைச் சேர்ந்தவர்களோ, புகழ்பெற்ற இளவரசர்களோ, ராணுவத்தில் பணியாற்றிய அறிஞர்களோ கட்டாயம் இருக்கக் கூடாது!

உள்நாட்டு விவகாரங்களிலும் வெளிநாட்டுத் தொடர்புகளிலும் மன்னன் பதினான்காம் லூயி ஈடு இணையற்று விளங்கினார். நாட்டில் புதிய, தெளிவான சட்டங்கள் இயற்றப்பட்டன. நிதி அமைச்சராக விளங்கிய கால்பர்ட் தன் திறமைகளை வெளிப்படுத்தினார். சிறப்பான பொருளாதார சீர்திருத்தங்களை அறிமுகப்படுத்தனார்.

இந்தக் கால கட்டத்தில் கலைகள் மிகச் செழிப்பாக வளர்ந்தன. ஓவியம், சிற்பம் போன்ற கலைகளுக்கு தனித்துறையை தொடங்கினார். அறிவியலும் ஏற்றம் கண்டது. பாரீஸில் ஒரு பெரும் தொலைநோக்ககம் **(OBSERVATORY)** உருவாக்கப்பட்டது. இலக்கிய அகாடமி அமைப்புக்கும் புது வெளிச்சம் கிடைத்தது. ஆனால் அது முழுக்க அரச குடும்பத்தின் கட்டுப்பாட்டில் தொடர்ந்தது.

அற்புதமான கட்டிடங்களைக் கட்டுவதில் பெருவிருப்பம் கொண்டிருந்தார் மன்னர். லூவர் அருங்காட்சியகக் கட்டிடம்கூட அவர் காலத்தில் எழுப்பப்பட்டதுதான். ஸ்பெயினின் அதிகாரத்திலிருந்த சில பகுதிகள் பிரான்ஸோடு இவர் காலத்தில் இணைக்கப்பட்டன.

ஆனால் நிர்வாகத்தில் பெரிதும் உதவிய நிதி அமைச்சர் கால்பர்ட்டின் இறப்புக்குப் பிறகு ஆட்சியில் பல மாறுதல்கள் உண்டாயின. பிரான்ஸில் உள்ள பிராடஸ்டன்ட் சிறுபான்மையினரின் சிறப்பு வழிபாட்டு உரிமையை நீக்கினார் மன்னர். பிரெஞ்சு ப்ராடெஸ்டன்டுகளை 'ஹுகனாட்ஸ்' என்பார்கள். இவர்களுக்கான வழிபாட்டு உரிமைகளை ரத்து செய்தார் மன்னர். அது மட்டுமல்ல, ப்ராடஸ்டன்ட் ஆலயங்களையும் இடித்துத் தள்ள உத்தரவிட்டார்.

ப்ராடஸ்டன்ட் பள்ளிகள் மூடப்பட்டன. அந்தப் பிரிவினரின் திருமணங்கள் செல்லாது என்று சட்டமியற்றும் அளவுக்கு மன்னரின் கத்தோலிக்க வெறி எல்லை தாண்டியது. கத்தோலிக்கக் கல்வியும் ஞானஸ்நானமும் எல்லா பிரான்ஸ் குழந்தைகளுக்கும் கட்டாயமாக்கப்பட்டது.

இதன் காரணமாக தொழிலதிபர்களாக இருந்த ப்ராடஸ்டன்ட் பிரிவினரில் பலரும் பிரான்ஸைவிட்டு நீங்கினார்கள். ஆக பெருத்த முதலீடுகளும் திறமையான நபர்களில் கணிசமானவர்களும் நாட்டைவிட்டு

நீங்கினர். இங்கிலாந்து, சுவிட்சர்லாந்து, ஜெர்மனி ஆகிய நாடுகளுக்கு இப்படிச் சென்றவர்களின் எண்ணிக்கை பல ஆயிரங்கள்.

மன்னரின் வேறு ஒரு செயல்பாடும் கடுமையான விமர்சனத்தை சந்தித்தது. வெர்செய்ல்ஸ் என்ற பகுதி தலைநகரிலிருந்து 25 மைல் தொலைவில் இருந்தது. அங்கு மிக பிரம்மாண்டமான அரண்மனை ஒன்றை எழுப்பினார் மன்னர். இதற்கான செலவு நாட்டின் கஜானாவை வெறுமையாக்கியது.1709-ல் உண்டான பிரான்ஸின் மிகக் கடுமையான குளிரும் பலரை வீழ்த்தியது.

72 வருட ஆட்சிக்குப் பிறகு தனது 77-வது வயதில் மன்னர் பதினான்காம் லூயி தன் தாயின் போட்டோவைப் பார்த்தவாறே இறந்தார்.

ர.ரா

``நான் கண்டுபிடிச்சது அமெரிக்கா இல்ல; இந்தியாதான்!" - ஸ்பெயினைக் கடுப்பேற்றிய கொலம்பஸ்

விசித்திரமான வரலாறுகள் 19   03-10-2020

கொலம்பஸ். நீலக்கடல் பயண வரலாற்றில் தவிர்க்கமுடியாத ஆளுமையாக ஐரோப்பியர்களால் மெச்சப்படுபவர். இன்றுவரை அனைத்துப் பாடத்திட்டங்களிலும் அவர்கள் மார்தட்டிக் கொள்ளும் விஷயம், `கொலம்பஸ்தான் அமெரிக்காவைக் கண்டுபிடித்தார்' என்பது. அதை அவர் கண்டுபிடித்திருக்க ஏன் அதற்கு அவருடைய பெயர் வைக்கப்படவில்லை?

உண்மையைச் சொல்லப்போனால் மரணிக்கும் நாள்வரைதான் கண்டுபிடித்தது ஆசியாதான் என்றே நம்பிக்கொண்டிருந்திருக்கிறார் கொலம்பஸ். அவர் கண்டுபிடித்ததாகச் சொல்லப்பட்ட அந்தப் புதிய நிலம், ஐரோப்பியர்களுக்கு அதுவரை தெரியாமலிருந்த ஆசியா இல்லை. அதை முதலில் கண்டுபிடித்துச் சொன்ன ஓர் இத்தாலிய மாலுமியின் பெயர்தான் அமெரிக்காவுக்கு வைக்கப்பட்டுள்ளது.

1451-ம் ஆண்டு இத்தாலியிலுள்ள ஜெனோவில் பிறந்தவர் கொலம்பஸ். தன் இருபத்தைந்து வயதில் நிலவியல் வரைபடம் வரையும் வேலையைத் தொடங்கினார். எண்ணற்றவர்கள் ஆய்வுப் பயணங்களை மேற்கொண்டவாறு இருந்த காலகட்டம் அது.

ஐரோப்பியர்கள் தங்கள் வர்த்தகத்தைப் பெருக்க முண்டியடித்துக்கொண்டு புதிய நிலங்களைத் தேடிப் பேயாய் அலைந்த காலம். போர்த்துக்கீசியர்கள் அவர் தொடங்கியபோதே அட்லான்டிக் பெருங்கடலில் சில தீவுகளைக் கண்டுபிடித்து விட்டிருந்தனர். அட்லான்டிக்கில் அவர்கள் கண்டுபிடித்த மெடைரா தீவுகளும் அஸோர்ஸ் தீவுகளும் அவர்களை முன்னிலைப் படுத்தியிருந்தது. ஆப்பிரிக்காவின் மேற்குக் கடற்கரை நோக்கித் தங்கள் தேடுதல் வேட்டையை மேலும் வேகப்படுத்தியது போர்ச்சுகல்.

இவை அனைத்தையும் ஐரோப்பியர்கள் செய்தது ஒன்றைத் தேடித்தான். அந்த ஒன்றுதான் இந்தியா. ஒட்டோமன் பேரரசு கான்ஸ்டான்டினோபிள் வழியாக இந்தியாவுக்கு இருந்த நிலவழிப் பயணத்தை ஐரோப்பியர்களுக்குத் தடை செய்திருந்தது. அதோடு விட்டுவைக்காமல் செங்கடல், வடக்கு ஆப்பிரிக்கா வழியாக இருந்த பாதையிலும் ஐரோப்பியர்களுக்கு வழிவிடவில்லை.

அமெரிக்கக் கட்டுரையாளர் வாஷிங்டன் இர்விங் என்பவரின் 1828-ம் ஆண்டு வெளியான `கிறிஸ்டோபர் கொலம்பஸின் வாழ்வும் பயணங்களும்' என்ற புத்தகத்தில் இதுபற்றிப் பேசியிருப்பார். அதில் ஐரோப்பியர்களின் `பூமி தட்டையானது' என்ற கோட்பாட்டையும் அதை வைத்து அவர்கள் போட்ட வேடிக்கையான பயணக் கணக்குகளையும் குறிப்பிட்டிருப்பார்.

கொலம்பஸ் காலத்துக்கு வெகு சமீபத்தில்தான் அந்தக் கோட்பாடு தவறானது என்று புரிந்துகொள்ளத் தொடங்கி இருந்தார்கள். அந்தப் புரிதலை வைத்து கொலம்பஸ் ஓர் பயணத் திட்டம் தயாரித்தார். மேற்கு நோக்கிப் பயணித்தால் கிழக்கே இருக்கும் ஆசியாவை அடைந்துவிடலாம் என்பது அவர் எண்ணம். ஏனென்றால் அவரைப் பொறுத்தவரை மேற்கே ஆசியாவைத் தவிர வேறு நிலமே கிடையாது. பூமி உருண்டையாக இருப்பதால் இந்தப் பக்கம் சுற்றிக்கொண்டு போய் ஆசியாவை நாம் அடைந்துவிடலாம் என்று கணக்குப் போட்டார்.

அப்போது ஆய்வுப் பயணத்தில் முன்னிலையில் இருந்த போர்த்துகலிடம் தன் திட்டத்தைக் கொண்டு சென்றார் கொலம்பஸ். ஆனால், அவர்கள் அந்தத் திட்டத்தை நிராகரித்தார்கள். அதற்கு இரண்டு காரணங்கள் இருந்தன. ஒன்று, அவருக்குப் போர்த்துகலோடு பெரிய தொடர்பு எதுவுமில்லை. இரண்டாவது, அவர் ஐரோப்பாவுக்கும் இந்தியாவுக்குமான தொலைவை குறைத்து மதிப்பிட்டிருந்தார்.

தன் நம்பிக்கையைத் தளரவிடாத கொலம்பஸ் ஸ்பானியர்களிடம் சென்றார். அவரது பயணத்திட்டம் அவ்வளவு முழுமையானதாகவும் இருக்கவில்லை, அதில் இரண்டு நிலப்பகுதிக்குமான தொலைவு, கடற்பயணத்தின்போது ஏற்படும் சிக்கல்கள், பிரச்னைகள் என்று எதுவுமே தெளிவாகப் பேசப்படவில்லை. ஆனாலும், ஸ்பானியர்கள் என்ன தைரியத்தில் இவரை நம்பினார்கள் என்ற கேள்விக்குத்தான் வரலாற்றில் விடையில்லை.

அளவில்லாத செல்வத்தோடு தான் திரும்பி வருவதாகச் சொல்லிச் சென்றார் கொலம்பஸ். ஆசியாவுடனான நேரடி வர்த்தகத் தொடர்பில் அதுவரை நினைத்துக்கூடப் பார்த்திராத அளவுக்குச் செல்வத்தைத் தன்னால் கொண்டுவர முடியுமென்று அதீத நம்பிக்கை கொண்டிருந்தார் கொலம்பஸ். அதோடு நிற்கவில்லை. பெருங்கடலின் கடற்படைத் தளபதி, இந்தியாவின் அரசப் பிரதிநிதி போன்ற பதவிகளைத்தான் திரும்பி வரும்போது தனக்கு வழங்க வேண்டுமென்று ஸ்பானிய அரசிடம் அன்புக் கட்டளை வேறு.

அவர் பயணத்தைத் தொடங்கியபின் நடந்த அனைத்துமே வரலாறு. பஹாமன் தீவுக்கூட்டத்தில் கானாஹனி என்ற தீவில் கரையேறினார். அடுத்த தொடர்ச்சியான நான்கு பயணங்களில் அந்தப் புதிய உலகத்தை அமெரிக்காவைக் கண்டுபிடித்தார் கொலம்பஸ் என்றுதான் வரலாறு கூறுகிறது. ஆனால், உண்மை அப்படியில்லை, அவருக்கு முன்னமே ஏற்கெனவே ஆப்பிரிக்கர்கள் அமெரிக்காவோடு தொடர்பு வைத்திருந்தனர். அது ஒருபுறம் இருக்கட்டும்.

முதன்முதலில் அமெரிக்காவைக் கண்ட முதல் 'ஐரோப்பியர்' கொலம்பஸ் என்பது மட்டும் உண்மை. பாஹாமாவுக்கு அடுத்ததாக கூபாவுக்குச் சென்றார். அங்கிருந்து ஹிஸ்பானியோலா. அப்படியே மத்திய அமெரிக்கா, இறுதியாக தென்னமெரிக்கா. அவர் கண்டது என்னவோ அப்போது ஐரோப்பியர்களால் பெயரிடப்படாத ஒரு புதிய நிலப்பகுதியை. ஆனால், கொலம்பஸ் அதை ஏற்க மறுத்துவிட்டார். பாவம் மனிதர், கடைசிவரை தான் கண்டுபிடித்தது ஆசியாதான் என்று பிடிவாதமாகவும் அப்பாவியாகவும் நம்பிக் கொண்டிருந்தார். அப்பாவியாகத்தான் அவர் சொன்னாரா என்பதும் சந்தேகத்துக்கு இடமாகிறது.

ஒருவேளை அவர் ஸ்பானியர்கள் கொடுப்பதாக ஒப்புக்கொண்ட கடற்படைத் தளபதி, இந்திய வைசிராய் ஆகிய பதவிகளைத் தக்க வைத்துக்கொள்ள அப்படி அழுத்தம் திருத்தமாகச் சொல்லியிருக்கலாம்.

கொலம்பஸின் இந்த நிலைப்பாடு பலருக்கு அவர் மேலிருந்த நம்பகத் தன்மையைக் கேள்விக்கு உள்ளாக்கியது. இதற்கிடையில் வாஸ்கோடகாமா என்ற ஒரு போர்த்துகீசிய மாலுமி இந்தியாவுக்குக் கடற்பயணம் மூலம் சென்றடைந்து, தெற்கு ஆப்பிரிக்காவின் மீண்டும் நன்னம்பிக்கை முனையைச் சுற்றிப் பயணித்து வந்து சேர்ந்திருந்தார்.

|அதன்மூலம், மொத்த ஐரோப்பிய நாடுகளுக்கு இடையே நடந்த போட்டியில் ஸ்பெயினை வீழ்த்தி போர்த்துகல் வென்றுவிட்டது. இந்தத் தோல்வியை ஸ்பானிய அரசால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அவர்கள் கொலம்பஸ் மீது கடும் கோபத்தில் இருந்தனர். அவருக்குக் கொடுத்த பட்டங்களைத் திரும்பப் பெற்றுவிட்டனர். அவர் அமெரிக்காவைக் கண்டுபிடித்திருப்பதாக ஒப்புக் கொண்டிருந்தால்கூடத் தப்பித்திருக்கலாம். இறுதிவரை தான் கண்டது இந்தியாதான் என்று அவர் அறுதியிட்டுச் சொன்னதுதான் ஸ்பானியர்களின் ஆத்திரத்துக்கு எண்ணெய் ஊற்றியது.

பதினாறாம் நூற்றாண்டின் இறுதியில் போர்த்துகல் கொடிக்குக் கீழ் பயணித்தார் மற்றுமொரு இத்தாலிய மாலுமி. அமெரிகோ வெஸ்பூச்சி (Amerigo Vespucci) என்ற அவர், L கொலம்பஸ் கண்ட புதிய உலகை நோக்கிப் பயணித்தார். அந்தப் பயணத்தின்போது அவர் எழுதிய கடிதங்கள் பின்னாளில் அச்சிட்டு வெளியிடப்பட்டது. அதில், ``இந்தப் புதிய நிலப்பகுதி நிச்சயமாக ஆசியா இல்லை. இது மற்றுமோர் புதிய கண்டமாக இருக்கக்கூடும்" என்று குறிப்பிட்டிருந்தார். அவர் கண்டமென்று குறிப்பிட்ட பிறகுதான் அது புதிய நிலமல்ல புதியதோர் உலகமென்று ஐரோப்பிய மக்கள் புரிந்துகொள்ளத் தொடங்கினார்கள். மேலும் தம் மாலுமிகள் மூலமாக அவர் அனுப்பிய கடிதங்கள் அனைத்தையும் மக்கள் மிக ஆர்வமாகப் படித்தனர். அதன்மூலம் புதிய உலகத்தைக் கண்டுபிடிக்க அவர்கள் முயன்றனர். இறுதியில் அந்த மாலுமியின் பெயர்தான் அமெரிக்காவின் பெயராக வரலாற்றில் பொறிக்கப்பட்டது.

அவர் அனுப்பிய கடிதங்கள் பின்னாளில், 1507-ம் ஆண்டு ஜெர்மானிய வரைபட ஓவியரான மார்ட்டின் வால்ட்சிமுல்லர் என்பவரையும் பயணிக்கத் தூண்டியது. அவர்தான் முதன்முதலில் அமெரிக்கா என்ற பெயரோடு அந்தக் கண்டங்களின் வரைபடத்தை உருவாக்கியவர். அந்த மொத்த கண்டங்களுக்கும் அவர் இந்தப் பெயரைச் சூட்டவில்லை. அவர் பெயரிட்டது என்னவோ முதலில் பிரேசிலுக்குத்தான்.

``ஐரோப்பிய, ஆசிய நிலங்கள் பெண் பெயரில் வருகின்றன. இந்த நிலத்தைக் கண்டுபிடித்த ஒரு மேதாவியின் பெயரில் இதை அழைப்பதே அவருக்குத் தரும் மரியாதை" என்று வால்ட்சிமுல்லர் தன் வரைபடக் குறிப்புகளில் குறிப்பிட்டார். ஆனால், அமெரிகோ என்று குறிப்பிடாமல் அமெரிக்கா என்று அவர் ஏன் குறிப்பிட்டார் என்பது தெரியவில்லை. அதேசமயம், பிரேசிலுக்கு ஏற்கெனவே போர்ச்சுகீசியர்கள் ட்ரூ கிராஸ் தீவு என்று பெயரிட்டிருந்தனர். அப்போது வால்ட்சிமுல்லர் அமெரிக்காவில் இருந்ததால் அவருக்குத் தெரிந்திருக்க வாய்ப்பில்லை. அதன்பிறகு வந்த வரைபட ஓவியர்களால் இந்தப் பெயர் ஐரோப்பா முழுவதும் கொண்டுசெல்லப் பட்டுவிட்டது. 16 ம் நூற்றாண்டின் இறுதியில் அந்த நிலப் பகுதிகளையே அவர்கள் அமெரிக்கா என்று அழைக்கத் தொடங்கியிருந்தனர்.

ஒரு நிலப்பகுதிக்குப் பெயரிடுவது என்பது ஒரு வரலாற்று அடையாளத்தைப் பதிவு செய்வதைப் போன்றது. ஐரோப்பியர்களால் தொடர்ச்சியாகச் செய்யப்பட்ட இந்த வரைபட ஓவிய வேலைகள் அதை நோக்கியதுதான். ஸ்பெயின் கொலம்பஸ் திட்டத்துக்கு ஒப்புக்கொண்டதும் அந்த ஆசையில்தான். ஒரு நிலப்பகுதிக்கு ஐரோப்பியப் பெயர்களைச் சூட்டுவதன்மூலம் அது அவர்கள் ஆளும் நிலம் என்று காட்டிக் கொண்டனர். அது காலனிய ஆதிக்கத்தின் ஆரம்பம்.

``இது என் காலனி. இதற்கு நான் பெயரிட்டுள்ளேன்" என்று மார்தட்டிக் கொள்வதற்கான தொடக்கம்.

குறிப்பு : இத்துடன் "விசித்திரமான வரலாறுகள் " தொடர் பதிவு நிறைவு பெறுகிறது .

09 Oct 2020

ஞானம் 01



அறிவும் , ஞானமும் ஒன்றா என்றால்

இல்லை .

ஞானம் என்பதை ( **wisdom**) என்றும் அறிவை **(Knowledge )** என்கிறார்கள்

இது விஷயமாக உள்ள தத்துவங்களை தத்துவஞானிகள் , தத்துவவாதிகளிடம் விசாரிக்கும் போது நமக்கு ஒரு வித 'ஞானம் ' கிடைக்கிறது .

அது சரிதானோ என்று ஒரு மனம் அறிவுக் கொண்டு யோசிக்கிறது .மற்றொரு மனம் அதே அறிவுக் கொண்டு "..ச்சே ... ச்சே " அதுவல்ல 'ஞானம்' என்கிறது .

இப்படி வித்தியாசமான ஞானங்களை தொகுத்து வழங்கினால் நம்ம ஞான நண்பர் சந்தோஷப்படலாம் என்று என் சிற்றறிவுக்கு தென்பட்ட ஞானத்தை எண்ணி முதல்ல தேர்ந்தெடுத்த ஆள் ஓஷோ....அவரிடம் ஞானத்தைப் பற்றி விசாரித்த போது, சொன்ன விஷயங்கள் சற்று வித்தியாசமாக இருக்கிறது. கேளுங்கள்.

" ஞானம் என்பது ... ஒரு பிரமாண்டமான அனுபவம் அல்ல. ஞானம் என்பது ஒரு எளிய அறிவுப் பூர்வமான புரிதல் மட்டுமே.

ஞானம் பெறுவதற்கு பயிற்சியும் தேவை இல்லை, முயற்சியும் தேவை இல்லை. ஒரு நொடிபொழுது போதும் இதனை புரிந்து கொள்வதற்கு.

ஞானம் என்பது ... நம் அறிவு தன் எல்லையை புரிந்து கொள்ளுவது .... நம் அறிவு ... தனக்கு எங்கே வேலை இருக்கிறது... தனக்கு எங்கே வேலை இல்லை என்று புரிந்து கொள்ளுவதுதான் ஞானம்.

நாம் நமது மனோ இயக்கம் சம்பந்தமாக, நாமாகச் செயல்படுவதற்கு எதுவும் இல்லை என்பதைக் கண்டுகொள்வதே 'ஞானம்'.

'நம்முடைய மன உணர்வுகளைச் சீரமைக்கும் வல்லமை நமக்கு கிடையாது' என்ற நமது இயலாமையை நாம் அறிவுப்பூர்வமாகப் புரிந்துக் கொள்வதுதான் 'ஞானம்'.

நம் அறிவு புறச்செயல்களை நிர்வாகம் செய்யலாம். மனதையும் நிர்வாகம் செய்ய முயலுவதுதான் நம் எல்லா மன பிரச்சனைகளுக்கும் காரணம். நம் அறிவு நம் மனதை நிர்வாகம் செய்ய முடியாது என்று புரிந்து கொள்வது தான்..‘ஞானம்’.

மனதில் எண்ணங்கள் ... அதன் போக்கில்தான் வரும்... அவை நம் அறிவின் கட்டுபாட்டுக்குள் இல்லை என்று புரிந்து கொள்வதுதான் ‘ஞானம்’.

நாம் தூங்குவதற்கு செல்கிறோம் ... எண்ணங்கள் வந்து கொண்டே இருக்கின்றன..." எண்ணங்களே! நான் தூங்க போகிறேன்.. நாளை வாருங்கள் " என்று சொன்னால் கேட்குமா?...

"மனசே, இன்று முழுவதும் மகிழ்ச்சியான எண்ணங்கள் மட்டுமே வர வேண்டும் ... கோபம், துக்க எண்ணங்கள் வர கூடாது" என்று நம் மனதிடம் நம் அறிவு ஒரு கோரிக்கை வைத்தால் … நம் மனது கேட்குமா?

'நம் மனம் நம் அறிவின் கைகளில் இல்லை ' என்று அறிவுபூர்வமாக புரிந்து கொள்வதுதான் ‘ஞானம்’.

புறத்தில் நடப்பவற்றை எல்லாம் பிரதிபலிப்பது நம் மனதின் இயற்கை. நம் அறிவு முயற்சி செய்துதான் விரும்பியதை நம் மனம் பிரதிபலிக்க வேண்டும் என்று ஒவ்வொரு கணமும் போராடுகிறது.

இந்த முடிவில்லா போராட்டம், ஒரு வீண்முயற்சி என்று நம் அறிவு புரிந்து கொள்ளும் பொழுது தன் முயற்சியை முழுமையாக கைவிடுவது தான் ஞானம். இதுவே அகசரணாகதி. ஞானம் என்பது ஒரு 'அறிவுபூர்வமான புரிதல்' (Intellectual Understanding) மட்டுமே.

எல்லாம் அவன் செயல் - நம் மனதில் தோன்றும் இன்ப துன்பங்கள் எல்லாம் அவன் செயல் என்று பக்தி மார்க்கம் போதிக்கும் சரணாகதியும், இந்த அகசரணாகதிதான்.

சும்மா இருப்பது என்பது நம் முயற்சியால் வருவதன்று...

முயற்சியை கை விடுவதால் வருவது...

இந்த உண்மையை எவரும் கடை பிடித்து புரிந்து கொள்ள முடியும் ... இது நம் மனதிற்கானது.

இந்த 'ஞான புரிதலின்' விளைவு?

ஞானப் புரிதலுக்கு பின் ... நம் மனம் விடுதலையுடன் இயங்க தொடங்கி விடுகிறது.

சதா மகிழ்ச்சியையும் நிம்மதியையும், மனதிடம் தேடி கொண்டு இருந்த நம்அறிவு, தேடுதலை நிறுத்தி விடுகிறது. மனதில் ஓடும் உணர்வுகளுடன் போராடி புதுப்பித்துக்கொள்வதை நிறுத்தி விடுகிறது.

அறிவின் குறுக்கீடோடு இல்லாத நம் மனம் நின்று விடுவதில்லை ... அது விடுதலையுடன் இயங்க தொடங்கி விடுகிறது.

இதுவே விடுதலை ... இதுவே ஆன்மீகத்தில் உயர்வாக கருதப்படும் ... முக்தி ... இதுவே ஞான விடுதலை.

இந்த விடுதலை ஒரு அனுபவம் அன்று. எல்லா அனுபவங்களும் சுதந்திரமாக வந்து போவதுதான் விடுதலை.

ஒரு குழந்தையானது இந்த விடுதலையுடன்தான் இருக்கின்றது. எல்லா ஞானிகளும் இந்த மன விடுதலையுடன்தான் வாழ்கின்றார்கள்

ர.ரா

Vali Poakkan Parathesi

இந்த எழுத்தின் வடிவங்களையும் புரிந்துகொள்வதற்கு சராசரியாக 40 வயதை கடந்து இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது.... இதற்கு முன் தாங்கள் போட்ட பதிவுகள் குறிப்பாக கவிக்கோ அப்துல் ரகுமானின் பதிவுகள் எனக்கு ஒன்றுமே புரியவில்லை நானும் திரும்பத் திரும்ப வாசித்து பார்க்கிறேன் எனக்கு புரியவே இல்லை அதை புரிந்து கொள்வதற்கு என்றே தனி ஞானம் வேண்டும் போல் தோன்றுகிறது....தங்களின் புரிதல்கள் பிரமிக்க வைக்கிறதுஅதை புரிந்துகொண்டு அடுத்தவர்களுக்கும் தெரியவேண்டும் என்று எழுதும் முறைகள் அல்ஹம்துலில்லாஹ் அல்லாஹ் தங்களுக்கு உடல் ஆரோக்கியத்தையும் மன பலத்தையும் தரவேண்டும் துஆ செய்கிறறேன்



ஞானம் 02

அறிவு என்றால் என்ன ?

ஞானம் என்றால் என்ன?

இரண்டுக்கும் வித்தியாசம் என்ன ?

பகவான் ராமகிருஷ்ணனிடம் பாடம் படிப்பதில் நிறைய பயன்கள் உண்டு. அவர் எந்த ஒரு விஷயத்தையும் மிக மிக எளிமையாக விளக்குவார் புரியாததை புரிய வைப்பார். அன்றாட வாழ்க்கையில் உள்ள எளிய உதாரணங்களைக் கூறி தெளிவடையச் செய்வார் அவற்றில் ஒன்றுதான் இந்த சம்பவம் .

பகவான் ராமகிருஷ்ணனிடம் மூன்று மாணவர்கள் படித்துக் கொண்டிருந்தனர் . அவர்களுக்கு அறிவு, ஞானம் பற்றி ஐயம் இருந்தது . அறிவு என்றால் என்ன ? ஞானம் என்றால் என்ன ?

என்று குருவிடம் கேட்டார் .

அவர் அறிவு , ஞானம் பற்றி பல நாள்கள் பாடம் எடுத்தும் அவர்கள் மூவருக்கும் அது முழுமையாக விளங்கவில்லை . இரண்டுக்கும் உள்ள வேறுபாட்டை உணர முடியவில்லை .

பகவான் ராமகிருஷ்ணர் 3 மாணவர்களையும் அழைத்து "உங்களுக்கு ஞானம் என்பது எது ? என்பதை ஒரு செயல்முறை விளக்கப் போகிறேன் "என்று சொல்லிவிட்டு மூவரையும் ஒரு அறையில் உட்கார வைத்தார் .

அவர் மற்றொரு அறைக்குச் சென்று சிறிது நேரத்தில் வெளியே வந்தார் அறையின் கதவுகளை மூடிவிட்டு அம்மூவரின் அருகில் வந்து அமர்ந்தார் .

முதல் மாணவனை பார்த்து , " நான் போய் வந்த அறையினுள் மூன்று தம்ளர் பால் உள்ளது . அதில் நீ ஒரு தம்ளர் பாலை பருகிவிட்டு வா ! என்றார் .

அவன் உள்ளே சென்றான் தங்கம் ,வெள்ளி, வெண்கலம் ஆகிய மூன்று தடம்ளர்களில் பால் இருந்தது .

தங்கத் தம்ளரிலுள்ள பாலை எடுத்து மிகுந்த சந்தோஷத்தோடு பருகினான் . பிறகு வெளியே வந்தான் .

அடுத்து இரண்டாவது மாணவன் உள்ளே சென்றான் தங்கத் தம்ளரில் பால் இல்லாததைப் பார்த்து அவன் அதிலிருந்த பால் தனக்கு கிடைக்கவில்லையே என்ற ஆதங்கமுற்றான் . ஆயினும் அதற்கடுத்த மதிப்பினை கொண்ட வெள்ளி தம்ளரில் இருந்த பாலை எடுத்து குடித்து விட்டு ஓரளவு நிறைவோடு வெளியே வந்தான்.

மூன்றாவது மாணவன் உள்ளே சென்றதும் காலியாக கிடந்த தங்க, வெள்ளி தம்ளர்களைப் பார்த்ததும் கோபம் தலைக்கேறியது.

" எனக்கு வெண்கல தம்ளர் பாலா ? யாருக்கு வேண்டும் இது ?

நான் என்ன அவ்வளவு இளப்பமானவனா ? எந்த விதத்தில் நான் தாழ்ந்தவனாகி விட்டேன் ? என்று அவன் மனதில் எண்ணங்கள் ஓடின . ஆயினும் குரு பாலை குடித்து வா என்றதை நினைவில் கொண்டு வருத்தத்தோடு குடித்து விட்டு வெளியே வந்தான். அவன் முகத்தில் சுரத்தே இல்லை !

பகவான் ராமகிருஷ்ணர் மூவரையும் பார்த்து , "பாலை குடித்தீர்களா ? " என்றார் .

முதல் மாணவன் மகிழ்ச்சி பூரிப்புடன் தங்கத் தடம்ளரில் பால் குடித்தேன் நான் மிகவும் கொடுத்து வைத்தவன் குருவே ! என்றான்

இரண்டாவது மாணவன் , "எனக்கு தங்கத் தம்ளர் பால் கிடைக்கவில்லை என்கிற வருத்தம் இருந்தாலும் , வெள்ளித் தம்ளரிலாவது கிடைத்ததே என்று மகிழ்ச்சி ஓரளவு இருக்கிறது குருஜி ! " என்றான் .

அவன், மூன்று பேர்களில் மிகவும் துரதிர்ஷ்டக்காரன் நானே குருஜி . எனக்கு வெண்கல தம்ளரில்தான் பால் கிடைத்தது " என்றான் .

பகவான் ராமகிருஷ்ணர் அமைதியாக எல்லாவற்றையும் கேட்ட பின் பேச ஆரம்பித்தார். " மாணவர்களே ! தங்கம் வெள்ளி வெண்கலம் ஆகிய மூன்று தம்ளர்களிலும் ஏலக்காய், குங்குமப்பூ சேர்த்து சுண்டக் காய்ச்சிய சுவையான பால்தான் ஒரே அளவில் இருந்தது இதில் எந்த வேறுபாடும் இல்லை பாலைப் பருக போகிற மூவருக்குமே அதில் இருந்த ஒரே மாதிரியான சுவையும் சத்துவ குணமும்தான் கிடைக்கப் போகிறது . அதில் வேறுபாடு இல்லை ஆனால் நீங்கள் மூவருமே நினைத்தது வேறு .

பால் ஊற்றி வைத்திருக்கும் தம்ளர்களின் மதிப்பைப் பற்றியே உங்கள் மனம் யோசித்தது . பாலின் அளவு ,குணம், சுவை , ஆகிய அனைத்தும் ஒரே மாதிரிதான் இருக்கும் என்பதை யோசிக்கவே இல்லை.

ஆகவே நீங்கள் பானத்தை விட்டுவிட்டு பாத்திரத்தையே பார்த்துள்ளீர்கள்! பாத்திரத்தை பார்த்து சந்தோஷப்படுவது அறிவு. அதில் உள்ள பண்டத்தைப் பார்த்து இன்புறுவது ஞானம் .

ஞானிகள் பண்டத்தைப் பற்றியும் அதன் பயன் பற்றியுமே பார்ப்பார்கள்.

பாத்திரங்களுக்கு மதிப்புத் தரமாட்டார்கள். மண் சட்டியில் ஊற்றி கொடுத்தால் கூட ஆனந்தமாக பருகிச் செல்வார்கள்

நீங்கள் அறிவு கொண்டு பார்க்காமல் ஞானம் கொண்டு பார்த்திருந்தால் மூவருமே ஒரே மாதிரியான மன நிலையை எட்டியிருப்பீர்கள் ! "

பகவான் ராமகிருஷ்ணர் சொல்லி முடித்ததும் மூன்று பேர்களுக்கும் அறிவிற்கும், ஞானத்திற்கும் உள்ள வேறுபாடு தெளிவாக விளங்கியது.



குர்ஆன் கூறும் ஞானம் **ஞானம்** 03




4744. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

மூசா (அலை) அவர்கள் தம் (பனூ இஸ்ராயீல் சமுதாய) மக்களுக்கு அல்லாஹ் வழங்கிய அருட்கொடைகளையும் சோதனைகளையும் நினைவூட்டி (அறிவுரை கூறி)க் கொண்டிருந்தார்கள்.

அப்போது "இந்தப் பூமியில் என்னைவிடச் "சிறந்த" அல்லது "நன்கறிந்த" மனிதர் வேறெவரும் இல்லை" என்று கூறினார்கள். அப்போது அல்லாஹ், "உம்மைவிடச் சிறந்தவரை, அல்லது உம்மை விட அதிக ஞானம்

உள்ளவரை நான் அறிவேன்" என அறிவித்தான்; "இந்தப் பூமியில் ஒரு மனிதர் இருக்கிறார். அவர் உம்மைவிட அதிகம் அறிந்தவர்" என்று கூறினான்.

மூசா (அலை) அவர்கள் "இறைவா! அவரை எனக்கு அறிவித்துக்கொடு" என்று கேட்டார்கள்.

அப்போது அவர்களிடம், "உப்பிட்ட மீனொன்றைப் பயண உணவாக எடுத்துக்கொண்டு (கடலோரமாகச்) செல்வீராக. அந்த மீனை எந்த இடத்தில் நீங்கள் தவறவிடுவீர்களோ அங்கு அவர் இருப்பார்" என்று கூறப்பட்டது.

அவ்வாறே மூசா (அலை) அவர்களும் அவர்களுடைய உதவியாளரும் (கடலோரமாக) நடந்து சென்று அந்தப் பாறையை அடைந்தனர். மூசா (அலை) அவர்கள் பாதை மாறி (தம் உதவியாளரை) விட்டுச் சென்றுவிட்டார்கள்.

அப்போது (உதவியாளரின் கூடையிலிருந்த) மீன் குதித்துத் தண்ணீரில் விழுந்துவிட்டது. அது சென்ற நீர்த்தடம் இணையாமல் வளையம் போன்று மாறிவிட்டது.

அப்போது அவர்களுடைய உதவியாளர், "நான் இறைத்தூதரிடம் சென்று, இதைப் பற்றி தெரிவிக்க வேண்டாமா?" என்று கூறிக்கொண்டு, (மூசா (அலை) அவர்களிடம்) சென்றார்.

ஆனால், (அதைக் கூறவிடாமல்) அவருக்கு மறதி ஏற்படுத்தப்பட்டது.

அந்த இடத்தைவிட்டு அவர்கள் இருவரும் கடந்து சென்றதும், மூசா (அலை) அவர்கள் "நமது காலை உணவைக் கொண்டுவாரும்! இந்தப் பயணத்தில் நாம் களைப்படைந்து விட்டோம்" என்று கூறினார்கள்.

அந்த இடத்தைக் கடக்கும்வரை அவர்கள் இருவருக்கும் களைப்பு ஏற்படவில்லை. அந்த இடத்தைக் கடந்ததும் உதவியாளர் (மீன் தப்பிச் சென்றுவிட்டதைப் பற்றி) நினைத்தார்.

"கவனித்தீர்களா? நாம் அந்தப் பாறை அருகில் ஒதுங்கியபோது அந்த மீனை நான் மறந்து விட்டேன். அதைப் பற்றிக் கூறவிடாமல் ஷைத்தான் என்னை மறக்கவைத்துவிட்டான். அது கடலில் ஆச்சரியமான முறையில் தனது வழித்தடத்தை அமைத்துச் சென்றது" என்று கூறினார்.

மூசா (அலை) அவர்கள், "அதுதான் நாம் தேடிவந்த இடம்" என்று கூறியபடி, தம் அடிச் சுவடுகளைப் பின்பற்றி வந்த வழியே அவ்விருவரும் திரும்பினர். அப்போது அந்த மீன் குதித்தோடிய இடத்தை உதவியாளர் காண்பித்தார். மூசா (அலை) அவர்கள், "இதுதான் எனக்குச் சொல்லப்பட்ட இடமாகும்" என்று கூறிவிட்டு, அவரைத் தேடிக்கொண்டு சென்றார்கள்.

.

அங்கு ஆடையால் போர்த்தியபடி "பிடரியின் மீது" அல்லது "நடுப் பிடரியின் மீது" மல்லாந்து களிர் (அலை) அவர்கள் படுத்திருந்தார்கள்.

மூசா (அலை) அவர்கள் "உங்களுக்குச் சாந்தி உண்டாகட்டும்" என்று சொன்னார்கள். உடனே களிர் அவர்கள் தமது முகத்திலிருந்து ஆடையை விலக்கி "வ அலைக்குமுஸ் ஸலாம்" என்று பதில் சலாம் சொல்லிவிட்டு, "நீங்கள் யார்?" என்று கேட்டார்கள்.

அதற்கு மூசா (அலை) "நான்தான் மூசா" என்றார்கள்.

களிர் அவர்கள், "எந்த மூசா?" என்று கேட்டார்கள்.

மூசா (அலை) அவர்கள், "பனூ இஸ்ராயீல் (சமுதாய மக்களுக்கு இறைத்தூதராக நியமிக்கப்பெற்ற) மூசா" என்று பதிலளித்தார்கள்.

"எதற்காக வந்துள்ளீர்கள்?" என்று களிர் அவர்கள் கேட்க,

"உங்களுக்குக் கற்றுத் தரப்பட்டுள்ள அறிவிலிருந்து எனக்கும் (சிறிது) நீங்கள் கற்றுத் தருவதற்காக நான் (உங்களிடம்) வந்துள்ளேன்" என்று மூசா (அலை) அவர்கள் கூறினார்கள்.

அதற்கு களிர் (அலை) அவர்கள், "என்னுடன் உங்களால் பொறுமையாக இருக்க இயலாது. உங்களுக்கு ஞானமில்லாத ஒரு விஷயத்தில் உங்களால் எவ்வாறு பொறுமையாக இருக்க முடியும்? எதைச் செய்ய

வேண்டுமென எனக்குக் கட்டளையிடப்பட்டுள்ளதோ அதை நான் செய்வதை நீங்கள் கண்டால், உங்களால் பொறுமையாக இருக்க முடியாது"என்று கூறினார்.

அதற்கு மூசா (அலை) அவர்கள், "அல்லாஹ் நாடினால் என்னைப் பொறுமையாளனாக நீங்கள் காண்பீர்கள். உங்களின் எந்தக் கட்டளைக்கும் நான் மாறுசெய்யமாட்டேன்" என்று கூறினார்கள்.

"நீங்கள் என்னைப் பின்தொடர்ந்து வருவதாயிருந்தால், எதைப் பற்றியும் நானாக (விளக்கம்) சொல்லாத வரை அதைப் பற்றி என்னிடம் நீங்கள் (விளக்கம்) கேட்கக் கூடாது" என்று களிர் (அலை) அவர்கள் சொன்னார்கள்.

பிறகு இருவரும் (கடலோரமாக) நடந்து சென்று ஒரு மரக்கலத்தில் ஏறினர். அப்போது களிர் (அலை) அவர்கள் வேண்டுமென்றே அந்த மரக்கலத்தில் ஓட்டை போட்டார்கள். உடனே மூசா (அலை) அவர்கள், "இதில் உள்ளவர்களை மூழ்கடிக்கவா ஓட்டை போடுகிறீர்? நீங்கள் மாபெரும் (அபாயமான) செயலையன்றோ செய்து விட்டீர்கள்?" என்று களிரிடம் கேட்டார்கள்.

அதற்கு களிர் அவர்கள், "உங்களால் என்னுடன் பொறுமையாக இருக்க இயலாது என்று நான் சொல்லவில்லையா?"என்று கேட்டார்கள்.

மூசா (அலை) அவர்கள், "நான் மறந்துவிட்டதை வைத்து என்னைத் தண்டித்துவிடாதீர்கள். என் விஷயத்தில் சிரமத்தைக் கொடுத்துவிடாதீர்கள்" என்று கூறினார்கள்.

தொடர்ந்து இருவரும் நடந்தார்கள்; விளையாடிக்கொண்டிருந்த சிறுவர்களைச் சந்தித்தார்கள். உடனே களிர் அவர்கள் யோசிக்காமல் சென்று, அவர்களில் ஒரு சிறுவனைக் கொன்று விட்டார்கள். அதைக் கண்டு மூசா (அலை) அவர்கள்,பெரிதும் திடுக்குற்றார்கள்; வெறுப்படைந்தார்கள். எந்தப் பாவமும் அறியாத, எந்த உயிரையும் கொல்லாத உயிரைக் கொன்றுவிட்டீர்களே? தகாத காரியத்தைச் செய்துவிட்டீர்களே?" என்று கேட்டார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (நிகழ்ச்சியைச் சொல்லிக்கொண்டே) இந்த இடத்திற்கு வந்தபோது "நம் மீதும் மூசா அவர்கள் மீதும் அல்லாஹ்வின் கருணை பொழியட்டும். மூசா (அலை) அவர்கள் மட்டும் அவசரப்பட்(டுக் கேள்வி கேட்)டிருக்காவிட்டால் இன்னும் (அரிய) விந்தை(யான பல காட்சி)களைக் கண்டிருப்பார். ஆயினும், (இவ்வாறு கேட்ட) மூசா (அலை) அவர்களை, தம் தோழர் (களிர்) முன்பாக நாணம் கவ்விக்கொண்டது" என்றார்கள்.

மூசா (அலை) அவர்கள் "இதற்குப் பிறகு ஏதேனும் உங்களிடம் நான் கேட்டால் உங்களுடன் என்னைச் சேர்த்துக்கொள்ளாதீர். என்னிடமிருந்து (இரு முறை) சமாதானத்தை ஏற்றுக் கொண்டீர்" என்று கூறினார்கள்.

மூசா (அலை) அவர்கள் பொறுமையாக இருந்திருந்தால், ஆச்சரியமானவற்றைக் கண்டிருப்பார்கள். -(பொதுவாகவே) நபி (ஸல்) அவர்கள் நபிமார்கள் எவரைப் பற்றியாவது பேச்செடுத்தால் "நம்மீதும் என்னுடைய இன்ன சகோதரர் மீதும் அல்லாஹ்வின் கருணை பொழியட்டும்" என்று முதலில் தமக்காகவும் பிறகு அந்த நபிக்காகவும் பிரார்த்திப்பார்கள்- நம் மீதும் அல்லாஹ்வின் கருணை பொழியட்டும்.

தொடர்ந்து அவர்கள் இருவரும் நடந்து, அற்பக் குணமுடைய ஒரு கிராமவாசிகளிடம் வந்தனர். அந்த மக்கள் கூடும் இடங்களுக்குச் சென்று உணவு கேட்டுச் சுற்றிவந்தனர். அவ்விருவருக்கும் விருந்தளிக்க அவர்கள் மறுத்து விட்டனர்.

அப்போது அங்கு விழுந்துவிடலாமா என்று யோசித்துக்கொண்டிருந்த ஒரு சுவரைக் கண்டனர். உடனே களிர் அதைத் தூக்கி நிறுத்தினார்கள். அதைக் கண்ட மூசா (அலை) அவர்கள், "நீர் நினைத்திருந்தால் இதற்குக் கூலியைப் பெற்றிருக்கலாமே?" என்று கூறினார்கள்.

களிர், "இதுவே எனக்கும் உமக்குமிடையே பிரியும் நேரமாகும்" என்று கூறி, மூசாவின் ஆடையைப் பிடித்தார். மேலும்,உம்மால் பொறுமையாக இருக்க முடியாதவற்றுக்கான விளக்கத்தை உமக்குக் கூறுகிறேன். அந்த மரக்கலம் கடலில் தொழில் செய்யும் ஏழைகள் சிலருக்குரியது..." என்று தொடங்கி, வசனத்தின் (18:79) இறுதிவரை சொல்லிக்காட்டினார்கள்.

அந்த மரக்கலத்தை அபகரித்துக்கொள்பவன் வந்து, ஓட்டையான நிலையில் மரக்கலத்தைக் கண்டால் அதை விட்டுவிடுவான். பிறகு அவர்கள் மூங்கில் கழியால் (ஓட்டையை அடைத்து) அதைப் பழுது பார்த்துவிடுவார்கள்.

அந்தச் சிறுவனோ, படைக்கும்போதே "இறைமறுப்பாளன்" என (இறைவனால்) தீர்மானிக்கப்பட்டு படைக்கப்பட்டான். அவனுடைய பெற்றோர் அவன்மீது மிகுந்த பாசம் வைத்திருந்தனர். அவன் பருவ வயதை அடைந்தால் அவ்விருவரையும் தவறான வழியிலும் இறைமறுப்பிலும் தள்ளிவிடுவான். (இறைவன் கூறுகிறான்:)

"அவ்விருவரின் இறைவன் அவனுக்குப் பதிலாக அவனைவிடச் சிறந்த தூய்மையான நெருங்கி உறவாடக்கூடிய குழந்தையை மாற்றாக வழங்குவான்" என நினைத்தோம். (18:81)

அந்தச் சுவர், அந்நகரத்தில் உள்ள இரண்டு அநாதைச் சிறுவர்களுக்கு உரியதாகும். அதற்குக் கீழே அவ்விருவருக்கும் உரிய புதையல் இருந்தது என்று அந்த வசனத்தின் (18:82) இறுதிவரை சொல்லிக்காட்டினார்கள்.

இதை உபை பின் கஅப் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

ஸஹீஹ் முஸ்லிம்

ர.ரா

ஞானம் 4

மறைவான ஞானம்



மறைவான ஞானம் பற்றி நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், சஹாபாக்கள், வலிமார்கள் மறைவான விஷயங்களை அறிந்து கொள்வார்கள் என குர்ஆன், ஹதீஸ் பின்வருமாறு கூறி உள்ளது.

நவீனத்துவ கொள்கைவாதிகள் " நபிகளார் மற்றும் இறைநேசர்கள் யாருக்குமே மறைவான ஞானம் இல்லை என்பதாக போலியான ஆதாரங்களை காட்டுகிறார்கள் ஆனால் குர்ஆன் , மற்றும் ஹதீஸ் மறைவான ஞானம் உண்டென்கிறது .

(நபியே!) நீர் கூறும்: “என்னிடத்தில் அல்லாஹ்வின் பொக்கிஷங்கள் இருக்கின்றன என்று நான் உங்களிடம் கூறவில்லை. மறைவானவற்றை நான் அறியமாட்டேன்; நிச்சயமாக நான் ஒரு மலக்காக இருக்கின்றேன் என்றும் நான் உங்களிடம் சொல்லவில்லை; எனக்கு (வஹீயாக) அறிவிக்கப்பட்டதைத் தவிர (வேறு எதையும்) நான் பின்பற்றவில்லை.” இன்னும் நீர் கூறும்: “குருடனும் பார்வையுடையவனும் சமமாவாரா? நீங்கள் சிந்திக்க வேண்டாமா?” (அல்குர்ஆன் : 6:50)

இறைவன் சகலவற்றையும் அறிந்தவன் இறைவனுக்கு தெரியாத எந்த ஒன்றும் இல்லை அந்த வசனத்தில் மறைவானவற்றை அறிய மாட்டேன் என்றால் அதன் விளக்கம் நானாக அறிந்து கொள்ள முடியாது மாறாக அல்லாஹ் எனக்கு பிரத்தியேகமாக அறிவித்து தந்தே அந்த மறைவான விஷயத்தை அறிந்து கொள்வேன் என்று இந்த வசனத்தில் தெளிவுபடுத்தித்தான்

மற்றொரு இடத்தில் பின்வருமாறு அல்லாஹ் கூறுகிறான்

“(அவன் தான்) மறைவானாவற்றை அறிந்தவன்; எனவே, தான் மறைத்திருப்பவற்றை அவன் எவருக்கும் வெளியாக்கமாட்டான். (அல்குர்ஆன் : 72:26)

“தான் பொருந்திக் கொண்ட தூதருக்குத் தவிர - எனவே அவருக்கு முன்னும், அவருக்குப் பின்னும் பாதுகாவலர்க(ளான மலக்குக)ளை நிச்சயமாக நடத்தாட்டுகிறான்.

(அல்குர்ஆன் : 72:27)

நபி ஸல்லல்லாஹு அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கூறினார்கள் " மண்ணறையின் வேதனை குரலை நான் என் செவிகளால் கேட்பது போன்று நீங்களும் கேட்பீர்களாயின் இனிமேல் எந்த ஜனாசா நல்லடக்கம் செய்யாதிருந்து விடுவீர்களோ என நான் அஞ்சுகிறேன் . அத்தகைய அச்சம் எனக்கு இல்லையாயின் உங்களுக்கும் புதைகுழியில் இருப்பவர்களின் அவலக் குரலைச் செவியேற்க வைக்குமாறு பிரார்த்தனை செய்திருப்பேன் " என நபி ஸல் அவர்கள் கூறியுள்ளார்கள் சையத் பின் ஸாபித் (ரலி) முஸ்லிம் மிஷ்காத்

ஒருசமயம் நபிஸல் அவர்கள் எங்களுக்கு அறிவுரை பகர்ந்து கொண்டிருக்கும்போது, " சிருஷ்டிகளின் உற்பத்தியிலிருந்து சுவர்க்கவாசிகள் சுவர்க்கத்திலும் நரகவாசிகள் நரகத்திலும் நுழைவது வரையிலான சகல விஷயங்களையும் கூறிக் காட்டினார்கள் . அவற்றை பாடமிட்டவர்கள் பாடமிட்டுக் பெற்றுக்கொண்டனர் ஏனையோர் மறந்துவிட்டனர்"

உமர் (ரலி) புகாரி , மிஷ்காத்

அனஸ் (ரலி ) அவர்கள் அறிவிப்பதாவது: "ஒரு முறை நபி ஸல் அவர்களும் , அபூபக்கர் , உமர் , உஸ்மான் (ரலி ) ஆகியோரும் உஹது மலை மீது ஏறினார்கள் .அது அவர்களுடன் நடுங்கியது . அப்போது நபி (ஸல்) அவர்கள், "உஹதே ..! அசையாமல் இரு ! ஏனெனில் உன் மீது ஓர் இறைத் தூதரும் (நானும் ) , ஒரு சித்தீக்கும் , இரண்டு உயிர் தியாகிகளும் உள்ளனர் என்று கூறினர்கள் .ஷஹீஹ் புகாரி

நபி (ஸல் ) அவர்களின் மறைவிற்குப் பின்னர் இரு ஸஹாபாக்களும் ஷஹீதாக்கப்படுவார்கள் என்று உயிருடன் இருக்கும்போதே அறிவித்துவிட்டார்கள் .

வலிமார்களின் மறைவான ஞானம்

மரணத்தருவாயில் இருந்த அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்கள் என்னிடம் கூறினார்கள்." ஆயிஷாவே ! நான் விட்டுச் செல்கின்ற வராஃஸத் சொத்துக்களை நீயும் உனது இரு சகோதரர்களும் மற்றும் இரு சகோதரிகளும் இறைவன் குர்ஆனில் கூறியபடி பங்கு பிரித்துக் கொள்ளுங்கள் " .

நான் கேட்டேன் . " எனது அருமைத் தந்தையாரே ! இரு சகோதரிகள் என்கிறீர்களே ! அஸ்மா என்ற ஒரு சகோதரி தானே எனக்கு உள்ளார் இன்னொரு சகோதரி யார் ? ஆயிஷாவே ! எனது மனைவியர் பின்து காரிஜா கர்ப்பமாக உள்ளார் .அவர் ஒரு பெண் குழந்தையை ஈன்றெடுப்பார் . எனவேதான் உனக்கு இரு சகோதரிகள் என்றேன். அவர்கள் கூறியது போன்று பின்து காரிஜா அவர்கள் "உம்மு குல்தூம்" என்ற பெண் குழந்தையை ஈன்றெடுத்தாள் .

ஆயிஷா (ரலி ) அவர்கள் முஅத்தா , பைஹகீ

திண்ணமாக உமர் (ரலி) அவர்கள் ஒரு படையை அனுப்பி வைத்தார்கள். சாரியா (ரலி ) அவர்களை படைக்குத் தளபதியாக நியமித்தார்கள் . மதீனாவில் சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்த உமர் (ரலி) அவர்கள்

"யா சாரியா அல் ஜபல் " சாரியாவே ! மலையைக் கவனித்து சண்டையிடுங்கள் என சப்தமிட்டார்கள் .

பிறகு படையிலிருந்து ஒரு தூதர் வந்து சொன்னார் . அமீருல் முஃமினீன் அவர்களே ! எங்கள் எதிரிகளோடு நாங்கள் போர் புரிந்தபோது அவர்கள் எங்களை விரட்டியடித்தார்கள் " அப்போது " யா சாரியா அல் ஜபல் " என்ற ஒரு சத்தம் கேட்டது பின்னர் மலையை எங்களுக்கு பின்புறமாக ஆக்கிக் கொண்டு போர் செய்தோம் அல்லாஹ் அவர்களை விரட்டி அடித்தான் இப்னு உமர் (ரலி) பைஹகீ (தலாயிலுந் நுபுவ்வா )

# ர.ரா

ஞானம் 5

அறிவிற்கும் ஞானத்திற்குமுள்ள வித்தியாசத்தை நண்பர்

Alaudin Muthalief

எழுதிய பின்னூட்டத்தை பதிவாக முன்னூட்டமாக உங்களுக்கு தருகிறேன் .

அறிவிற்கும் ஞானத்திற்குமுள்ள வித்தியாசத்தை அறிந்து கொள்ள ஓர் உதாரணம்.

ஷைத்தான் அல்லாஹுக்கு இணைவைக்கக்கூடாது என்றத் தெளிவான *அறிவாற்றல் உடையவன்.* ஆனால் அல்லாஹ்வின் கட்டளைக்கு அடிபணிய வேண்டும் என்ற *ஞானம் இல்லாததால்* அவன் அல்லாஹுவின் லஃனத்தைப் பெற்றான்.

அல்லாஹுவைத் தவிர வணக்கத்திற்குரிய வேறு நாயன் இல்லை என்பது குர்ஆன் தெளிவுபடுத்தும் அறிவு. ஆனால் அல்லாஹ் கண்ணியப்படுத்த சொல்பவர்களைக் கண்ணியப்படுத்த வேண்டும் என்பது ஞானம்.

ஸஹாபாக்கள் வெறும் குர்ஆனின் *அறிவை* மட்டும் கொண்டு வெற்றி பெறவில்லை. நபியவர்களிடமிருந்து குர்ஆனின் *ஞானத்தைப்* பெற்றார்கள். அதன் மூலம் வெற்றியடைந்தார்கள்.

அல்லாஹ் தன் திருமறையில் *நபியவர்கள் ஸஹாபாக்களுக்கு குர்ஆனை ஓதிக்காட்டினார்கள், அவர்களின் உள்ளத்தைத் தூய்மைப் படுத்தினார்கள்*. அவர்களுக்கு குர்ஆனின் *ஞானத்தை (ஹிக்மா)* வழங்கினார்கள் என்றுக் குறிப்பிடுகிறான்.



ஞானம் 6

மெய்ஞானம் மெய் ஞானம் என்பது என்ன?

ஞானம் என்பது என்ன? அதை எவ்வாறு அடைவது? என்று பலருக்கு கேள்விகள் இருக்கலாம்.

ஞானம் அடைவதற்கு பல வகையான முயற்சிகளையும், பயிற்சிகளையும், பலர் மேற்கொண்டு வந்துள்ளனர். இதில் எத்தனை பேர் வெற்றி பெற்றார்கள் என்பதை பார்த்தால், மிக சொற்பமான நபர்கள் மட்டுமே ஞானம் அடைந்துள்ளனர்.

அப்போ , ஞானம் என்பது அடைவதற்கு மிக கடுமையான விஷயமா என்றால் நிச்சயமாக கிடையாது.

ஞானமடைய முயற்சி செய்த பலர் இறுதி வரையில் எதையுமே அடையாமல் மரணித்ததற்கு காரணம், பலர் ஞானம் என்பது ஏதோ ஒரு 'வித்தை' அல்லது ஒரு 'சக்தி' என்று எண்ணுகிறார்கள்.

ஞானம் என்பது அடையக்கூடிய ஒரு விஷயம் அல்ல. ஞானம் என்பது ஒரு 'தெளிவு நிலை ' மட்டுமே என்பது உணராததால், அவர்கள் ஞானத்தை தேடிக்கொண்டே இருந்துவிட்டார்கள் கடைசி வரை .

ஒரு பெண் ரொம்ப நாள் " ஜென் " பற்றி ஒரு குருவிடம் பயின்று கொண்டிருந்தாள். அவளுக்கு ஞானம் கிடைக்கவில்லை .

அந்த பெண் : " ஒரு நாள் ராத்திரி நல்ல நிலா . நான் மூங்கில் போட்டுக் கட்டிய பழைய பக்கெட்டில் தண்ணீர் எடுத்துச் சென்று கொண்டிருந்தேன் .அப்போது மூங்கில் உடைந்து , பக்கெட்டின் அடிப்பாகம் சட்டென்று விழுந்துவிட்டது .

குரு ...." என்ன...? "என்று சைகையால் அவளிடம் கேட்டார் .

" இப்படியும் , அப்படியும் நான் பழைய பக்கெட்டைக் காப்பாற்ற முயற்சித்தேன் . திடீர் என்று அடிப்பாகம் விழுந்து விட்டது.

" ..பாத்திரத்தில் இனி தண்ணீரும் இல்லை . தண்ணீரில் இனி நிலவும் இல்லை " _ என்றாள் அவள் .

குரு சொன்னார் : " அவள் ஞானம் பெற்று விட்டாள். "

உண்மையான ஞானம் என்பது என்னவென்று சொல்லட்டுமா? “அடைவதற்கு இந்த உலகில் எதுவுமே கிடையாது” என்பதை உணரும் தெளிவு நிலைதான் ஞானம் என்று ஞானிகள் கூறுகின்றனர் .

இந்த உலக ஆசைகளுக்கு அடிமையாகி, மன இச்சைகளை, தீர்த்துக் கொள்ள, இந்த வாழ்க்கையை பயன்படுத்தாமல். இந்த வாழ்க்கையில் பற்று வைக்காமல், மிக உயரிய ஞானமாக இருப்பதால்; அந்த ஞானத்தை அடைந்த ஞானிகளை இந்த சமுதாயம் மிகவும் மதித்துப் பாராட்டியது.

மீண்டும் ஞானத்துக்கு வருவோம். ஞானம் என்பது அடையக்கூடிய ஒரு பொருளோ பயிற்சி செய்ய வேண்டிய ஒரு விஷயமோ கிடையாது. ஞானம் அடைவது எவ்வாறு என்று பார்த்தால், ஞானம் அடைவது முதலில் நம்மில் இருந்துதான் தொடங்க வேண்டும்.

இறைவன் நம் உடலை எவ்வாறு படைத்திருக்கிறார், என்பதை முதலில் கவனிக்க வேண்டும். உணர வேண்டும், ஆராய்ச்சி செய்ய வேண்டும். மனம், புத்தி, மற்றும் உயிர் எவ்வாறு செயல்படுகிறது என்பதை கவனிக்க வேண்டும்.

அடுத்ததாக நம்மை சுற்றி இருக்கும் மனிதர்கள், நம் குடும்பத்தார்கள், உறவினர்கள், நண்பர்களை ஆராய வேண்டும். அவர்கள் எவ்வாறு படைக்கப்பட்டிருக்கிறார்கள்? என்னென்ன குணாதிசயங்களுடன் படைக்கப்பட்டிருக்கிறார்கள்? அவர்கள் எப்படி வாழ்கிறார்கள்? அவர்களுக்கும் நமக்கும் என்ன உறவுகள் ஏற்படுகின்றன? எப்படி ஏற்படுகின்றன? என்ன உணர்வுகள் ஏற்படுகின்றன? ஏன் அந்த உணர்வுகள் ஏற்படுகின்றன? இவையெல்லாம் ஏன் ஏற்படுகின்றன என்பதை சிந்திக்க வேண்டும், ஆராய வேண்டும்.

அடுத்ததாக நம்மை சுற்றி இருக்கும் விலங்குகள். அவை எவ்வாறு படைக்கப்பட்டிருக்கின்றன? அவை எவ்வாறு வாழ்கின்றன? எவ்வாறு அன்பு கொள்கின்றன? என்பன போன்ற விஷயங்களை ஆராய வேண்டும்.

அடுத்ததாக இயற்கை. மரம், செடி, கொடி, தாவரங்கள், பூச்செடி போன்றவற்றை கவனிக்க வேண்டும். பூக்கள் எவ்வாறு மலர்கின்றன? இலைகள் எவ்வாறு காய்கின்றன? காய்ந்த இலைகள் எவ்வாறு உதிர்கின்றன? அதன் வேர்கள் எவ்வாறு ஆழமாகச் செல்கின்றன? போன்றவற்றை கவனிக்க வேண்டும், ஆராயவேண்டும்.

அடுத்ததாக வானம், பூமி, நிலா, சூரியன், கோள்கள், நட்சத்திரங்கள், போன்றவை, எவ்வாறு படைக்கப்பட்டு இருக்கின்றன? அவை எவ்வாறு இயங்குகின்றன? என்பதை உன்னிப்பாக கவனிக்க வேண்டும்.

ஞானம் அடைய ஒரே வழி, நம்மை சுற்றி இருக்கும் அத்தனை உயிர்களும், அத்தனை படைப்புகளும், எவ்வாறு படைக்கப்பட்டன, என்பதை உணர்ந்து கொள்வதுதான்! அறிந்து கொள்வதில்லை. மீண்டும் சொல்கிறேன் அறிந்துகொள்வது அனைவராலும் முடியும், உணர்ந்து கொள்ளும் உணர்வுதான் ஞானம்.

இதைத்தான் குர்ஆனில் இறைவன் .

اَفَلَا يَنْظُرُوْنَ اِلَى الْاِ بِلِ كَيْفَ خُلِقَتْ

(நபியே!) ஒட்டகத்தை அவர்கள் கவனிக்க வேண்டாமா? அது எவ்வாறு படைக்கப்பட்டிருக்கிறது என்று-

(அல்குர்ஆன் : 88:17)

وَاِلَى السَّمَآءِ كَيْفَ رُفِعَتْ

மேலும் வானத்தை அது எவ்வாறு உயர்த்தப்பட்டிருக்கிறது? என்றும்,

(அல்குர்ஆன் : 88:18)

وَاِلَى الْجِبَالِ كَيْفَ نُصِبَتْ

இன்னும் மலைகளையும் அவை எப்படி நாட்டப்பட்டிருக்கின்றன? என்றும்,

(அல்குர்ஆன் : 88:19)

وَاِلَى الْاَرْضِ كَيْفَ سُطِحَتْ

இன்னும் பூமி அது எப்படி விரிக்கப்பட்டிருக்கிறது? (என்றும் அவர்கள் கவனிக்க வேண்டாமா?)

(அல்குர்ஆன் : 88:20)

فَذَكِّرْ اِنَّمَاۤ اَنْتَ مُذَكِّرٌ

ஆகவே, (நபியே! இவற்றைக் கொண்டு) நீர் நல்லுபதேசம் செய்வீராக; நிச்சயமாக நீர் நல்லுபதேசம் செய்பவர் தாம்.

(அல்குர்ஆன் : 88:21)

இதுதான் ஞான உபதேசமாகும் ; இதைத்தான் நபிகளார் செய்தார்கள்

அறிந்து கொள்வதற்கும் உணர்ந்து கொள்வதற்கும் என்ன வித்தியாசம் என்றால் உடலுக்கும் உயிருக்கும் உள்ள வித்தியாசம்

ஒரு பூனை எவ்வாறு வாழ்கிறது என்பதை யார் வேண்டுமானாலும் பார்த்து அல்லது படித்து தெரிந்து கொள்ளலாம் . ஆனால் பூனையாக பிறப்பு எடுத்தால் மட்டுமே பூனை என்றால் என்ன என்பதை ஒரு உயிரால் உணர்ந்து கொள்ள முடியும்.

எதையாவது அடைவதல்ல ஞானம் “அடைவதற்கு இந்த உலகில் எதுவுமே இல்லை என்ற தெளிவுதான் ஞானம்”. அறிந்து கொள்வது அறிவு , உணர்ந்து கொள்வது ஞானம்.

ர.ரா

ஞானம் 7

ஞானம் அடைதல்

செயலில் செயலின்மையையும், செயலின்மையில் செயலையும் யார் காண்கிறானோ அவனே மனிதருள் ஞானி, அவனே யோகி. அவன் எதைச் செய்தாலும் அதை தவம் போல் செய்து முடிக்கிறான்.

நாம் அடைவதற்கு எதுவும் இல்லை என்று கண்டுபிடித்த நிலையிலயே நமது அனுபவங்கள் எல்லாம் பலம் இழந்து விடுகின்றன,

நமது அனுபவங்கள் எல்லம் பலம் இழந்த நிலையில் , 'நான் ' என்னும் அனுபவிப்பவனும் பலம் இழந்து விடுகின்றான்,

இங்கு தன்னை இழந்த நலம் செயலுக்கு வருகிறது. மெய்பொருள் இயக்கத்தின் ஒரு பகுதியாக நமது இயக்கமும் கலந்து விடுகின்றது .

இப்படிப்பட்ட ஞானியால் பிரபஞ்சத்திலிருந்து எளிதாக எதையும் பெற முடிகிறது. பிறருக்கு யாரிடமும் கேளாமல் அதை கொடுக்கவும் முடிகிறது .இவர்தான் ஞானம் அடைந்தவராகிறார் .

' ரையோகான் ' இன்னும் ஜென் குரு மலையடிவாரத்தில் ஒரு சின்ன குடிசையில் ரொம்ப எளிய வாழ்க்கை வாழ்ந்து வந்தார் .

ஒருநாள் சாயங்காலம் அவர் வெளியே போயிருந்த போது குடிசைக்கு ஒரு திருடன் வந்தான் . திருடத்தான் எதுவுமில்லை ரையோகான் வீடு திரும்பிய போது , திருடனை பார்த்தார் .

"நீ ரொம்ப தூரம் கடந்து இங்கே திருட வந்து இருக்கிறாய் . வெறும் கையோடு நீ போகக்கூடாது . இதோ என் ஆடைகளை என் பரிசாக எடுத்துச் செல் என்றார் .

திருடன் சற்றே ஆச்சரியப்பட்டு அவர் ஆடைகளை எடுத்துக்கொண்டு நழுவிப்போனான்.

குரு உடம்பில் ஒரு ஆடை எதுவும் இல்லாமல் மேலே வானத்தில் முழு நிலவைப் பார்த்துக் கொண்டிருந்தார் . "பாவம் அவன் ! இந்த அழகான நிலவை அவனுக்குக் கொடுத்திருக்கலாமே" என்றார் .

ர.ரா



ஞானம் 18

சுஃப்யான் தௌரீ ( கிபி 715 - 778)

தௌரீ என்பது இட்ட பெயரல்ல , திட்டிய பெயர் . ஆமாம், ஒருநாள் பள்ளிவாசலுக்குள் மறதியாக இவர் இடது காலை முன் வைத்து உள்ளே போக, " மாடே ( யா..தௌரீ ) என்று ஒரு அசரீரி கேட்டது.

உடனே சுஃப்யான் மயங்கி கீழே விழுந்து விட்டார் .பின் எழுந்த இவர் தன்னைத் தானே தௌரீ ...தௌரீ ...(ஓ.. மாடே ., .மாடே ) என்ன காரியம் செய்து விட்டாய் என்று தன்னைத் தானே கடிந்து கொண்டார். அன்றிலிருந்து இவருக்கு "தௌரீ " என்ற பெயர் புகழ்பட ஆயிற்று

ஒரு நள்ளிரவு கொஞ்சம் அதிகமாக சாப்பிட்டுவிட்ட தௌரீ, 'கழுதைக்கு அதிகமாக தீனி போட்டால் அதனிடமிருந்து அதிகமாக வேலை வாங்க வேண்டும் என்று சொல்லி தன்னையே தான் திட்டி விட்டு ,அன்று இரவு முழுதும் தொழுது கொண்டே இருந்தார் .

ஒரு நாள் ஒருவர் வந்து தௌரீயிடம் " அந்த ஆண்டு தனக்கு புனித யாத்திரை செய்யும் வாய்ப்புக் கிட்டவில்லை என்று சொல்லி பெருமூச்சு விட்டார் . அதை பார்த்த தௌரீ ,

" நான் 40 முறை ஹஜ் செய்து இருக்கிறேன் அவை அத்தனையின் நன்மைகளையும் நான் உமக்கு கொடுத்துவிடுகிறேன் . நீங்கள் இப்போது விட்ட பெருமூச்சின் நன்மைகளை எனக்கு கொடுப்பீர்களா ? " என்று கேட்டார் .

செய்த செயல் அல்லது செய்ய நினைத்த ஒன்று... இவற்றின் பின்னால் இருக்கும் ஆழமான உணர்ச்சிகள் என்பவை எத்தனை முக்கியமானவை என்பதை சூஃபிகள் நன்கு அறிந்து வைத்திருந்தார்கள்,

கூஃபா நகரில் நீதிபதி பதவிக்கான ஆணையை கலீபா

அல்மஹதி தவ்ரீயின் கையில் வழங்கியபோது , அதை பெற்றுக் கொண்டு வெளியில் வந்த தௌரீ அதை தஜ்லா நதியில் வீசி எறிந்து விட்டு ஓட்டம் பிடித்தார்.

பதவிகள் பின்னால் ஓடுபவர்கள் சாதாரண மனிதர்கள். பதவியை கண்டு ஓடியவர்கள் சூஃபிகள்.

ஞானம் 19
விலாயத்து
لَهُمُ الْبُشْرٰى فِى الْحَيٰوةِ الدُّنْيَا وَفِى الْاٰخِرَةِ لَا تَبْدِيْلَ لِـكَلِمٰتِ اللّٰهِ ذٰلِكَ هُوَ الْفَوْزُ الْعَظِيْمُ



"அவர்களுக்கு இவ்வுலக வாழ்க்கையிலும், மறுமையிலும் நன்மாராயமுண்டு; அல்லாஹ்வின் வாக்கு(றுதி)களில் எவ்வித மாற்றமுமில்லை - இதுவே மகத்தான பெரும் வெற்றி ஆகும்" (குர்ஆன் : 10:64)
அல்லாஹுத் தஆலா தனது வலிமார்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் அளித்துள்ள பாக்கியங்களை பற்றி இந்த வசனம் விவரிக்கிறது
ஒலித்தனம் என்பது இரண்டு வகை . எல்லா மூமின்களுக்கும் பொதுவானது . ஒன்று இதனை குறித்து இறைவன் தன் திருமறையில் " அல்லாஹ் மூமின்களுக்கு ஒளியாக இருக்கிறான் இருள்களிலிருந்து பிரகாசத்தின்பால் அவர்களை வெளியாக்குகிறான் என்று கூறி இருக்கிறான்
மற்றொன்று அவனது நல்லடியார்களுக்கு மட்டும் சொந்தமானது. ஹக்கில் அடியான் அழிந்து , அவனுடன் ஸ்திரமாகுவதற்கு விலாயத்து என்று பெயர் . அற்புத செய்கைகள் இதற்குத் தேவை இல்லை
இவ்வாறான அற்புத செய்கைகள் அதாவது "கராமத்தே கவ்னியா"
(இப்பிரபஞ்சத்தை சேர்ந்த அற்புதச் செய்கைகள் ) முஸ்லீம் அல்லாத சமூகத்தினரும் நிகழ்த்துவர்
ஆனால் பிரபஞ்சத்தில் கராமத்தே கல்பிய்யா அதாவது இருதய சம்பந்தமான அற்புதங்கள் இறைஞானம், வேதத்தின் ரகசியங்கள் போன்றவை இருக்க வேண்டியது அவசியமாகும். எனவே கராமத்தே கவ்னிய்யாவும் , கராமத்தே கல்பிய்யாவும் சிலரிடம் ஒன்று சேர்ந்து இருக்கவும் கூடும் .
ஹளரத் ஷெயகுனா செய்யிதுனா அப்துல் காதிர் ஜீலானி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களிடம், ஷெய்கு அபூ மத்யனில் மகுரிபிய்யி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களிடம் இரண்டும் பொதிந்திருந்தன .
கீழ் நாட்டிலுள்ளவர்களில் ஷெய்குனா அப்துல் காதிர் ஜீலானி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களைப் போன்றும் ,
மேல் நாட்டில் ஷெய்கு அபூ மத்யனில் மகுரிபிய்யி ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களைப் போன்றும் அற்புதங்களை வேறு எவரும் செய்யவில்லை இவ்விருவருக்கும் இவ்விரு வகையான அற்புதங்களும் இருந்தன .
சிலருக்கு கராமத்தே கவ்னிய்யா இல்லாமல் இருக்கும் .கராமத்தே கல்பிய்யா அவர்களுக்கு நிறம்ப இருக்கலாம் . ஆனால் கராமத்தே கவ்னிய்யா இல்லாமல் இருக்கவும் கூடும் . இவ்வாறுதான் ஒலிமார்களில் "அஹ்லுல் பனா " வைச் சேர்ந்தவர்களில் பெரும்பாலானவர்களுக்கு இருந்துவருகிறது .
தண்ணீரின் மீது நடத்தல் , வானத்தில் பறத்தல் , மிகவும் தூரமான இடத்தை ஒரு சொற்ப நேரத்தில் கடத்தல் போன்ற கராமத்தே கவ்னிய்யாவை ராஹிப்களுக்கும் (கிறிஸ்துவ பாதிரி மார்களுக்கும்) பல்ஸஃபீ (தத்துவ சாஸ்திரி) களுக்கும் கூட நடந்திருக்கின்றன இவ்விதமான கராமத்துகளை இவர்களுக்கு அளித்து இவர்களை இறைவன் கொஞ்சம் கொஞ்சமாக பிடித்து விடுவான்.
ரிஸாலத்து ( நுபுவ்வத்து)ம் , விலாயத்து (ஒலித்தன்மைய )ம் ஒரு அரசாங்கத்தை போல் உள்ளவை . இவை இறைவனுக்குச் சொந்தமானவை .இதில் அடியானுடைய முயற்சிக்கு கொஞ்சமும் சம்பந்தம் இல்லை .
விலாயத் என்பது அமைச்சர் பதவியை போன்றது.
"(நபியே!) உம்முடைய இறைவன் நிழலை எப்படி நீட்டுகின்றான் என்பதை நீர் பார்க்கவில்லையா? (குர்ஆன் : 25:45)
"நாம் இப்பூமியை விரிப்பாக ஆக்கவில்லையா?
இன்னும், மலைகளை முளைகளாக ஆக்கவில்லையா? " (குர்ஆன் : 78:6,7)
அல்லாஹ் தன் பரிசுத்த திருமறையில் அவ்லியாக்களை பற்றி " நிழல் (ளில்லூ ) என்றும் மலை (ஜிபால் ) என்றும் வர்ணித்து உள்ளான் (ரூஹுல் பயான் )
" என்னுடைய உம்மத்துகளில் 40 பேர்கள் நபி இப்ராஹிம் (அலை ) அவர்களுடைய இருதயத்தை உடையவர்களாக என்றும் வலம் வந்து கொண்டே இருப்பார்கள்
وَلَا تَطْرُدِ الَّذِيْنَ يَدْعُوْنَ رَبَّهُمْ بِالْغَدٰوةِ وَالْعَشِىِّ يُرِيْدُوْنَ وَجْهَهٗ مَا عَلَيْكَ مِنْ حِسَابِهِمْ مِّنْ شَىْءٍ وَّمَا مِنْ حِسَابِكَ عَلَيْهِمْ مِّنْ شَىْءٍ فَتَطْرُدَهُمْ فَتَكُوْنَ مِنَ الظّٰلِمِيْنَ
(நபியே!) தங்கள் இறைவனின் திருப்பொருத்தத்தை விரும்பி காலையிலும் மாலையிலும் பிரார்த்தித்துக் கொண்டிருப்பவர்களை நீங்கள் விரட்டி விடாதீர்கள்! அவர்களுடைய கணக்கிலிருந்து எதுவும் உங்களுடைய

பொறுப்பாகாது. உங்களுடைய கணக்கிலிருந்து எதுவும் அவர்களுடைய பொறுப்பாகாது. ஆகவே, நீங்கள் அவர்களை விரட்டினால் அநியாயக்காரர்களில் நீங்களும் ஒருவராகி விடுவீர்கள்!
(அல்குர்ஆன் : 6:52)
அல்லாஹுத்தஆலா அந்த நபர்களை கொண்டுதான் பூலோகத்தில் வாழ்பவர்களின் பிணிகளைப் போக்குவான் . அவர்களுக்காக மழையை பொழியச் செய்வான் அவர்களைக் கொண்டே தான் பூலோகத்திலுள்ளவர்களுக்கு உதவி புரியப்படும் என்பதாய் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் திருவாய் மலர்ந்தருளிய ஹதீஸ் தபறானீயில் காணக் கிடைக்கின்றது.
ர.ரா

ஞானம் 20

துன்னூன் மிஸ்ரி (கிபி 796 - 861)    19-10-2020

எகிப்து நாட்டுக்கு அரேபிய பெயர் மிஸ்ர் .மிஸ்ர் நாட்டுக்காரர்களை 'மிஸ்ரி' என்று அழைப்பார்கள் . துன்னூன் என்பதும் அவர் சொந்தப் பெயர் அல்ல.

'தௌபான்' என்பதுதான் இயற்பெயர் .

துன்னூன் என்றால் 'மீனின் மனிதர் ' என்று பொருள்.

ஒரு கப்பல் பிரயாணம் செய்து கொண்டிருக்கும்போது ஒருவரின் விலை உயர்ந்த கல் ஒன்று காணாமல் போய்விட்டது . இவரும் இறையச்சத்தால் பயந்த சுபாவம் உடையவர் . யார் பார்த்தாலும் இவர்தான் எடுத்திருப்பார் என்று எண்ணத் தோன்றும். எனவே சந்தேகப்பட்டு அனைவரும் இவரை அடிக்கவும் . இவர் இறைவனிடம் இறைஞ்சினார் .

உடனே கடலில் நூற்றுக்கணக்கான மீன்கள் மேலே வந்து தலையை நீட்டின .அதில் ஒன்றின் வாயில் காணாமல் போன அந்தக் கல் இருந்தது. அன்றிலிருந்து இவருக்கு இப்பெயர் வந்ததாக கூறப்படுகிறது.

'தவ்பா என்றால் என்ன ? '

என்று ஒருவர் துன்னூனிடம் கேட்டார்

" செய்த பாவத்துக்கு வருந்தி இறைவனிடம் மன்னிப்பு கேட்பது பொதுமக்களுக்கான தவ்பா . இறைவனை ஒரு கண நேரமேனும் மறந்தால் அதற்காக இறைவனிடம் மன்னிப்புக் கோருவது சூஃபியாக்களின் தவ்பா என்றார் துன்னூன்

ஒருமுறை மக்காவுக்கு புனித யாத்திரை செய்தபோது அது நடந்தது .

அரபாத் பெருவெளியில் மிஸ்ரி தங்கியிருந்தார் . அங்கு தங்குவது ஹஜ்ஜின் முக்கிய கடமைகளில் ஒன்றாகும். அங்கு தங்காமல் ஹஜ் நிறைவேறாது.

அங்கு தங்கிய மிஸ்ரி இரவு முழுவதும் இறை வணக்கத்தில் ஈடுபட்டு இருந்தார். அப்போது அவருக்கு ஒரு காட்சி காண்பிக்கப்பட்டது

அதில் சிரியாவின் தலை நகரான டமாஸ்கஸைச் சேர்ந்த அஹமது என்ற ஒரு செருப்பு வணிகரின் முகம் காட்டப்பட்டது .அதைத் தொடர்ந்து அவருடைய ஹஜ்தான் அந்த ஆண்டு இறைவனால் ஏற்றுக் கொள்ளப்பட்ட முதல் ஹஜ் ஆகும் என்றும் எனினும் அஹ்மது அந்த ஆண்டு ஆட்சி செய்ய மக்காவுக்கு வரமுடியவில்லை என்றும் சொல்லப்பட்டது .

மிஸ்ரிக்கு ஒன்றும் புரியவில்லை. ஹஜ் உடைய காலத்தில் மக்காவுக்கு வந்து எல்லா சடங்குகளையும் நிறைவேற்றி அரஃபாத் பெருவெளியில் தங்காமல் போனால் ஹஜ் நிறைவேறாது அப்படியிருக்க மக்காவுக்கு வராமல் ஒருவரால் அதுவும் செருப்பு செய்து விற்றுக் கொண்டிருக்கும் இந்த ஒருவரால் எப்படி ஹஜ்ஜை நிறைவேற்ற முடியும் அதுவும் அவருடைய ஹஜ்தான் முதலில் இறைவனால் ஏற்றுக் கொள்ளப்பட்டது என்று வேறு அசரீரி !

ரொம்ப குழம்பிப் போன மிஸ்ரி ஹஜ்ஜை முடித்துக்கொண்டு டமாஸ்கஸ் சென்று அந்த செருப்பு வியாபாரி அஹமதைச் சந்தித்தார் .

யாரோ ஒரு சூஃபி தன்னை தேடி வந்திருப்பது கண்ட அந்த ஏழை மிஸ்ரியை வரவேற்று உபசரித்து உணவு அளித்தார் . பின்பு இரவு நேரத்தில்...

"இந்த வருடம் நீங்கள் ஹஜ் செய்தீர்களா ? என்று லேசாக கேள்வி போட்டார் மிஸ்ரி .

"செய்யலாம் என்று ரொம்ப

ஆசையாகதான் இருந்தேன் ஆனால் முடியவில்லை " என்று அஹமது பதில் சொன்னார் .

அந்த பதிலை கேட்டு புன்னகைத்த மிஸ்ரி தனக்கு தோன்றிய காட்சியும் கேட்ட குரலும் ஷைத்தானின் வேலையாகத்தான் இருக்கும் என்று நினைத்தார் . பின் ஏன் ஹஜ் செய்யவில்லை ? என்று அவரிடம் கேட்டார் .

" அது ஒரு பெரிய கதை "

" என்ன கதை ?

"நான் ஹஜ்க்கு போகவேண்டும் என்று ரொம்ப காலமாக ஆசைப்பட்டு வந்தேன். அதற்கான பணம் என்னிடம் இல்லை அதனால் கொஞ்சம் கொஞ்சமாக அதற்காக பணம் சேர்க்க ஆரம்பித்தேன் கடைசியில் ஹஜ் செய்வதற்கான பணம் சேர்வதற்கு எனக்கு 40 வருடங்கள் ஆகிவிட்டன . இந்த வருஷம்தான் ஹஜ் செய்யலாம் என்று நினைத்தேன் இதுதான் 40 வருஷம் .

"இப்படி நான் ஆசைப்பட்டு கொண்டிருந்தபோது ஒரு நிகழ்ச்சி நடந்தது .பக்கத்து வீட்டுக்கு போன என் மகன் திரும்பி வந்து அழுதான் ஏன் என்று கேட்டேன் .

"பக்கத்து வீட்டில் இறைச்சி சமைத்து சாப்பிட்டுக் கொண்டிருந்தார்களாம் . இவன் கொஞ்சம் கேட்டிருக்கிறான் அவர்கள் இவனுக்கு தராமல் என் மகனை விரட்டி விட்டார்கள் . அதனால் தான் அழுது கொண்டே என்னிடம் வந்து சொன்னான் .

ச்சே ...என்ன மனிதர்கள் ஒரு சின்ன குழந்தைக்கு கொஞ்சம் கூட கொடுக்காமல் இப்படி விரட்டி விட்டார்களே என்று வருத்தப்பட்டேன்

' என் வார்த்தைகளைக் கேட்டு என் பக்கத்து வீட்டுக்காரர் என்னிடம் வந்தார் நாங்கள் கடந்த ஐந்து நாட்களாக சாப்பிடுவதற்கு எதுவும் இல்லாமல் கொலை பட்டினியாக இருந்தோம். தெருவில் ஒரு செத்த ஆடு கிடந்தது. அதை எடுத்து வந்து அறுத்து சமைத்து சாப்பிட்டோம் .அதைத்தான் உங்கள் மகன் கேட்டான் அந்த கறியை நாங்கள் சாப்பிடாவிட்டால் செத்துப் போய் இருப்போம் . அது எங்களுக்கு ஆகுமானது ஏனெனில் எங்கள் உயிரை காப்பாற்றிக் கொள்ளத்தான் செத்துப்போன ஆட்டை சமைத்தோம் ஆனால் உங்கள் மகனுக்கு அது ஆகுமானது அல்ல அதனால்தான் கொடுக்கவில்லை என்று சொன்னார்கள் .

பக்கத்து வீட்டில் இப்படி கொலை பட்டினியாக இருக்கும்போது நாம் ஹஜ் செய்வதா ..என்று நான் 40 ஆண்டுகளாக சிறுகச்சிறுக சேர்த்த பணத்தை எல்லாம் அவர்களிடம் கொடுத்து பிழைத்துக் கொள்ள சொல்லி விட்டேன் .அதனால் தான் இந்த வருஷம் என்னால் ஹஜ் செய்ய முடியவில்லை" என்று சொன்னார்

இதைக் கேட்டதும் துன்னூன் கதறி அழ ஆரம்பித்தார் . செருப்பு வியாபாரி சொன்ன கதை அவரை செருப்பால் அடித்த மாதிரி இருந்தது .

துன்னூன் மிஸ்ரிக்கு ஒரு உண்மையை இறைவன் விளங்க வைத்தான் அது அவருக்கு ஹஜ்யைப் பற்றிய தெளிவை ஏற்படுத்தியது . ஏன் அழுதார் என்று செருப்பு வியாபாரி அஹமது வேண்டுமானால் புரியாமல் இருந்திருக்கலாம் நமக்கு நிச்சயம் புரியும் .

ர.ரா

இத்துடன் " ஞானம் " தொடர் நிறைவு பெறுகிறது . இத்தொடரைப் பற்றி உங்களின் மேலான கருத்துக்களை பதியவும் ..

நபி முஸ்தபா ரசூலை கரீம் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் (ﷺ) அவர்கள் நம்மைப் போன்ற மனிதரா ? பகுதி 1    20-10-2020

يَاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا لَا تَرْفَعُوْۤا اَصْوَاتَكُمْ فَوْقَ صَوْتِ النَّبِىِّ وَلَا تَجْهَرُوْا لَهٗ بِالْقَوْلِ كَجَهْرِ بَعْضِكُمْ لِبَعْضٍ اَنْ تَحْبَطَ اَعْمَالُكُمْ وَاَنْـتُمْ لَا تَشْعُرُوْنَ

நம்பிக்கையாளர்களே! (நபி பேசும்பொழுது) நபியுடைய சப்தத்திற்கு மேல் உங்களுடைய சப்தத்தை உயர்த்தாதீர்கள். அன்றி, உங்களுக்குள் ஒருவர் மற்றொருவருடன் கூச்சலிட்டுச் சப்தமாகப் பேசுவதைப் போல், அவரிடம் சப்தத்தை உயர்த்தி நீங்கள் கூச்சல் இட்டுப் பேசாதீர்கள். இதன் காரணமாக உங்களுடைய நன்மைகள் எல்லாம் அழிந்துவிடக்கூடும். (இதனை) நீங்கள் உணர்ந்துகொள்ள முடியாது.

(அல்குர்ஆன் : 49:2)

ஸாயிப் இப்னு யஸீத்(ரலி) அறிவித்தார்.

"நான் பள்ளி வாசலில் நின்றிருந்தபோது ஒருவர் என் மீது சிறு கல்லை எறிந்தார். நான் திரும்பிப் பார்த்தபோது உமர் இப்னு அல்கத்தாப்(ரலி) நின்றிருந்தார்கள். 'நீ சென்று (அதோ) அந்த இருவரையும் என்னிடம் அழைத்து வா!' என்றார்கள். அவ்விருவரையும் அவர்களிடம் கூட்டிக் கொண்டு வந்தேன். நீங்கள் இருவரும் எங்கிருந்து வருகிறீர்கள்?' என்று உமர்(ரலி) கேட்க, 'நாங்கள் தாயிஃப் வாசிகள்' என்று அவர்கள் கூறினர். 'அல்லாஹ்வின் தூதருடைய பள்ளி வாசலில் சப்தங்களை நீங்கள் உயர்த்தியதற்காக நீங்கள் இவ்வூரைச் சேர்ந்தவர்களாக இருந்தால் உங்களிருவரையும் (சவுக்கால்) அடித்திருப்பேன்' என்று உமர்(ரலி) கூறினார்.

ஸஹீஹ் புகாரி : 470.

நபி ஸல்லல்லாஹு அலைஹிஸ்ஸலாம் (ﷺ) அவர்கள் நம்மைப் போன்ற மனிதர் என்றால் (நவூதுபில்லாஹ் ) நம் குரலை விட ஒருவர் உயர்த்தினால் நீ தொழுதது , நோன்பு நோற்றது , ஜக்காத்து கொடுத்தது ஹஜ் செய்தது இன்னும் எத்தனை நற்காரியங்கள் நீ செய்தி இருந்தாயோ அவையெல்லாம் உனக்குக் தெரியாமலேயே அழிந்து விடும் என்று எவராலும் கூற முடியுமா ?

இந்நிலையில் தாஹா நபியும் (ﷺ) நாமும் ஒன்றாகி விட முடியுமா ? அல்ல .எக்காலத்திலும் ஒன்றாக முடியாது

ர.ரா

நபி முஸ்தபா ரசூலை கரீம் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் (ﷺ) அவர்கள் நம்மைப் போன்ற மனிதரா ? பகுதி 2



" இன்னும், அவருடைய மனைவியர் அவர்களுடைய தாய்மார்களாக இருக்கின்றனர் " (அல்குர்ஆன் : 33:6)

"அல்லாஹ்வின் தூதரை நோவினை செய்வது உங்களுக்கு தகுமானதல்ல; அன்றியும் அவருடைய மனைவிகளை அவருக்குப் பின்னர் நீங்கள் மணப்பது ஒருபோதும் கூடாது; நிச்சயமாக இது அல்லாஹ்விடத்தில் மிகப்பெரும் (பாவ) காரியமாகும் " (அல்குர்ஆன் : 33:53)

முஸ்லிம் ஒருவர் இறந்துவிட்டால் அதற்குப்பின்னால் அவரது மனைவியை இத்தா தவணை முடிவுற்று யாரையும் திருமணம் செய்து கொள்ளலாம் . இது நமது இஸ்லாமிய மார்க்க சட்டம்

ஆனால் நபிக்கு பின் எந்த காலத்திலும் அவர்களுடைய மனைவியர்களை திருமணம் செய்ய கூடாது என்பதோடு இது அல்லாஹ்விடத்தில் மிக மிக மோசமான பாவமான காரியம் என்று குர்ஆன் ஆணித்தரமாக கட்டளையிடுகிறது இதிலிருந்து நாமும் நபிகளாரும் ஒன்றா ?

பெருமானார் (ﷺ) அவர்கள் இந்த உம்மத்துக்குத் தந்தை என்பதும், உம்மஹாத்துல் மூமின்கள் (நபிகளாரின் மனைவிகள் ) முஃமின்களுக்கு தாயென்றும் என்றும் ஏற்படுகிறது.

" நானும் நீரும் இந்த உம்மத்திற்கு தந்தையர்கள் என்று நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அலி ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்களிடம் கூறினார்கள் என்று ரிவாயத்துச் செய்யப்பட்டிருக்கிறது .

நபியவர்கள் நமக்கு ஆத்மார்த்த தந்தையாக இருக்கிறார்கள்.

ஆனால் நபியவர்களின் மகள் பாத்திமா (ரலி ) அன்ஹா அவர்கள் , தம் தந்தையான நபியவர்களை தந்தை என்ற பொருளடக்கத்தில் உள்ள எந்த வார்த்தையும் பிரயோகிக்காமல் ,

" யா ரஸூல்லாஹ் ! " என்று மற்ற நபித்தோழர்கள் அழைத்த மாதிரியே அழைத்தார்கள் .

அதாவது உம்மஹாத்துல் மூஃமின்கள் தாய்மார்களைப் போல் கௌரவிக்கப்பட வேண்டும் . தாய்மார்களை மக்கள் திருமணம் செய்வதில்லை இதுபோல உம்மஹாத்துல் மூஃமின்களை மூஃமின்கள் திருமணம் செய்வது ஹராம் . இது இறைச் சட்டம் .

தாய்மார்களுக்கு மரியாதை செய்வது போல உம்மஹாத்துல் மூஃமின்களுக்கு மூஃமின்கள் மரியாதை செய்ய வேண்டும் .

ஆனால் தாய்மார்கள் தங்கள் மக்களிடம் வெட்கித் தங்களை மறைத்துக் கொள்ள மாட்டார்கள் . இதுபோல உம்மஹாத்துல் மூஃமின்கள் மூஃமின்களிடம் வெட்கித் தங்களை மறைத்துக் கொள்ளாதிருக்க வேண்டும் என்பதில்லை .அவர்கள் தங்களை மறைத்துக் கொள்ள வேண்டும் .

அவர்களுடன் தனிமையில் இருக்கக் கூடாது . பிரயாணம் செய்யவும் கூடாது . இவர்களது சொத்துக்களுக்கு எல்லா மூமின்களும் வாரிசுகள் அல்லர் .

இதனால் ஆயிஷா சித்தீக் ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் தங்களை ஏனைய உம்மஹாத்துல் முஃமினீன்களையும் குறித்து ,

"பெண்களுக்கு தாய்மார்களாக நாங்கள் இல்லை , ஆடவர்களுக்குத்தான் நாங்கள் தாய்மார்கள் "என்று கூறியுள்ளார்கள் .

மேலும் அபூபக்கர் ரலி அவர்களது புதல்வியான அஸ்மா ரலி அன்ஹா அவர்களை ஜுபைர் ( ரலி ) அவர்கள் திருமணம் செய்து கொண்டார்கள் . அஸ்மா ரலி அன்ஹா அவர்களும் ஆயிஷா சித்தீக்கா ரலி அன்ஹா அவர்களும் உடன்பிறந்த சகோதரிகள் .

அஸ்மா ரலி அன்ஹா அவர்களை "எவரும் மூமின்கள் அது காலா (பெரிய தாய் ) என்று கூறுவதில்லை " என்று இமாம் ஷாபி (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

நபி முஸ்தபா ரசூலை கரீம் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் (ﷺ) அவர்கள் நம்மைப் போன்ற மனிதரா ? இல்லை .

நபி முஸ்தபா ரசூலை கரீம் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நம்மைப் போன்ற மனிதரா ? பகுதி 3



பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அன்னவர்களின் திரு முடியில் பரக்கத் உண்டா? அந்த முடி பாதுகாக்கப்பட்டு வருவதாக சொல்லப்படுவதற்கு ஆதாரம் உண்டா என்ற கேள்விகளுக்கு இக்கட்டுரை விடையாய் அமையும் என்பதில் சந்தேகம் இல்லை.

பெருமானார் ஸல்லல்லாஹு அலஹிவஸல்லம் அன்னவர்களின் திரு முடி அவர்களாளேயே ஸஹாபாப்பெருமக்களுக்கு பகிர்ந்தளிக்கப்பட்டிருக்கிறது என்பதற்கு பின்வரும் செய்திகள் சான்றாக அமைந்திருக்கின்றன.

ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அன்னவர்களுக்கு நாவிதர் முடி வெட்டிக்கொண்டிருந்த சமயம் அந்த முடிகள் கீழே சிந்திவிடாமல் தங்கள் கைகளில் கிடைக்க வேண்டும் என்பதில் ஸஹாபாக்கள் சிரத்தை எடுத்துக்கொண்டிருந்ததை நான் கண்ணுற்றேன் என்பதாக அனஸ் ரழியல்லாஹு அன்ஹு அன்னவர்கள் சொன்ன செய்தி முஸ்லிம் கிரந்தத்திலே பதிவாகியுள்ளது.

ரஸூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் (ஹஜ்ஜின் போது) மினாவில் கல்லெறிந்து விட்டு தம் இருப்பிடம் வந்து ஒட்டகை அறுத்த பின்னர், நாவிதரை அழைத்து தமது சிரசின் வலப்பக்கத்து முடியினை சிரைத்தெடுக்கச் கூறினார்கள்.

அபூதல்ஹா அன்சாரி ரழியல்லாஹு அன்ஹு என்ற தோழரை அழைத்து சிரைத்த அம்முடியைக் கொடுத்தனர்.

பின் இடது பக்கத்தையும் மழித்து அந்த முடியையும் அபூதல்ஹா ரழியல்லாஹு அன்ஹு அவர்களிடம் கொடுத்து மக்களுக்கு அவற்றைப் பங்கிட்டுக் கொடுக்குமாறு சொன்னார்கள்

அறிவிப்பாளர்: அனஸ் ரலியல்லாஹு அன்ஹு

(நூல்: புகாரி, முஸ்லிம்)

மேற்படி செய்திகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அன்னவர்கள் தனது முடியை ஸஹாபாக்களுக்கு பங்கிட்டார்கள் என்பதை மிகத் தெளிவாக எடுத்துக்காட்டுகின்றது.

நாயகத்தினுடைய முடி நம்முடைய முடியை போன்று சாதாரணமான அற்பமான ஒன்றாக இருந்தால் ஏன் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அன்னவர்கள் தங்கள் முடிகளை பங்கிட வேண்டும்?

ஏன் ஸஹாபாக்கள் அந்த முடிகளை பெறுவதற்காக முண்டியடிக்க வேண்டும்?

எனவே நபிகளார் தன்னுடைய முடியின் மூலம் மக்கள் நன்மையடைய வேண்டும் என்ற நோக்கில்தால் தன்னுடைய புனிதமிக்க முடிகளை பகிர்ந்தளித்திருக்கிறார்கள் என்பது சிந்திப்போருக்கு மறைவான ஒன்றல்ல.

மேலும் நபிகளாருடைய திரு முடிகளை ஸஹாபாக்கள் எவ்வாறு பாதுகாத்தார்கள்,எவ்வாறு கண்ணியப்படுத்தினார்கள்,எவ்வாறு அதன் மூலம் நன்மை பெற்றார்கள் என்பதை அடுத்து நோக்குவோம்.

நான் அபீதாவிடம் சொன்னேன், எங்களிடம் அனஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் மூலமாகவோ, அவர்களது குடும்பத்தினர் மூலமாகவோ பெற்ற அண்ணலாரின் திருமுடி ஒன்று உள்ளது. உலகில் உள்ள அனைத்துப் பொருளையும் விட இத்திருமுடி என்னிடம் இருப்பது மேலானது' என்று இப்னு ஸிரீன் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள்.

(நூல்: புகாரி)

உம்மு ஸல்மா ரலியல்லாஹுஅன்ஹா அவர்களிடம் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருமுடியொன்று இருந்தது. மக்கள் அதன் மூலம் நோயிலிருந்து சுகம் பெறுகின்றனர். சில நேரங்களில் தண்ணீர் பாத்திரத்தில் அத்திருமுடியை முக்கி எடுத்து அந்நீரைப் பருகுவர். (புகாரி)

உமர் இப்னு அப்துல் அஜீஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் அண்ணலாரின் இரு காலுறைகள், ஒரு கம்பு, ஒரு வாளுறை இருந்தன. அவற்றை அவர்கள் மிகக் கண்ணியத்தோடு பாதுகாத்து அவற்றை தினமும் பார்வையிடவும் செய்வார்கள்.

சிறப்பு விருந்தினர்கள் யாராவது வருகை தரும் போது 'யார் மூலம் உங்களை கண்ணியப்படுத்தினானோ அவரின் அனந்தப் பொருட்கள் இவை'என்று கூறுவார்கள்.

(றூஹுல் ஈமான்)

மேற்படி ஹதீதுகள்.செய்திகளில் இருந்து நன்மக்கள் நாயகத்தினுடைய திருமுடியை எந்த அளவுக்கு கண்ணியப்படுத்தியிருக்கிறார்கள் என்பதையும் எவ்வாறு அந்த முடிகளின் மூலம் நன்மைகளை பெற்றிருக்கின்றனர் என்பதையும் நாம் புரிந்துகொள்ள முடியும்.

இன்று ஒரு சிலர் நாயகத்தின் திரு முடியில் பரக்கத் இல்லை என்றும் இன்னும் சிலர் இது றஸூலுல்லாஹ்வினுடைய முடி என்பதற்கு ஆதாரம் இல்லை என்றும் தனது அறியாமையை வெளிப்படுத்திவருகின்றனர்.

நபிகளார் தன்னுடைய திரு முடியை மக்கள் மத்தியில் பங்கிட்டார்கள் என்பதையும் ஸஹபாக்களும், தாபியீன்களும் அந்த முடிகளை எவ்வாறு கண்ணியப்படுத்தி அதன் மூலம் பிரயோசனம் பெற்றனர் என்பதையும் மேலே சொல்லப்பட்ட பல ஆதாரங்கள் உறுதிப்படுத்துகின்றன.

இன்று சிலர் இது நபிகளாரின் முடி என்று கார்பன் சோதனை செய்து உறுதிப்படுத்துமாறு கோஷம் எழுப்புகின்றனர்.

ஆனால் இந்த கோஷம் இஸ்லாமிய அடிப்படையில் ஏற்கத்தக்க ஒன்றல்ல.எதையும் கண்டு பரிசோதித்துத்தான் ஈமான் கொள்ள வேண்டும் என்கின்ற போக்கு இஸ்லாத்துக்கு வெளியில் நம்மை தள்ளிவிடும்.

இஸ்லாமிய மார்க்கம் மறைமுக நம்பிக்கையில்தான் தனது அஸ்திவாரத்தை அமைத்திருக்கின்றது. நபிகளார் நொடிப்பொழுதில் மிஃராஜ் பயணம் சென்று திரும்பிய செய்தியை அவர்கள் வெளிப்படுத்தியவுடன் அபூபக்கர் ரழியல்லாஹு அன்ஹு அன்னவர்கள் தனது அறிவுக்கு வேலை கொடுக்காமல் ஏற்றுக்கொண்டார்கள். அதனால்தான் அவர்கள் 'சித்தீக் ' என்ற பெயரால் இன்றுவரை போற்றப்படுகிறார்கள்.

ஆனால் அறிவுக்கு வேலை கொடுத்தோர் நாயகத்தின் மிஃராஜை பொய்ப்பித்து இஸ்லாமிய வட்டத்தைவிட்டு வெளியேறி நரகின் எரிகொள்ளியாயினர்.

மேலும் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அன்னவர்களுடைய திருமுடிகளை இன்று பாதுகாத்துவருவோர் அதற்குரிய ஸனதையும் கொண்டிருக்கின்றனர் என்ற தகவலையும் நாம் கவனத்திற்கொள்ள வேண்டும்.

நாயகத்தினுடைய திருமுடி பிற்காலங்களில் பாதுகாக்கப்பட்டு வந்ததற்கான ஏராளமான வரலாற்று சான்றுகளை பல வரலாற்றுத்தொகுப்புக்கள் நமக்கு உறுதிசெய்கின்றன.

நாயகத்தினுடைய திருமுடிக்கு பரக்கத் உண்டென்ற செய்தியை ஆதாரபூர்வமான செய்திகளில் இருந்து புரிந்து கொண்ட நாம்,முஸ்லிம்களால் நாயகத்தினுடைய திருமுடி காண்பிக்கப்படுபோது அதனை தரிசித்து கண்ணியப்படுத்துவதனால் அல்லாஹ் ஒருபோதும் நம்மை குறைபிடிக்கமாட்டான்.

எனவே இதனை உணர்ந்தவர்களாக நாயகத்தினிடைய திரு முடியை முடியுமானவரை கண்ணியத்துடனும் மரியாதையுடனும் தரிசிப்போம்.இது நாயகத்தினுடைய முடிதானா என சந்தேகம் கொள்வோர் குறைந்தபட்சம் அருவெறுக்கத்தக்க விமர்சனங்களையாவது தவிர்த்துக்கொள்வது நல்லது.

உங்களது ஊகங்களை தாண்டி உண்மையில் அது நாயகத்தினுடைய முடிதான் என்றிருக்குமானால் உங்கள் நிலையை சிந்தனை செய்து பாருங்கள்! நாளை மறுமையில் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம்

அன்னவர்களை எந்த முகத்தோடு நோக்கப்போகிறோம் என்பதனையும் ஒரு கணம் சிந்தித்து ஈமானோடு நடந்துகொள்வதே ஏற்றமாகும்.

நம்மையும் , நம்முடைய ரோமத்தை நினைத்துப் பாருங்கள்.படுகேவலமாக இருப்பதை உணருகிறோம். நபி முஸ்தபா ரசூலை கரீம் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நம்மைப் போன்ற மனிதரா ?

ர.ரா

நபி முஸ்தபா ரசூலை கரீம் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நம்மைப் போன்ற மனிதரா ? பகுதி 4

கண்மணி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் திருமுடி, நெருப்பில் விழுந்தால் அது கரிந்து போகாது. நூல்: ஷீரதுல் ஹலபீ

தாஹா நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் உணவு உண்ட பின் அந்தத் திருக்கரங்களால் துடித்தெடுத்தத் துண்டுத் துணி கூட நெருப்பில் கரிந்திடவில்லை என்னும் போது அவர்களின் பொன்மேனியைச் சார்ந்திருந்த ஒன்று கரிவதில்லை என்பது பற்றி என்ன வியப்பு இருக்கிறது.

ஹலரத் அலி ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள்:- தாஹா நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தங்களின் ஒரு திருமுடியை கையில் எடுத்துக்கொண்டு இவ்வாறு எச்சரித்தார்கள்:- எவனும் எனது முடியிலிருந்து ஒரு முடிக்கேனும் அவமரியாதை செய்ததானேயானால் அவன் மீது சுவனம் ஹராமாகும். அவன் சுவனம் புக மாட்டான். அறிவிப்பவர்: இப்னு அஸாகிர்
நூல்: ஜாமிவுஸ் ஸகீர்

அனஸ் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள்: நான் கீழ்காணும் இந்தக் காட்சியை பார்த்துக் கொண்டே இருந்தேன். தாஹா நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சங்கையான சிரசிலிருந்து நாவிதர் திருமுடியை எடுத்துக்கொண்டிருக்கிறார். கீழே விழவிருக்கும் அந்தத் திருமுடியைப் பெற்றுக்கொள்வதற்காக தோழர்கள் வலம் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களின் ஒரு திரு முடியும் கூட, யாரேனும் ஒரு தோழரின் கரத்திலிருந்ததே தவிர தரையைத் தொடவில்லை. நூல்: முஸ்லிம்

உம்மு ஸல்மா ரலியல்லாஹு அன்ஹா அவர்களிடம் கண்மணி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சில திரு முடிகள் இருந்தன. யாருக்காவது கண் திருஷ்டியின் தொல்லையோ, அல்லது வியாதியின் சிரமமோ இருந்தால், அந்தத் திருமுடியை உம்மு சல்மா அவர்கள் சுத்தமான தண்ணீரில் முக்கி எடுத்து அதனை வியாதியஸ்தருக்கு குடிக்கக் கொடுப்பார்கள். அதனால் வியாதி குணமாகிவிடும். நூல்: புஹாரி

உதுமான் பின் அப்துல்லாஹ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கிறார்கள்: எனது குடும்பத்தினர் என்னிடம் ஒரு தண்ணீர்க் குவளையை தந்து அன்னை உம்மு ஸல்மா ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் பால் அனுப்பி வைப்பார்கள். அவர்களிடம் கண்மணி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சிறு முடிகள் இருந்தன. அவைகளை அவர்கள் வெள்ளியினால் தயாரிக்கப்பட்ட ஒரு வட்ட வடிவமான வளையத்தினுள் வைத்து அந்த திருமுடியை பாதுகாத்து வருகிறார்கள். எங்களில் யாராவது எங்களில் யாருக்காவது கண் திருஷ்டியோ, நோயோ போன்ற தொல்லைகள் ஏற்பட்டு விட்டால், அன்னை உம்மு சல்மா ரலியல்லாஹு அன்ஹா அவர்களின் பால் தண்ணீர் ஊற்றப்பட்ட வாய் அகலமான பாத்திரம் ஒன்று அனுப்பி வைக்கப்படுவார்கள். அவர்கள் அந்த திருமுடியைத் தங்கியிருக்கிற வெள்ளி வளையத்தை அந்த தண்ணீரில் முக்கி அசைத்து ஆட்டி எடுப்பார்கள். பின்பு அந்த தண்ணீரை நோயாளி பழகுவார். (குணமடைவார்) அந்த வெள்ளி வளையத்தை நான் உற்று நோக்கிய போது அங்கு சற்று சிவப்பு நிறச் சாயம் கொண்ட சில திருமுடிகளை நான் காணுகிறேன். நூல்: மிஷ்காத்

இதன் விளக்கத்தில் அல்லாமா தீபி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் இவ்வாறு விளக்கியுள்ளார்கள்:- "இந்தத் திருமுடியை வெள்ளி வளையத்தில் வைத்து பாதுகாத்து, புனித கஃபாவிற்கு பட்டாடை போர்த்தி பெருமைபடுத்துவது போலிருக்கிறது" என. நூல்: மிஷ்காத்

புனித கஃபாவிற்கு பொன்னாடை போர்த்தப்பட்டு அது பாதுகாத்து வருவதை இஸ்லாமிய உலகம் ஏற்று ஆனந்தம் அடைந்து வருவதைப் போலவே, உத்தம நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருமுடியையும் வெள்ளி போன்ற உயர் பொருட்களால் பாதுகாத்து வரவேண்டும் என இந்த தீபீ இமாம் அவர்கள் நமக்கு அறிவுறுத்துகிறார்கள்.

இமாம் பைஹகி அவர்கள் கீழ்க்காணும் சம்பவத்தை அறிவிக்கிறார்கள்:- கலீபா அமீருல் முஃமினீன் அபூபக்கர் ஸித்தீக் ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் ஆட்சியின் போது நடந்த "யர்மூக்" போர்க்களத்தில் ஹஜ்ரத் காலித் பின் வலீத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் தலைமை தாங்கினார்கள். போர் மும்முரமாக நடந்து கொண்டிருக்கும் வேளையில் தளபதி காலித் அவர்களின் தலைபாகை கீழே விழுந்துவிடுகிறது. தளபதி அவர்களின் குதிரையை விட்டு இறங்கி அதனைத் தேட முனைந்து விடுகிறார்கள். மற்ற வீரர்கள் எல்லாம் தளபதி அவர்களின் இச்செயலைப் பார்த்து "நம்மீது எதிரிகளின் அம்புகள், மழையாய் பொழிந்து கொண்டிருக்கின்றன. அவர்களின் வாள்கள் நம்மீது மின்னலாய் பாய்ந்து கொண்டிருக்கின்றன. வாழ்வா? விழ்வா? என்ற வினாவின் கொக்கையில் நாம் தொங்கி நிற்கின்ற வேளையில் தளபதி தமது தலைப்பாகையை தேடிக் கொண்டிருக்கிறாரே " என ஆச்சரியமுற்றுக் கூறினார்கள்.

இதனை செவியுற்ற தளபதி அவர்கள், வீரர்களின் வெறுப்பை சற்றும் பொருட்படுத்தவில்லை. இறுதியில் தொப்பியில் தேடிப் பிடித்து விட்டார்கள். அதன்பின்னே போர்க்களம் புகுந்து வெற்றியை ஈட்டினார்கள். நமது செயல் கண்டு வெறுப்படைந்த சஹாபாக்களைப் பார்த்து அதன் காரணத்தை இப்படி விளக்கினார்கள்: என்னுடைய தொப்பியினுள் தஹா நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் சில திருமுடிகளை வைத்து இருந்தேன் என.
தாஹா நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உம்ரா செய்த சமயம் தலைமுடியைக் கத்தரித்தார்கள். கத்தரிக்கப்பட்ட அத்திரு முடியினை அடைந்துகொள்ள தோழர்கள் போட்டியிட்டுக் கொண்டு முன்னேறினார்கள். நானோ அவர்களுக்கு முன் பாய்ந்து சென்று, அவர்களின் முன்நெற்றி ரோமத்தை எடுத்துக்கொண்டன். அதனை எனது சிரசின் மேல் வைத்துக்கொள்ள வேண்டும் என்ற எண்ணத்தில் எனது தொப்பியினுள் பாதுகாப்பாக வைத்துக் கொண்டேன்.
போர்க்களத்தில் தொப்பி கீழே விழவும் அந்த திருமுடியும் ஒரு சமயம் கீழே விழுந்து அதன் மீது மனிதர்களின் கால்கள் மிதிபட நேர்ந்திடுமோ என அஞ்சியே அதனைத் தேடி பெற்றிட முற்பட்டேன், பெற்றும் கொண்டேன். அந்த திருமுடியின் பாக்கியத்தினால்தான், இந்த "யர்மூக்" போரிலும் வெற்றி வாகை சூடினோம். இந்தத் திருமுடியை என்னுடன் வைத்துக் கொண்டு, எந்தப் போர்க்களத்திற்குள் புகுந்தாலும் அதன் பாக்கியத்தால் வெற்றியுடன் தான் திரும்புவேன்.
நூல்: ஹுஜ்ஜத்துல்லாஹி அலல் ஆலமீன்
பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் திருமுடியை கழிக்கப்படவேண்டியது என ஸஹாபாக்கள் எண்ணி செயல்படவில்லை. மாறாக அத்திருமுடி, களையப்படும் நேரம், அவைகள் தரையில் தொட்டிடவும் விடாமல் தோழர்கள் தங்கள் தங்கள் கரம் கொண்டு தாங்கி வாங்கி பாதுகாத்தும், அவைகளை வியாதியஸ்தர்களுக்கு மருந்தாகும் கஷ்ட சமயம் கஷ்ட சமயங்களில் நிவர்த்தி தரும் சாதனைப் பொருளாகவும் பயன்படுத்தியிருப்பது தாஹா நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு தோழர்கள் காட்டியிருக்கும் தனிப் பெரும் மதிப்பையும் மரியாதையும் சிறப்பையும் காட்டுகிறது.
நபி முஸ்தபா ரசூலை கரீம் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நம்மைப் போன்ற மனிதரா ?

தாஹா நபி அவர்களின்

தனிச் சிறப்புகள் 1




1) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் :

" அல்லாஹ் படைப்பினங்களைப் படைத்தபோது அதில் என்னையே சிறந்த சிருஷ்டியாகவும் , அந்தப் படைப்பின் வம்சாவழியினரை அமைக்கையில் என்னையே சிறந்தவராகவும் , அந்த வம்சாவளியில் ஆத்மாக்களை உருவாக்குகையில் என்னையே சிறந்த ஆத்மாவும் , அந்த ஆத்மாக்களின் குடும்பத்தினரை ஏற்படுத்தும் போது அதில் என் குடும்பத்தையே சிறந்த குடும்பமாகவும் ஆக்கினான் "

- அறிவிப்பு அப்பாஸ் இப்னு முத்தலிப் (ரலி) நூல் : திர்மிதீ , பைஹகீ

2 ) இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:

"ஆதமின் சந்ததிகளில் தலைமுறை தலைமுறையாக நான் சிறந்த தலைமுறை வழியே (மரபணுக்களில் பாதுகாக்கப்பட்டு வந்து இப்போது) நான் தோன்றியிருக்கும் (இந்தச்) சிறந்த தலைமுறையில் தோன்றி இறைத்தூதராக்கப்பட்டுள்ளேன் "

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஸஹீஹ் புகாரி : 3557.

3) " ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் என்னிடத்தில் சொன்னார்கள் சூரியன் உதிக்கும் இடத்திலிருந்து சூரியன் மறையும் இடம் வரை மண்ணுலகம் முழுவதையும் புரட்டிப் பார்த்தேன் , முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைவிட சிறந்த மனிதரை நான் பெற்றுக் கொள்ளவில்லை . பனூஹாஷிம் குடும்பத்தை விட வேறு சிறந்த குடும்பத்தை நான் பார்க்கவில்லை "

- அன்னை ஆயிஷா ரலி அன்ஹா

நூல் : தப்ரானீ (அவ்சத்) , பைஹகீ (தலாயிலுன் நுபுவ்வா)

4) நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சொன்னார்கள் :

"அறியாமைக் காலத்து திருமண வழிமுறையில் நான் பிறக்கவில்லை . இஸ்லாமியத் திருமணத்தைப் போல் அமைந்த திருமணத்தின் வாயிலாகவே நான் பிறந்தேன்"

- இப்னு அப்பாஸ் (ரலி)

நூல் : பைஹகீ , இப்னு அஸாகிர் , தப்ரானீ

5) இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் கேட்டார்கள்.

"ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் சுவனத்தில் இருக்கும்போது நீங்கள் எங்கு இருந்தீர்கள் ? என்று வினவியபோது , நபியவர்கள் சொன்னார்கள் :

" நான் ஆதம் அலைஹி வஸ்ஸலாம் அவர்களின் முதுகு தண்டில் இருந்தேன்"

- இப்னு அப்பாஸ் (ரலி)

நூல் : இப்னு அஸாகிர் , அல்பிதாயாவந்திஹாயா, கன்ஜுல் உம்மால் .

ர.ரா

தாஹா நபியின் தனிச்சிறப்புகள் 2




நபி(ஸல்)அவர்களை அகிலத்தார்களுக்கெல்லாம் அருளாகவும் அழகிய முன்மாதிரியாகவும் பேருபகாரமாகவும் அல்லாஹ் அனுப்பியுள்ளான் இம்மையிலும் . மறுமையிலும் நபி (ஸல்) அவர்கள் முதன்மையானவர்களாகத் திகழ்வார்கள் அவர்களுக்கு அல்லாஹ் வழங்கிய தனிச்சிறப்புகள் ஏராளம் ஏராளம்.

1 . நபி( ஸல்) அவர்களுக்கு உதவியாக இருக்க வேண்டும் என்று எல்லா நபிமார்களிடத்திலும் எல்லா மனிதர்களிடமும் ஆலமே அர்வாகிலேயே இறைவன் ஒப்பந்தம் செய்தான்

2 .உமர்(ரலி)அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் தவ்ராத்தில் உள்ளதை படித்துக்காண்பித்த போது நபியவர்கள் உமர் (ரலி) யை கண்டித்தார்கள். உமரே தெளிவான வேதம் உங்களுக்கு வந்திருக்கிறது . மூஸா (அலை) அவர்களே இப்பொழுது வாழ்ந்தால் என்னைத் தான் பின் பற்றியாக வேண்டும் என்று கூறினார்கள் .

2 . மற்ற நபிமார்கள் ஒரு ஊருக்கு / ஒரு நாட்டுக்கு / ஒரு சமுதாயத்திற்கு /குறிப்பிட்ட காலம் வரை மட்டுமே நபி .

ஆனால் நம் நபி முஹம்மது (ஸல்)அவர்கள் கியாமத் வரை வரும் முழு மனித & ஜின் இனத்திற்குமே நபி ஆக்கப் பட்டிருகிறார்கள் .

நபி (ஸல்) அவர்கள் முழு மனித சமுதாயத்திற்கும். ஜின் இனத்திற்கும் நபியாக இருப்பதால் மறுமையில் அனைத்து நபிமார்களை விட அதிக நன்மையை பெற்றவர்களாகவும் அதிகமான உம்மத்களை பெற்றவர் களாகவும் திகழ்வார்கள்

3 . இறுதி நபி என்ற தனிச்சிறப்பு

புகாரி 3535. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: என்னுடைய நிலையும் எனக்கு முன்பிருந்த இறைத் தூதர்களின் நிலையும் ஒரு வீட்டைக் கட்டி அதை அழகாக அலங்கரித்து, ஒரு மூலையில் ஒரு செங்கல் அளவிற்குள்ள இடத்தை மட்டும் விட்டுவிட்ட ஒரு மனிதரின் நிலை போன்றதாகும். மக்கள் அதைச் சுற்றிப் பார்த்துவிட்டு ஆச்சரியடைந்து, "இச்செங்கல் (இங்கே) வைக்கப்பட்டிருக்கக் கூடாதா?" என்று கேட்கலானார்கள். நானே அச்செங்கல். மேலும், நானே இறைத் தூதர்களில் இறுதியானவன். என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

புகாரி 3455. அபூ ஹுரைரா(ரலி) அறிவிக்கிறார்கள் . " تَسُوسُهُمْ الأَنْبِيَاءُபனூ இஸ்ராயீல்களை நிர்வகிப்பவர்களாக இறைத்தூதர்கள் இருந்தனர். இறைத்தூதர் ஒருவர் இறக்கும் போதெல்லாம் மற்றோர் இறைத்தூதர் அவருக்குப் பதிலாக வருவார்.

""மேலும் எனக்குப் பின் எந்த இறைத்தூதரும் (வரப்போவது) இல்லை.""

ஆயினும், இனி (எனக்குப் பின்) கலீஃபாக்கள் (-அரசர்கள்) நிறையப் பேர் தோன்றுவார்கள்" என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். ....

4 . நபி (ஸல்) அவர்கள் உம்மத்திற்கு பாதுகாப்பு.

முந்தய நபிமார்கள் வாழக்கூடிய காலத்திலேயே அல்லாஹ்வின் தன்டனை அவர்களின் உம்மத்துகளுக்கு வந்து இருக்கு.

ஆனால் நபி(ஸல்)உம்மத்திற்கு அவ்வாறு வரவில்லை . ஏனென்றால் அது அல்லாஹ்வின் வாக்குருதி

ஸஹீஹ் முஸ்லிம் 4953.நபி (ஸல்) சொன்னதாக அபூமூஸா அல்அஷ்அரீ (ரலி) அவர்கள் கூறியதாவது:

"நட்சத்திரங்கள் வானத்திற்குப் பாதுகாப்பாகும். நட்சத்திரங்கள் போய்விட்டால் வானத்திற்கு வாக்களிக்கப்பட்டது வந்துவிடும்.

நான் என் தோழர்களுக்குப் பாதுகாப்பு ஆவேன். நான் போய்விட்டால் என் தோழர்களுக்கு வாக்களிக்கப்பட்டது வந்துவிடும்.

என் தோழர்கள் என் சமுதாயத்தாருக்குப் பாதுகாப்பு ஆவார்கள். என் தோழர்கள் போய்விட்டால் என் சமுதாயத்தாருக்கு வாக்களிக்கப்பட்டது வந்துவிடும்" என்று கூறினார்கள்.

5 . நம் நபியை பெயர் சொல்லி அழைக்கவில்லை .மற்ற உம்மத்கள் பெயர் சொல்லியே அழைத்தார்கள்

நம் நபியை பெயர் சொல்லி அழைக்க கூடாது

[قال سبحانه وتعالى:لا تَجْعَلُوا دُعَاءَ الرَّسُولِ بَيْنَكُمْ كَدُعَاءِ بَعْضِكُمْ بَعْضاً [النور:63

அல்லாஹ் மற்ற நபிமார்களை பெயர் கூறி அழைக்கிறான்

[قَالَ يَا مُوسَى إِنِّي اصْطَفَيْتُكَ عَلَى النَّاسِ) 144:الأعراف]

[يا إبراهيم * قَدْ صَدَّقْتَ الرُّؤْيا (الصافات:104-105

[يَا عِيسَى ابْنَ مَرْيَمَ اذْكُرْ نِعْمَتِي عَلَيْكَ (المائدة:110

ஆனால் நம் நபியை இறை தூதரே/நபியே என நுபுவ்வத் பெயர் சொல்லி அழைக்கிறான்

(يَا أَيُّهَا النَّبِيُّ إِنَّا أَرْسَلْنَاكَ شَاهِدًا وَمُبَشِّرًا وَنَذِيرًا (45) وَدَاعِيًا إِلَى اللَّهِ بِإِذْنِهِ وَسِرَاجًا مُنِيرًا (46

يا أَيُّهَا النَّبِيُّ حَسْبُكَ اللَّهُ وَمَنْ اتَّبَعَكَ مِنْ الْمُؤْمِنِينَ

يَا أَيُّهَا الرَّسُولُ لَا يَحْزُنْكَ الَّذِينَ يُسَارِعُونَ فِي الْكُفْرِ

6 . جوامع الكلم ஒருங்கிணைந்த (பொருள்களைக்குறிக்கும்) சொற்கள் கொடுக்கப்பட்டார்கள் .

7. எதிரிகளின் உள்ளத்தில் அவர்களைப்பற்றிய (மதிப்பும்) அச்சமும் ஊட்டப்பட்டார்கள் . உதாரணமா ஒரு சம்பவம்

அபூலஹப்உடைய மகன் உதைபாவிற்கு நபி(ஸல்)அவர்கள் தன் மகள் உம்முகுல்ஸூம் அவர்களை மணம் முடித்துகொடுத்திருந்தார்கள் .

நபியின் மீதுள்ள கோபத்தால் தன் தந்தை அபூலஹபின் கட்டலையின் படி நபியவர்ளின் முன்னிலையில் காரி துப்பியது மட்டுமின்றி உம்மு குல்ஸூம் (ரலி)அவர்களையும் தலாக் விட்டுவிட்டான்.

நபியவர்கள் கோபமடைந்து யாஅல்லாஹ் ! உன்னுடைய விலங்குகளில் ஒன்றை இவன்மீது சாட்டுவாயாக என்று பத்ஆ செய்தார்கள்.

இவன் ஷாமிற்கு செல்லும்போது இடையில் ஒரிடத்தில் தங்கினான் தன் தங்குமிடத்தை உயரமான இடத்தில் அமைத்துக்கொன்டான். காரணம் கேட்டபொழுது முஹம்மது எனக்கு எதிராக துஆ செய்திருகிராரர் அவரின் துஆ ஏற்கப்படும் எனக்கூறினான்

இறவில் தூங்கும் போது ஒரு சிங்கம் வந்தது அதுஅவனைச்சுற்றி உறங்கிக்கொண்டிரக்கும் அனைவரையும் நுகர்ந்து பார்த்துவிட்டு இவனுடைய தலையை மட்டும் கொய்திச்சென்றது.ஒரு காபிருக்கு நபியவர்களின் வார்தையின் மீது பயம் இது நபியவர்களின் தனிச்சிறப்பில் உள்ளது

8 . நபி(ஸல்)அவர்களின் முன் பின் பாவங்கள் அனைத்துமே மன்னிக்கப்பட்டு விட்டன.

(قوله تعالي: انا فتحنا لك فتحا مبينا ليغفر لك الله ما تقدم من ذنبه وما تاخر (الفتح1-2

மற்ற எந்த நபிமார்களுக்கும் அல்லாஹ் இவ்வாறு கூறவில்லை .

எனவே ஒவ்வொரு நபியும் மறுமையில் தாம் செய்து விட்ட தவற்றை நினைத்து نَفْسِي نَفْسِي نَفْسِي நப்சி நப்சி என்பார்கள் .

A . ஆதம் (அலை) ولا تقربا هذه الشجرة # B . நூஹ் நபி (அலை) உம்மத்திற்கு எதிராக துஆ # C . இப்றாஹீம் நபி தாம் சொன்ன மூன்று பொய்கள் # D . மூஸா நபி ஒரு மனிதனை கொலை செய்தது என எல்லோரும் நடந்த தவறுகளை பற்றி பயந்து அல்லாஹ் இடம் ஷாபாஅத் துக்காக நான் முறையிடமாட்டேன் என கடைசியாக நம் நபி இடம் அனுப்பி விடுவார்கள்

நம் நபி(ஸல்) தன்னை பற்றி பயப்படாமல் يَا رَبِّ أُمَّتِي يَا رَبِّ أُمَّتِي என உம்மத்தை பற்றி கவலை/ முழு மனித இனத்திற்கும் ( شفاعة عظمى ) ஷாபாஅத் செய்வாங்க . அது ஒப்புக் கொள்ளப்படும்

ர.ரா

தாஹா நபியின் தனிச்சிறப்புகள் 3



9 .உன்னதமான அற்புதம் உண்டு

ஒவ்வொரு நபிக்கும் அற்புதம் உண்டு . அது காலம் கடந்து விட்டவை .

ஆனால் நம் நபிக்கு வழங்கப்பட்டவை வாழும் அற்புதங்கள் ஆகும் .

A . சந்திரன் பிளந்தது .

மக்காவில் குறைஷி களுக்கு சந்திரனை பிளர்ந்து கட்டினார்கள் . அதன் சுவடு இன்றும் சந்திரனில் இருக்கு. . அதுக்கு அரேபியன் பிளவு என அழைக்கப்படுது .

اقْتَرَبَتِ السَّاعَةُ وَانْشَقَّ الْقَمَرُ

B. அல்குர்ஆன் .

மற்ற வேதங்கள் எழுத்து வடிவில் வழங்கப்படதால் பாது காப்புக்கு முழு வாய்ப்பு. ஆனாலும் கையாடல் நடந்தன .

குர்ஆனோ ஓசை வடிவில் தான் . எனவே கையாடளுக்கு முழு வாய்ப்பு . ஆனாலும் ஒரு எழுத்து கூட மாற்றம் ஏற்பட வில்லை . ஏற்படவும் சாத்தியம் இல்லை

உதாரணமாக ஒரு சம்பவம்

யஹ்யா இப்னு அக்ஸம் கூறுகிறார்.கலீபா மஃமூன் ரஷீத் அவர்களின் அரசவைக்கு ஒரு யஹூதி வந்தார் அழகான முறையில் பேசினார்.

கலீபா அவர்கள் அந்த யஹூதியை இஸ்லாத்தின் பக்கம் அழைத்தார். யஹூதி மறுத்து விடடார்.

ஒரு வருடத்திற்குப் பின் அந்த யஹூதி முஸ்லிமானவராகவும் நன்கு பிக்ஹூ சட்டங்களை பேசுபவராகவும் அரசவைக்கு வந்தார்.

கலீபா அவர்கள் .நீங்கள் இஸ்லாமை ஏற்க காரணம் என்னவென்று கேட்டபொழுது

அவர்கூறிய பதில்

நான் ஒரு வருடத்திற்கு முன் உங்கள் சபைக்கு வநது சென்றபின் இந்த மார்க்கங்களை சோதித்து பார்க்க விரும்பினேன். தவ்ராத் இன்ஜீல் வேதங்களில் மூன்று பிரதிகளை எழுதி அதில் கூடுதல் குறைவுகளைச் செய்து சிலை வணக்கத்தையும் நுழைத்து விற்பனை செய்தேன் யஹூதிகளும் நஸாராக்களும் அதை வாங்கினார்கள் வேகமாக விற்பனையானது.

அதே போல் திருக்குர்ஆனில் மாற்றம் செய்து விற்பனை செய்ய நாடிய பொழுது அதில் மாற்றம் செய்யப்பட்டிருப்பதை கண்டு ஒருவரும் அதை வாங்க முன் வரவில்லை தூக்கி எரிந்து விட்டார்கள். அதன் மூலம் இந்தவேதம் பாதுகாக்கப்பட்டது என்பதை விழங்கிக் கொண்டேன. இதுதான் நான் இஸ்லாத்தை ஏற்றுக்கொன்டதற்கு காரணம் என்றார்

10 . மிஃராஜ் பயணம் நபி( ஸல்)அவர்களுக்கு வழங்கப்பட்ட தனிச்சிறப்பு

இந்த பயணத்தில் நபிமார்களை சந்தித்தார்கள் அவர்களுக்கு இமாமத் செய்தார்கள். இதன் முலம் நபி(ஸல்) அவர்கள்தான் இமாம் மற்ற நபிமார்கள் மஃமூம்கள் என அறிய முடிகிறது

ฺ மறுஉலகில் நபி(ஸல்) அவர்களுக்கு மட்டுமே கிடைக்கக்கூடிய தனிச்சிறப்புக்கள்

11 . வஸீலா என்ற அந்தஸ்து நமது நபிக்கு மட்டும்தான்

வஸீலா என்பது சுவனத்தில் உள்ள ஒரு அந்தஸ்த்து இது நபி(ஸல்)அவர்களுக்கு மட்டும் தான் கிடைககும்.

12 . மகாமே மஹ்மூதா என்ற தகுதிக்கு சொந்தக்கார் அவர்கள் மட்டுமே

13 . ஹௌளுல் கவ்ஸர் தடாகத்திற்கு சொந்தக்காரர் அவர்கள் மட்டுமே

புகாரி 7050. இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்“

நான் (மறுமை நாளில்) உங்களுக்கு முன்பே (“அல்கவ்ஸர்“) தடாகத்திற்குச் சென்று (நீர் புகட்டக்) காத்திருப்பேன்.

அங்கு யாருக்கு வர முடிகிறதோ அவர் அதை அருந்துவார். அதை அருந்துகிறவருக்கு அதன் பிறகு ஒருபோதும் தாகமே ஏற்படாது.

(இந்நிலையில்) என்னிடம் சிலர் வருவார்கள் அவர்களை அறிவேன்; அவர்களும் என்னை அறிந்துகொள்வார்கள். பிறகு எனக்கும் அவர்களுக்கும் இடையே தடுப்பு ஏற்படுத்தப்படும். என ஸஹ்ல் இப்னு ஸஅத் (ரலி) அறிவித்தார்.

(அறிவிப்பாளர்களில் ஒருவரான) “அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி) அவர்கள் தங்களின் அறிவிப்பில் அதிகப்படியாக (பின்வருமாறு) குறிப்பிட்டார்கள்:

“அவர்கள் என்னைச் சர்ந்தவர்கள் தாம்“ என்று நபியவர்கள் கூறியதற்கு, “உங்களுக்குப் பிறகு என்னவெல்லாம் புதிதாக உண்டாக்கினார்கள் என்று உங்களுக்குத் தெரியாது“ என்று சொல்லப்படும்.

உடனே நான், “எனக்குப் பிறகு (தம் மார்க்கத்தை) மாற்றிவிட்டவர்களை இறைவன் தன் கருணையிலிருந்து அப்புறப்படுத்துவானாக! அப்புறப்படுத்துவானாக!“ என்று சொல்வேன்.

14 . மற்ற உம்மத்துகளுக்கு இல்லாமல் நபி(ஸல்) அவர்களின் உம்மத்துகளுக்கு மட்டும் உள்ள சிறப்புக்கள்

1 . خير الأمةவெளியாக்கப்பட்ட உம்மத்களிலேயே சிறந்த உமமத்

2 .غنيمةபோரில் கிடைத்த கனீமத் பொருட்களை பயன் படுத்தலாம்

(முந்திய சமுதாயத்தனரின் கனீமத் பொருட்களை வானத்திலிருந்து நெருப்பு வந்து கரித்துவிடும் .

3 . பூமி முழுவதும் தொழுகுமிடமாகவும் சுத்தமானதாகவும் ஆக்கப்பட்டுள்ளது .

முந்தய சமுதாயத்தினர் எங்கு சென்றாலும் மஸ்ஜிதில் தான் தொழகவேண்டும் . தண்ணீர் கொண்டு தான் சுத்தம் செய்ய வேண்டும்.

நமக்கு சுத்தமான எந்த இடத்திலும் தொழகலாம்.

தண்ணீர் இல்லையென்றாலோ நோய் ஏற்பட்டாலோ தயம்மம் செய்யலாம் .

4 . ஒட்டு மொத்தமாக இந்த சமுதாயத்தை அழித்த்து விடமாட்டான்.

(முந்தய (நூஹ்-அலை)மின் சமுதாயம் அவ்வாறு அழிக்கப்பட்டுள்ளார்கள்)

5 . முழு சமுதாயமும் வழிகேட்டில் ஒன்று சேரமாட்டார்கள்

6 . இந்த சமுதாயம் பூமியிலும் மறுமை நாளிலும் சாட்சியாளர்களாக வருவார்கள் (மறுமையில் மற்ற உம்மத்துக்கள் தங்களின் நபி தங்களுக்கு தீனை எத்திவைக்கவில்லை என்று அல்லாஹ்விடம் சொல்லும்போது. இவர்கள் சொல்வது பொய் அவர்களுக்கு அந்த நபி தீனை எத்திவைத்தார் என்று சாட்சி சொல்வார்கள்)

7 . இவர்களின் தொழுகையின் அணிவகுப்பு மலக்குகளின் அணிவகுப்பைப் போல உள்ளது .

8 . கியாமத் நாளில் இவர்களின் நெற்றி மற்றும் ஒழுவின் உறுப்புக்கள் வெண்மையாக ஜொலிக்கும் அதைவைத்து இவர்கள் அடயாளம் காணப்படுவார்கள்.

9 . முதன் முதலில் ஸிராத் முஸ்தகீம் பாலத்தைக் கடப்பவர்கள் இந்த உம்மத்துகள் தான்

10 . முதன் முதலில் சுவனம் செல்பவர்களும் இவர்கள்தான்

11 . இவர்களின் அமல்கள் குறைவாக இருந்தாலும் நன்மைகள் அதிகம்.

12 குறைவான வயது கொடுக்கப்பட்டவர்களாக இருந்தாலும் சுவனத்தில் அதிகம் செல்பவர்கள் இவர்கள்தான் . ஏனெனில் சுவனத்தில் மூன்றில் இருமடங்கு இந்த உம்மத்தினரே இருப்பார்கள்.

ர.ரா

நபி முஸ்தபா ரசூலை கரீம் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் (ﷺ) அவர்கள் நம்மைப் போன்ற மனிதரா ? பகுதி 5

அண்ணல் நபியின் கண்கள்.

நபிகளாரின் கண்கள் நம் கண்களைப் போன்றதல்ல . நம் கண்களுக்கு புலப்படாத எத்தனையோ மர்ம விஷயங்கள் நபிகளாரின் கண்களுக்கு புலப்பட்டன. அவைகளை பற்றி ஹதீஸ்கள் ஏராளம் ஏராளம் உண்டு .ஒரு சிலவற்றை இங்கு தருகிறேன்

அஸ்மா பின்த் அபூ பக்ர்(ரலி) அறிவித்தார் :

நபி(ஸல்) அவர்கள் சூரிய கிரகணத் தொழுகையைத் தொழுதார்கள்.

அப்போது நீண்ட நேரம் நிலையில் நின்றார்கள். பின்னர் ருகூவை நீட்டினார்கள். (ருகூவிலிருந்து எழுந்து) நிற்கும் போதும் நீண்ட நேரம் நின்றார்கள்.

பின்னர் (மற்றொரு) ருகூவு செய்தார்கள். அதையும் நீட்டினார்கள். பின்பு ருகூவிலிருந்து உயர்ந்து, பின்னர் ஸஜ்தாச் செய்தபோது ஸஜ்தாவை நீட்டினார்கள். பின்னர் ஸஜ்தாவிலிருந்து எழுந்தார்கள்.

பின்பு (மற்றொரு) ஸஜ்தாச் செய்தபோது அதையும் நீட்டினார்கள். பின்பு (இரண்டாம் ரக்அத்துக்காக) எழுந்து நீண்ட நேரம் நின்றார்கள். (ருகூவிலிருந்து எழுந்து) நீண்ட நேரம் நின்றார்கள்.

பின்னர் (மற்றொரு) ருகூவை நீட்டினார்கள். பின்பு ருகூவிலிருந்து உயர்ந்து, பின்னர் ஸஜ்தாச் செய்தபோது அதையும் நீட்டினார்கள். பின்னர் ஸஜ்தாவிலிருந்து எழுந்தார்கள். பின்பு (மற்றொரு) ஸஜ்தாச் செய்த போதும் நீட்டினார்கள்.

பின்னர் தொழுகையை முடித்துவிட்டு, 'சுவர்க்கம் என் அருகில் தென்பட்டது; எனக்குச் சக்தி இருந்திருக்குமானால் அதன் குலைகளில் ஒன்றை உங்களிடம் தந்திருப்பேன்.

'இறைவா! நானும் இவர்களுடனே இருந்து விடுவேனோ ?' என்று நான் எண்ணும் அளவுக்கு நரகம் என் அருகில் நெருங்கியது.

அந்த நரகத்தில் ஒரு பெண்ணைப் பூனை ஒன்று பிராண்டிக் கொண்டிருந்தது. 'இவள் இந்த நிலையை அடைந்திடக் காரணம் என்ன?' என்று கேட்டேன்.

'இவள் இந்தப் பூனையைக் கட்டி வைத்துவிட்டாள். தானும் அதற்கு உணவளிக்கவில்லை; பூமியிலுள்ள சிறு உயிரினங்களை உண்ணட்டும் என்று அதை இவள் அவிழ்த்து விடவுமில்லை; அப்பூனை பசியால் இறந்துவிட்டது' என்று (வானவர்கள்) கூறினார்கள்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். ஸஹீஹ் புகாரி : 745.

உம்மு ஸலமா(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்கள் ஓர் இரவு விழித்ததும், 'ஸுப்ஹானல்லாஹ்! இந்த இரவில்தான் எத்தனை சோதனைகள் இறக்கப்பட்டுள்ளன? எத்தனை பொக்கிஷங்கள் திறக்கப்பட்டுள்ளன. அறைகளில் உள்ள பெண்களை எழுப்பி விடுவோர் யார்? இவ்வுலகில் ஆடை அணிந்திருந்த எத்தனையோ பேர் மறுமையில் நிர்வாணிகளாக இருப்பார்கள்' என்று குறிப்பிட்டார்கள்.

ஸஹீஹ் புகாரி : 1126.

இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

பத்ருப் போரின்போது நபி(ஸல்) அவர்கள், 'இதோ ஜிப்ரீல்! போர்த் தளவாடங்களுடன் தம் குதிரையின் தலையை (அதன் கடிவாளத்தை)ப் பிடித்துக் கொண்டிருக்கிறார்' என்று கூறினார்கள். ஸஹீஹ் புகாரி : 3995.

குதிரையில் இருக்கும் ஜிப்ரயீல் அலை அவர்களை நபித்தோழர்களின் கண்களால் காண முடிவதில்லை நபித்தோழர்கள் கண்களுக்குத் தெரியாத ஜிப்ரீல் அலை நபிகளாரின் கண்களுக்கு மட்டும் தெரிந்தார்கள் ஏனெனில் நபிகளாரின் முபாரக்கான கண்கள் நம் கண்களைப்

போன்றதில்லையே .

நம் கண்கள் முன் பக்கம் மட்டும் பார்க்கும் முதுகுக்குப் பின்னால் உள்ளவைகள் நம் கண்களுக்கு தெரியாது . ஆனால் நபிகளாரின் கண்களுக்கு முன்னால் உள்ளவையும் பின்னால் உள்ளவையும் மிகத் தெளிவாக தெரியும்.

இறைத்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

'நான் கிப்லாத் திசையில் மட்டும் பார்க்கிறேன் என்று நீங்கள் கருதுகிறீர்களா? அல்லாஹ்வின் மீது ஆணையாக நீங்கள் அடக்கமாக இருப்பதும் , ருகூவும் எனக்குத் தெரியாமலிருப்பதில்லை. நிச்சயமாக என்னுடைய முதுகுக்குப் பின் புறம் உங்களை நான் பார்க்கிறேன்.'

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஸஹீஹ் புகாரி : 418.

பத்ருடைய தினத்தில் குறைஷித் தலைவர்கள் 24 பேர்களின் சடலங்களை பாழும் கிணற்றில் போட்டு விடுமாறு நபி ஸல் அவர்கள் கட்டளையிட்டார்கள் .

அங்குள்ள பாழுங்கிணறுகளில் ஒரு கிணற்றினுள் அவர்கள் போடப்பட்டார்கள்.ஒரு வர்க்கத்தாரை நபி ஸல் அவர்கள் வென்றால் அந்த மைதானத்தில் மூன்று இரவுகள் தங்குவது வழக்கம் ஆகவே பத்ரியில் மூன்றாவது பகலில் தங்களுடைய சவாரியை தயார் செய்யுமாறு கட்டளையிட்டார்கள் பின் பயணம் கட்டப்பட்டது .

பின்னர் வாகனத்தில் ஏறாமல் நடந்தார்கள், நபித் தோழர்களும் அவர்களைப் பின்தொடர்ந்தனர். தங்களுடைய ஏதோ ஒரு அலுவலகத்தான் அவர்கள் நடக்கிறார்கள் என்று தோழர்கள் தங்களுக்குள் கூறிக்கொண்டார்கள்.

அக்கிணற்றின் கரையில் நின்று அதில் போடப்பட்ட அவர்களின் பெயர்களையும் அவருடைய தந்தையின் பெயர்களையும் கூறி இன்னாருடைய மகன் இன்னார் இன்னாருடைய மகன் இன்னார் என்று அவர்களை அழைத்து , அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் கீழப்பட்டிருந்தால் உங்களுக்கு அது சந்தோஷமாக இருக்கும் அல்லவா ?

எங்களுடைய ரப்பு எங்களுக்கு வாக்களித்ததை உண்மை என்று நாங்கள் கண்டுகொண்டோம். உங்களுடைய ரப்பு உங்களுக்கு வாக்களித்த உண்மை என்று நீங்கள் கண்டு கொண்டீர்களா ? என்று வினவினார்கள் .

அப்பொழுது அல்லாஹ்வின் தூதரே ! ஆன்மா இல்லாத இந்த உடல்களுடன் தாங்கள் என்ன பேசுகிறீர்கள் ? என்றார் உமர் ரலி அவர்கள்.

அதற்கு நபி (ஸல்) அவர்கள் "முஹம்மதுடைய ஆன்மா எவன் கரத்தில் இருக்கிறதோ அவன் மீது சத்தியமாக கூறுகிறேன் நான் கூறுவதை அவர்களை விட நீங்கள் அதிகமாக செய்பவர்களாக அல்லர் .( நான் கூறுவதை உங்களை விட அவர்கள் நன்கு செவியுகிறார்கள் என்று பதிலளித்தார்கள்)

ஹஜ்ரத் உமர் (ரலி ) அவர்களுக்கும் மற்ற சஹாபாக்களும் தெரிந்திராத கிணற்றில் உள்ள மாண்டுபோன எதிரிகளின் நிலைகள் நபியின் கண்களுக்கு மட்டும் தெரிகிறது !

பெருமானாரின் (ﷺ) பெரும்பேறு பெற்ற கண்கள் இறைவனின் பேரொளியை கண்டுகளித்தன. "சித்ரத்துல் முன்தஹா என்னும் அந்த இலந்தை மரத்தை மூடிக் கொள்கிற ஒன்று (இறைவனின் பேரொளி ) மூடிய போது , "அவர் பார்வை விலகவும் இல்லை அதை விட்டு கடந்து விடவும் இல்லை திடமாக தம் ரப்பின் அத்தாட்சிகளில் மிகப் பெரியதைக் கண்டார் குர்ஆன் (53 : 16, 17 ,18)

"அழகிய தோற்றத்தில் என் இறைவனை நான் கண்டேன் என்கிறார்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் . நூல் : திர்மிதீ

நம்மால் காணமுடியாத மர்மங்களையும் ரகசியங்களையும் மற்ற நபிமார்களால் காணமுடியாத இறைவனையும் காணும் பேறு பெற்றவர்கள் நமது நாயகம் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் .

நபி முஸ்தபா ரசூலை கரீம் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் (ﷺ) அவர்கள் நம்மைப் போன்ற மனிதரா ?

ர.ரா

நபி முஸ்தபா ரசூலை கரீம் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் (ﷺ) அவர்கள் நம்மைப் போன்ற மனிதரா ? பகுதி 6

காத்தம் நபியின் காது

இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்

நபி(ஸல்) அவர்கள் மதீனாவின் தோட்டம் ஒன்றிலிருந்து புறப்பட்டு வந்து கொண்டிருந்தபோது தம் மண்ணறைகளில் (கப்றுகளில்) வேதனை செய்யப்பட்டுக் கொண்டிருந்த இரண்டு மனிதர்களின் (கூக்) குரலைச் செவியுற்றார்கள்.

அப்போது நபி(ஸல்) அவர்கள் '(இவர்கள்) இருவரும் (மண்ணறைக்குள்) வேதனை செய்யப்பட்டுக் கொண்டிருக்கின்றனர். ஒரு மாபெரும் (பாவச்) செயலுக்காக இவர்கள் வேதனை செய்யப்படவில்லை. ஆனாலும், அது ஒரு (வகையில்) பெரிய (பாவச்) செயல்தான். இவர்களில் ஒருவர் சிறுநீர் கழிக்கும்போது (தம் உடலை) மறைக்கமாட்டார். இன்னொருவர் (மக்களிடையே) கோள் சொல்லித் திரிந்துகொண்டிருந்தார்' என்று கூறினார்கள்.

பிறகு நபி(ஸல்) அவர்கள் பேரீச்ச மட்டை ஒன்றைக் கொண்டுவரச் சொல்லி அதை 'இரண்டு துண்டாக' அல்லது 'இரண்டாகப்' பிளந்து ஒரு துண்டை இவரின் மண்ணறையிலும் மற்றொரு துண்டை இவரின் மண்ணறையிலும் (ஊன்றி) வைத்தார்கள். அப்போது 'இவ்விரண்டின் ஈரம் உலராத வரை இவர்களின் வேதனை குறைக்கப்படலாம்' என்று கூறினார்கள்.

ஸஹீஹ் புகாரி : 6055.

வேதனை செய்யப்படும் கப்ருகளில் உள்ள சப்தங்களை எவரின் காதுகளும் செவியேற்க முடியாது. ஆனால் நபிகளாரின் காதுகளோ அவைகளை

செவியுற்றன. அதுமட்டுமா ? செத்த , சமைக்கப்பட்ட ஆட்டிறைச்சி பேச நபிகளாரின் காதுகள் கேட்டன .

ர.ரா



தாஹா நபியின் தனிச்சிறப்புகள் - 4

நம் பெருமானார் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் உலகில் பிறப்பதற்கு முன்பே அவர்கள் மீது ஈமான் கொள்ள வேண்டும் .

அவருக்கு உதவி செய்ய வேண்டும் என்று முந்தைய நபிமார்களிடமும் ஏனைய சமுதாயத்திடமும் உடன்படிக்கையை எடுத்துக்கொண்டான் அல்லாஹ்

وَاِذْ اَخَذَ اللّٰهُ مِيْثَاقَ النَّبِيّٖنَ لَمَاۤ اٰتَيْتُكُمْ مِّنْ كِتٰبٍ وَّحِكْمَةٍ ثُمَّ جَآءَكُمْ رَسُوْلٌ مُّصَدِّقٌ لِّمَا مَعَكُمْ لَـتُؤْمِنُنَّ بِهٖ وَلَـتَـنْصُرُنَّهٗ ‌ؕ قَالَ ءَاَقْرَرْتُمْ وَاَخَذْتُمْ عَلٰى ذٰ لِكُمْ اِصْرِىْ‌ؕ قَالُوْۤا اَقْرَرْنَا ‌ؕ قَالَ فَاشْهَدُوْا وَاَنَا مَعَكُمْ مِّنَ الشّٰهِدِيْنَ

(நினைவு கூறுங்கள்:) நபிமார்(கள் மூலமாக அல்லாஹ் உங்கள் முன்னோர்)களிடம் உறுதிமொழி வாங்கியபோது,

“நான் உங்களுக்கு வேதத்தையும், ஞானத்தையும் கொடுத்திருக்கின்றேன். பின்னர் உங்களிடம் இருப்பதை மெய்ப்பிக்கும் ரஸூல் (இறைதூதர்) வருவார். நீங்கள் அவர்மீது திடமாக ஈமான் கொண்டு அவருக்கு உறுதியாக உதவி செய்வீர்களாக” (எனக் கூறினான்).

“நீங்கள் (இதை) உறுதிப்படுத்துகிறீர்களா?

என்னுடைய இந்த உடன்படிக்கைக்குக் கட்டுப்படுகிறீர்களா?” என்றும் கேட்டான்;

”நாங்கள் (அதனை ஏற்று) உறுதிப்படுத்துகிறோம்” என்று கூறினார்கள்; (அதற்கு அல்லாஹ்) “நீங்கள் சாட்சியாக இருங்கள்; நானும் உங்களுடன் சாட்சியாளர்களில் (ஒருவனாக) இருக்கிறேன்” என்று கூறினான். (அல்குர்ஆன் : 3:81)

இது போன்று உலகில் வேறு எவருக்காகவும் இறைவன் உடன்படிக்கை எடுத்துள்ளனா ?

வேறு எந்த ஒரு நபிக்காவது இதுபோன்ற சிறப்புகள் உண்டா ? எனவே , தனித்துவத்தின் தன்னிகரற்று விளங்கும் தங்க திருமகனார் தரணியின் பெருமகனார் நம்மைப் போன்ற சாதாரண மகனாக இல்லை . பெரும் மஹானாகவே இருந்தார்கள்.

இருந்து கொண்டும் இருக்கிறார்கள் .

இருந்து கொண்டே இருப்பார்கள்.

முத்து முத்தான முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் உலகில் உதிப்பதற்கு முன்பே முந்தைய வேதங்களில் அவர்களின் தன்மைகளையும் , பண்புகளையும், புகழாரங்களையும் கூறி அவர்களின் உயர்வுகளை உலகுக்கு உணர்த்தினான் உயர்வான அல்லாஹ் .

اَلَّذِيْنَ يَتَّبِعُوْنَ الرَّسُوْلَ النَّبِىَّ الْاُمِّىَّ الَّذِىْ يَجِدُوْنَهٗ مَكْتُوْبًا عِنْدَهُمْ فِى التَّوْرٰىةِ وَالْاِنْجِيْلِ يَاْمُرُهُمْ بِالْمَعْرُوْفِ وَيَنْهٰهُمْ عَنِ الْمُنْكَرِ وَيُحِلُّ لَهُمُ الطَّيِّبٰتِ وَيُحَرِّمُ عَلَيْهِمُ الْخَبٰٓٮِٕثَ وَيَضَعُ عَنْهُمْ اِصْرَهُمْ وَالْاَغْلٰلَ الَّتِىْ كَانَتْ عَلَيْهِمْ‌ فَالَّذِيْنَ اٰمَنُوْا بِهٖ وَعَزَّرُوْهُ وَنَصَرُوْهُ وَاتَّبَعُوا النُّوْرَ الَّذِىْۤ اُنْزِلَ مَعَهٗۤ‌ ۙ اُولٰٓٮِٕكَ هُمُ الْمُفْلِحُوْنَ

எவர்கள் எழுதப்படிக்கத் தெரியாத நபியாகிய நம் தூதரைப் பின்பற்றுகிறார்களோ - அவர்கள் தங்களிடமுள்ள தவ்ராத்திலும் இன்ஜீலிலும் இவரைப் பற்றி எழுதப் பட்டிருப்பதைக் காண்பார்கள்;

அவர், அவர்களை நன்மையான காரியங்கள் செய்யுமாறு ஏவுவார்; பாவமான காரியங்களிலிருந்து விலக்குவார்;

தூய்மையான ஆகாரங்களையே அவர்களுக்கு ஆகுமாக்குவார்; கெட்டவற்றை அவர்களுக்குத் தடுத்து விடுவார்;

அவர்களுடைய பளுவான சுமைகளையும், அவர்கள் மீது இருந்த விலங்குகளையும், (கடினமான கட்டளைகளையும்) இறக்கிவிடுவார்;

எனவே எவர்கள் அவரை மெய்யாகவே நம்பி, அவரைக் கண்ணியப்படுத்தி, அவருக்கு உதவி செய்து, அவருடன் அருளப்பட்டிருக்கும் ஒளிமயமான (வேதத்)தையும் பின் பற்றுகிறார்களோ, அவர்கள் தாம் வெற்றி பெறுவார்கள்.

(அல்குர்ஆன் : 7:157)

தாஹா நபிகளாரை தவிர வேறு எந்த ஒரு நபியும், எந்த ஒரு மனிதனும் பிறப்பதற்கு பல வருடங்களுக்கு முன்பே பல வேதங்களில் தன் வருகை பற்றி கூறப்பட்டுள்ளரா ?

நபி வரும் பின்னே உதவி வேண்டினார் முன்னே

வள்ளல் நபி இம்மண்ணில் வந்து இறங்கும் முன் அவர்களின் பொருட்டால் உதவிகள் தேடினர் அன்றைய மக்கள்

وَلَمَّا جَآءَهُمْ كِتٰبٌ مِّنْ عِنْدِ اللّٰهِ مُصَدِّقٌ لِّمَا مَعَهُمْۙ وَكَانُوْا مِنْ قَبْلُ يَسْتَفْتِحُوْنَ عَلَى الَّذِيْنَ كَفَرُوْا فَلَمَّا جَآءَهُمْ مَّا عَرَفُوْا كَفَرُوْا بِهٖ فَلَعْنَةُ اللّٰهِ عَلَى الْكٰفِرِيْنَ

அவர்களிடம் இருக்கக்கூடிய வேதத்தை மெய்ப்படுத்தக்கூடிய (இந்த குர்ஆன் என்ற) வேதம் அவர்களிடம் வந்தது; இ(ந்த குர்ஆன் வருவ)தற்கு முன் காஃபிர்களை வெற்றி கொள்வதற்காக (இந்த குர்ஆன் மூலமே அல்லாஹ்விடம்) வேண்டிக்கொண்டிருந்தார்கள். (இவ்வாறு முன்பே) அவர்கள் அறிந்து வைத்திருந்த(வேதமான)து அவர்களிடம் வந்த போது, அதை நிராகரிக்கின்றார்கள் இப்படி நிராகரிப்போர் மீது அல்லாஹ்வின் சாபம் இருக்கிறது! (அல்குர்ஆன் : 2:89)

யூதர்கள். முஷ்ரிகீன்களுக்கு எதிராக உதவி தேடும் போது தவ்ராத் வேதத்தில் வர்ணிக்கப்பட்ட , வர இருக்கிற இறுதி காலத்தில் நபியைக் கொண்டு அவரின் பொருட்டால் உதவி தேடுகிறோம் . அவர்களுக்கு எதிராக எங்களுக்கு உதவி செய்வாயாக என பிரார்த்தித்து கூறுவர் என இமாம் பைளாவி தன்னுடைய குர்ஆன் விரிவுரை பாகம் 1 பக்கம் 190ல் கூறுகிறார்கள்

ர.ரா

நபி முஸ்தபா ரசூலை கரீம் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் (ﷺ) அவர்கள் நம்மைப் போன்ற மனிதரா ? பகுதி 7

உத்தம நபியின் உமிழ்நீர் 1

ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார். (கைபர் போரின் போது) இறைத்தூதர்(ஸல்) அவர்கள், 'நாளை (இஸ்லாமியச் சேனையின்) கொடியை ஒரு மனிதரிடம் தரப் போகிறேன். அல்லாஹ் அவரின் கரங்களில் வெற்றியை அளிப்பான்' என்று சொன்னார்கள்.

எனவே, மக்கள் தம்மில் எவரிடம் அது கொடுக்கப்படும் என்ற யோசனையில் இரவெல்லாம் மூழ்கியிருந்தனர். காலையானதும் மக்களில் ஒவ்வொருவரும் தன்னிடம் அது கொடுக்கப்பட வேண்டும் என்று ஆசைப்பட்ட வண்ணம் அல்லாஹ்வின் தூதரிடம் சென்றனர்.

நபி(ஸல்) அவர்கள், 'அலீ இப்னு அபீ தாலிப் எங்கே?' என்று கேட்டார்கள். மக்கள், 'அவருக்குக் கண்வலி, இறைத்தூதர் அவர்களே!' என்று கூறினார்கள். உடனே, நபி(ஸல்) அவர்கள், 'அவருக்கு ஆளனுப்பி என்னிடம் அழைத்து வாருங்கள்' என்று உத்தரவிட்டார்கள்.

அலீ(ரலி) வந்தவுடன் அவர்களுடைய இரண்டு கண்களிலும் (தம் உமிழ்நீரை) உமிழ்ந்து அவர்களுக்காக (நலத்திற்கு) பிரார்த்தனை புரிந்தார்கள். அவர்களுக்கு (அதற்கு முன்) வலியே இருந்ததில்லை என்பதைப் போன்று அவர்கள் (வலி நீங்கி) குணமடைந்தார்கள்.

பிறகு நபி(ஸல்) அவர்கள் அலீ(ரலி) அவர்களிடம் கொடியைக் கொடுத்தார்கள். அப்போது அலீ(ரலி), 'இறைத்தூதர் அவர்களே! அவர்கள் நம்மைப் போன்று (ஒரே இறைவனுக்குக் கீழ்ப்படிந்தவர்களாய்) ஆகும் வரை நான் அவர்களுடன் போரிடட்டுமா? என்று கேட்டார்கள்.

நபி(ஸல்) அவர்கள், 'அவர்களின் களத்தில் இறங்கும் வரை நிதானமாகச் செல்லுங்கள். பிறகு அவர்களை இஸ்லாத்திற்கு (வரும்படி) அழையுங்கள். மேலும், இஸ்லாத்தில் அவர்களின் மீது கடமையாகிற அல்லாஹ்விற்குச் செய்யவேண்டிய கடமைகளை அவர்களுக்குத் தெரிவியுங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! உங்கள் மூலமாக அல்லாஹ் ஒரேயொரு மனிதருக்கு நேர்வழியை அளிப்பது (அரபுகளின் அருஞ் செல்வமான) சிவப்பு ஒட்டகங்களை (தர்மம் செய்வதை) விட உங்களுக்குச் சிறந்ததாகும்' என்று கூறினார்கள். ஸஹீஹ் புகாரி : 3701.

ஜாபிர் இப்னு அப்தில்லாஹ்(ரலி) அறிவித்தார்.

(போருக்காக) அகழ் தோண்டப்பட்டுக் கொண்டிருந்தபோது நபி(ஸல்) அவர்களின் வயிறு (பசியினால்) மிகவும் ஒட்டியிருப்பதைக் கண்டேன்.

உடனே நான் திரும்பி என் மனைவியிடம் வந்து, 'நபி(ஸல்) அவர்களின் வயிறு மிகவும் ஒட்டிப் போயிருப்பதைக் கண்டேன். உன்னிடம் ஏதேனும் (உண்ண) இருக்கிறதா?' என்று கேட்டேன்.

உடனே என்னிடம் என் மனைவி ஒரு பையைக் கொண்டு வந்தாள். அதில் ஒரு 'ஸாவு' அளவு வாற்கோதுமை இருந்தது வீட்டில் வளரும் ஆட்டுக்குட்டி ஒன்றும் எங்களிடம் இருந்தது. அதை நான் அறுத்தேன். என் மனைவி அந்தக் கோதுமையை அரைத்தாள். நான் (அறுத்து) முடிக்கும்போது அவளும் (அரைத்து) முடித்துவிட்டாள். மேலும் அதனைத் துண்டுகளாக்கி அதற்கான சட்டியிலிட்டேன். இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் திரும்பி வந்தேன்.

(நான் புறப்படும்போது என் மனைவி,) 'இறைத்தூதர்(ஸல்) அவர்களுக்கும் அவர்களுடன் இருப்பவர்களுக்கும் முன்னால் என்னை நீங்கள் கேவலப்படுத்தி விடவேண்டாம். ('உணவு கொஞ்சம் தானிருக்கிறது' என்று கூறிவிடுங்கள்)' என்று சொன்னாள்.

நான் நபி(ஸல்) அவர்களிடம் வந்து இரகசியமாக, 'இறைத்தூதர் அவர்களே! நாங்கள் எங்களுக்குச் சொந்தமான ஆட்டுக் குட்டியொன்றை அறுத்து, எங்களிடம் இருந்த ஒரு 'ஸாவு' அளவு வாற்கோதுமையை அரைத்தும் வைத்துள்ளோம். எனவே, தாங்களும் தங்களுடன் ஒரு சிலரும் (என் இல்லத்திற்கு) வாருங்கள்' என்று அழைத்தேன்.

அப்போது நபி(ஸல்) அவர்கள் உரத்த குரலில், 'அகழ்வாசிகளே! ஜாபிர் உங்களுக்காக உணவு தயாரித்துள்ளார். எனவே, விரைந்து வாருங்கள்' என்று கூறினார்கள்.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (ஜாபிர் - ரலி - அவர்களிடம்), 'நான் வரும் வரை நீங்கள் சட்டியை (அடுப்பிலிருந்து) இறக்கவேண்டாம். உங்கள் குழைத்த மாவில் ரொட்டி சுடவும் வேண்டாம்' என்று கூறினார்கள்.

நான் திரும்பி வந்தேன். இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (மக்களை அழைத்துக் கொண்டு) அவர்களுக்கு முன்னால் வந்து கொண்டிருந்தார்கள்.

நான் மனைவியிடம் வந்து சேர்ந்தேன். (நபி - ஸல் - அவர்கள் தோழர்கள் பலருடன் வருவதைப் பார்த்து என் மனைவி கோபமுற்று) என்னைக் கடிந்து கொண்டாள். உடனே நான், 'நீ நபி(ஸல்) அவர்களிடம் சொல்லச் சொன்ன விஷயத்தை நான் (அவர்களிடம்) சொல்லிவிட்டேன்' என்று கூறினேன்.

பிறகு நபி(ஸல்) அவர்களிடம் என் மனைவி குழைத்த மாவைக் கொடுத்தாள். நபி(ஸல்) அவர்கள் அதில் (தம் திரு வாயினால்) உமிழ்ந்தார்கள். மேலும், மாவில் பரக்கத் - பெருக்கம் ஏற்படப் பிரார்த்தித்தார்கள்.

பிறகு, எங்கள் இறைச்சிச் சட்டியை நோக்கி வந்தார்கள். பிறகு அதில் (உமிழ்நீரை) உமிழ்ந்து பரக்கத் - பெருக்கம் ஏற்படப் பிரார்த்தித்தார்கள்.

பிறகு நபி(ஸல்) அவர்கள், (என் மனைவியை நோக்கி), 'ரொட்டி சுடுபவள் ஒருத்தியை (உதவிக்கு) அழை. அவள் என்னோடு ரொட்டி சுடட்டும். உங்களுடைய பாத்திரத்திலிருந்து நீ அள்ளிக் கொடுத்துக் கொண்டிரு. பாத்திரத்தை இறக்கி வைத்து விடாதே' என்று கூறினார்கள்.

அங்கு (வந்தவர்கள்) ஆயிரம் பேர் இருந்தனர்.

ஜாபிர் இப்னு அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அவர்கள் அனைவரும் சாப்பிட்டுவிட்டு, அந்த உணவைவிட்டுத் திரும்பிச் சென்றனர். அப்போது எங்கள் சட்டி நிறைந்து சப்தமெழுப்பியவாறு கொதித்துக கொண்டிருந்தது. அது (கொஞ்சம் குறையாமல்) முன்பிருந்தது போன்றே இருந்தது. மேலும், எங்கள் குழைத்தமாவும் (கொஞ்சமும் குறைந்து விடாமல்) முன்பு போன்றே ரொட்டியாகச் சுடப்பட்டுக் கொண்டிருந்தது.

ஸஹீஹ் புகாரி : 4102.

ர.ரா

நபி முஸ்தபா ரசூலை கரீம் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் (ﷺ) அவர்கள் நம்மைப் போன்ற மனிதரா ? பகுதி 8
உத்தம நபியின் உமிழ்நீர் 2
நறுமணம் கமழும் நபியின் முபாரக்கான வாயிலுள்ள உமிழ்நீர் அதுபோன்ற அருமருந்து அவனியில் எங்குமே இல்லை .
அபூராஃபிஃ என்ற அரக்கனை அழித்து விட்டு வரும் வழியில் ஒடிந்து போன காலுடன் நபியிடம் வந்தார்கள் அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் ரலியல்லாஹு அன்ஹு அவர்கள்.
நபியவர்கள் தன் உமிழ் நீரை உமிழ்ந்து ஒடிந்த காலில் தடவி சுகம் அடைய செய்தார்கள் ஆன்மீக மருத்துவர் அண்ணலம் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் . நூல் : புகாரி
அஸ்மா(ரலி) அறிவித்தார்.
நான் (என் மகன்) அப்துல்லாஹ் இப்னு ஸுபைரை (மக்காவில்) சூலுற்றிருந்தேன். சூல்காலம் பூர்த்தியானதும் நான் (ஹிஜ்ரத்) புறப்பட்டேன். மதீனா வந்தேன் (வழியில்) குபாவில் தங்கி, குபாவிலேயே அவனைப் பெற்றெடுத்தேன்.
பிறகு, நபி(ஸல்) அவர்களிடம் அவனைக் கொண்டு சென்று அவர்களின் மடியில் அவனை வைத்தேன். பிறகு அவர்கள் பேரீச்சம் பழம் ஒன்றைக் கொண்டு வரும்படிக் கூறி அதை மென்று அவனுடைய வாயில் உமிழ்ந்தார்கள்.
இறைத்தூதர்(ஸல்) அவர்களின் உமிழ் நீர் தான் அவனுடைய வாயில் நுழைந்த முதல் பொருளாக இருந்தது. பிறகு நபி(ஸல்) அவர்கள் ஒரு பேரீச்சம் பழத்தை அவனுடைய வாயினுள் வைத்து தேய்த்துவிட்டார்கள். பிறகு அவனுக்காக துஆ செய்து, இறைவனிடம் அருள்வளம் வேண்டி இறைஞ்சினார்கள். அவன்தான் இஸ்லாத்தில் (முஹாஜிர்களுக்கு மதீனாவில்) பிறந்த முதல் குழந்தையாக இருந்தான்.
ஸஹீஹ் புகாரி : 3909.
நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் உமிழ் நீருக்கு எத்துணை ஆற்றல் இருந்தது என்று நபியின் எதிரிகள் கூட விளங்கி இருந்தனர் .
பத்ரு போரில் கைதாகி மீட்பு பணம் செலுத்தி விடுதலையான உபை இப்னு கலஃப் என்பவன் நபியிடத்தில் என்னிடம் ஹரிஷ் இன்னும் ஜாதி குதிரை உள்ளது . அதில் ஏறி வந்து உம்மை நான் கொல்வேன் என்றான்

அப்போது நபியவர்கள் இறைவன் நாடினால் நீ எனது கரத்தால் கொல்லப்படலாம் என அமைதியாக பதிலளித்தார்கள் .
உபை இப்னு கலஃப் உஹது போரில் கலந்து கொண்டான் அப்போதுதான் சபதத்தை நிறைவேற்ற நபியவர்களை நோக்கி பாய்ந்து வந்தான் நபித்தோழர்களும் அவனை கொல்ல முயன்றனர்
நபிகளார் தன் தோழர்களை தடுத்து நிறுத்தினார்கள். அவனை விடுங்கள் அவன் என்னை நோக்கி வரட்டும் என்றனர் .
நபியவர்களை நெருங்கினான் உடனே நபிகளார் தன் அருகில் நின்ற ஹாரிஸ் இப்னு ஸம்ஆ என்பவரிடமிருந்த ஈட்டியை வாங்கி அவன் மீது எரித்தார்கள் . அந்த ஈட்டி அவனது கழுத்தில் சிறிய காயத்தை ஏற்படுத்தியது அவ்வளவுதான் சுருண்டு விழுந்து விட்டான் .
" நான் சாகப் போகிறேன்...நான் சாகப் போகிறேன் " என ஓங்கார கூச்சலிட்டான் குறைஷிகளும் சிறு காயத்திற்கு ஏன் இப்படி அழுகிறாய் ? என்றனர்
அதற்கு அவன் நான் படும் வேதனை உங்களுக்கு என்ன தெரியும் ? என் வேதனையை உங்கள் அனைவருக்கும் பகிர்ந்தாலும் தாங்க இயலாது மாண்டு போவீர்கள் . முஹம்மது ஈட்டியை எறியாது என்மீது எச்சிலும் உமிழ்திருந்திருந்தாலும் கூட நான் உயிர் பிழைக்க மாட்டேன் " என்றான்.
நபியவர்கள் உமிழ் நீரே பரக்கத் , அதுவே அருமருந்து , ஆனால் எதிரிகளுக்கு அதுவே அகால விஷமும் கூட .
ர.ரா

## தாஹா நபியின் தனிச்சிறப்புகள் - 5

உர்வா (ரலி) அவர்கள் சொன்னார்கள் :
" ஸுவைபா" என்ற பெண்மணி அபூலஹபின் அடிமைப்பெண் . இந்த பெண்மணி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிறந்த செய்தியை அபூலஹபிடம் சொன்னபோது அதற்காக இந்தப் பெண்மணியை உரிமை விட்டார்
அபூலஹப் இறந்து விட்ட பொழுது அவருடைய சகோதரர் அப்பாஸ் (ரலி) அவர்கள் அபூலஹபை கனவில் கண்டார்கள் .அவரிடம் அப்பாஸ் (ரலி) அவர்கள் , " உங்களின் நிலை எவ்வாறு உள்ளது ? என்று கேட்டபோது ...
அவர் கூறியதாவது : "உங்களையெல்லாம் பிரிந்து வந்த பின் என் நிலை நன்றாக இல்லை . ஆனால் ஸுவைபாவை நான் என் விரலை ( ஆட்காட்டி விரல் ) நீட்டி உரிமையை விட்டதற்காக அந்த விரலில் இருந்து வாரந்தோறும் (திங்கட் கிழமை) பானம் புகட்டப்படுகிறது .
புகாரியில் ...
அபூ லஹப் இறந்தபோது அவரின் குடும்பத்தாரில் ஒருவர் அவரைக் (கனவில்) கண்டார்.
அபூ லஹப் மோசமான நிலையில் அவருக்குக் காட்டப்பட்டார். அபூ லஹபிடம், '(மரணத்திற்குப் பிறகு) நீர் எதிர்கொண்டது என்ன?' என்று அவர் கேட்டார். .
உங்களை விட்டுப் பிரிந்த பின் ஒரு சுகத்தையும் நான் சந்திக்கவில்லை. ஆயினும், நான் ஸுவைபாவை விடுதலை செய்ததற்குப் பிரதியாக இந்த விரல்களினூடே எனக்கு நீர் புகட்டப்படுகிறது" என்று கூறினார்.
ஸஹீஹ் புகாரி : 5101.
ர.ரா

## தாஹா நபியின் தனிச்சிறப்புகள் - 6

செய்யிதினா அபூதர்தா ரளியல்லாஹு அன்ஹு அவர்கள் சொன்னார்கள் :
" ரபியுல் அவ்வல் பிறை 12 அன்று நானும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் ஆமிருல் அன்சாரி ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் வீட்டை அடைந்தோம் .
அப்போது அந்த நபித்தோழர் தங்கள் பிள்ளைகளையும், குடும்பத்தினரையும் அழைத்து , நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிறந்த நேர அற்புதங்களில் பெருமைகளை விளக்கிக் கொண்டிருந்தார்கள்.
" இன்றைய தினத்தில் இன்றைய தினத்தில் " என்று அடிக்கடி குறிப்பிட்டார்கள் .
இதை கேட்ட நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மகிழ்வுடன் சொன்னார்கள் ."உங்களுக்கு அல்லாஹ் ரஹ்மத்தில் வாசல்களை திறந்தான் . மலக்குகள் உங்களுக்காக துஆச் செய்கின்றார்கள்.
இதுபோன்று யாராவது செய்தால் உங்களைப் போன்று அவர்களும் வெற்றி பெறுவார்கள் "
நூல் அல்ஹாபிழ் இப்னு தெஹ்யாவின் ஜவாஹிருல் பிஹாஃர்
( பாகம் 2 பக்கம் 573 )
ர.ரா

## நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹயாத்துந் நபி ( பகுதி 1 )

டமஸ்கஸ் நகரம் அமைதியாக உறங்கிக்கொண்டிருந்தது கி.பி.1162-ஆம் ஆண்டு ( ஹிஜ்ரி 6 ஆம் நூற்றாண்டு ) எங்கும் அமைதி தஹஜ்ஜத் தொழுகையை நிறைவேற்றிய பின்னர் "சுல்தான் நூருத்தீன் ஷஹீத் ' அவர்கள் உறங்க ஆயத்தமானார்கள்.

அவர்கள் ஆழ்ந்த உறக்கத்திலிருந்த சமயம் அவர்களின் கனவில் நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்களின் "ரவ்லா ஷரீப்" காண்பிக்கப்பட்டது . அருகில் நீல நிற கண்களையுடைய இரண்டு பரங்கி நிற மனிதர்கள் நின்றார்கள் .

பளிச்சென்ற ஒளி மிளிர நம்பெருமானர் (ஸல்) அவர்கள் தோன்றி " இந்த நீல நிற கண்களை உடைய இரு பரங்கி நிறத்தவர்களை சுட்டிக்காட்டி , நீர் இவர்களின் விஷமத்தை தடுப்பீராக ! என்று அருண்மொழி பகர்ந்து விட்டு மறைந்தனர் .

இவ்வாறு அவ்விரவில் கனவு கண்டு ,சுல்தான் அவர்கள் திடுக்கிட்டு எழுந்து ஒளு செய்து விட்டு, இரண்டு ரகாஅத் நபில் தொழுது விட்டு, திரும்பவும் படுக்கைக்கு சென்றார்கள் .

முதலில் கண்ட கனவு போலவே மீண்டும் சுல்தான் அவர்கள் கண்டார்கள் . பின்னர் எழுந்து ஒளு செய்துவிட்டு உறங்கச் சென்றார்கள்.

கனவை நினைத்து மனம் கலங்கமடைந்து, அமைதி இழந்த சுல்தான் அவர்கள் தனது அமைச்சர் ஜமாலுத்தீன் முஸலீ அவர்களிடம் தாம் கண்ட கனவைப்பற்றி கூறினார். அதைக் கேட்டதும் ஜமாலுத்தீன் முஸலீ அவர்கள் உடனே நீங்கள் மதீனா செல்லவேண்டும் ஆயத்தமாகுங்கள் என பணித்தார் .

உடன் பயணம் மேற்கொண்டு ஏராளமான பொருட்களுடன் பதினாறு நாட்களில் தன் இருபது சஹாக்களுடன் சுல்தான் அவர்கள் மதீனா வந்து சேர்ந்தார்கள்.

சுல்தான் அவர்களை மதீனாவில் உள்ள அறிஞர்களும், பெரியோர்களும் வரவேற்றார்கள். சுல்தான் மஸ்ஜிதுன் நபவிக்கு சென்று மிகவும் மரியாதையுடன் நின்று ஸலாம் கூறிய பின் 'தக்யத்துல் மஸ்ஜித்' தொழுகையை நிறைவேற்றினார்கள்.

மறுநாள் மதீனாவில் உள்ள அனைவர்களுக்கும் அன்பளிப்பும் வழங்கவும் விருந்திற்கும் ஏற்பாடுகள் செய்திருந்தார்கள். இச்செய்தி மதீனா நகர் முழுவதும் அறிவிக்கப்பட்டது

அனைவரும் அன்பளிப்பு வாங்கவும் விருந்தில் கலந்து கொள்ளவும் வேண்டும் என்பது சுல்தான் அவர்களின் உத்தரவு. அனைவர்களும் கலந்துகொண்டார்கள். வந்தவர்கள் அனைவரையும் மிக கூர்மையாக சுல்தான் அவர்கள் கவனித்தார்கள்.

ஆனால் கனவில் காண்பித்த நீல நிற கண்களையும் பறங்கி நிறத்தையுடைய இருவர்கள் பங்கேற்கவில்லை. இது சுல்தான் அவர்களுக்கு பெரும் ஏமாற்றத்தை தந்தது. அங்கு இருப்பவர்களிடம் எல்லோரும் விருந்தில் கலந்து கொண்டார்களா? என்று சுல்தான் கேட்டார்கள்.

அப்போது அங்கே வந்த ஒருவர், "சுல்தான் அவர்களே! வெளியூரைச் சேர்ந்த இருவர் மதீனா வந்துள்ளனர். அவர்கள் பெரும் பணக்காரர்கள் மற்றும் சிறந்த வணக்கவாளிகளாய் இருக்கிறார்கள், ரவ்லா ஷரீபின் அருகில் தான் இருக்கிறார்கள். பொது நிகழ்வுகள் எதிலும் கலந்து கொள்வதும் இல்லை " எனவும் விவரித்தார்.

கேட்டது தான் தாமதம் உடனே சுல்தான் அவர்கள் இருவரையும் காண விரைந்தார்கள் .

.

என்ன ஆச்சர்யம் ..! கனவில் கண்ட நீல நிற கண்களை பரங்கி நிறத்தையுடைய அதே நபர்கள் பார்க்க சாலிஹானவர்களைப் போன்று தோன்றினர். ரவ்லா ஷரீபிற்கு அருகாமையில் பக்திபூர்வமாக நின்றுகொண்டிருந்தார்கள். இவர்களின் நடவடிக்கை சுல்தான் அவர்களுக்கு யாதொரு சந்தேகத்திற்கும் வழி வகுக்கவில்லை ,

விசாரித்ததில் இருவரும், "நாங்கள் ஸ்பெயின் நாட்டைச் சேர்ந்தவர்கள் என்றும் ஹஜ்ஜு செய்ய வந்த நாங்கள் மதீனாவில் தங்கி எம்பெருமானர் (ஸல்) அவர்களின் அடக்க ஸ்தலத்தை தினந்தோறும் தரிசித்து வரும் பேறு பெற்று வருவதாகவும் கூறினர்.

சுல்தான் அவர்கள் மறுநாள் ரவ்லாவின் பக்கம் உலாவ சென்றார்கள். அங்கு தொழுகை விரிப்பு காணப்பட்டது. அருகே சென்று தொழுகை விரிப்பை அகற்றியதும் அங்கு சந்தேகத்திற்கு இடமாக பலகை ஒன்றிருந்தது அதை அகற்றியதும் சுல்தான் நூருத்தீன் ஷஹீது அவர்களுக்கு உடல் நடுநடுங்கி போனது. அங்கே அண்ணலார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்களின் அடக்கஸ்தலம் நோக்கி சுரங்கப்பாதை வெட்டப்பட்டுள்ளது தெரிந்தது,

உடனே சுல்தான் இருவர்களையும் கைது செய்து விசாரணையை மேற்கொண்டார்கள். அப்போது அந்த நீல நிற கண்கள் உடைய பரங்கி நிறத்தவர்கள் இருவரையும் தூணில் கட்டி வைத்து அடித்ததும் தாங்கள் ஸ்பெயின் நாட்டு கிறிஸ்தவர்கள் என்றும் நபிகள் நாயத்தின் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அன்னவர்களின் திரு உடலை திருடிக்கொண்டு செல்ல வத்திகானிலிருந்து எங்களை அனுப்பிவைத்தார்கள்" என உளவாளிகள் இருவரும் வாக்குமூலம் அளித்தார்கள் .

.

பின்னர் அவர்கள் இருவர்களுக்கும் மரண தண்டனை நிறைவேற்றப்பட்டது .

நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அன்னவர்களின் ரவ்லா ஷரீபை சுற்றிலும் ஆழமான அகழ்கள் வெட்டும்படியும், செம்பினால் (சில பதிவுகளில் ஈயத்தால் ) ஆன தடுப்பு பாதுகாப்பு சுவர்களை வைக்கும்படியும் சுல்தான் அவர்கள் கட்டளை பிறப்பித்தார்கள். அன்றுமுதல் இன்று வரை சுல்தான் அவர்கள் அமைத்த பாதுகாப்பு செப்புச்சுவர் அரணாக அமைந்து இருந்து வருகிறது என்பது குறிப்பிடத்தக்கது ஆகும்.

சவூதி அரேபியாவின் காஷிம் பல்கலைகழகத்தின் பேராசிரியரும் ஷெய்க் ஸாலிஹ் அல் உத்தைமின் அவர்களின் மாணவரும் ஆன டாக்டர் ஸாலிஹ் அல் ஸாலிஹ் என்பவர் சுல்தான் நூருத்தீன் ஷஹீது அவர்களின் வாழ்வில் நடந்த இச்சம்பவ நிகழ்வை பதிவு செய்திருக்கின்றார்கள்.

لَقَدْ جَآءَكُمْ رَسُوْلٌ مِّنْ اَنْفُسِكُمْ عَزِيْزٌ عَلَيْهِ مَا عَنِتُّمْ حَرِيْصٌ عَلَيْكُمْ بِالْمُؤْمِنِيْنَ رَءُوْفٌ رَّحِيْمٌ

(முஃமின்களே!) நிச்சயமாக உங்களிலிருந்தே ஒரு தூதர் உங்களிடம் வந்திருக்கின்றார்; நீங்கள் துன்பத்திற்குள்ளாகி விட்டால், அது அவருக்கு மிக்க வருத்தத்தைக் கொடுக்கின்றது; அன்றி, உங்(கள் நன்மை)களையே அவர் பெரிதும் விரும்புகிறார்; இன்னும் முஃமின்கள் மீது மிக்க கருணையும் கிருபையும் உடையவராக இருக்கின்றார்.

(அல்குர்ஆன் : 9:128)

இறைவன் தன் திருமறையில் கூறி இருப்பது கேற்ப நபிகளார் அன்றும் இருந்தார்கள் ; இன்றும் இருக்கின்றார்கள் ; என்றும்

இருப்பார்கள் என்பதில் ஐயமில்லை

ர. ரா

நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹயாத்துந் நபி ( பகுதி 2 )




ஹஸ்ரத் ஷைகு சைய்யிதினா நூருத்தீன் அபுல்ஹசன் அலிய்யிஷ்ஷாதுலி ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் முதல் கலீஃபா ஹஸ்ரத் அபுல் அப்பாஸ் முர்சி ரலியல்லாஹு அன்ஹு அவர்களிடம் பாடம் கற்ற ஹஸ்ரத் இமாம் பூசரி ரலியல்லாஹு அன்ஹு அவர்கள் நாயகம் சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அவர்கள் மீது பாடிய புகழ்மாலை கஸீதத்துல் புர்தாவைப் பற்றியும் அதன் பெயர்க் காரணத்தைப் பற்றியும் நமக்குத் தெரியும்.
165 கண்ணிகளைக் கொண்ட இந்த கஸீதாவானது நாயகம் சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அவர்களின் புனித ரவ்லா ஷரீஃப் சுவர்களில் எழுதப்பட்டுள்ள பெருமை உடையது.

ரசூலே கரீம் சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அவர்களின் கருணைப் பார்வை தன்மீது படவேண்டும் என்று கஸீதத்துல் முலரியா, கஸீதத்துல் முஹம்மதிய்யா, கஸீதத்துல் ஹம்ஸிய்யா,'என்னும் மூன்று புகழ் மாலைகளைபூசரி இமாம் அவர்கள் இயற்றினார்கள்.
இச்சமயத்தில், இவர்கள் பக்கவாத நோய் பீடித்து அவதிப்பட்டனர். மருந்துகளால் நிவாரணம் கிடைக்காத பூசரி இமாம் கஸீதத்துல் புர்தாவை இயற்றி மனமுருகி ,கண்ணீர் உகுத்து நோயிலிருந்து நிவாரணம் வேண்டினார்கள் .
அப்போது பூசரி இமாம் அவர்கள் இந்த கஸீதாவிற்கு " கஸீதத்துல் புர்தா " என்று பெயர் வைக்கவில்லை. நிவாரணம் வேண்டி துஆச் செய்து கஸீதாவைப் பாடி பூசரி இமாம் அவர்கள் தூங்கிய போது அன்று இரவு நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அவர்கள் அன்று இரவு பூசரி இமாமின் கனவில் ஹாலிராகி இவர் இயற்றிய கஸீதாவை ஓதிக் காண்பிக்கச் சொன்னார்கள்.
புளகாங்கிதம் அடைந்த பூசரி இமாம் கஸீதாவை ஓதிக் காட்டிக் கொண்டே வந்தார்கள்.நாயகம் சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அவர்களும் மகிழ்வுடன் ஒரு செடி காற்றில் அசைந்தாடுவதைப் போல ஆடி அசைந்து ரசித்துக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.
பூசரி இமாம் அவர்கள் அவ்வாறு ஓதி
வ கைஃப யுத்ரிகு ஃபித்துன்யா ஹகீகத்துஹு என்று துவங்கும் 50 வது கண்ணியை ஓதி முடித்து , 51ஆவது கண்ணியின் முதல் அடியாகிய, "ஃப மப்லஃகுல் இல்மி ஃபீஹி அன்னஹு பஷருண்" .......
என்பதனைப் பாடியதும், அடுத்த அடி நினைவுக்கு வராது, திணறினார்கள்.
அப்பொழுது,
"வ அன்னஹு கைரு கல்கில்லாஹி குல்லிஹிமி"
என்ற அடுத்த அடியை, நாயகம் சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அவர்கள் எடுத்து கொடுக்கவே பூசரி இமாம் அவர்கள் மகிழ்ச்சியின் உச்சிக்கு சென்றார்கள்.
இவ்வாறு பூசரி இமாம் அவர்கள் தாம் இயற்றிய மொத்தம்165 கண்ணிகளையும் பவ்யமாகவும் பக்தியுடனும் ஓதிக் காண்பித்தார்கள்
நாயகம் சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அவர்கள் முழுவதுமாக கேட்டு அகமகிழ்ந்து தங்கள் திரு மேனியில் இருந்த போர்வையை எடுத்து, பூசரி இமாம் அவர்களின் தோள் மீது போர்த்தி தங்கள் பொற்கரங்களால், பூசரி இமாம் அவர்களின் உடலை அன்புடன் தடவிக் கொடுத்தார்கள்.
துனுக்குற்று விழித்தெழுந்த பூசரி இமாம் அவர்கள் தாம் தமது பக்கவாதம் நீங்கி முழு உடல் நலம் பெற்று சுகம் பெற்றுவிட்டதை உணர்ந்தனர்!
நாயகம் சல்லல்லாஹு அலைஹி வ சல்லம் அவர்கள் வந்து சென்றதன் அடையாளமாக தாம் படுத்திருந்த அறை முழுவதும், கஸ்தூரி மனம் கமழ் வதையும் நுகர்ந்து மகிழ்ந்தனர்
பக்கவாதம் பாதித்து படுத்த படுக்கையாய் கிடந்த பூசரி இமாம் அவர்கள், சுகம் பெற்று அன்று காலை சுபுஹு தொழுவதற்காக பள்ளி சென்ற பொழுது, ஒரு பெரியவர் பூசரி அவர்களிடம் , " தாங்கள் இயற்றிய "அமின் ததக்குறு ஜீரானின் பீ தீசலமி"என்று தொடங்கும் புகழ்மாலையை நீங்கள் நாயகத்திடம் பாடிக் காண்பித்த பொழுது.....
நாயகம் அவர்கள் ஒரு செடிபோல், அசைந்து அசைந்து கேடடு ரசித்து,கொண்டிருந்ததை நான் பார்த்தேன்!" என்றார்கள்.
இச்செய்தி, அந்தநாடெங்கும் பரவியது.
பின்னர் கண் நோயால் பாதிக்கப்பட்ட ஒருவரின் கனவில் இந்தப் பாமாலையின் பெயர் "புர்தா "என அறிவிக்கப்பட்டது. அன்றிலிருந்துதான் இந்த கஸீதாவிற்கு புர்தா என்று நபிகளார் சூட்டிய பெயர் வந்தது .
நாயகத்தின் புகழ் பாடினால் ஆன்மாவுக்கும் உடலுக்கும் சுகம் கிடைப்பதோடு நாளை கியாமத்து நாளில் அவரது திருச்சபையில் இன்ஷா அல்லாஹ் நாம் இருப்போம் என்பதில் சந்தேகமில்லை.
நாயகத்தின் அன்புக்கு ஏங்கும்
இறையடியான்.
Dr. எஸ்.எம்.
Shamsudeen Ibrahim
பதிவிலிருந்து ...
ர.ரா

நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹயாத்துந் நபி ( பகுதி 3 )

இறைநேசச் செல்வி ராபியா பஸ்ரி பிறந்த இரவு வீட்டில் விளக்கேற்ற கூட எண்ணெய் இல்லாத அவல நிலையில் இருந்த அவருடைய தந்தை அண்டை வீட்டில் சென்று கேட்க நாணமுற்று அளவிட முடியா மனத்துயரத்துடன் உறங்கு போது எம் பெருமானார் (ஸல்) அவர்கள் அவரின் கனவில் திரு தோற்றம் வழங்கி

" ஒன்றும் கவலை கொள்ள வேண்டாம். உம்மகள் பெண்களின் அரசியாக விளங்குவார் அவரின் அறிவுரையால் 70 ஆயிரம் பேர் சுவனம் போனவார்கள்

" இந்நகர ஆளுநர் ஈஸா ஸதனுக்கு நான் எழுதுவது போன்று ஒரு மடல் எழுதுவீராக ,

அதில் நீர் ஒவ்வொரு இரவும் நூறு ஸலவாத்துகளும், வெள்ளி இரவு நானூறு ஸலவாத்துகளும் ஓதுவது வழக்கமாய் இருக்க , சென்ற வெள்ளி இரவு என்னை மறந்து விட்டாரே எனவே அதற்கு பிராயச்சித்தமாக 400 தினார்கள் இம்மனிதருக்கு கொடுப்பீராக .. என்று குறிப்பிடுக " _ என்று கூறிவிட்டு மறைந்தனர் .

அடுத்த நாள் காலையில் அவ்விதமே செய்து நானூறு தினார்களைப் பெற்று தன் வறுமையே போக்கினார் ராபியாவின் தந்தை என்பது வரலாறு தரும் உண்மையாகும் .

ர.ரா

நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹயாத்துந் நபி ( பகுதி 4 )

சையத் முஹம்மது புஹாரி தங்கள் (ரஹ்) அவர்கள் ஹஜ் கடமையை நிறைவேற்றிவிட்டு , அவர்களுக்கு அறிமுகமாகியிருந்த சிலர் அவர்களை "செய்யத் " "செய்யத் " (நபிகளாரின் இரத்த பந்த வாரிசு) என்று அழைத்துப் பெரிதும் மரியாதை செய்தனர் .

அப்பொழுது அங்கிருந்த செய்யத் ஷாதாதுகளில் ஒருவரான செய்யத் ஷரீப் என்பவருக்கு மிகவும் பொறாமை ஏற்பட்டது . "நான்தான் செய்யத் _அவர் செய்யத் அல்ல "என்று அவர் கூறினார் .

( காரணம் செய்யத் ஷரீப் அவர்கள் மக்கா மாநகரில் வாழ்ந்து வரும் அரபி . புகாரி தங்கள் அவர்கள் அந்தமான் பக்கத்திலுள்ள கவ்ஹத்தி தீவில் பிறந்தவர்கள் ) இந்த வாதம் இது புகாரி தங்கள் அவர்களுக்கு மிக மனக்கஷ்டத்தை கொடுத்தது .

புகாரி தங்கள் அவர்கள் :

" நாம் இருவரும் பெருமானாரின் ரவ்லா ஷரீப் முன்நின்று எம்பெருமானார் (ஸல்) அவர்களுக்கு சலாம் உரைப்போம் எவருடைய ஸலாத்திற்கு பதில் வருகிறதோ , அவரையே நாம் "செய்யத் " என்று அழைப்போம் " என்று இருவரும் முடிவுக்கு வந்தனர் .

முதலில் செய்யத் ஷரீப் அவர்கள் ஸலாம் உரைத்தார்கள் .பதில் வரவில்லை . திரும்ப திரும்ப எத்தனையோ முறை ஸலாம் உரைத்தும் அங்கிருந்து யாதொரு பதிலும் வரவில்லை .அது கண்டு அவருக்கு ஏற்பட்ட வருத்தத்திற்கு அளவே இல்லை .

பின்னர் புகாரி தங்கள் ஸலாம் சொல்ல வேண்டிய முறை வந்த பொழுது அவர்களை சலாம் கூறுமாறு மக்கள் கூறினர் . சற்று தாமதித்து கூறுவதாக அவர்கள் கூறினார்கள் . பின்னர் சற்று நேரம் கழித்து மிகவும் மரியாதையுடன் சென்று ரவ்ளா முன் கைகட்டி நின்று என் பெருமானாருக்கு (ஸல் ) அவர்களுக்கு சலாம் உரைத்தார்கள் .

அடுத்தகணம்" வ அலைக்கும் ஸலாம்" என்று பதில் ரவ்லா ஷரீபிலிருந்து வெளிவந்தது .

இதுகண்டு அங்கிருந்தோர் அனைவரும் பெரும் வியப்பில் ஆழ்ந்தனர் செய்யத் ஷரீப் நிலையோ பரிதாபத்திற்கு உரியதானது . இது கண்ட புகாரி தங்கள் அவர்கள் இரங்கி "இப்பொழுது நீரும் சலாம் கூறும் பதில் கிடைக்கும் என்று சொல்ல , அவ்வாறே அவரும் ஸலாம் கூற ரௌளா ஷரீஃபிலிருந்து

" வ அலைக்கும் ஸலாம்" என்று பதில் வந்தது .

இது கண்டு அங்கிருந்த அனைவருக்கும் முன்னே விட பன்மடங்கு வியப்பு அதிகமானது.

அப்பொழுது அவர்களை நோக்கி புகாரி தங்கள் " நாங்கள் இருவருமே செய்யது ஷதாத்கள் தான் சரீப் அவர்கள் எம் பெருமானார் (ஸல்) அவர்களுக்கு ஸலாம் உரைத்த பொழுது பெருமானார் (ஸல்) அவர்கள் தங்களின் அடக்க இடத்திலேயே தொழுது கொண்டு இருந்ததால் அவருடைய ஸலாத்திற்கு அவர்கள் பதில் கூறவில்லை . இதனை அவர் அறியார் நான் இதனை அறிந்து அதன் காரணமாக சற்று தாமதித்து அவர்கள் தொழுது முடித்தபின் அவர்களுக்கு சலாம் உரைத்தேன் அவர்கள் பதிலளித்தார்கள் .

பின்னர் அவரும் ஸலாம் உதைத்தார் சரீப் அவர்களுக்கும் பதில் ஸலாம் கிடைத்தது நாங்கள் இருவருமே செய்யது ஷதாத் என்பதே ஹயாத்துந் நபி பெருமானார் ஸல் அவர்கள் மெய்ப்பித்தார்கள் என்று கூறினார்கள்

ர.ரா

தாஹா நபியின் தனிச்சிறப்புகள் - 7

நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் பேச்சை போன்று உலகில் எவரும் பேசவே இல்லை.

ஏனெனில் அவை உயர்ந்த அப்பேச்சு அவர்களுக்கு மட்டுமே விசேஷமாக வழங்கப்பட்டதாகவும் அதாவது "சுருங்கிய சொற்களில் விரிந்த பொருள்களைக் கொண்ட வார்த்தைகளை கூறும் ஆற்றலோடு நான் அனுப்பப்பட்டுள்ளேன் " என்றார்கள் நபியவர்கள்

-அபூ ஹுரைரா ரலியல்லாஹு

-நூல் புகாரி , முஸ்லிம்

நபிகள் நாயகம் (ஸல் ) அவர்களின் பேச்சுக்கள் விரிந்த பரந்த பலபெரும் பொருள்கள் நிறைந்தவை.

இமாம் அபூதாவூத் (ரலி ) அவர்கள் தான் ஐந்து லட்சம் ஹதீஸ்கள் எழுதி வைத்து இருந்ததாகவும் , அவைகளில்

4 ஆயிரத்து 800 ஹதீஸ்கள் தன்னுடைய ஹதீஸ் கிரந்தத்தில் கோர்வை செய்ததாகவும் , நாயகத்தின் சொற்கள் லட்சக்கணக்கில் இருந்தாலும் அவைகளில் நான்கு மனிதனுக்கு போதும் என்றும் கூறி ரத்தினச் சுருக்கமாக நபியின் சொல் முத்துக்களில் நான்கு நன் முத்துக்களே எடுத்து அதைக் கொண்டு

பிரதலாப்படுகிறார்கள் .

1) நிச்சயமாக செயல்கள் அனைத்தும் எண்ணங்களை கொண்டதாகும் .

2 ஒரு மனிதனின் இஸ்லாம் அழகுற, தனக்கு தேவையில்லாத வீண் செயல்களை அவன் விட்டுவிடுவது .

3 தனக்கு விரும்புபவைகளை தன் சகோதரனுக்கு விரும்பும் வரை ஒரு மூமின் அவர் மூமினாக ஆக மாட்டார் .

4) நிச்சயமாக ஹலாலும் தெளிவு . நிச்சயமாக ஹராமும் தெளிவு .

என்ற நான்கு ஹதீஸ்கள் ஆகும் .

பேசும் பேச்சில் பெருமானாரை போன்று பேசும் திறமை நிச்சயமாக நமக்கு இல்லை . அவர்களுக்கு வழங்கப்பட்ட சுருங்கிய சொற்களில் விரிந்த பெரும் பொருள்களைக் கூறும் " ஜவாமிஉல்கலிம் " திறன்கள் நமக்கு வழங்கப்படவில்லை .

எனவே பேச்சில் நம்மைப் போன்றவர்கள் அல்ல ; ஜவாமிஉல்கலிமை பெற்ற நம் பெருமானார் (ஸல் ) அவர்கள் மட்டுமே .

இமாம் புகாரி ரலி அவர்கள் இரண்டு லட்சம் ஹதீஸ்களை மனனம் செய்திருந்தார்கள் எனினும் தன்னுடைய ஸஹீஹ் புகாரியில் நான்காயிரம் ஹதீஸ்களை உலகுக்கு தந்தார்கள்

அவர்கள் மனனமிட்டு அனைத்து ஹதீஸ்களையும் உலகுக்கு அவர்கள் தந்திருந்தால் இன்று சிலரால் குறைகூறி , ஒச்சம் சொல்லி ஒதுக்கப்படும் ஸஹீஹுஸ் ஸித்தா அல்லாத பல நூற்களில் இடம் பெற்ற பல ஸஹீஹான ஹதீஸ்கள் இமாம் அவர்களின் நூலில் இடம் பெற்று இவர்களிடம் முக்கிய இடத்தை பிடித்திருக்கும்.

நமக்கும் ஸஹீஹுல் புகாரி இரண்டு பாகத்தை தொடர்ந்து பல நூறு பாகங்கள் கிடைத்திருக்கும்

ர.ரா

தாஹா நபியின் தனிச்சிறப்புகள் - 8

நபிகளாரின் இரத்தம்

உயிரினங்களின் உடலில் உள்ள உதிரங்கள் அனைத்தும் ஹராம் ஆகும்.

செத்த பிராணி , உதிரம், பன்றிஇறைச்சி, அல்லாஹ் அல்லாதவர்களுக்கு அறுக்கப்பட்ட பிராணி ஆகியவற்றை அல்லாஹ் உங்களுக்கு ஹராமாக்கி உள்ளான் . _ குர்ஆன் 2 : 173

இவ்வசனத்தில் ஹராமாக்கியதாக விலக்கப்பட்டதாக கூறப்படும் ஒவ்வொன்றும் மனிதனுக்கு பெரும் தீங்கு விளைவிப்பதாகும்.

அந்த ஹராமாக்கப்பட்ட பொருள்களில் இரத்தமும் ஒன்று .

இரத்தத்தை உண்பது குடிப்பது கூடாது இரத்தத்தை விற்பதும் கூட ஹராமாகும்.

சில இடங்களில் முஸ்லிம்கள் ஆட்டு இரத்தத்தை பொரித்து வறுத்து உண்கிறார்கள் . இது கூடாது ஹரமாகும்

இரத்தம் ஹராம் என்பது மனித இரத்தம் மட்டுமல்ல, உலகில் உள்ள உயிரினங்கள் அனைத்தின் இரத்தமும் ஹராம்தான் ; கல்லீரல் மண்ணீரலைத் தவிர .

செத்தவைகள் இரண்டும் , இரத்தமுள்ளவை இரண்டும் நமக்கு ஹலாலாக ஆக்கப்பட்டுள்ளது

செத்தவை இரண்டு என்பது 1 ) மீன்

2) வெட்டுக்கிளி

இரத்தம் உள்ளவை இரண்டு

1 ) கல்லீரல் 2) மண்ணீரல் .

நூல்கள் :- அஹமது, ஹாக்கிம், தராகுத்னீ , இப்னுமாஜா .

ஏனெனில் இவை இரண்டிலும் ஓடும் ரத்தம் இல்லை இரத்தம் ஹராம் என்பது ஓட்டம் உள்ள ரத்தம்தான்

(நபியே ! ) நீர் கூறுவீராக : எனக்கு வஹீ மூலம் அறிவிக்கப்பட்டதில் உண்ணுபவர் மீது, அதை அவர் உண்ணுவது அது செத்ததாக அல்லது ஓட்டமுள்ள இரத்தமாக அல்லது பன்றியின் மாமிசமாக உள்ளதைத் தவிர வேறென்றையும் ஹரமாக்கப்பட்டதாக நான் காணவில்லை " - குர்ஆன் 6: 146

அல்லாஹ் பொதுவாக இரத்தத்தை ஹராமாக்கியத்திற்கு மிக முக்கிய காரணங்கள் பல உண்டு. உடலுக்கு கேடு விளைவிக்கும் அனைத்து பொருள்களும் இரத்தத்தின் வழியாகவே சிறுநீரகம் கல்லீரல் போன்ற இதர உறுப்புகளுக்கும் செல்கின்றன

இதனாலேயே உடலிலுள்ள நோய்களை கண்டுபிடிப்பதற்கு இரத்தப் பரிசோதனை செய்யப்படுகிறது .

இதிலிருந்து இரத்தமே நோய்களின் மூலப்பிறப்பிடம் என்பது புலனாகிறது.

ஒரு உயிரினத்தின் ரத்தத்தை உட்கொள்வதன் மூலம் அதன் அனைத்து நோய்களும் மனிதனுள் ஊடுருவி விடும் இதனால்தான் அறுக்கப்பட்ட பிராணியின் ரத்தத்தையும் கூட வெளியேற்ற வேண்டும் என்றும் ஓட்டம் உள்ள இரத்தங்கள் அனைத்தும் ஹராம் என்றும் இஸ்லாம் கூறுகிறது

ஓட்டம் உள்ள இரத்தங்கள் அனைத்தும் ஹராம் .

ஆனால் நபி ஸல்லல்லாஹு அலைஹி அவர்களின் உடலில் உள்ள இரத்தம் ஹலாலாகும் . ஓட்டம் உள்ள ரத்தம்தான் ஆனாலும் ஹலால் .

ஹலால் மட்டுமல்ல; அதைக் குடித்தவரை நோய்கள் தீண்டாது . நரகம் தீண்டாது.

உஹது போரின்போது நபியின் முகத்தில் காயம் பட்டு ரத்தம் வழிந்தது அதை உறிஞ்சி குடித்தவர் ஆபூஸயீதினில் குத்ரி ரலியல்லாஹு அவர்களின் தந்தை மாலிக் இப்னு ஸினான் அவர்கள்

அப்போது நபியவர்கள் யாருடைய ரத்தத்தில் என் ரத்தம் கலக்கின்றதோ அவரை நரக நெருப்பு தீண்டாது எனக்கூறினார்கள் .

ஒரு தடவை நபி ஸல்லல்லாஹு அலா முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இரத்தம் குத்தி எடுத்து அந்த இரத்தத்தை அப்துல்லாஹ் இப்னு ஜுபைர் ரலி அவர்களிடம் கொடுத்து இதனை எங்காவது புதைத்து விடுங்கள் என்று கூறினார்கள் .

அதனை வாங்கிச் சென்ற அவர்கள் புதைத்து விட்டதாக கூறினார்கள்.

எங்கே புதைத்தீர் ? என்று கேட்டபோது , அதை நான் குடித்து விட்டேன் என்றார்கள் .

அப்பொழுது நபிஸல் அவர்கள் "என்னுடைய ரத்தம் எவருடைய உடலினுள் சென்று விட்டதோ அவரை நரகத்தின் நெருப்பு தீண்டாது " என்று சொன்னார்கள்.

ர.ரா

நபிகளாரைப் பற்றிய தொடரில் இது

33 வது பதிவு

மரபணுவின் விசித்திர மர்மங்கள் 1 30-10-2020



மரபணு என்றால் ஜீன்கள் **(Genes).** சரி

ஜீன்கள் **(Genes)** என்றால் என்ன?

“மனித உடலினுள் எண்ணற்ற செல்கள் ( பத்து கோடி கோடி) உள்ளன. இவற்றில் ஒரு செல்லின் உட்கருவுக்குள் மொத்தம் 46 குரோமோசோம்கள், இவைகள் தகப்பனாரிடமிருந்து 23+தாயிடமிருந்து 23 பெற்று அதாவது 23 ஜோடிகளாக குரோமோசோம்கள் அமைந்துள்ளது.

இந்த ஒவ்வொரு குரோமோசோமும் **DNA (Deoxyribonucleic Acid)** மற்றும் **Histon** என்ற புரதத்தால் உருவாக்கப்பட்டுள்ளது பொதுவாக உடல் வளர்ச்சி, உடல் உறுப்புகளின் செயல்பாடுகளுக்கு புரதம் மிகவும் அவசியம். இந்த புரதத்தின் உருவாக்கத்தில் DNA முக்கிய பங்கு வகிக்கிறது. இந்த **DNA**-வுக்குள் சுமார் 30 ஆயிரம் வரையிலான ஜீன்கள் (Genes) அல்லது மரபணுக்கள் உள்ளது.

இத்தகைய DNA-வில் ஏற்படும் மாற்றம், செல்களில் உள்ள புரதத்தயாரிப்பில் மாற்றத்தை ஏற்படுத்துவதோடு, நமது உடல் அமைப்பு மற்றும் பண்புகள் சார்ந்த மாற்றங்களுக்கும் காரணமாக இருக்கிறது.”

டி.என்.ஏ என்பது என்ன ஒரு நீளமான சங்கிலி நியுக்ளியோ - டைடுகள் (nucleotides ) சிறிய கூட்டணிக்கான சங்கிலி. அதை கண்ணால் பார்க்க முடியாது . மிக மிக நுட்பமானது. ஆனால் அதன் அமைப்பை சாமர்த்தியமாக மறைமுகமாக கண்டிருக்கிறார்கள் மாலிக்யூலர் பயாலஜி முறைகளின் மூலம் !

அது ஒரு ஸ்பைரல் நூலேணி போன்றது. முறுக்கிக் கொண்ட நூலேணி போன்றது கண்டுபிடித்த வாட்சன் , க்ரிக் என்ற இரு விஞ்ஞானிகளுக்கும் 1962 இல் நோபல் பரிசு கிடைத்தது. அதை மரணமற்ற சுருள் (immortat Coil) என்று ரிச்சர்டு டாக்கின்ஸ் சுவராசியாக சொல்கிறார் . ஏன் என்று பிறகு சொல்றேன் .

ஜீன்களின் முக்கியத்துவம் என்ன?

“குழந்தைகள் தங்களுடைய பெற்றோரில் யாராவது ஒருவரைப் போன்ற உருவம் மற்றும் குணநலன்களைப் பெற்றிருப்பதற்கு அடிப்படைக் காரணமாக இருப்பது மரபணுக்கள்.

ஒவ்வொரு மரபணுவும் ஒவ்வொரு விதமான மரபுப் பண்பினை பெற்றோரிடமிருந்து குழந்தைகளுக்கு எடுத்துச் செல்லும் பணியினை மேற்கொள்கிறது.

இப்படி எடுத்துச் செல்லப்படும் பண்புகளே அவர்களுக்கிடையே உள்ள பலவிதமான ஒற்றுமைகளுக்கு மூலகாரணமாக இருக்கிறது.

இந்த ஒற்றுமைகளை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். முகம், உடல் உறுப்புகளின் புறத் தோற்றம், உடல் நிறம் போன்ற புறம் சார்ந்த ஒற்றுமைகள் ஒன்று.

செயல்பாடுகள், பழக்க வழக்கங்கள், குணநலன்கள், நோய்கள் போன்ற அகம் சார்ந்த ஒற்றுமைகள் மற்றொன்று.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: "ஆதமின் சந்ததிகளில் தலைமுறை தலைமுறையாக நான் சிறந்த தலைமுறை வழியே (மரபணுக்களில் பாதுகாக்கப்பட்டு வந்து இப்போது) நான் தோன்றியிருக்கும் (இந்தச்) சிறந்த தலைமுறையில் தோன்றி இறைத்தூதராக ஆக்கப்பட்டுள்ளேன்.

என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

ஸஹீஹ் புகாரி : 3557.

ர ரா

மரபணுவின் விசித்திர மர்மங்கள் 4




கி-மு 4000 பாபிலோனியர்களின் காலத்தில் களிமண் பலகைகளில் எழுதுவதும் வரைவதும் வழக்கமாக இருந்தது அது அவர்களது தொடர்பு ஊடகம் . காகிதம் கண்டுபிடிக்கப்படாத நிலையில் களிமண் பலகைகளில் தான் அவர்கள் தங்களுக்குத் தெரிந்ததை எல்லாம் பதிந்து வைத்தார்கள்

அப்படிப்பட்ட ஒரு பதிவை ஆராய்ந்தபோது , அதில் குதிரைகளின் ஐந்து தலைமுறை குணாதிசயங்களைப் பற்றி பதிந்து வைத்திருக்கிறார்கள்.

அந்த குதிரைகளின் தலை மற்றும் பிடரியின் அமைப்பு இந்த ஐந்து தலைமுறையின் ஊடே எவ்வாறு மாறுபாடு அடைந்தது என்றும் பதிந்து வைத்திருக்கிறார்கள்.

மரபியல் கூறுகளை பற்றிய உண்மைகளின் முதல் அதிகாரப்பூர்வமான பதிவு இதுவாகத்தான் இருக்கவேண்டும்.

ஏறக்குறைய இதே காலகட்டத்தில் பேரிச்ச மரத்தின் சேர்க்கை முறையில் அயல் மகரந்த சேர்க்கையை செய்வது பற்றி கூட 4,000 வருடத்திற்கு முன்பே பதிந்து வைத்திருக்கிறார்கள். ஆச்சரியமாக இருக்கிறதல்லவா ?

அனஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது:

நபி (ஸல்) அவர்கள் பேரீச்ச மரங்களுக்கு மகரந்தச் சேர்க்கை செய்துகொண்டிருந்த மக்களைக் கடந்து சென்றார்கள்.

அப்போது, "நீங்கள் (இவ்வாறு) செய்யாமலிருந்தால் நன்றாயிருக்குமே!" என்று சொன்னார்கள்.

ஆகவே, (அவர்கள் மகரந்தச் சேர்க்கை செய்வதை விட்டுவிட்டனர். அதனால் அந்த மகசூலில்) நன்றாகக் கனியாத தாழ்ந்த ரகக் காய்களே காய்த்தன.

அப்போது அவர்களைக் கடந்து நபி (ஸல்) அவர்கள் சென்றபோது, "உங்கள் (பேரீச்ச) மரங்களுக்கு என்ன நேர்ந்தது?"என்று கேட்டார்கள்.

மக்கள், "நீங்கள் இப்படி இப்படிச் சொன்னீர்கள். (அதனால் நாங்கள் மகரந்தச் சேர்க்கை செய்வதை விட்டுவிட்டோம். அதனால் இந்த நிலை ஏற்பட்டுவிட்டது)" என்று கூறினர்.

நபி (ஸல்) அவர்கள், "உங்கள் உலக விவகாரங்கள் பற்றி (என்னைவிட) நீங்களே நன்கு அறிந்தவர்கள்" என்று சொன்னார்கள். ஸஹீஹ் முஸ்லிம் : 4713

நபிகளாரின் காலமான 6 ஆம் நூற்றாண்டில் இது ஏதோ திருமண சடக்கு சம்பிராதயம் மாதிரி செய்யப்பட்டிருக்கிறது . எனவேதான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் "நீங்கள் (இவ்வாறு) செய்யாமலிருந்தால் நன்றாயிருக்குமே!" என்று சொன்னார்கள்.

ஆனால் மகரந்த சேர்க்கையைப் பற்றி விஞ்ஞானபூர்வமான ஆய்வு 18 ம் நூற்றாண்டில்தான் செய்யப்பட்டுள்ளது

மகரந்தச்சேர்க்கை **(pollination)** என்பது,

கருக்கட்டல் செயல்முறைக்காகவும்,

பாலியல் இனப்பெருக்கத்திற்காகவும்

மகரந்தத்தூள்கள் ஒரு தாவரத்தில்

இருந்து இன்னொன்றுக்கு எடுத்துச் செல்லப்படுவதற்கான ஒரு வழிமுறை ஆகும்.

மகரந்தத்தூள் ஆண் பாலணுக்களையும்,சூல்கள் பெண் பாலணுக்களையும் கொண்டுள்ளன.

பூக்கும் தாவரங்களின் இனப்பெருக்கத்தில், மகரந்தச்சேர்க்கை ஒரு முக்கிய அம்சமாகும் . இவ்வகை இனப்பெருக்கத்தின் மூலம் மரபியல்

பல்வகைமைத் தன்மை கொண்ட தாவரங்கள் உருவாகின்றன.

மகரந்தச்சேர்க்கை பற்றிய ஆய்வு தாவரவியல்,

தோட்டக்கலை, பூச்சியியல், சூழலியல் போன்ற பல்வேறு துறைகளை ஒன்றிணைக்கின்றது.

மகரந்தச்சேர்க்கையை, பூக்களுக்கும், மகரந்தக்காவிகளுக்கும் இடையிலான இடைவினையாகக் கொண்டு முதலில் ஆய்வு செய்தவர்

18 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த

" கிறித்தியன் கொன்றாட் இசுப்பிரெங்கெல் " என்பவராவார்.

மகரந்தச்சேர்க்கையின் விளைவான கருக்கட்டல் மூலம் உருவாகும் "காய்த்தல்" தோட்டக்கலையிலும்,

வேளாண்மையிலும் மிக முக்கியமான ஒன்றாகும்.

இன்று நம்மிடையே பிரபலமாக இருக்கும் பல தாவரங்கள் இயற்கையிலேயே உருவானது அல்ல உதாரணமாக இன்றைய பருத்தி இனமே யாரோ முகம் தெரியாத ஒரு மூதாதையர்கள்தான் சில காட்டுத் தாவரங்கள் இனங்களிலிருந்து உருவாக்கப்பட்டதுதான் .

இதைத்தான் முன்பே குறிப்பிட்ட மாதிரி மரபுகளைப் பற்றிய ஞானம் வெகு காலத்திற்கு முன்பிருந்தே இந்த பூமியில் இருந்திருக்கிறது என்று . என்ன... அவர்களுக்கு இதுதான் மரபியல் என்று தெரியாது அவ்வளவுவே.

பழங்கால சீனர்கள் கூட இதில் வித்தகர்களாகவே விளங்கினார் என்பதற்கு சரித்திர சான்றுகள் நிறைய கிடைத்துள்ளன.

மரபணுவின் விசித்திர மர்மங்கள் 7

ஜீன் தெரபி 1

1990 இந்த மரபியல் துவங்கி அமெரிக்கா பிரிட்டன் பிரான்ஸ் சீனா ஜப்பான் போன்ற நாடுகளின் விஞ்ஞானிகள் ஒத்துழைத்து அரசும் தனியாரும் தந்த நன்கொடைகளிள் ஆராய்ச்சி செய்து வாழ்வெனும் புத்தகத்தின் எழுத்துக்களை படித்து படி எடுத்துவிட்டார்கள் . (ATCGயைப் பற்றி முந்தைய பதிவுகளில் நோக்கவும்).சில பக்கங்கள் புரிந்து கொண்டும் இருக்கிறார்கள் இந்த சாதனையின் எதிர்கால சாத்தியங்கள் கண்டு சந்தோஷமும் படுகிறார்கள் பயப்படவும் செய்கிறார்கள்.

சந்தோஷம் :- இதனால் மனிதனை பீடிக்கும் பல வியாதிகள் மரபணு சார்ந்ததாக இருக்கின்றன. மரபணுக்கள் சரியாக வேலை செய்யாததால் உயிர்வாழத் தேவையான புரதங்களை வெளிப்படுத்தாததால் அல்லது தப்பாக வேலை செய்து விபரீதமாக பெருகுவதால் வியாதிகள் வருகின்றன அதனால் ஜீனில் போய் அவற்றை வெட்டி ஒட்டி நிவர்த்தி செய்யும் சாத்தியம் ஏற்பட்டிருக்கிறது . இதை ஜீன் தெரபி மாலிக்யூலர் மெடிஸின் என்று சொல்கிறார்கள் .

ஆரம்ப கட்டத்தில் இருக்கும் இந்த இயல் வரும் வருடங்களில் உன்னதப்படுத்தப் பட்டுவிட்டால் புற்றுநோய் , ஆல்ஸைமர் என்னும் கொடிய மறதி வியாதி, லிஸ்டிக் ஃபைப்ரோஸிஸ் என்னும் நெஞ்சில் கோழை பை பையாக கட்டிக் கொள்ளும் வியாதி . இதய நோய்கள், டயாபடீஸ் என்னும் சர்க்கரை வியாதி , மஸ்குலர் டைஸ்டராஃபி போன்ற இளம் வயதிலேயே தசைகளை சக்தி இழக்கச் செய்யும் வியாதி , சில மனநோய்கள் இவை அனைத்தும் மருத்துவப் பாடங்களில் இருந்து நீக்கப்பட்டு விடலாம் . மேலும் எந்த குரோமோசோம்கள் எந்த வியாதிக்கு காரணி என்று கண்டுபிடித்து உள்ளார்கள்.

உதாரணமாக கேன்சர் 11 ,17, 18 -வது குரோமோசோம்களின் பிழைகளால் வருகிறது என்று சொல்கிறார்கள் இதயநோய்க்கு 19 காரணமாம் . நோயை குணப்படுத்தியதோடு பிறக்கப்போகும் குழந்தைக்கு வருங் காலத்தில் என்ன வியாதி வரும் என்பதை முன் கூட்டியே கண்டு அதை ஜீன் ரிப்போரில் சரிசெய்ய முடியும் .

خَلَقَ السَّمٰوٰتِ وَالْاَرْضَ بِالْحَـقِّ وَصَوَّرَكُمْ فَاَحْسَنَ صُوَرَكُمْ‌ وَاِلَيْهِ الْمَصِيْرُ

உண்மையான காரணத்திற்கே வானங்களையும் பூமியையும் படைத்திருக்கின்றான். அவனே உங்கள் உருவத்தை அமைத்து, அதனை மிக அழகாகவும் ஆக்கி வைத்தான். அவனிடம்தான் (நீங்கள் அனைவரும்) செல்ல வேண்டியதிருக்கின்றது.

(அல்குர்ஆன் : 64:3)

பரம்பரை நோய்கள் மற்றும் அங்க உறுப்புகள் , குழந்தையின் நிறம்

( "எங்க உங்க அப்பாவுக்கு முன் பற்கள் சற்று எடுப்பாக இருக்கிறது . அது அவரது பேரனான நம்ம குழந்தை வராமல் பார்த்துக் கொள்ள ஜீன் ரிப்போரிடம் சொல்லி விடுங்க ! ) போன்றவற்றை சரி செய்ய முடியும் .

ஆக மொத்தத்தில் பிறக்கப்போகும் குழந்தையின் அங்க உறுப்புகளை மெனு கார்டில் ஆர்டர் செய்யற மாதிரி , இவர்களே தங்கள் குழந்தையை டிசைன் செய்து பெற்றுக் கொள்ள முடியும் என்றெல்லாம் கற்பனை செய்து ஜீன் தெரபியை நம்புகிறார்கள் .

ஆனால் குர்ஆனில் அல்லாஹ் ...

وَلَوْ نَشَآءُ لَمَسَخْنٰهُمْ عَلٰى مَكَانَتِهِمْ فَمَا اسْتَطَاعُوْا مُضِيًّا وَّلَا يَرْجِعُوْنَ

நாம் விரும்பினால் அவர்கள் உருவத்தையே மாற்றி அவர்கள் இருந்த இடத்திலேயே இருக்கும்படி (கல்லாகவோ நொண்டியாகவோ) ஆக்கி விடுவோம். அச்சமயம் அவர்களால் முன் செல்லவும் முடியாது; பின் செல்லவும் முடியாது. (அல்குர்ஆன் : 36:67)

..பயப்படும்படியான ஜீன் தெரபி சமாச்சாரத்தை அடுத்த பதிவில் சொல்றேன் .

ர ரா

மரபணுவின் விசித்திர மர்மங்கள் **10**

## What Are Stem Cells?

*Stem cells are undifferentiated cells with the capacity to both differentiate and multiply into the 200 cells types that form a human being.*




மனிதனின் தோல் செல்லுடன் பெண்ணின் சினைமுட்டையை சேர்த்து ஸ்டெம்செல் கருமுட்டையை உருவாக்கி அமெரிக்க விஞ்ஞானிகள் அபார சாதனை படைத்துள்ளனர். இதன்மூலம் சிக்கலான ஆபரேஷன்களுக்கு தேவையான ஸ்டெம்செல்களை உருவாக்க முடியும் என்று விஞ்ஞானிகள் கூறினர்.

குளோனிங் முறையில் மனிதனை ஜெராக்ஸ் எடுக்கும் முயற்சியின் முதல்கட்டம் இது என்ற பரபரப்பையும் ஏற்படுத்தியுள்ளது இந்த ஆராய்ச்சி. மனித உடலில் பல லட்சம் கோடி செல்கள் உள்ளன. இவற்றையோ, நுண்ணுயிர்களையோ மணம், நிறம், குணம் மாறாமல் அச்சு அசலாக ஜெராக்ஸ் பிரதி எடுப்பதுதான் 'குளோனிங்'. முறையில் உறுப்புகளை பெற முடியும் .

ஒரு ஆணின் தோல் செல்லை எடுத்து, அதனுடன் பெண்ணின் சினை முட்டையை சேர்த்து ஸ்டெம்செல் கருமுட்டையாக மாற்றியிருக்கிறார்கள். இது அச்சு அசலாக ஆண் தோல் செல்லின் ஜெராக்ஸ் போல அமைந்துள்ளது.

இதுபற்றி ஆய்வுக்குழு உறுப்பினர் டாக்டர் சுக்ரத் மிடாலிபோவ் மேலும் கூறியதாவது: மனிதனின் தோல் செல்லை குளோனிங் முறையில் உருவாக்கும் ஆராய்ச்சி வெற்றிகரமாக முடிந்துள்ளது.

இதுபோல குளோனிங் முறையில் உருவாக்கப்படும் கருமுட்டையில் இருந்து ஸ்டெம்செல் உருவாக்கி அதன் மூலம் பல்வேறு வகையான திசு செல்களை உருவாக்க முடியும். உறுப்பு மாற்று ஆபரேஷன்களுக்கு இது முக்கிய பங்களிக்கும். உறுப்பு செல்களை வளர வைத்து, செயற்கை உறுப்புகள் தயாரிப்பது, தேவைப்படுவோருக்கு பொருத்துவதற்கான முயற்சிகளும் வெற்றி பெறும்.

குளோனிங் முறையில் தயாரிக்கப்பட்டிருக்கும் மனித ஸ்டெம்செல்லுக்கு வேறு செல்கள், திசுக்கள், உறுப்புகளை வளர வைக்கிற திறன் இருப்பது உறுதியாக தெரிகிறது.

பார்வை கோளாறுகள், தண்டுவட பாதிப்புகள், பார்கின்சன்ஸ் டிசீஸ் எனப்படும் மூளை முடக்குவாதம், நரம்பு மண்டல பாதிப்புகள் ஆகியவற்றால் பாதிக்கப்பட்டவர்களின் செல்லை எடுத்து அதை கருமுட்டையாக மாற்றி வளர வைத்தால் செல்களின் ஜெராக்ஸ் பிரதிகளை உருவாக்க முடியும். பாதிக்கப்பட்ட செல்களை அகற்றிவிட்டு இந்த புதிய செல்களை பொருத்துவதன்மூலம் அவர்களை குணமாக்க முடியும்.

இப்படியாக பழுதடைந்த மனித உறுப்புகளை மாற்றி மாற்றி சிறுநீரகத்தை மாற்றி, இதயத்தை மாற்றி மண்ணீரல் மாற்றி , கல்லீரல் மாற்றி மனித ஆயுளை 120 லிருந்து 1000 வருடம் வரை நீடிக்க முடியுமா என்று மருத்துவ உலகம் சிந்திக்கிறது

وَلَتَجِدَنَّهُمْ اَحْرَصَ النَّاسِ عَلٰى حَيٰوةٍ ۛ وَ مِنَ الَّذِيْنَ اَشْرَكُوْا ۛ يَوَدُّ اَحَدُهُمْ لَوْ يُعَمَّرُ اَ لْفَ سَنَةٍ وَمَا هُوَ بِمُزَحْزِحِهٖ مِنَ الْعَذَابِ اَنْ يُّعَمَّرَ وَاللّٰهُ بَصِيْرٌ بِمَا يَعْمَلُوْنَ

அன்றி, (நபியே! அந்த யூதர்கள்) மற்ற மனிதர்களை விடவும் (குறிப்பாக இணைவைத்து வணங்கும்) முஷ்ரிக்குகளை விடவும் (நீண்ட நாள்) உயிர்வாழ மிகவும் பேராசை உடையவர்களாக இருப்பதை நிச்சயமாக நீங்கள் காண்பீர்கள்!

அவர்களில் ஒவ்வொருவனும் "நான் ஆயிரம் ஆண்டுகள் உயிர்வாழ வேண்டுமே?" என்று விரும்புவான். (அவ்வாறு நீண்ட நாள்) யிருடன் இருக்க அவனை விட்டு வைத்தாலும் அது வேதனையிலிருந்து ஒரு சிறிதும் அவனைத் தப்பிக்க வைத்துவிட மாட்டாது. அல்லாஹ் அவர்கள் செய்வதை உற்று நோக்குபவனாக இருக்கின்றான். (அல்குர்ஆன் : 2:96)

குமாரு உடம்பிலிருந்து பழுதடைந்த ஒவ்வொரு உறுப்பையும் மாற்றி மாற்றி எல்லா உறுப்புகளையும் மாற்றி விட்டால் மீதி இருப்பது குமார் தானா ?

குமாரையே பார்த்துக் கொண்டிருந்தால் பூமிக்கு பேரடிக்காதா ?

சென்ற நூற்றாண்டின் கவிஞர் ஷெல்லியின் மனைவி மேரி ஷெல்லி எழுதிய **Frankenstein or the modern prometheus** என்னும் நாவலில் ....

டாக்டர் விக்டர் ஃப்ராங் கன்ஸ்டைன் பல புதிய புதிய பிணங்களில் இருந்து உடல் பாகங்களை எடுத்து எடுத்து ஓர் உடலைத் தயாரித்து , அதற்கு உயிர் ஊட்டுகிறார் . அந்த உடனேயே அதற்கு ஒரு ஜோடியாக பெண் உடலையும் தயாரிக்க எண்ணினார் .

சரி இந்த ஒட்டு சேர்த்த ஆண் உடல் என்ன செய்கிறது என்று பார்ப்போம் என்று சோதிக்க .அந்த ஆண் தன் ஜோடியை உடனே உருவாக்க டாக்டரையே மிரட்டுகிறது உடனே அது தப்பி பெண்களைப் பார்த்து பார்த்து கொன்று பெண் பிணங்களை டாக்டருக்கு அனுப்பி வைக்கிறது மற்றவர்களையும் அழிக்க முயலும் அபாயம் ஏற்படுகிறது .இறுதியாக ரொம்ப சிரம்பத்திற்குப் பிறகு அது மருத்துவ ரீதியில் அழிக்கப்படுகிறது .

இதனால்தான் மரணம் அவசியப்படுகிறது . உறுப்புகள் பாதிக்கப்பட்டு மரணத்திற்கு நோய் ஒரு காரணமாகிறது . பழுதடைந்த உறுப்பை மாற்றி மாற்றி உயிர் வாழ்ந்தால் .....

"வந்தவரெல்லாம் தங்கி விட்டால் இந்த மண்ணில் நமக்கு இடம் ஏது ?"

ரஹ்மத் ராஜகுமாரன்

மரபணுவின் விசித்திர மர்மங்கள் 15
தலசீமியா - டாக்டர் கு. கணேசன்
குழந்தைகளைக் கொல்லும் தலசீமியா என்னும் ரத்த அழிவு சோகை அமெரிக்காவில் 20 ஆண்டுகளுக்கு முன்பு அறிமுகம் செய்யப்பட்ட இந்த சிகிச்சை இப்போது தமிழகத்திலும் வந்துவிட்டது .
ஒரே ஒரு கண்டிஷன் இந்த சிகிச்சைக்கு தேவை புதிதாகப் பிறந்த ஒரு குழந்தை . எங்கோ எவருக்கோ பிறந்த குழந்தை இல்லை .சொந்தத்தில் பிறந்த குழந்தை. உடன் பிறந்த குழந்தை. இந்த சிகிச்சைக்கு என்றே பிறந்த ஸ்பெஷல் குழந்தை அதாவது டிசைனிங் பேபி.
தலசீமியா வந்து அவதிப்பட்ட எட்டு வயது மகனுக்கு டிசைனிங் பேபி மூலம் மறுவாழ்வு கொடுத்திருக்கும் சாவ் தேவ் சிங் சோலங்கி தம்பதியரை உங்களுக்கு அறிமுகம் செய்கிறேன் .
இவர்கள் ஆமதாபாத்தில் வசிக்கிறார்கள் இரண்டு குழந்தைகள். மூத்த பெண் குழந்தைக்கு பிறகு அபிஜித் பிறக்கிறான் அவனுக்கு 10 மாதம் ஆகிறது அதுவரை சந்தோஷம் பொங்கி வழிந்த அவர்கள் குடும்பத்தில் சோகம் சூழ்கிறது ஏன் சோகம் ? சோலங்கிடமே கேட்போமே.....
"என் மகனுக்கு பத்தாம் மாதத்தில் இருந்து உடல் நிலை பாதிக்க தொடங்கியது. அடிக்கடி சளி பிடித்தது. பசி குறைந்து .உடல் மெலிந்து.காமாலை வந்தது .மேனி வெளுத்தது .எந்நேரமும் அழுகை, அசதி , பதறிப் போனோம் அவனது நிலைமையை பார்த்து கலங்கிப் போனோம் .அவனை மருத்துவமனைக்கு கொண்டு சென்றோம்.
"தலசீமியா மேஜர் " என்னும் நோய் அவனுக்கு வந்திருப்பதாகச் சொன்னார்கள். இதற்கு மாதா மாதம் ரத்தம் செலுத்துவதுதான் சிகிச்சை என்றார்கள் .
முதலில் மலைத்துப் போன பிறகு எங்களை தைரியப் படுத்திக் கொண்டோம் எப்படியும் அவனை குணமாக்கியே தீருவது என்று வைராக்கியம் கொண்டோம் .
சிகிச்சையை தொடர்ந்தோம் . ஒரு வருஷமோ ரெண்டு வருஷமோ இல்லை மொத்தம் ஆறு வருஷம் .
மாதந்தோறும் ரத்தம் மாற்றும் சிகிச்சை செய்து வந்தோம் ஒவ்வொரு முறையும் 350 லிருந்து 400 மில்லி வரை ரத்தம் ஏற்றுவார்கள்.
அவனுக்கு ஆறு வயது ஆகும் போது மொத்தம் 80 முறை ரத்தம் செலுத்திருந்தோம் . ஒருகட்டத்தில் எங்கள் மகனுக்கு புதிய சிகிச்சை இல்லையா என்பதை அறிய ஆசைப்பட்டோம் .மருத்துவரிடம் ஆலோசனை கேட்டோம் அப்போது கிடைத்த தகவல் தான் எலும்பு மஜ்ஜை சிகிச்சை

இதற்கு என்ன செய்யவேண்டும் ? என்ற கேள்வியுடன் நானும் என் மனைவியும் டாக்டர் மனீஷ் பாங்கரைச் சந்தித்தோம் இவர் எங்கள் ஏரியாவில் புகழ்பெற்ற செயற்கை கருத்தரிப்பு நிபுணர். எங்கள் அபிஜித்தைக் காப்பாற்ற அவர் இரண்டு வழிகளை காண்பித்தார் . ஒன்று மூத்த குழந்தையிடம் எலும்பு மஜ்ஜை பெற்று அபிஜித்க்குச் செலுத்துவது .
அடுத்தது அமெரிக்காவில் கிடைக்கும் எலும்பு மஜ்ஜை விலைக்கு வாங்கி செலுத்துவது.
நாங்கள் முதலாவது வழிக்குச் சம்மதித்தோம் காரணம் அமெரிக்காவில் இருந்து பெறப்படும் எலும்பு மஜ்ஜை அந்நியர் உடையது ஆகும் செலவு ஏறக்குறைய 68 ஆயிரம் அமெரிக்க டாலர்கள் அப்படியே செலவு செய்ய தயார் என்றாலும் இதில் 30% தான் வெற்றி வாய்ப்பு இருக்கிறது எனவே எங்கள் மூத்த குழந்தையின் எலும்பு மஜ்ஜை பயன்படுத்திக் கொள்ளலாம் என்று முடிவு செய்தோம்.
ஆனால் மூத்த குழந்தையின் எலும்பு மஜ்ஜை அபிஜித்திற்கு சேரவில்லை. விதி எங்கள் வாழ்க்கையில் இன்னும் விளையாடியது எங்கள் கவலை கட்டுக்கடங்காமல் போனது
அடுத்த வழி என்ன என்று கேட்டோம் நீங்கள் இன்னொரு குழந்தையைப் பெற்றுக் கொள்ளுங்கள் அந்த குழந்தையின் உடலில் இருந்து எலும்பு மஜ்ஜை எடுத்து பயன்படுத்திக் கொள்ளலாம் என்று சொன்னார்கள் எங்களுக்கு அபிஜித் குணமானால் போதும் அதற்கு எதையும் செய்ய தயாராக இருந்தோம் என் மனைவி கர்ப்பமானாள்
தலசீமியா என்பது பரம்பரையாக வரும் ஒரு வகை இரத்தசோகை நோய்.
உறவுமுறை திருமணங்களால் ஏற்படும் மரபணு நோய் உடலுக்குள் ஆக்ஸிஜன் வினியோகிக்கும் ஹீமோகுளோபின் கட்டமைப்பில் பிழைகள் உண்டாவதால் ரத்தத்தில் சிவப்பணுக்கள் தொடர்ந்து அழிகின்றன.
வேகாத செங்கல்லில் சுவர் கட்டினால் அது சீக்கிரமே விழுந்துவிடும் அல்லவா ? அது போலத்தான் இந்த தீவிர அழிவும் ஏற்படுகிறது எனவே இதை ரத்த அழிவு சோகை என்கிறோம்
இதில் சில வகைகள் உள்ளன பெற்றோரில் ஒருவரிடம் இருந்து மட்டும் பிழை உள்ள மரபணு பெற்றிருந்தால் தலசீமியா மைனர் எனவும் , இருவரிடம் இருந்தும் பெறப்பட்டிருந்தால் தலசீமியா மேஜர் என்றும் அழைக்கிறோம்
முதல் வகையினருக்கு நோய் அறிகுறிகள் தோன்றாது ஆனால் நோயே அடுத்த சந்ததிக்கு கடத்துவார்கள்.
இரண்டாம் வகையினர்தான் கொடிய நோய்க்கு ஆளாவார்கள் ஹீமோகுளோபின் கடுமையாக குறைந்து உடலுக்குத் தேவையான ஆக்சிஜன் கிடைக்காமல் உயிராபத்தை நெருங்குவார்கள் சோலங்கியின மகன் அபிஜித்க்கு வந்தது இந்த நோய்தான்
இதற்கு மாதா மாதம் இருமுறை இரத்தம் மாற்றம் செய்ய வேண்டும் வாழ்வின் இறுதி நாள் வரைக்கும் இவர்களுக்கு ரத்தம் தேவைப்படுகிறது என்பதுதான் கொடுமை அப்படி ரத்தம் கிடைப்பது இந்தியாவில் சவாலாக உள்ளது அப்படியே ரத்தம் கிடைத்தாலும் பயனாளிக்கு தொடர்ந்து இரத்தம் செலுத்துவது சிக்கல் உள்ளது
ஆகவே மாற்று ஏற்பாடு தேவைப்பட்டது அதுதான் எலும்பு மஜ்ஜை சிகிச்சை இதை புரிந்துகொள்ள வேண்டுமானால் ஸ்டெம் செல்லைக் தெரிந்திருக்க வேண்டும்
ஸ்டெம்செல்கள் என்பவை உடலின் அடிப்படை செல்கள் என்னமாதிரி செல்லாக அவை பிற்பாடு மாறப்போகிறது என்று தெரியாத செல்கள் இவை எலும்பு மச்சை தொப்புள்கொடி ரத்தம் , கருத்திசுக்கள் ஆகியவற்றில் நிறைய உள்ளன இந்த செல்கள் மனித உடலின் எல்லா வகை செல்களையும் திசுக்களையும் உருவாக்கும் திறன் கொண்டவை
இவற்றை சேகரித்து மரபணுப் பொறியியல் முறையில் பயனாளியின் உடலில் செலுத்தினால் அங்கு நோய்வாய்ப்பட்ட செல்களை இடம்பெறச் செய்து விடும் இதன் பலனால் அந்த செல்களால் உருவான உடல் நோயை நிரந்தரமாக குணமாக்கி விடும்
உதாரணமாக தலசீமியா நோயாளிகளுக்குத் குறை உள்ள ஹீமோகுளோபின் தான் பிரச்சனை இவர்களுக்கு எலும்பு மஜ்ஜையில் செலுத்தும் போது அதில் உள்ள ஸ்டெம்செல்கள் குறை உள்ள ஹீமோகுளோபின் உள்ள இடத்தில் ஆரோக்கியமான ஹீமோகுளோபினை கட்டமைத்து விடும் அப்போது தலசீமியா விடைபெற்றுக் கொள்ளும் .
ஆனால் யார் வேண்டுமானாலும் யாருக்கும் ஸ்டெம்செல் கொடுக்க முடியாது மிகவும் நெருங்கிய சொந்தங்கள் மட்டுமே பயன்படும்
சோலங்கின் மனைவி கர்ப்பமானது இயற்கை வழியில் அல்ல , ஐசிஎப் என்னும் செயற்கை வழியில் !
காரணம் அவரது மனைவி எப்போதும் போல் கர்ப்பம் அடைந்தால் மறுபடியும் நோயுள்ள குழந்தை பிறப்பதற்கு வாய்ப்புகள் அதிகம் .ஆகவே அதை தவிர்த்து பதிலாக நமக்குத் தேவைப்படும் டிசைனிங் பேபியை உருவாக்குவதற்கு ,
பிரீ இம்ப்ளான்டேஷன் ஜெனிட்டிக்ஸ் டயக்னோசிஸ் என்னும் மருத்துவ வழியில் கருத்தரிக்க வைத்தோம் .
இதில் மூன்று கட்டம் உண்டு சோலங்கின் விந்தணுவையும் அவரது மனைவியின் முட்டையும் சோதனைச்சாலையில் இணைத்து உருவாக்குவது முதல் கட்டம்
அந்தக் கருவில் தலசீமியா உண்டாக்கக்கூடிய மரபணுக்கள் இருக்கிறதா என்று சோதித்துப் பார்ப்பது அடுத்தகட்டம்
பிழை உள்ள மரபணுக்கள் இல்லாத கருவை தேர்ந்தெடுத்து அவரது மனைவியின் கருப்பையில் பதிய வைப்பது மூன்றாவது கட்டம்
இப்படி அவருக்கு நோயற்ற கருவை பதிவிடுவதற்கு ஆறு மாதங்கள் ஆனது அதற்குப் பிறகு நடந்தது எல்லாம் சுகமே
இப்போது சோலங்கி சொல்வதைக் கேளுங்கள் எங்களுக்கு மூன்றாவதாக காவியா பிறந்தாள் அவரிடமிருந்து எலும்பு மஜ்ஜை பெறுவதற்கு உடல் எடை 12 கிலோ வரை தேவைப்பட்டது அதனால் அவளுக்கு ஒன்னரை

வயது ஆகும் வரை காத்திருந்தோம். அந்த நாளும் வந்தது காவியாவின் எலும்பு மஜ்ஜை கொஞ்சமாக எடுத்து அபிஜித்துக்கு செலுத்தினார்கள் .
என்ன அதிசயம் ! அதற்குப் பிறகு அவனுக்கு ஹீமோகுளோபின் குறையவே இல்லை! ரத்தசோகை ஏற்பட வில்லை 7 மாதங்கள் கழிந்தன அவனை பரிசோதித்த மருத்துவர்கள் இனி அவனுக்கு ரத்தம் செலுத்த வேண்டிய அவசியம் இல்லை மற்ற குழந்தையை போல் அபிஜித் நார்மல் ஆகிவிட்டேன் என்று சொன்னபோது நான் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை
அது மட்டுமில்லாமல் எங்கள் காவியா மருத்துவ சரித்திரத்தில் இடம் பிடித்து விட்டால் இந்தியாவில் தலசீமியா குணப்படுத்திய முதல் டிசைனிங் உடன்பிறப்பு அவள்தானே !
ர.ரா
மரபணுவின் விசித்திர மர்மங்கள் தொடர் இத்துடன் நிறைவு பெறுகிறது


உங்களுக்குள்ளேயே நீங்கள் 1




வாழ்க்கையில் வெற்றி பெற வேண்டும் என்று நினைக்காத மனிதன் உண்டா ? வெற்றி என்பது என்ன ?ஆசைப்படுவதை அடைவது தானே ?

ஆசைப்பட்டதை அடைவதற்கான அடிப்படை என்ன ? ஆனந்தமாய் இருப்பதுதான்

வேதனையோடு இருப்பவர்களுக்கு வெற்றிக்கான வாய்ப்பு ஏது ? ஆனந்தமாய் இருக்கையில் தான் உங்கள் சக்தி முழுமையாக இயங்குகிறது !

மாலை வேளை. மலையின் முகட்டில் மேகங்கள் முட்டிக் கொண்டு நிற்க அதன் பின்னணியில் சூரியன் மஞ்சளாக அமிழ்ந்து கொண்டிருக்கிறது .இந்த ரம்மியமான காட்சியை காண்கிறீர்கள் . அது எங்கே இருக்கிறது ? அந்த மலையிலா ? வானிலா ? கவனமாக யோசித்துப் பாருங்கள் .

அந்த காட்சியின் அனுபவம் எங்கே நேர்கிறது ? உங்கள் விழித்திரையில் தலைகீழாகப் பிம்பம் விழுந்து மூளைக்கு செய்தி அனுப்புகிறது .உங்கள் அனுபவத்தில் அப்போது மலை எங்கே இருக்கிறது ? உங்களுக்குள்ளேதானே ?

கேட்கும் இசையும், நுகரும் வாசமும் , ரசிக்கும் ஸ்பரிசமும் எல்லாமே உங்களுக்குள்ளேதானே நேர்கின்றன ? வெளிச்சம், இருட்டு , ஓசை , நிசப்தம் , வேதனை , ஆனந்தம் எல்லாமே உங்களுக்குள்ளேதான் நடக்கிறது .

ஒரு பொருளை புலன்களால் அறிய முற்படும் உங்களுக்குத்தான் அப்பொருளின் நிறம், ருசி , வாசனை , சப்தம் என்ற பேதங்கள் ஏற்படுகின்றவே தவிர, அறியப்படும் பொருளுக்கு இப்பேதங்கள் எதுவும் இல்லை. இப்போது சொல்லுங்கள் பொருள் வெளியேவா இருக்கிறது ? இல்லை இல்லை உங்களுக்குள்ளேதானே இருக்கிறது !

வாழ்க்கையின் அடுத்த நொடியை நீங்கல்லவா தீர்மானம் செய்ய வேண்டும்.

வாழ்க்கையும் அப்படித்தான் எப்படி வேண்டுமோ அப்படி அமைந்து கொள்வது உங்கள் கையில்தான் இருக்கிறது.

எல்லாமே உங்களுக்குள்ளேயே நடந்தாலும் நீங்கள் ஆசைப்பட்டது மட்டும் ஏன் நிகிழ மறுக்கிறது ?

நீங்கள் ஆனந்தமாக அன்பாக இருக்க வேண்டுமென்றால் உங்களைச் சுற்றியுள்ளவர்களையும் ஆனந்தமாக வைத்துக் கொள்வீர்கள். நீங்கள் வேதனையில் இருந்தால் சுற்றியுள்ளவர்களின் சுகத்தையும் கெடுத்து விடுவீர்கள்.

உங்களைச் சுற்றியுள்ள இயக்கத்தை கவனிங்கள். தங்கள் வாழும் காலம் சில மணி நேரம்தான் என்ற போதிலும் பூமியில் பூக்கும் பூக்கள் அழகாயிருக்க ஆசைப்பட்டு வண்ண வண்ணமாக பூக்கின்றன .

உங்கள் மீது இருக்கும்

ஆசையால்தான் பூமி தன் புவியீர்ப்பு விசையைச் செலுத்தி உங்களை தன்னோடு வைத்துக் கொண்டிருக்கிறது.

சூரியனிலிருந்து குறிப்பிட்ட தூரத்தில் தனக்கான பாதையை அமைத்துக்கொண்டு இந்த பூமி வலம் வருகிறது . அந்தப் பாதையிலிருந்து அது சற்று விலகி போய் விடாமல் மையத்தில் இருக்கும் சூரியன் ஆசையோடு அதனை இழுத்து பிடித்து இருக்கிறது.

என்றைக்காவது சூரியனுக்குத் தன் கோளங்கள் மீது ஆசையே போய் விட்டால் என்ன ஆகும் யோசித்துப் பாருங்கள். புரிகிறதா ?

ஆசை இல்லாமல் இந்த பிரபஞ்சம் இல்லை. ஆசை இல்லாமல் அலை அடிக்காது. காற்று வீசாது .சூரியன் உதிக்காது. அணு அசையாது அடிப்படையான இயக்கம் இருக்காது இந்த உடல் இருக்காது. உயிர் இருக்காது .ஏன் அடுத்த மூச்சை நடக்காது.

இறைவனது அன்பாலும் அவனது அருளாலும் இந்த பிரபஞ்சத்தின் நடைபெறும் நிகழ்ச்சியை சற்று உற்று நோக்குங்கள். அவனின் அன்பெனும் ஆட்சி பரந்து விரிந்து கிடப்பதைக் காணுங்கள் !

اِنَّ فِىْ خَلْقِ السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَاخْتِلَافِ الَّيْلِ وَالنَّهَارِ وَالْفُلْكِ الَّتِىْ تَجْرِىْ فِى الْبَحْرِ بِمَا يَنْفَعُ النَّاسَ وَمَآ اَنْزَلَ اللّٰهُ مِنَ السَّمَآءِ مِنْ مَّآءٍ فَاَحْيَا بِهِ الْاَرْضَ بَعْدَ مَوْتِهَا وَبَثَّ فِيْهَا مِنْ كُلِّ دَآ بَّةٍ وَّتَصْرِيْفِ الرِّيٰحِ وَالسَّحَابِ الْمُسَخَّرِ بَيْنَ السَّمَآءِ وَالْاَرْضِ لَاٰيٰتٍ لِّقَوْمٍ يَّعْقِلُوْنَ

அவன் வானங்களையும் பூமியையும் படைத்திருப்பதிலும், இரவும் பகலும் மாறி மாறி வருவதிலும், மனிதர்களுக்குப் பயன் தருபவற்றை (ஏற்றி)க் கொண்டு கடலில் செல்லும் கப்பலிலும், வானத்திலிருந்து மழையை இறக்கி அதைக்கொண்டு (வறண்டு) இறந்த பூமியை அல்லாஹ் உயிர்ப்பி(த்துச் செழிப்பாக்கிவை)ப்பதிலும், கால்நடைகள் அனைத்தையும் பூமியில் பரவ விட்டிருப்பதிலும், காற்றை(ப் பல கோணங்களில் திருப்பி)த் திருப்பி விடுவதிலும், வானத்திற்கும் பூமிக்கும் இடையில் அமர்த்தப்பட்டிருக்கும் மேகத்திலும், (மனிதர்களுக்குள்ள பயன்களை ஆராய்ந்து) சிந்திக்கும் மக்களுக்கு (அவனுடைய அருளையும், அன்பையும் ஆற்றலையும் அறிவிக்கக்கூடிய) பல அத்தாட்சிகள் நிச்சயமாக இருக்கின்றன. (அல்குர்ஆன் : 2:164)

ஆசைப் படக் கூடாது என்று இந்த பிரபஞ்சம் ஒரு நாளும் உங்களுக்குச் சொல்லித் தரவில்லை . ஆசையைத் துறந்தால் எல்லாமே சரியாகிவிடும் என்பது போன்ற முட்டாள்தனமான தத்துவம் போன்று ஏதுமில்லை .

மற்றவர்கள் சொல்வது இருக்கட்டும். ஆசையை விட்டொழிக்க வேண்டுமா வேண்டாமா என்று உங்களிடம் கேட்டு பாருங்கள் .

உங்கள் மனதிடம் கேட்டால் ' ஆமாமாம் ஆசையை துறப்பது என்று தீர்மானித்து விட்டேன் 'என்று போலித்தனமாக ஞானம் பேசும் .

உங்கள் மனம் தந்திரசாலி. எதையோ சொல்லி உங்களை நம்ப வைத்து ஏமாற்றும் சூட்சமம் அதற்குத் தெரியும் .ஆனால் உங்கள் உடம்பு பொய் செல்லாது .உங்களுக்கு ஆசை இருக்கிறதா இல்லையா என்று உங்கள் உடம்பிடம் விசாரித்துப் பாருங்கள் .

காற்று புக முடியாதபடி உங்கள் வாயையும் மூக்கையும் சில நிமிடங்கள் பொத்திக்கொண்டு வேடிக்கை பாருங்கள் .ஒரு நிமிடம் இரண்டு நிமிடம் வேண்டுமானால் பொறுத்துக் கொள்ளும் .அப்புறம் உயிர் வாழ வேண்டும் என்று உங்கள் உடம்புக்குள் பீறிட்டு எழும் ஆசை உங்கள் கையைப் பிடுங்கிப் போடும் .விட்டுப்போனதற்கும் சேர்த்து அள்ளி அள்ளி ஆக்ஸிஜனைக் குடிக்கும்.

உடம்பில் இருக்கும் ஒவ்வொரு செல்லும் ஆசையில்தான் இயங்கிக் கொண்டிருக்கிறது. வேண்டாத விருந்தாளியாக உள்ளே ஒரு நோய்க் கிருமி நுழைய பார்க்கட்டுமே பிழைத்திருக்கட்டுமா போராடாமல்

போய் சேரட்டுமா என்று எந்த செல்லும் உங்களிடம் அனுமதி கேட்டு கொண்டிருப்பதில்லை. ஒவ்வொரு செல்லும் ஆயுதத்தை தூக்கிக்கொண்டு கடுமையான போருக்கு போய் விடுகிறதே ஏன்?

பிரபஞ்சம் அதற்கு வாழும் ஆசையை கொடுத்திருக்கிறது. உங்களுக்கு ஆசை இல்லை என்றால் இந்த வரியை நீங்கள் படித்துக்கொண்டு இருக்க முடியாது .அடுத்த வரிக்கு பார்வையை எடுத்துப் போக முடியாது .நிற்க முடியாது. நடக்க முடியாது .தூங்கவும் முடியாது சாப்பிட முடியாது .

உங்களை இயக்கிக்கொண்டிருக்கும் ஒரு சக்தியை நீங்கள் உயிர் என்று சொல்வீர்கள் இன்னொரு சக்தியை நீங்கள் ஆசை என்று நினைக்கிறீர்கள் அடிப்படையில் இரண்டுக்கும் வேறுபாடு எதுவும் கிடையாது . ஆகையால் நம் ஆசையை முற்றிலுமாக வெறுத்து ஒதுக்க முடியாது.கூடாது .காரணம் நம் உயிரை வெறுப்போமா ?



உங்களுக்குள்ளேயே நீங்கள் 4

கார்னெகி மெல்லான் **(Carnegie Mellon)** பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் ஹெர்பர்ட் சைமன் **(Herbert simon )** கூற்றின்படி ஒரு செஸ் ஆட்டக்காரரின் மூளையில் 50,000 செஸ் வடிவங்கள் பதிந்திருக்கின்றன என்கிறார் .

இவ்வாறு ஒவ்வொரு துறையிலும் உள்ளவர்கள் மூளையில் ,அந்தந்தத் துறையின் வடிவங்கள் பதிந்து இருக்கின்றனவாம் .

உதாரணமாக டாட்டா , பிர்லா , அம்பானி போன்ற வியாபாரிகளின் மனதில் வியாபார யுக்திகள் 50 ஆயிரத்திற்கும் அதிகமான மனப் பிம்பங்களை கொண்டிருப்பார்கள்

மாண்டொலின் சீனிவாஸ் மனதில் நிச்சயம் 50 ஆயிரம் சுவாப்பிரஸ்தாரங்கள் இருக்க வேண்டும்

அதேபோல் பாலமுரளி கவாஸ்கர், கீத்

சேத்தி , நஸுருதீன் ஷா, கமல்ஹாசன் இவர்கள் அனைவரும் அவரவர் துறையில் 50 ஆயிரம் வடிவங்களாவது கைவசம் ஸாரி , மனவசம் வைத்திருக்க வேண்டும்.

கலிஃபோர்னியா பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த டொனால்ட் நார்மன் **(Donald Norman)** "நமக்கு பரிச்சயமான அத்தனை துறைகளிலும் ஒவ்வொன்றுக்கும் 50 ஆயிரம் தகவல்கள் நம் மனதில் பதிந்து இருக்கின்றன "என்கிறார் .

ஜான் கிரிஃபித் **(John Griffith )** என்பவர் நாம் நம் வாழ்நாளில் ஒரு சராசரி மனிதன் ஒரு கலைக்களஞ்சியத்தைப் போல் 500 மடங்கு செய்திகளை சேகரித்து வைத்துக்கொள்ள முடியும் என்கிறார் .

இதிலிருந்து ஒரு சின்ன ஆய்வு .....

நபி (ஸல்) அவர்களின் வாழ்க்கையில் இருந்து அவர்களுடைய நபித்தோழர்கள் கற்றுக் கொண்ட பாடத்தின் பிம்பங்கள் எந்த அளவு தோழர்களின் மனதில் பதிந்திருந்தது ? பதிந்திருந்த பிம்பங்கள் பொருளாதார ரீதியில் எப்படியெல்லாம் அதை வெளிப்படுத்தினார்கள் ? என்பது பற்றி ஒரு வரலாற்று நிகழ்வு .

தபூக் யுத்தத்திற்கு நபி (ஸல்) அவர்கள் நிதி திரட்டினார்கள் .முஸ்லிம்கள் அனைவரும் தங்களால் முடிந்தளவு அல்லாஹ்வின் பாதையில் பொருட்களைச் செலவு செய்வதிலும், இயலாதவர்களுக்குக் கொடுத்து உதவுவதிலும் ஒருவரை ஒருவர் போட்டி போட்டுக் கொண்டனர்.

நபி (ஸல்) அவர்களின் உற்ற தோழர் உஸ்மான் (ரழி) ஷாம் நாட்டு வியாபாரத்திற்கு அனுப்புவதற்காக ஒரு குழுவை தயார் செய்து வைத்திருந்தார்கள். அதில் இருநூறு ஒட்டகைகள், அதற்குரிய முழு சாதனங்களுடன் இருந்தன. மேலும், இருநூறு ஊக்கியா வெள்ளிகளும் இருந்தன. அந்தப் பயணத்தை நிறுத்திவிட்டு அவை அனைத்தையும் அல்லாஹ்வின் பாதையில் தர்மமாக வழங்கினார்கள்.

பின்பு ஒரு நாள் கழித்து முழு சாதனங்களுடன் உள்ள நூறு ஒட்டகைகளை தர்மமாக வழங்கிவிட்டு ஆயிரம் தங்க காசுகளை நபி (ஸல்) அவர்களின் மடியில் பரப்பினார்கள்.

அதை நபி (ஸல்) புரட்டியவர்களாக "இன்றைய தினத்திற்குப் பின் உஸ்மான் எது செய்தாலும் அது அவருக்கு இடையூறளிக்காது" எனக் கூறினார்கள்.

- (ஜாமிவுத் திர்மிதி)

இந்தளவுடன் நிறுத்திக் கொள்ளாமல் உஸ்மான் (ரழி) அவர்கள் மேன்மேலும் அல்லாஹ்வின் பாதையில் வாரி வழங்கினார்கள். இப்போருக்காக மொத்தத்தில் தொள்ளாயிரம் ஒட்டகைகளையும், நூறு குதிரைகளையும் வழங்கினார்கள். இதுமட்டுமின்றி ஏராளமானத் தங்க வெள்ளி காசுகளையும் வாரி வழங்கினார்கள்.

இப்போருக்காக அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரழி) இருநூறு ஊக்கியா வெள்ளிகளை வழங்கினார்கள்.

உமர் (ரழி) அவர்கள் தனது செல்வத்தில் பாதியை வழங்கினார்கள் .

அப்பாஸ் (ரழி) பெரும் செல்வத்தை, தல்ஹா, ஸஅது இப்னு உபாதா, முஹம்மது இப்னு மஸ்லமா (ரழி) ஆகியோரும் தங்களின் பெரும்பகுதி செல்வத்தை வழங்கினார்கள்.

ஆஸிம் இப்னு அதி (ரழி) தொண்ணூறு வஸ்க் பேரீத்தம் பழங்களை வழங்கினார்கள்.

இவ்வாறு குறைவாகவோ அதிகமாகவோ தங்களால் முடிந்ததை எவ்விதக் கஞ்சத்தனமுமின்றி மக்கள் அல்லாஹ்வின் பாதையில் வழங்கினார்கள்.

ஒரு சிலர், ஒன்று அல்லது இரண்டு 'முத்'கள் (முத்' என்பது ஓர் அளவாகும்.) தானியங்களை வழங்கினர். அதைத் தவிர அவர்களிடம் வேறெதுவும் இருக்கவில்லை.

பெண்கள் தங்களிடமிருந்த வளையல்கள், கால், காது அணிகலன்கள், மோதிரங்கள் அனைத்தையும் கொடுத்து விட்டார்கள்.

அபூபக்கர் (ரழி) தனது செல்வம் அனைத்தையும் வழங்கினார்கள். தனது குடும்பத்தினருக்காக அல்லாஹ்வையும் அவனது தூதரையும் தவிர வேறெதையும் விட்டு வைக்கவில்லை. இப்போருக்காக முதன் முதலில் தனது பொருளை முழுவதும் வழங்கியவர் அவர்கள்தான். அவர்கள் நபி (ஸல்) அவர்களிடம் வழங்கியது மொத்தம் நான்காயிரம் திர்ஹமாகும்.

இத்தனை நிதியையும் கொடுக்க வந்த அபூபக்கர் ( ரலி) அவர்கள் சணலால் நெய்யப்பட்ட (கோணி சாக்கு ) ஆடையை அணிந்திருந்தார்கள் .

நபியவர்கள் சணல் ஆடையை குறித்து வினவியதற்கு , தான் உடுத்திருந்த ஆடையை விற்றால் கொஞ்சம் தொகை கூடாதா.... என்றெண்ணி அதையும் விற்று, கோணி சாக்கை தைத்து ஆடையாக உடுத்திக் கொண்டதாக கூறினார்கள் .

அந்த உடனே ஜிப்ரயீல் (அலை) அவர்கள் நபி (ஸல்) அவர்கள் இடத்தில் வரும் போது சணலால் ஆன கோணியை ஆடையாக உடுத்திருந்தார்கள் .

இது பற்றி நபிகளார் ஜிப்ரயீல் (அலை) அவர்களிடம் விசாரித்த போது 'தன்னுடைய அடியார் அபூபக்கரின் தியாகத்தை மெச்சி , மலக்குமார்கள் அனைவருக்குமே இன்றிலிருந்து சணல் ஆடையே உடையாக ஆக்கி விட்டான் ' என்றார்கள் .

அபூபக்கர் சித்தீக் ( ரலி) அவர்களின் மனதில் தியாகத்தின் பிம்பமாக உடுத்திருக்கும் ஆடையைக் கூட விற்று விட்டு அணிவதற்கு சணல் ஆடையை தேர்ந்தெடுத்த போது இறைவன் இவர்களின் மனதில் உதயமான பிம்பம்தான் அந்த சணல் ஆடை . அதையே மலக்குமார்களின் சீருடையாக மாற்றுகிறான் ..

உள்ளத்தில் நயவஞ்சகத் தன்மை உள்ளவர்களே அல்லாஹ்வின் பாதையில் செலவு செய்யாமல் கருமித்தனம் செய்தனர்.

இவர்கள் எத்தகையவர்கள் என்றால், நம்பிக்கையாளர்களில் உள்ள செல்வந்தர்கள் (தங்கள் பொருட்களை) நல்வழியில் (தாராளமாக) தானம் செய்வது பற்றி குற்றம் கூறுகின்றனர். (அதிலும் குறிப்பாக) கூலி வேலை செய்து சம்பாதிப்போர் (தங்கள் பொருளை இவ்வாறு தானம் செய்வது) பற்றியும் அவர்கள் பரிகசிக்கின்றனர். அல்லாஹ் (நம்பிக்கையாளர்களைப் பரிகசிக்கும்) அவர்களைப் பரிகசிக்கின்றான். அன்றி (மறுமையில்) துன்புறுத்தும் வேதனையும் அவர்களுக்கு உண்டு. (அல்குர்ஆன் 9:79)

மேற்கூறப்பட்டவர்களின் மனதில் அவரவர்களின் மனப்பிம்பங்கள் என்ன மாதிரியாக பதிந்திருக்கிறது என்பதை இறைவன் வெளிப்படுத்தி காட்டினான்...

உங்களுக்குள்ளேயே நீங்கள் 9

"சுவர்களிடம் சொல்லிப் பார் "

சுவரோ, மலைப்பாறையோ நீங்கள் சொல்வதைக் கேட்கிறது.

செயல்படுகிறது என்பது உங்களுக்குத் தெரியுமா ?




பழமொழிகளுடன் நாட்டுப்புற பழங்கதைகளும் விரைவில் அழிந்து கொண்டிருக்கின்றன. ஏ.கே இராமானுஜனின் **"Folk Tales from india"** என்கிற புத்தகத்தில் இந்திய மொழிகள் அனைத்திலிருந்தும் நாட்டுப்புறக் கதைகளைச் சேகரித்து ஆங்கிலத்தில் அழகாக மொழிபெயர்த்து பெங்குவின் வெளியிடுகிறார்கள்.

தமிழில் நமக்குத் தெரியாத சில கதைகள் உள்ளன உதாரணம் "சுவர்களிடம் சொல்லிப் பார் " என்னும் கதை .

ஒரு விதவைக்கு இரண்டு மகன்கள் , மருமகள்கள் . அவர்கள் அவளை ரொம்ப கொடுமைப்படுத்துகிறார்கள். அவள் தன் துக்கத்தை யாரிடமும் சொல்லவில்லை அதனால் உடம்பு பெருத்து கொண்டே வந்தது.இதை மகன்களும் மருமகள்களும் " வர வர உடம்பு குண்டாகிக் கொண்டே வருகிறாய் சாப்பாட்டைக் குறை " - என்று கேலி செய்தனர்.

ஒரு நாள் எல்லோரும் வெளியே போயிருக்கிற போது அவள் தனியே வீட்டை விட்டு வெளியே வந்து திரிந்து, ஊருக்கு வெளியே ஒரு பாழடைந்த மேற்கூரை இல்லாத சிதிலமான இடத்துக்கு வந்து விட்டாள் தன் துக்கத்தை மறக்க முடியாமல் யாரிடமாவது சொல்ல வேண்டியிருந்தது

தன் முதல் மகன் மேல் உள்ள வருத்தங்களையெல்லாம் எதிரே உள்ள சுவரிடம் சொல்லி அழுதாள் .அவள் துக்கத்தின் பாரத்தால் அந்த சுவர் இடிந்து விழுந்தது .இவளுடைய துக்கச்சுமை சற்று குறைந்தது .

இடது பக்கம் இருந்த சுவரை நோக்கி தன் முதல் மருமகள் மேலிருந்த வருத்தத்தை எல்லாம் சொன்னாள் அந்த சுவரும் அப்படியே இடிந்து சரிந்தது. இவளுக்கு மேலும் உடம்பு லேசாயிற்று .

இப்படியே மற்ற இரண்டு சுவர்களிடமும் இரண்டாவது மகன், இரண்டாவது மருமகள் தன்னைப் படுத்தும் கொடுமைகளைச் சொல்ல அவைகளும் உடைந்து விழ , இவள் பாரம் முழுவதும் குறைந்து, நிஜமாகவே எடையும் குறைந்து லேசானாள் . வீட்டுக்குத் திரும்பினாள் .

இந்த வினோதமான கதையை ராமானுஜன் யாரோ ஸ்ரீரங்கம் கனகம்மாள் சொல்லக்கேட்டு எழுதி இருக்கிறார். இதன் உள்ளர்த்தம் திகைக்க வைக்கிறது . சுவரோ, பாறையோ , எவரோ.... யாரிடமாவது கதைசொல்லும் அவசியம் நம் எல்லோருக்கும் உண்டு .

துக்கத்தை யாரிடமாவது சொல்லி விட்டால் மனபாரம் குறையும் என்பதும் , துக்கத்தால் சிலருக்கு உடல் பெருக்கும் என்கிற சைக்கோ சோமாட்டிக் உண்மையும் கதையின் மாஜிக் ரியலிசமும் ஆச்சரியப்பட வைக்கின்றன . இது கதை .

....ஆனால் நபி(ஸல்) அவர்கள் காலத்திற்கு முன் வாழ்ந்த ( பனீ இஸ்ரவேலர்களில் ) மூன்று சிறுவர்கள் சிக்கிக் கொண்ட குகையில் இருந்து மீள தங்களின் நற்செயல்களை வஸீலாவாக்கி (பகரமாக்கி) , இறை ஆதரவு மேல் நம்பிக்கை வைத்து இறைவனிடம் மன்றாடி , குகையில் இருந்து மீள்கிறார்கள் . இது கதையல்ல , நிஜம் அது பற்றி .......

5293 முஸ்லிம் நபிமொழியில் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

" (உங்களுக்கு முன் வாழ்ந்தவர்களில்) மூன்று பேர் நடந்து சென்று கொண்டிருந்தபோது (திடீரென) மழை பிடித்துக்கொண்டது. ஆகவே, அவர்கள் மலைக்குகையொன்றில் ஒதுங்கினார்கள். (அவர்கள் உள்ளே நுழைந்த) உடனே மலையிலிருந்து உருண்டுவந்த ஒரு பாறை குகைவாசலை அடைத்துக்கொண்டது.

(வெளியேற முடியாமல் திணறிய) அவர்கள் (மூவரும்) அப்போது தமக்குள், "நாம் (வேறெவருடைய திருப்திக்காகவுமின்றி) அல்லாஹ்வுக்காக (என்று தூய்மையான முறையில்) செய்த நற்செயல்களை நினைத்துப் பார்த்து, அவற்றை முன்வைத்து அல்லாஹ்விடம் பிரார்த்திப்போம். அவன் நம்மை விட்டு இதை அகற்றிவிடக்கூடும்" என்று பேசிக்கொண்டனர்.

எனவே, அவர்களில் ஒருவர் இவ்விதம் (இறைவனிடம்) வேண்டினார்:

" இறைவா! எனக்கு முதிர்ந்த வயதுடைய தாய் தந்தையர் இருவரும் மனைவியும் இருந்தனர். எனக்குச் சிறு குழந்தைகளும் உண்டு. நான் இவர்களைப் பராமரிப்பதற்காக ஆடுகளை மேய்த்துக்கொண்டிருந்தேன். மாலையில் அவர்களிடம் நான் திரும்பி வந்த பின் ஆட்டின் பாலைக் கறந்து கொண்டுவந்து, என் குழந்தைகளுக்கு ஊட்டுவதற்கு முன்பாக என் தாய் தந்தையருக்கு முதலில் ஊட்டுவேன். ஒரு நாள் இலை தழைகளைத் தேடியபடி வெகுதூரம் சென்றுவிட்டேன். அதனால் அந்திப் பொழுதிலேயே (வீட்டுக்கு) வர முடிந்தது.

அப்போது (என் தாய் தந்தை) இருவரும் உறங்கிவிட்டிருக்கக் கண்டேன். உடனே எப்போதும் போல பால் கறந்து, பால் செம்புடன் வந்தேன். பெற்றோரைத் தூக்கத்திலிருந்து எழுப்பிவிட மனமில்லாமல் அவர்கள் இருவருடைய தலைமாட்டில் நின்றுகொண்டேன். அவர்கள் இருவருக்குமுன் குழந்தைகளுக்கு ஊட்டுவதையும் நான் விரும்பவில்லை. என் குழந்தைகளோ எனது காலருகில் (பால் கேட்டுக்) கூச்சலிட்டுக்கொண்டிந்தனர். இதே நிலையில் நானும் அவர்களும் இருந்து கொண்டிருக்க, வைகறை வந்துவிட்டது.

(இறைவா!) நான் இச்செயலை உனது உவப்பை நாடியே செய்தேன் என்று நீ கருதியிருந்தால், எங்களுக்கு இந்தப் பாறையைச் சற்றே நகர்த்துவாயாக! அதன் வழியாக நாங்கள் ஆகாயத்தைப் பார்த்துக்கொள்வோம் " .

அவ்வாறே அவர்களுக்கு அல்லாஹ் பாறையைச் சற்றே நகர்த்திக்கொடுத்தான். அதன் வழியாக அவர்கள் ஆகாயத்தைப் பார்த்தார்கள்.

இரண்டாமவர் பின்வருமாறு வேண்டினார்:

" இறைவா! எனக்கு என் தந்தையின் சகோதரருடைய புதல்வி ஒருத்தி இருந்தாள். பெண்களை ஆண்கள் நேசிப்பதிலேயே மிகவும் ஆழமாக அவளை நான் நேசித்தேன். (ஒரு நாள்) அவளிடம் அவளைக் கேட்டேன். நான் அவளிடம் நூறு பொற்காசுகள் கொண்டுவந்து கொடுத்தால் தவிர (எனக்கு இணங்க முடியாதென) அவள் மறுத்துவிட்டாள். நான் கடுமையாக உழைத்து, (அந்த) நூறு பொற்காசுகளைச் சேகரித்தேன்.

அவற்றை எடுத்துக்கொண்டு சென்று அவளைச் சந்தித்து, அவளுடைய இரு கால்களுக்கிடையே அமர்ந்தபோது அவள், "அல்லாஹ்வின் அடியானே! அல்லாஹ்வை அஞ்சிக்கொள். முத்திரையை அதற்குரிய (சட்டபூர்வ) உரிமை(யான திருமணம்) இன்றித் திறவாதே" என்று சொன்னாள். உடனே நான் அவளை விட்டுவிட்டு எழுந்துவிட்டேன்.

(இறைவா!) இதை உனது உவப்பைப் பெறவிரும்பியே நான் செய்ததாக நீ கருதினால், இந்தப் பாறையை எங்களுக்காக இன்னும் சற்று நகர்த்துவாயாக! " _ அவ்வாறே அவர்களுக்கு (அல்லாஹ் இன்னும்) சற்றே நகர்த்தினான்.

மற்றொருவர் (பின்வருமாறு) வேண்டினார்: " இறைவா! நான் ஒரு "ஃபரக்" அளவு நெல்லைக் கூலியாக நிர்ணயித்து கூலியாள் ஒருவரை பணியமர்த்தினேன். அவர் தமது வேலையை முடித்து விட்டு, "என் உரிமையை (கூலியை)க் கொடு" என்று கேட்டார். நான் ஒரு "ஃபரக்" அளவு நெல்லை அவர்முன் வைத்தபோது அதை அவர் (பெற்றுக்கொள்ளாமல்) புறக்கணித்து(ச் சென்று)விட்டார்.

பின்னர் நான் அதை நிலத்தில் விதைத்துத் தொடர்ந்து விவசாயம் செய்துவந்தேன். அதி(ல் கிடைத்த வருவாயி)லிருந்து பல மாடுகளையும் , அவற்றுக்கான இடையர்களையும் நான் சேகரித்து விட்டேன். பின்னர் (ஒரு நாள்) அவர் என்னிடம் வந்து, "அல்லாஹ்வை அஞ்சு! எனது உரிமையில் எனக்கு அநீதி இழைக்காதே" என்று கூறினார்.

அதற்கு நான், "அந்த மாடுகளிடத்திலும் அவற்றின் இடையர்களிடத்திலும் நீ சென்று, அவற்றை எடுத்துக்கொள். (அவை உனக்கே உரியவை)" என்று சொன்னேன்.

அதற்கு அந்த மனிதர், "அல்லாஹ்வை அஞ்சு. என்னைப் பரிகாசம் செய்யாதே" என்று சொன்னார். நான், "உன்னை நான் பரிகாசம் செய்யவில்லை. இந்த மாடுகளையும் இடையர்களையும் நீயே எடுத்துக்கொள்" என்று சொன்னேன். அவர் அவற்றைப் பிடித்துக்கொண்டு சென்றார்.

" (இறைவா!) நான் இந்த (நற்)செயலை உன் உவப்பைப் பெற விரும்பியே செய்ததாக நீ கருதியிருந்தால் மீதியுள்ள அடைப்பையும் நீ அகற்றுவாயாக!

அவ்வாறே மீதியிருந்த அடைப்பையும் அல்லாஹ் அகற்றி (அவர்களை வெளியேற்றி) விட்டான்.

சுவரோ, மலைப்பாறையோ நீங்கள் சொல்வதைக் அவைகள் கேட்கிறது.

செயல்படுகிறது என்பது நிஜம்.

ரஹ்மத் ராஜகுமாரன் ▪

உங்களுக்குள்ளேயே நீங்கள் 12



" ஓர் இனிய 'க்றீச் ' போதும்

வந்திருப்பதைத் தெரிவிக்க

சிறகுதிர்த்த இறகு போதும் வந்திருந்ததைத் தெரிவிக்க

அடைகாத்தலின் சூடுபோதும் வரப்போவதை தெரிவிக்க

வாழ்வை அறிவிப்பது

எத்தனை சுலபம் பறவைகளுக்கு !

- பி.பி ராமசந்திரன் - '**லலிதம்** ' என்னும் மலையாளக் கவிதையிலிருந்து ....

நாமும் நம் வாழ்வை அறிவிக்கத்தான் வேண்டுமா ? என்றால் 'வேண்டும் ' ஆதிகாலத்தின் கல்வெட்டுகளில் இன்னும் ராஜராஜ சோழனும் , அவுரங்கசீப்பும் வாழ்ந்து கொண்டுதானிருக்கிறார்கள் .

கல்வெட்டுக்குக் எங்கே போவது ?

' இதோ பார் என் கவிதை ' , 'இதோ பார் என் கருத்து ' , 'இதோ பார் உலகுக்கு என் உபதேசம் ' என நானும் இருக்கிறேன் என்று நண்டு தன் வகையில் சொல்லிக் கொள்ளலாம் .

ஒவ்வொரு தனிமனிதனும் தன்னைப் பிரகடனப்படுத்த கைகளை வாயருகில் குவித்து , ஏதோ ஒரு திசையில் குரல் கொடுத்து விட்டு பதில் தருகிறார்களா என்று காத்திருக்க வேண்டும். இப்படித்தான் வேற்று கிரகங்களில் உயிரினங்கள் இருக்கிறதா என்பதை தேடுகிறார்கள் .

வலைத்தளத்தில் யாரெல்லாம் பத்திரிக்கை படிக்கிறார்கள் என்பது பற்றி எனக்கு தெரியாது. வலைதளத்தில் என்னை கவர்வது அதன் சாஸ்வதம்தான்.

இன்று வலைதளத்திற்குள் எழுதிப் போட்டு விட்டால் அது கிபி 2104 மார்ச் 6 -ல் என் பிறந்த தினத்தை கூட யாரோ ஒரு தனியனால் படிக்கப்படலாம் . உறைந்த நிரந்தரம்தான் அதன் சிறப்பு.

இதனால் வலைப்பதிவுகளை பழங்காலத்துக் கல்வெட்டுகளுக்கு ஒப்பிடலாம் .

இப்படித்தான் குகைத் தோழர்கள் ஏழு பேர் 300 வருடங்கள் தூங்கிய அவர்களின் வாழ்வை அல்லாஹ் உலகுக்கு அறிவிப்பதற்காக , அவர்களை தூக்கத்திலிருந்து எழுப்பி, உணவு பொருள் வாங்க அனுப்ப, அவர்கள் கொடுத்த காசு செல்லாமல் போக , இது அந் நாட்டு மன்னருக்கு தெரிய வர , அவர் இவர்களைத் தேடி குகைக்கு வர, வெளிவந்த நபரும் குகைக்குள் சென்று தங்களது குகை வாசலை முன்னை மாதிரியே பாறையைக் கொண்டு மூடிக்கொண்டார்.

அவர்கள் யார் என்று விசாரிக்கப்பட்டு பின் இன்னாருடைய மகன் இன்னார்.. இன்னாருடைய மகன் இன்னார்.. என்று அக்குகை வாசலில் ஏழு பேர்களின் பெயர்களையும் மன்னர் கல்லில் பொறிக்கிறார் .

குர்ஆன் இவர்களை குறிப்பிடும் போது ,

اَمْ حَسِبْتَ اَنَّ اَصْحٰبَ الْـكَهْفِ وَالرَّقِيْمِ ۙ كَانُوْا مِنْ اٰيٰتِنَا عَجَبًا

(அஸ்ஹாபுல் கஹ்ஃபு என்ற குகையிலிருந்தோரைப் பற்றி) அந்த குகையிலிருந்தோரும், சாஸனத்தையுடையோரும் நம்முடைய ஆச்சரியமான அத்தாட்சிகளில் நின்றும் உள்ளவர்கள் என எண்ணுகிறீரோ?

(அல்குர்ஆன் : 18:9)

உங்களைப் பற்றிய வரலாறு உங்களுடைய சந்ததிக்கு முக்கியம். எனவே உங்களைப் பற்றியும் , உங்களுடைய கருத்துக்களைப் பற்றியும் நல்ல செய்திகளாக அவர்களுக்கு கொடுப்பதற்கு கல்வெட்டுகள் வேண்டாம் வலைதளம் போதும்

பதிந்து வையுங்கள் .

எழுதவோ படிக்கவோ தெரியாத நபி ஸல்லல்லாஹ் அலைஹி வஸல்லம் அவர்களுடைய வாழ்வைப் பற்றியும் அவர்களின் சொல் , செயல்களைப் பற்றியும் புகாரி , முஸ்லிம் போன்ற மாபெரும் எழுத்தாளர்கள் மிகவும் சிரமப்பட்டு எழுதி வைக்கப்பட்ட வரலாறுதான் , இன்று நமக்காக வந்த நபிகளாரைப் பற்றி தெரிந்துகொள்ள முடிகிறது. எனவே எழுதி வையுங்கள் வரலாறு முக்கியம் மந்திரியாரே !

- ரஹ்மத் ராஜகுமாரன்

அந்த ஒற்றை வார்த்தை 20-11-2020

குர்ஆனில் ஒரு வார்த்தைக்கு நபித்தோழர்களுக்கே அர்த்தம் புரியாமல் இருந்தது. இந்த நபித்தோழர்கள் ஒரு காலத்தில் வலித் இப்னு முஹைறா என்ற மாபெரும் அரபு இலக்கியவாதியின் தோழர்களாக இருந்தவர்தான் இப்பேர்பட்டவர்களாக இருந்தும் கூட அந்த ஒற்றை வார்த்தைக்கு அர்த்தம் புரியவில்லை .

பின் அரபுலகத்தின் எல்லையிலுள்ள ஒரு கிராமத்தில் அந்த வார்த்தையைப் பயன்படுத்துவதைக் கண்டு அந்த வார்த்தைக்குரிய விளக்கத்தை நபித்தோழகள் அறிந்து கொண்டதாக ஒரு செய்தியை ரொம்ப வருடங்களுக்கு முன்னாள் ஏதோ ஒரு கிதாபில் படித்த ஞாபகம் .

நண்பர்கள் , ஆலிம் பெருமக்கள் யாருக்கேனும் இந்த ஹதீஸ் தெரிந்திருந்தால் Link மூலமாகவோ போன் மூலமாக எனக்கு தெரிவிக்க வேண்டுகிறேன் .

ரஹ்மத் ராஜகுமாரன்

944 344 6903

Mohamed Ansary Mamanggani உலமாக்களில் ஒருவர் கூறும் போது " ஃபாதிர் என்ற சொல்லை என்னால் விளங்க முடியாமலிருந்தது. அப்போது ஒரு கிராமவாசி தனது கிணறு குறித்து தர்க்கம் செய்த போது நான்தான் இந்த கிணறை முதலில் தோண்டியவன். என்று கூறினார். முதலில் என்பதற்கு அவர் பயன்படுத்திய சொல் ஃபாதிர் என்பதாகும். அதன் பின்பே எனக்கு இந்த வசனத்தின் பொருள் புரிந்தது என்று கூறியுள்ளார்.

தப்ஸீர் ஷஃராவி 6:14

செங்கடல் பிளந்த உண்மை சம்பவத்தின் தடயங்கள் கண்டுபிடிப்பு- முஸ்லிம் உலகம்

மூஸா (அலை) அவர்களும் அவரின் கூட்டத்தினரும் ஃபிர்அவ்னின் கொடுமைகளில் இருந்து தப்பிப்பதற்கு வெளியேறியதும், மூஸா (அலை) அவர்களின் கூட்டத்திற்கு மாத்திரம் இரண்டாக பிளந்து வழிவிட்ட செங்கடல் ஃபிர்அவ்னின் கூட்டத்தை மூழ்கடித்ததும் நாம் அறிந்ததே! இது குர்ஆனின் அத்தாட்சியாகும்.

செங்கடல் என்பது பல நூறு மைல்கள் நீளமான எண்ணைதாங்கி கப்பல்கள் பயணம் செய்யும் அளவு ஆழமான கடல். எகிப்து முதல் எத்தியோப்பியா வரையான நாடுகளின் கிழக்கு எல்லையாகயும், சவூதி அரேபியா, ஏமன் போன்றவற்றின் மேற்கு எல்லையாகவும் செங்கடல் இருக்கிறது.

இதில் மூன்று குடாக்கள் காணப்படுகின்றன. சூயஸ் குடா (Gulf of Sues) ,அகபா குடா (Gulf of Aqaba) மற்றும் ஏடன் குடா (Gulf of Adan).

இவ்வளவு நீளமான செங்கடலின் எந்த இடத்தில் கடல் பிளவுபட்டு மூஸா(அலை) அவர்களின் கூட்டத்திற்கு வழிவிடப்பட்டது என்ற கேள்வி பலஆண்டுகளாக அகழ் ஆராய்ச்சியாளர்கள் மத்தியில் இருந்ததுவந்தது.

ஒவ்வொரு பகுதியையும் ஆராய்ச்சி செய்து வந்தபோது, அகபா குடாவின் ஒரு இடத்தில் இருகரைகளும் தொடர்ச்சியான கற்குன்றுகளாக இருந்தபோதும், ஒரேயொரு இடத்தில் மாத்திரம் இருகரைகளிலும் அசாதாரணமான மண்மேடுகள் காணப்படுவதை 'ரான் வையாத்' என்ற ஆய்வாளர் அவதானித்தார்.

ஒரு கரை சவுதியின் பக்கமும் மற்றொரு கரை எகிப்தின் பக்கமும் இருந்தது. இதில் எகிப்தின் பக்கம் இருக்கும் கடற்கரை நுவைபா (**Nuweiba Beach)** என்று அழைக்கபட்டது. இந்த இரண்டு இடங்களையும் மையமாக வைத்து அதை சுற்றியுள்ள கடலிலும் கரையிலும் ஆராய்ச்சி செய்தபோது ,

அதிசயிக்கத்தக்க பல தடயங்களை கண்டுபிடிக்கப்பட்டது.

கடலின் அடியில் மூழ்கடிக்கப்பட்ட

ஃபிர்அவ்னின் கூட்டத்தினரின் வண்டிகளின் சக்கரங்கள், ஆயுத தளவாடங்கள் மற்றும் எலும்பு கூடுகள் இருந்த அதேவேளை , அந்த குறிப்பிட்ட இடம் மட்டும் ஆழம் குறைந்த நிலையில் இருப்பதும் கண்டுபிடிக்கப்பட்டது.

இங்கு இணைக்கப்பட்டிருக்கும் படங்களில் அவற்றை காணலாம். இவற்றில் கண்டுபிடிக்கப்பட்ட தங்கத்திலான சில சக்கரங்கள் சவூதி நூதனசாலையில் இருப்பதாகவும் சொல்லப்படுகிறது.

அதேநேரம் கடலில் ஆராய்ச்சியை முடித்து விட்டு பார்த்தால், எகிப்தின் நுவைபா கடற்கரையிலும், அதற்கு நேரான சவுதியின் கரையிலும் கிரானைடிலான உயர்ந்த இரு தூண்கள் காணப்பட்டன.

பல வருட தேடலின் பின்னர் தற்போதுதான் கடல் பிளந்த இடத்தை நாம் கண்டுபிடித்து இருக்கும் போது, இந்த இடத்தில் இதற்கு முன்னர் இந்த தூண்களை உருவாக்கியது யார், எதற்கு என்ற ஆச்சரியமான கேள்விகள் ஆராய்ச்சியாளர்கள் மத்தியில் மூளையை குடைந்தததது .

பின்னர் அந்த அதிசய தூணை ஆராய்ச்சிக்கு உட்படுத்தி, அதில் இருந்த பழைய அராமைக் மற்றும் ஹிப்ரு எழுத்துக்களை கொண்டு அது பெரும்பாலும் சுலைமான் (அலை) அவர்களால் கடல் பிளந்த அதிசய இடத்தை அடையாளம் காணும் வகையில் உருவாக்கியிருக்கலாம் என்று அறியப்பட்டது.

சில வருடங்களுக்கு முன்னர் சவூதி அரேபியா தனது பக்கம் இருந்த தூணை அகற்றிவிட்டு அந்த இடத்தில் கொடிகம்பம் ஒன்றை நாட்டி இருக்கிறது. எனினும் எகிப்தின் நுவைபா கடற்கரையில் இருக்கும் தூண் தற்போதும் கம்பீரமாக நிற்கின்றது .

மேலதிக ஆராய்ச்சிகளின் பயனாக இந்த பகுதிக்கு மிக அண்மையில் இருக்கும் ஜபல் எல் லவுஸ் என்ற (தூர்சீனா) மலையடிவாரம் கண்டுபிடிக்கப்பட்டு அங்கு மூஸா (அலை) அவர்களால் கல் பிளக்கப்பட்டு தண்ணீர் வந்த கல்லும் கண்டுபிடிக்கப்பட்டது. இந்த மலையடிவாரம் ஒருசில காரணங்களுக்காக தற்போது சவூதி அரசினால் சீல் வைக்கப்பட்டு இருக்கிறது.( இணைக்கப்பட்ட படங்களில் அவற்றை காணலாம்)

ர.ரா



உங்களுக்குள்ளேயே நீங்கள் 13
உங்கள் மனம் உங்கள் பிரபஞ்சம்



நீங்கள் உட்கார்ந்த இடத்திலேயே பற்பல புத்தகங்கள், செய்தித்தாள்கள், சில கட்டுரைகள் , வரலாற்று காவியங்கள் இவைகளைப் படிப்பதாலும் ,டி.வி செல்போன் போன்ற ஊடகங்களை உட்கார்ந்த இடத்திலேயே பார்ப்பதாலும் , நீங்கள் மனத்தளவில் ஏதோ ஓர் உணர்ச்சியில் பாதிக்கப்படுகிறீர்களா ?
இந்த தாக்கம் உங்களை மட்டுல்ல , உங்களைச் சுற்றியுள்ள இந்த பிரபஞ்சத்திலும் தாக்கத்தை ஏற்படுத்தி அதனை மாற்றி அமைத்து விடுகிறது என்று சொன்னால் நீங்கள் நம்ப வேண்டும் .
இதனை சூசகமாக குர் ஆனில் அல்லாஹ் ..
وَمَا تَكُوْنُ فِىْ شَاْنٍ وَّمَا تَتْلُوْا مِنْهُ مِنْ قُرْاٰنٍ وَّلَا تَعْمَلُوْنَ مِنْ عَمَلٍ اِلَّا كُنَّا عَلَيْكُمْ شُهُوْدًا اِذْ تُفِيْضُوْنَ فِيْهِ وَمَا يَعْزُبُ عَنْ رَّبِّكَ مِنْ مِّثْقَالِ ذَرَّةٍ فِى الْاَرْضِ وَلَا فِى السَّمَآءِ وَلَاۤ اَصْغَرَ مِنْ ذٰ لِكَ وَلَاۤ اَكْبَرَ اِلَّا فِىْ كِتٰبٍ مُّبِيْنٍ
நீங்கள் எந்த நிலையில் இருந்தாலும், “குர்ஆனிலிருந்து நீங்கள் எதை ஓதினாலும், நீங்கள் எந்தக் காரியத்தை செய்தாலும், நீங்கள் அவற்றில் ஈடுபட்டிருக்கும்போது நாம் கவனிக்காமல் இருப்பதில்லை. பூமியிலோ, வானத்திலோ உள்ளவற்றில் ஓர் அணுவளவும் (நபியே!) உம் இறைவனுக்குத் (தெரியாமல்) மறைந்து விடுவதில்லை. இதை விடச் சிறியதாயினும் அல்லது பெரிதாயினும் விளக்கமான அவன் புத்தகத்தில் பதிவு செய்யப்படாமல் இல்லை.
(குர்ஆன் : 10:61)
' இப்போ சொல்லுங்க , உங்கள் கரங்களால் செய்வது இருக்கட்டும் , உங்க மனதில் எதைப்பற்றி சிந்தித்தாலும் கூட இந்த பிரபஞ்சத்தில் மாற்றம் நிகழுமா ? நிகழாதா ? ...நிகழும் .
விஞ்ஞானத்திற்கு இந்த சங்கதி ஒருவிதத்தில் அதிர்ச்சி அளித்த போதிலும், உண்மையை அப்படியே ஒத்துக் கொண்டுள்ளது .
காரணம் விஞ்ஞானம் அணுக்கருவிற்குள் இருக்கும் துகள்களின் இயற்கை தன்மையை வரைமுறைப்படுத்த தெரியாமல் மேலும் மேலும் விஞ்ஞானம் செய்து கண்டறிய முயற்சித்தபோது பல மாயாஜால வினோத ஆச்சரியங்களை அவர்களுக்கு அங்கு கண்ணாமூச்சி விளையாட்டாக ஆடி காட்டியது . விஞ்ஞானிகள் அசந்து போய் விட்டார்கள் !
இந்த வினோதங்களை நிரூபிக்க மாக்ஸ் பிளாங்கின் குவாண்டம் தத்துவத்தையும், ஐன்ஸ்டீனின் சார்பியல் தத்துவத்தை சாட்சியாக துணைக்கு அழைத்து வர வேண்டும். சற்று பொறுங்கள். அதை இன்னொரு சந்தர்ப்பத்தில் சொல்கிறேன்.
அணுக்கருவிற்குள்ளே நடக்கும் கண்ணாமூச்சி விளையாட்டைப் பார்த்த விஞ்ஞானம் , இந்த பிரபஞ்சத்தின் உண்மை என்ன... என்று அறிய ஆசைப்பட்ட போது , ஒருவிதமான விளிம்புக்கு வந்து வசமாக மாட்டிக் கொண்டு தத்தளித்தது .
ஒரு எல்லைக்கு மேல் விஞ்ஞானத்தால் பிரபஞ்சத்தின் உண்மை நிலையை கண்டறிய முடியாது என்பதை விஞ்ஞானிகள் ஒப்புக் கொண்டார்கள் .
அப்போ உண்மை ...?
யார் எதைப்பற்றி சிந்தித்தாலும் சந்தித்தாலும் மாற்றம் அடைய அடையப்போவது என்னமோ பிரபஞ்சம்தான் என்பதை வெகு தொலைவிற்கு வந்த பிறகுதான் தெளிந்தும் தெரிந்து கொண்டார்கள்.
இதற்கு நிறைய நிகழ்வுகளை குர்ஆனிலேயே சுட்டிக் காட்ட முடியும் .
ஏகத்துவக் கொள்கையில் நிலைத்திருந்த நபி இப்ராஹீம் (அலை) அவர்களை நெருப்புக் குண்டத்தில் தூக்கிப்போட தீர்ப்பு வழங்கப்பட்டது .
நபியவர்களுக்கு வானவர்கள் உதவிசெய்ய நாடினார்கள் "நெருப்புக் குண்டத்தை அணைத்துவிட பெரும் மழையை பொழிவிக்கட்டுமா..? புயல் காற்றால் புலம்பெயர செய்யட்டுமா ?" மலக்குகள் கேட்டார்கள்.
இறை உள்ளமை நெருப்புக் குண்டத்தில் போட முடிவு செய்ததை நபி இப்ராஹிம் (அலை) அவர்கள் மனதார ஏற்றுக் கொண்டார்கள் .
நெருப்புக் குண்டம் வளர்க்கப்பட்டது நெருப்பின் வெப்பம் தாளாமல் நபியவர்களை தூரத்து மலைக்குக் கூட்டிச் சென்று , கவட்டை கவண் செய்து அதில் வைத்து தூக்கி எறியப்படுகிறார்கள்.
قُلْنَا يٰنَارُ كُوْنِىْ بَرْدًا وَّسَلٰمًا عَلٰٓى اِبْرٰهِيْمَۙ
(அவ்வாறே அவர்கள் இப்ராஹீமை நெருப்புக் கிடங்கில் எறியவே நெருப்பை நோக்கி) "நெருப்பே! நீ இப்ராஹீமுக்கு சுகம் தரும் விதத்தில் குளிர்ந்து விடு!" என்று நாம் கூறினோம்.

(அல்குர்ஆன் : 21:69)
ஒரு மூதாட்டி நபி இப்ராஹீம் அலை அவர்களை சுட்டெரிக்கும் நெருப்பு குண்டத்திற்கு விறகு கொண்டு வந்து போடுவதாக நேர்ச்சை செய்து கொண்டு, காட்டிற்குச் சென்று விறகு கட்டி தலையில் வைத்து சுமந்து கொண்டு வந்தாள் .இடையில் ஒரு மலக்கு மனித உருவத்தில் அவள் முன் தோன்றி, அவளை விசாரித்தபோது அவள் விஷயத்தைக் கூறவே , "அல்லாஹ் உனது வழியை நீளமாக்கி வைப்பானாக" என்று கூறிச் சென்றார் . அவள் விறகை சுமந்த வண்ணம் பசியும் பட்டினியுமாக அலைந்து திரிந்து கடைசிவரை புறப்பட்ட இடம் வராமலேயே இறந்தும்போகிறாள் . இதுதான் கண்ணாம்பூச்சி விளையாட்டு .
அடுத்து , பனீ இஸ்ரவேலர்கள் எகிப்தில் இருந்து வெளியேறி
ஃ பிர்அவ்னிடமிருந்து தப்பி, செங்கடலிலிருந்து மீண்டு , தீஹ் என்ற பாலைப் பிரதேசத்தில் நுழைந்தார்கள் . பின் இறைவன் ஜெருலேத்திற்குள் நுழைய அவர்களுக்கு உத்திரவிட்டான். ஜெருலேத்தை கொடுங்கோல அமாலிக்கா கூட்டத்தார்கள் ஆண்டனர் . அவர்களை எதிர்த்து யுத்தம் செய்யுங்கள் நீங்கள் புறமுதுகாட்டித் திரும்பாதீர்கள் பனீ இஸ்ரவேலர்களுக்கு கட்டளை இட்டான் . குர்ஆன் ( 5 : 21)
அதற்கு பனீ இஸ்ரவேலர்கள் ."மூஸாவே நிச்சயமாக அதில் மிக பலசாலிகளான (அமாலிக்கா) கூட்டர்தார்கள் இருக்கின்றனர் .அவர்கள் அதை விட்டு வெளியேறும் வரையில் நாங்கள் அதனுள் நுழையவே மாட்டோம் ". குர்ஆன் (5 : 22 )
ஆறு லட்சம் பனீ இஸ்ரவேலர்கள் ஆறு மைல் சதுர பரப்பளவு கொண்ட "தீஹ்" என்ற பாலைவன பிதேசத்தை தினம் தினம் ஆறு காத மைல் தூரம் நடையோ நடை என்று நடப்பார்கள் .அதுவும் பெட்டி படுக்கை குடும்ப குட்டிகளோடு நடப்பார்கள் பொழுது விடியும் போது பார்த்தால் புறப்பட்ட அந்த பழைய இடத்திலேயே இருப்பார்கள் .... இதுவும் கண்ணாம்பூச்சி விளையாட்டுதான் .
( அதற்கு இறைவன் "அவ்வாறாயின் அவர்களுக்கு வாக்களிக்கப்பட்ட ) "அந்த (தீஹ் பாலைவன) இடம் நாற்பது வருடங்கள் வரையில் அவர்களுக்கு நிச்சயமாக தடுக்கப்பட்டு விட்டது. (அதுவரையில்) அவர்கள் அந்த பூமியில் தட்டழி (ந்து கெட்டலை ) வார்கள் . இந்த பாவிகளான மக்களைப் பற்றி நீங்கள் ஒன்றும் கவலை கொள்ளாதீர்கள் " என்று (மூஸாவுக்குக் இறைவன் ) கூறினான்.
இவ்வாறு பயந்தவர்களில் ( ஜோஷுவ, காலெப் என்ற ) இருவர் மீது அல்லாஹ் அருள் புரிந்தான். அவர்கள் மற்றவர்களை நோக்கி நீங்கள் (அவர்கள் பலத்தைப் பற்றி பயப்பட வேண்டாம் ) அவர்களை எதிர்த்து அந்நகரத்தின் வாயில் வரையில் சென்று விடுங்கள். அதில் நீங்கள் நுழைந்த மாத்திரத்தில் நிச்சயமாக நீங்கள்தான் வெற்றி பெறுவீர்கள் .நீங்கள் உண்மை நம்பிக்கையாளராக இருந்தால் அல்லாஹ்வையே நம்புங்கள் " என்று கூறினார்கள் . குர்ஆன் ( 5 : 23 )
மேற்கண்ட சம்பவங்களிலெல்லாம் பிரபஞ்சத்தின் இயல்பு நிலை , மனிதர்கள் கொண்ட மனதின் தாக்கத்தால் பாதிக்கப்பட்டதா ? இல்லையா
இன்றும் கண்ணாம்பூச்சி விளையாட்டு தொடர்ந்து ஆடப்பட்டுக் கொண்டுதான் இருக்கின்றன !
ர.ரா

உங்களுக்குள்ளேயே நீங்கள் 14

மாறுபட்ட சிந்தனை

இன்றைக்கு சிந்தனையின் நோக்கமே இருப்பதையெல்லாம் மனிதன் தனக்கு சாதகமாக பயன்படுத்திக் கொள்வது எப்படி என்பது பற்றிதான் இருக்கிறது

ஒரு இலையை பார்த்தால்கூட அதிலிருந்து தனக்கு ஏதாவது கிடைக்குமா என்று சுயநலத்தோடு பார்க்கும் மனப்பான்மை மனிதனுக்கு வந்துவிட்டது .

மரம் , காற்று, பூமிக்கு அடியில் புதைந்துள்ள இயற்கைச் செல்வங்கள் என்று எதையும் விட்டுவைக்கவில்லை. கண்ணுக்குப் புலப்படாத நுண்ணிய வைரஸ் கிருமி ஆக இருந்தால் கூட அதன் மூலம் தனக்கு என்ன ஆதாயம் கிடைக்கும் என்று மனிதன் ஆராய ஆரம்பித்து விட்டான் .

எறும்புக்கு ஒரு உலகம் உண்டு யானைக்கு ஒரு உலகம் உண்டு ஒவ்வொரு உயிரினத்திற்கும் அதனதன் உலகம் உண்டு . இயற்கையைப் பொறுத்த வரை மனிதனும் மற்ற உயிரினங்களைப் போல் ஒரு உயிரினம்தான்.

ஆனால் மனிதன் தன்னைப் பற்றி என்ன நினைக்கிறான் தெரியுமா ?

ஒரு காகம் , ஒரு பட்டாம்பூச்சி , ஒரு நாத்திக மனிதன் மூவரும் ஒரே நேரத்தில் இறந்து போயினர் . மேலுலகில் படைத்தவன் முன் அவர்கள் கொண்டுவரப்பட்டனர்.

கடவுள் பட்டாம்பூச்சி இடம் கேட்டார் :

" உனக்கு எங்கே இடவேண்டும் ?

"பூமியில் பல மகரந்த சேர்க்கைக்கு நான் உதவினேன் .எனக்கு சொர்க்கம் கிடைத்தால் சந்தோஷம் " என்றது பட்டாம்பூச்சி

"உனக்கு ? ' என்று காகத்திடம் .

" பல விதைகளை நான் வெவ்வேறு இடங்களில் துப்பியதால்தான் காடுகள் வளர்ந்து பெருகின. இயற்கைக்கு

உதவிதால் எனக்கும் சொர்கத்தில்தான் இடம் வேண்டும் என்றது காகம் .

மனிதன் பக்கம் திரும்பி கடவுள்

"உனக்கு எங்கே இடவேண்டும் ? "

" ஹலோ நீங்கள் உட்கார்ந்திருப்பது என் நாற்காலி எழுந்திருங்கள் " என்றானே அந்த நாத்திக மனிதன் .

நாத்திகனுக்கு ஆத்திகன் ஒருவன் கடவுள் தன் வடிவத்தில் இருப்பதாக சொன்னதை அந்த நாத்திக மனிதன் இப்படி கற்பனை செய்து கொண்டு அதை சரியாகப் பயன்படுத்தினான் .

இந்த மாதிரி சிந்தித்த பனீ இஸ்ரவேலர் ஒருவரின் சிந்தனை.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

" (முற்காலத்தில்) நன்மை எதையும் அறவே செய்யாத ஒரு மனிதர் தம் குடும்பத்தாரிடம்,

"நான் இறந்துவிட்டால் என்னை எரித்து, (சாம்பலாக்கி) அந்தச் சாம்பலில் பாதியைத் தரையிலும் பாதியைக் கடலிலும் தூவி விடுங்கள். அல்லாஹ்வின் மீதாணையாக! என் மீது இறைவனுக்குச் சக்தி ஏற்பட்டால், உலக மக்களில் யாருக்கும் அளிக்காத வேதனையை அவன் எனக்கு அளித்துவிடுவான்" என்று சொல்லி(விட்டு இறந்து)விட்டார்.

அவ்வாறே அந்த மனிதர் இறந்ததும் , அவர் சொன்னதைப் போன்றே குடும்பத்தார் செய்தனர்.

பிறகு அல்லாஹ் தரைக்கு ஆணையிட்டு அதிலிருந்த அவரது உடலை ஒன்று திரட்டினான்; கடலுக்கு ஆணையிட்டு அதிலிருந்த அவரது உடலை ஒன்றுதிரட்டினான்.

பிறகு, "நீ எதற்காக இப்படிச் செய்தாய்?" என்று கேட்டான். அதற்கு அவர், "என் இறைவா! உன்மீதுள்ள அச்சத்தால்தான் (இப்படிச் செய்தேன்). நீ நன்கறிந்தவன்" என்று சொல்ல, அவரை அல்லாஹ் மன்னித்துவிட்டான்.

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் . முஸ்லிம் : 5317.

எல்லா சிந்தனையும் சிந்தனை அல்ல , சிந்தனை என்பது விழிப்புணர்வுடன் சிந்திக்க வேண்டும்.

காலம் காலமாக ஒரு பூனை கதை சொல்லி நியூட்டன் முட்டாள் தனமாக சிந்தித்து செயல்பட்டார் என்று கூறுவார்கள். அவர் செய்ததைச் சொல்றேன்

அந்த கதைச்சுருக்கம் என்னவெனில் "பெரிய பூனை வந்து போக ஒரு ஓட்டை கதவில் இருக்கும், அதற்கு ஒரு குட்டி பிறந்தவுடன் அதுவும் வந்து போக அதற்கு அருகே ஒரு சிறிய ஓட்டையை நியூட்டன் போட்டார். பெரிய பூனை வந்து போகும் பெரிய ஓட்டை வழியே சின்ன பூனையும் வராதா அவர் இந்த இடத்தில் முட்டாள் தனமாக செயல்பட்டார்" என்று விழிப்புணர்வுடன் அவர் சிந்திக்கவில்லை என்று சொல்லப்படுவதுண்டு

எவ்வளவு பெரிய அறிவாளியும் முட்டாள் தனமாக நடந்து கொள்வான் என்பதற்காக சொல்லப்படும் கதை.

அந்த கதை உண்மையோ பொய்யோ தெரியாது. அந்த கதைப்படி அவர் முட்டாளாகவும் செயல் பட்டிருக்கலாம். அப்புறம் ஏன் இந்த பதிவு ஏன்று நீங்கள் கேட்கலாம். எனகென்னவோ அவர் செய்தது புத்திசாலித்தனமாகவும் இருக்கலாம் என்று தோன்றுகிறது.

எப்படி?

என்னைப்பொருத்த வரை நியூட்டன் ஓட்டையை எங்கே போட்டார், ஏற்கனவே ஓட்டை எங்கே இருந்தது என்பதை பொறுத்துதான் அவர் எப்படி செயல் பட்டார் என்பதை முடிவு செய்ய முடியும்.

ஒருவேளை பெரிய பூனை வருவதற்கான ஓட்டை சற்று உயரத்தில் இருந்தது என்று வைத்து கொள்வோம். சிறிய கால்களை உடைய குட்டிப்பூனை உயரத்தில் இருக்கும் ஓட்டையில் நுழைய சிரமப்படும் இல்லையா?

சிறிய குட்டிப்பூனை சுலபமாக சென்று வர அவர் கீழே சின்ன ஓட்டை போட்டிருக்கலாம் என எனக்கு தோன்றுகிறது. இந்த கோணத்தில் பார்த்தால் சிந்தித்தால் அவர் புத்திசாலி தானே?

ரஹ்மத் ராஜகுமாரன்

உங்களுக்குள்ளேயே நீங்கள் 15



அந்த ஒற்றை வார்த்தை

சம்காரம் " என்றால் என்ன என்று இப்போ உள்ள இளைஞர்களுக்குத் தெரியாது இந்த வார்த்தையை 1960 க்கு முன்னாடி பிறந்தவர்களுக்கு நன்றாக தெரியும் " சோப் " என்று .அது மாதிரி அரபு வார்த்தையில் ஒன்றுதான் هَلُوْعًا ۙ என்கிற வார்த்தை

اِنَّ الْاِنْسَانَ خُلِقَ هَلُوْعًا ۙ

நிச்சயமாக மனிதன் அவசரப் புத்திக்காரனாகவே படைக்கப்பட்டிருக்கின்றான்

(குர்ஆன் : 70:19)

هَلُوْعًا ۙ

என்ற வார்த்தைக்கு அக்காலத்திலே அர்த்தம் புரியவில்லை . நபி (ஸல்)

அவர்களிடம் கேட்டதற்கும் "எனக்குத் தெரியாது " என்றார்கள் .

இப்போது அதற்கு அவசரப் புத்திக்காரன் எனபதாக அர்த்தம் செய்யப்பட்டிருந்தாலும் இப்பத்ததின் சரியான அர்த்த்தம் இது இல்லை .

குர்ஆனின் (70 : 19) வசனத்தைத் தொடர்ந்து அடுத்த வசனம் அருளப்பட்ட தருணத்தில்

اِذَا مَسَّهُ الشَّرُّ جَزُوْعًا ۙ

அவனை ஒரு கெடுதி தொட்டுவிட்டால் பதறுகிறான்; (குர்ஆன் : 70:20)

என்ற வசனம் அருளப்படும்போதுதான்

நோய், பிணி , வறுமை முதலியவைகள் வந்தால் பொறுமை இழந்து பதறுவானே அந்த பதட்டத்தைத்தான் அல்லாஹுத்தஆலா ۙ هَلُوْعًا என்கிறான் என்பது தெளிவாயிற்று .

இதே மாதிரி

قُلْ اَغَيْرَ اللّٰهِ اَتَّخِذُ وَلِيًّا فَاطِرِ السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَهُوَ يُطْعِمُ وَلَا يُطْعَمُ قُلْ اِنِّىْۤ اُمِرْتُ اَنْ اَكُوْنَ اَوَّلَ مَنْ اَسْلَمَ وَلَا تَكُوْنَنَّ مِنَ الْمُشْرِكِيْنَ

“வானங்களையும் பூமியையும் படைத்த அல்லாஹ்வையன்றி வேறு எவரையும் என் பாதுகாவலனாக எடுத்துக் கொள்வேனா? அவனே (யாவருக்கும்) உணவளிக்கிறான்; அவனுக்கு எவராலும் உணவளிக்கப் படுவதில்லை” என்று (நபியே!) நீர் கூறுவீராக: இன்னும் (அல்லாஹ்வுக்கு வழிபடுபவர்களில் முதன்மையானவனாக, இருக்கும்படி நான் கட்டளையிடப்பட்டுள்ளேன்) என்று கூறுவீராக. இன்னும் நீர் ஒருக்காலும் இணைவைப்போரில் ஒருவராகிவிட வேண்டாம். (அல்குர்ஆன் : 6:14)

குர்ஆனில் " ஃபாதிர் " என்ற ஒரு வார்த்தைக்கு நபித்தோழர்களுக்கே அர்த்தம் புரியாமல் இருந்தது. இந்த நபித்தோழர்கள் ஒரு காலத்தில் வலித் இப்னு முஹைரா என்ற மாபெரும் அரபு இலக்கியவாதியின் நெருங்கிய தோழர்களாக இருந்து அவனின் இலக்கியத்தை

மெச்சியவர்கள்தான். இவர்களால் கூட அந்த ஒற்றை வார்த்தைக்கு அர்த்தம் புரியவில்லை .

நபித்தோழர் ஒருவர் " ஃபாதிர் " என்ற சொல்லை என்னால் விளங்க முடியாமலிருந்தது. அரபுலகத்தின் எல்லையிலுள்ள ஒரு கிராமவாசி தனது கிணறு குறித்து தர்க்கம் செய்த போது, "நான்தான் இந்த கிணற்றை முதலில் தோண்டியவன் " என்று கூறினார்.

"முதலில் " என்பதற்கு அவர் பயன்படுத்திய சொல் "ஃபாதிர்" என்பதாகும். அதன் பின்பே எனக்கு இந்த வசனத்தின் பொருள் புரிந்தது என்று கூறியுள்ளார். தப்ஸீர் ஷஃராவி

ஒற்றை வார்த்தையை மையமாக வைத்து திரு .சுஜாதா "டிக்கட் " என்று ஒரு சிறுகதை எழுதி இருக்கிறார் உங்கள் ரசனைக்காக ...

ஒரு வழியாக கல்யாணம் என்கிற வார்த்தை அவனுக்கு நிரந்தரமாக மறந்து போயிற்று. முதலில் அதை தற்செயலாகத்தான் கவனித்தான். பொழுதே போகாதபோது மேஜையில் கலர், கலராக இறைந்திருந்த பத்திரிக்கைகளைப் புரட்டிக் கொண்டிருந்தான், ஏதோ ஒரு தொடர் கதையை ஏதோ ஒரு அத்தியாயத்தைப் படிக்கத் துவங்கினான்.

"கல்யாண காரியங்கள் மும்முரமாக நடக்கிறது...."

சற்று நெருடியது. என்ன காரியங்கள் ? க.....ல்...யா....ண....என்றால் என்ன அர்த்தம் ?

'இனிமேல் இந்தக் கல்யாணத்தை யாராலும் நிறுத்த முடியாது...'

இதைப் படிக்கும்போது, 'இனிமேல் இந்த ."......" யாராலும் நிறுத்த முடியது என்றுதான் அவன் மூளைக்குள் பதிந்தது. ஒரு முறை தலையைச் சிலிர்த்துக் கொண்டான்.

'எவனோ முன்னே பின்னே தெரியாதவனை ."...... " பண்ணிண்டு திண்டாடறதுக்கு....'

'ஒருவேளை, மனசுக்குப் பிடித்தமில்லாத இந்த " ......" திலிருந்து கழண்டுக்கற நோக்கத்தில்.....'

கல்யாணம் என்று வருகிற போதெல்லாம் அவனுக்குள் ஏதோ படக்கென்று ஸ்விட்ச் அணைந்து விடுகிறாற்போல.......என்ன ஆயிற்று ?

சற்றே திகைத்துப் போய் சும்மா இருந்தான்.

என்னவோ ஆகிவிட்டது எனக்கு?

சே ! நேற்று சரியாகாது தூங்கினேனே ! காலை சரியாகப் போனேனே ! ஒரு வேளை பசியோ ? இல்லை காஃபி சாப்பிட்டால் சரியாகி விடுமோ ?

அது என்ன வார்த்தை ? க இல் யாண இம் ! " கல்யாணம் " என்றால் என்ன அது ?

அறையைப் பார்த்தான். அலமாரிக்கு வந்தான். அம்மாவின் இன்லண்ட் பிரிந்து இருந்தது.

'பிரியமுள்ள துரை,நான் போன லெட்டரில் எழுதியபடி உன் ........ விஷயமாக....'

ஐயோ, மறுபடி அது ! படக்கென கடிதத்தை மூடி வைத்துவிட்டு, காதுகளுக்குள் விர்ர்ர் என்று ஒலி கேட்டது. அந்த ஒலியை அவன் அதன்முன் கேட்டதில்லை. வர்ணிக்கமுடியாத, கீழ் ஸ்தாயியில், ராத்திரி வேளையில்

ஒரு புறாவை விரட்டினாற்போல, அந்தப் படபடப்புடன்.......அல்லது முப்பது செகண்டு அல்லது முப்பது நிமிஷம் நினைவிழந்தான்.

விழிப்பு ஏற்பட்டபோது அவனுக்கு உடம்பு பூரா வியர்த்திருந்தது. நாக்கைக் கடித்துக் கொண்டதில், தொட்டுப் பார்த்ததில், ரத்தம் தெரிந்தது. பூட்டுக்குப் பூட்டு வலித்தது. உடனே டாக்டரைப் பார்க்கத் தீர்மானித்தான்.

ஆஸ்பத்திரியில் இரண்டு மாமிகளுக்கு இடையே..."போன வருஷம்தான் மாமி.....ஆச்சு, அப்பவே சொல்லியிருக்கலாமில்லையோ !"

"சொல்லவே இல்லையா ?"

"இல்லையே ! இப்ப உண்டாயிருக்கு. இதுக்கு என்னன்னு சொல்வேன் ........

இவர்கள் என்ன பேசிக்கொள்கிறார்கள் ?

"மிஸ்டர் துரை !" என்றார்.

திடுக்கிட்டு எழுந்தான்.

"என்ன மிஸ்டர் துரை?"

"டாக்டர், இன்னிக்கு சாயங்காலம்தான் ஆரம்பிச்சது. ஒரு வினோதமான உணர்ச்சி. ரூம்ல உக்காந்துகிட்டு போது நேரம் போகாம படிச்சுக்கிட்டே இருந்தேனா....." சொன்னான்.

நம்புகிறாரா தெரியவில்லை.

முழுவதும் கேட்டுவிட்டு சற்று நேரம் கழித்து, ....

"அது என்ன வார்த்தை சொன்னிங்க?"

"புஸ்தகம் படிச்சுக்கிட்டே இருக்கேனா....ஒரு வார்த்தை மட்டும் கன்சிஸ்டண்டா உதைக்குது. அதைப் பிடிக்கவே முடியவில்லை..."

"என்ன வார்த்தை?"

"தெரியலையே.....அது வந்தபோது மூளையில ஒருவிதமான பள்ளம். டோட்டல் பிளாங்க் !"

"அப்படியா ! படுத்துக்கங்க..."

நர்ஸ் பக்கத்தில் இருந்த திரைகளை விலக்க, சற்று உயரமாக இருந்த நீண்ட மேஜைமேல் படுத்தான். டாக்டர் ரத்த அழுத்தம் எடுத்தார். இதயத்தைக் கேட்டார். கண்களுக்குள் ஊசிபோல ஒளி செலுத்திப் பார்த்தார்.

"உங்க ஃபாமிலியில யாருக்காவது ஃபிட்ஸ் வருமா ?"

"எனக்குத் தெரிஞ்சவரைக்கும் இல்லை டாக்டர்..."

"இதுக்கு முந்தி உங்களுக்கு இது மாதிரி வந்திருக்கா?"

"இல்லை, இதுதான் முதல் தடவை"

"உடம்பு வலி இருக்கா?"

"இருக்கு. முறுக்கிவிட்டாற்போல"

"உங்களுக்கு என்ன வயது?"

"இருபத்தி அஞ்சு"

"கல்யாணம் ஆயியிடுச்சா?"

"என்ன கேட்டீங்க?"

"கல்யாணம் ஆயிடுச்சான்னு..."

"புரியலை"

டாக்டர் சற்று யோசித்து, "ஓ, அதுதான் அந்த வார்த்தையா?"

"எதுதான்...எந்த வார்த்தையா!"

"உங்களுக்கு ப்ளாங்க்கா இருக்குதுன்னு சொன்னீங்களே, கல்யாணம் ! அந்த வார்த்தைதானே ?"

"எழுதிக் காட்டுங்க"

டாக்டர் எழுதிக் காட்ட, "இதான் ஸார்" என்றான் பளிச்சென்று.

"கொஞ்சம் இருங்க! இதைப்பாருங்க" "திருமணம்" என்று எழுதினார்.

"ம்ஹும்" என்றான் துரை.

"இன்டரஸ்டிங்! சட்டையை போட்டுக்கங்க"

"வாட்ஸ் ராங் வித் மீ டாக்டர்?"

"இப்ப சொல்ல முடியாது. உங்களுக்கு ஜி.ஹெச்லே டாக்டர் கல்யாணராமனைத் தெரியுமா? நியூரோ சர்ஜன்."

"டாக்டர், அது என்ன ராமன்?"

"ஓ .எஸ். புரியறது. அந்த வார்த்தை அந்த டாக்டர் பெயரிலும் இருக்கா ?

ஒரு ஸ்கான் எடுக்கணும். அதுக்குதான். ஜி.ஹெச்லே எடுத்தா சார்ஜ் அதிகம் ஆகாது.அப்புறம் சில எக்ஸ்ரேக்களும் எடுக்கணும். அதுவரைக்கும் தீர்மானமா எதையும் சொல்ல முடியாது. நீங்க நாளைக்கு காலைல வந்திங்கன்னா எழுதிக் கொடுக்கறேன். ராத்திரிக்கு இந்த மாத்திரை மட்டும் போட்டுக்கங்க.

சீக்கிரம் படுத்துக்கங்க. மாத்திரை தூக்கத்துக்குத்தான் கொடுத்திருக்கேன். டெஸ்ட் பண்ணப்புறம்தான் விஷயம் தெரியும். கவலைப்படாதீங்க..."

அவன் போனதும் டாக்டர் நம்பி ராஜன் மற்ற பேஷண்டுகளை சற்று அவசரமாகவே பார்த்தார். அவருக்கு ஷெரட்டனில் பார்ட்டியிருந்தது.

மனைவியை உட்கார்த்தி வைத்துவிட்டு, சிவ்குமாரின் நரைத்த தலையைத் தேடினார்.

சிவ்குமார் நிம்ஹான்ஸில் பிரபலமான நியூரோ சர்ஜன்.அவரைப் பல இளம் டாக்டர்கள் சூழ்ந்திருந்தார்கள். நம்பி ராஜன் தானாகப் போய் அறிமுகம் செய்து கொண்டார்.

"டாக்டர், இன்னிக்கு என் க்ளினிக்குக்கு ஒரு வினோதமான கேஸ் வந்தது. அதை உங்களிடம் சொல்ல விருப்பம்,"

"ப்ரெய்ன் என்றால் சொல்லுங்கள், எனக்கு அதைத்தவிர வேறு எதுவும் தெரியாது. அப்பெண்டிக்ஸ்னா நான் புஸ்தகத்தில் தேடுவேன்"

சின்ன டாக்டர்கள் விசுவாசமாகச் சிரித்தார்கள்.

"இல்லை, டாக்டர். இந்த மாதிரி கேஸை நான் பார்த்ததில்லை. அவன் சொல்கிறான், ஒரு வார்த்தை மட்டும், ஒரே ஒரு வார்த்தை மட்டும் அவனுக்கு சூன்யமா இருக்காம். அந்த வார்த்தையை மூணு, நாலு தடவை பார்த்ததும் எபிலெப்டிக் ஷீர் (epileptic sheer) மாதிரி வந்திருக்கு. ஹி டிஸ்க்ரைப்ஸ் என் ஆரா ....."

"வெயிட் எ மினிட், அது என்ன வார்த்தை?"

"கல்யாணம்"

டாக்டர் சிவ்குமார் விசிலடித்தார்.

"டாக்டர் நம்பி ராஜன், கொஞ்சம் தனியா வாங்க"

அவரை தோழில் அணைத்து அழைத்துச் சென்று, காலி நாற்காலியின் எதிரே உட்கார்ந்துகொண்டார்.

"என்ன சொன்னிங்க ? திருப்பி சொல்லுங்க"

நம்பி ராஜன் முதலிலிருந்து விவரிக்க, சிவ்குமார் மிகக் கவனமாகக் கேட்டார்.

:டாக்டர், இது ஒண்ணும் கற்பனை இல்லையே?"

"சேச்சே...!"

"நீங்க ராபின் குக் எழுதின ப்ரெய்ன் படிச்சிங்களா?"

"இல்லை, ஏன் ?"

"அதில் இப்படித்தான் சில பெண்களுக்கு ஒரு எழுத்து மட்டும் தெரியாமப் போயி, ஸி.ஐ.ஏ / ஃஎப்.பி ஐ (CIA / FBI) ன்னு என்ன என்னமோ வருது. ஆனா, நீங்க சொல்ற கேஸ் வேற மாதிரி இருக்கு. ஒரு வார்த்தை மட்டும்...அதும், கல்யாணம்....சம்திங் சீரியஸ்,

டாக்டர் அந்த ஆளை நான் பார்க்க முடியுமா?"

"தாராளமா. இட் வில் பி எ ப்ளெஷர். உங்க மாதிரி பிரபல டாக்டருக்கு ஆர்வம் ஏற்பட்டதுன்னா...."

"கிளினிக்கில் இருக்கானா ?"

"இல்லை. வீட்டுக்குப் போய்ட்டான். நாளைக்கு வரச் சொல்லியிருக்கேன்..."

"போச்சுரா"

"ஏன் டாக்டர் ?"

"நாளைக்கு அவன் வரலைன்னா?" அட்ரஸ் வாங்கி வெச்சிருக்கீங்களா?"

"அட்ரஸ் இல்லை. நாளைக்கு நிச்சயம் வருவான் டாக்டர். வராம எங்க போயிருவான்? டெஸ்ட்டே ஆரம்பிக்கலையே"

"எனக்கு நம்பிக்கை இல்லை"

"என்ன சொல்றிங்க, டாக்டர்?"

"இதப் பாருங்க, நம்பி ராஜன். நான் சொல்றது உங்களுக்கு இந்த யுகத்தில், இந்த தினத்தில், அபத்தமா படலாம். எனக்குத் தெரிஞ்சது உங்களுக்குத் தெரியாது. அமெரிக்காவில் நான் டீச்சிங் அஸைன்மென்டுக்குப் போறபோது சில டாக்டர்களையம்,விஞ்ஞானிகளையும் சந்திச்சேன். எல்லோருக்கும் பொதுவா ஒரு ஆர்வம் எதிர்காலத்தில் ! ஃப்யூச்சராலஜி (Futurology), பயானிக்ஸ் (Bionics), குளோனிங் (cloning), டி.என்.ஏ (DNA) ஸின்தஸிஸ்னு ஃப்ராண்டியர் (Frontier) சப்ஜெக்ட்ஸ் எல்லாம் டிஸ்கஸ் பண்ணுவோம். ஃப்ரெட் ஹாயில் (Fred Hoyle) , அஸிமோவ் (Asimov), ப்ராட்பரி (Bradbury), க்ளார்க் (Clarke), டாஃப்ளர் (Doffler) இந்த மாதிரி ஆட்களை எல்லாம் கூப்பிட்டு பேச வைப்போம். அதில டாக்டர் ஜான்ஸ்டன்னு (Johnston) ஒருத்தர் இருக்கார். பயோ கெமிஸ்ட்ரி, எலெக்ட்ரானிக்ஸ் இரண்டிலயும் விற்பன்னர். அவர் போன தடவை போயிருந்தபோது ஒரு சித்தாந்தம் சொன்னார். சொல்லி முடிச்சப்புறம் எல்லோரும் சிரிச்சோம்,ஏதோ போட்டுட்டு உளறார்ன்னு. ஆனா, இன்னைக்கு அவர் சொன்னதில் முதல் பாதி நடந்திருக்கு!"

"ஜான்ஸ்டன் மற்ற கிரகங்களில் அல்லது ஸூப்பர் நோவாக்களில் நம்மைவிட புத்திசாலித்தனமான உயிர்கள் இருக்கிறதை தீவிரமா நம்பறவர். அவங்கள்ளாம் நம்ம கூட மன அலைகள் (mind waves) மூலம் தொடர்பு கொள்ளுவாங்கன்னு நம்பறவர்"

"மன அலைகள்?"

"ஆமாம் ! அவர் என்ன சொன்னார் தெரியுமா? நம்ம நாகரிகம்,விஞ்ஞான வளர்ச்சி எல்லாம் அவங்க மாதிரி ஸூப்பர் நோவாக்களில் இருக்கிற ஸூப்பர் ப்ரெய்ன்களோட ஒப்பிட்டால் ஒரு தூசிக்கு சமானமாகும்.அவங்க ஒரு கணத்தில் நம்ம உலகை எடுத்து ஆள முடியுமாம்"

"எப்படி?"

"அங்கிருந்து அனுப்புற எண்ண அலைகள் மூலம் ! கேளுங்க ....ஒரு மனிதனுடைய மூளையில் ஒரு பாகத்தில் விதை விதைக்கிறாற்போல மையக் கேந்தித்திரத்தை உருவாக்கிப் படிப்படியா அந்தக் கேந்திரம் விரிவடைய, கொஞ்சம் கொஞ்சமா ஒரு நாள், இரண்டு நாளிலேயே அவன் மற்ற மனிதர்களைக் கொஞ்சம் கட்டுப்படுத்த ஆரம்பிச்சிருவானாம். "எண்ணப் பார்வை" னு சொல்றார்.அதை, அந்தப் பார்வையில் ஒரு கட்டளை இருக்குமாம்.கொஞ்சம், கொஞ்சமா, அவன் மூளை விஸ்தாரம் அடைந்து அவன் தேசத்தை, அதுக்கப்புறம் அண்டை தேசத்தை, அப்புறம் ஒரு கண்டத்தை, அப்புறம் உலகையே தன்னுடைய ஆக்கிரமிப்பில் கொண்டு வந்திருவானாம்..."

"சேச்சே, என்ன டாக்டர் சயின்ஸ்

ஃபிக் ஷன் மாதிரி ரொம்ப ரீலா இருக்கு!"

"அப்படித்தான் நானும் நினைச்சேன். டாக்டர் ஜான்ஸ்டன் ஸூப்பர் நோவாவைப் பற்றியும், ப்ராபபிலிட்டி (Probability) பற்றியும் பேசறதை நீங்க கேட்டிங்கன்னா இது நிச்சயம் சாத்தியம்ன்னு தோணும். அதைவிட..."

"இதெல்லாம் நீங்க சொல்ற மாதிரி ரீல்னுதான் நானும் நம்பிக்கிட்டு இருந்தேன், இன்னிவரைக்கும்...."

"இன்னிக்கு என்ன?"

"நீங்க சொன்னிங்களே, மாலைல உங்களை வந்து சந்திச்ச பேஷண்ட் பத்தி...அதுதான் என்னைக் கொஞ்சம் திகைக்க வைக்கிறது,,"

"ஏன்/"

"டாக்டர் ஜான்ஸ்டன் சொன்னபடி முதல்ல அந்த விதையை எப்படி விதைப்பாங்க தெரியுமா? ஒரு மனிதனைத் தேர்ந்தெடுத்து, மன அலைகள் அல்லது தனிப்பட்ட ரேடியேஷன் மூலம் அவனுடைய மூளையின் ஒரு பாகத்தை ஆக்கிரமிப்பாங்களாம். அந்த ஆக்கிரமிப்புக்கிங்கிறது என்னன்னு அவர் சொன்னார் தெரியுமா? முதல்ல ஒரு வார்த்தை, ஒரு சித்தாந்தம் மூளையிலிருந்து நீக்கப்படுமாம். உதாரணத்துக்கு, என்ன வார்த்தை சொன்னார்...?

கல்யாணம்....""மை காட்" என்றார் நம்பி ராஜன்.கொஞ்சம் நேரம் கழித்து நெர்வஸாகச் சிரித்தார்.

"சேச்சே ...இம்பாஸிபிள் டாக்டர்"

"லெட்ஸ் ஹோப் ஸோ" என்றார் சிவகுமார்.

"நீங்க என்ன சொல்றிங்க டாக்டர்?"

"அந்த ஆள் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆள், இவன் மூலமா விண்வெளியில் உள்ள நம்மை விட மஹா புத்திசாலியான உயிரினங்கள் இவனை ஆக்கிரமித்து, இவன் மூலமா நம் உலகத்தை எடுத்தாளப் போறாங்க ! அதுனால நாளைக்கு உங்களைப் பார்க்க வரமாட்டான்னு சொல்றேன்"

"பின்ன எங்கே போவான்?"

"எங்க போவான்? டில்லிக்கு. முதல்ல இந்திய அரசாங்கத்தைக் கவர்ந்து கொள்ள....அங்க போய் .."

டாக்டர் சிவ்குமார் சற்று நிதானித்து, தலையை குளித்த காகம் போல உதறிக்கொண்டார்.

"சே,அப்படி எதுவும் நடக்காது.எல்லாம் இந்த ஸ்காட்ச் செய்யற வேலை. டாக்டர் ஜான்ஸ்டன் ரொம்பவே அவுட் திங்க்கர் (Out thinker) ! நீங்க கவலைப்படாதீங்க நம்பி ராஜன்.எதுக்கும் நாளைக்கு காலைல அவன் வந்ததும் எங்கிட்ட கூட்டிட்டு வாங்க"

"சரி" என்றார் நம்பி ராஜன். அவர் விரல்கள் நடுங்கின. அவருக்கும் ஸ்காட்ச் சாப்பிட வேண்டும்போல இருந்தது.

.............. ............................................................

துரை மணி பார்த்தான்.நல்லவேளை இன்னும் மூடியிருக்க மாட்டார்கள்.மூடியிருந்தால்தான் என்ன? திறக்க வைத்துவிடலாம் என்று தோன்றியது.

துரை ஏர்லைன்ஸ் கட்டடத்துக்குள் நுழைந்து சுற்றும் முற்றும் பார்த்தான். நிதானமாக ஒரு கவுண்டரை நோக்கி நடந்தான். அங்கே டிக்கெட் பெண்ணுக்கு எதிரே நாற்காலியில் வீற்றிருந்தவர் இவனைப் பார்த்தவுடன் பயத்துடன் எழுந்து விலகி நின்றார்.

"கான் ஐ ஹெல்ப் யு சார் ?" என்றாள் பெண் மரியாதையுடன்.

"டில்லிக்கு நாளைக்கு ஒரு டிக்கெட் வேண்டும்" என்றான்.

ரஹ்மத் ராஜகுமாரன்

உங்களுக்குள்ளேயே நீங்கள் " என்கிற தொடர் 15 பதிவுகளோடு நிறைவடைகிறது . இன்ஷா அல்லாஹ் அடுத்த தொடர் வழக்கம் போல நீங்களே தேர்ந்தெடுங்கள் . - ர.ரா

தொடர் பதிவுகள் எழுதுவது மூலம் ஒரு Subject யை தீவிரமாக அலச முடிகிறது. பிற்காலத்தில் அதை நூல் வடிவமாக்க தோதுவாக 15 முதல் 25 பதிவுகள் வரை எழுதப்படுகிறது .
எந்த தொடரை நிறைவு செய்யும்போதும் நண்பர்கள் இந்த தொடரையே இன்னும் நீட்டியிருக்கலாமே என்று சொல்வது வழக்கம் . வழக்கம் போல் "உங்களுக்குள்ளே நீங்கள் " தொடரையும் நீட்டிக்கச் சொல்லி என் நண்பரும் ஜவுளி வியாபாரியுமான ஹக்கீம் ஸ்டோர் ஹாஜி RMA அஹமது சலீம் ரொம்பவும் வற்புறுத்தினர் .
சொல்ல வேண்டிய விஷயங்கள் நிறையவே உள்ளது . ஒரே subject யை தொடர்ந்து ஆய்வு செய்யும்போது ,தேடும் கிதாபுகளில் புதுப்புது வேறு பல விஷயங்களும் இடையே இடையே
மீனைப் போல தலையைத் தூக்கி 'நானும் இருக்கிறேன் நானும் இருக்கிறேன் " என்கிறது .
" தேடுதலில் பிச்சைக்காரனாக இரு !
உலகினில் பார்வையாளனாக இரு ! "
என்ற சொற்றொடர் யாருக்குப் பொருந்துகிறதோ இல்லையோ எனக்கு கனகச்சிதமாக பொருந்துகிறது !
எனக்குத் தெரியாத விஷயங்களைப் பற்றி அத்துறையைச் சார்ந்தவர்களிடம் கூச்சமோ , தயக்கமோ இன்றி தாராளமாகவே கேட்கிறேன். அவர்களும் நொள்ளி நொள்ளி தராமல் அள்ளி அள்ளியே தருகின்றனர் அவர்களுக்கு நான் எப்போதுமே நன்றி கடன்பட்டிருக்கிறேன் .
இதுபோல நண்பர்கள் பலர் Copy link மூலமாகமாகவும் பல நண்பர்கள் பழைய கிதாபுகளையும் நேர்முகமாகவும் , கொரியர் மூலமாக அனுப்பிக் கொண்டே இருக்கிறார்கள். அவர்களுக்கும் இந்த நல்ல தருணத்தில் விசுவாசத்தையும் , நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன் .
ரஹ்மத் ராஜகுமாரன் .
944 344 6903

ரோபாட் 1 



ரோபாட் (Robot ) என்பது செக் மொழியிலிருந்து வந்த வார்த்தை.

காரல் சாப்பெக் **(Karel Capek** ) என்பவர் எழுதிய நாடகத்திலிருந்து அந்த வார்த்தை புறப்பட்டு உலகப் பொது வார்த்தையாகி விட்டது Robota என்றால் செக் மொழியில் ' 'வேலை 'என்று பொருள்.

ரோபாட்டினால் வேலை வாய்ப்புகள் குறைந்து போகாதா என்றால் வேலைவாய்ப்பு குறையாது. வேலை ஸ்தலங்கள் தான் மாறும் .

இதை பற்றி கொஞ்சம் விளக்கி சொல்கிறேன்.

இன்றைக்கு வேளாண்மை செய்ய டிராக்டர்கள் வந்துவிட்டதால் கிராமங்களில் வயலில் உழுவதற்கும் நடுவதற்கும் அதிகப்படியான ஆட்கள் தேவைப்படுவதில்லை என்பது

உண்மைதான் .அதனால் டிராக்டர்களினால் மனித வேலை வாய்ப்புகள் கிராமத்தில் குறைந்து போய்விட்டன என்றுதான் சொல்ல முடியும் .ஆனால் டிராக்டர்களின் பிரவேசத்தை எந்த கிராமமும் எதிர்க்கவில்லை .காரணம் டிராக்டர்களினால் பல்வேறு வேலை வாய்ப்புகள் ஏற்பட்டுள்ளன .

டிராக்டர் ரிப்போர் பண்ணுபவர்கள் தேவை ஏற்படுகிறது. டீசல் விற்பவர்களுக்கும் , அதற்கு பல்வேறு உதிரிப் பாகங்கள், அட்டாச்மெண்ட்கள் செய்து விற்பவர்கள் ...இப்படி வேலை ஸ்தலங்கள் கூடியுள்ளது .

இப்படி உழவுத் திறமையிலிருந்து வேறு திறமைக்கு வேலைவாய்ப்புகள் இடம்பெறுகின்றன. அதுமட்டுமின்றி டிராக்டர் வந்ததினால் உற்பத்தி பெருகி அதனால் கிராமங்கள் பணப்புழக்கம் பெருகி அதனால் மிட்டாய் கடை , துணிக்கடை , செல்போன் வியாபாரம் , டெண்ட் சினிமா கொட்டகை . சங்கங்கள் , தேர்தல்கள், அரசியல் ...இப்படி கிராமத்தின் பொருளாதாரம் புத்துயிர் பெறுகிறது .மாறுகிறது.

ரோபாட்களும் ஓரளவுக்கு அப்படித்தான். Human use of beings என்பார்கள். மனிதர்களை இயந்திரங்களாக பயன்படுத்துவதற்குப்பதில் இயந்திரங்களை எளிய மனித செயல்களாகச் செய்ய வைப்பதுதான் ரோபாட் இயலின் பிரதான குறிக்கோள். முக்கிய உபயோகம்.

தற்போது பெரும்பாலான துறைகளில் ரோபோக்களின் பயன்பாடு இருந்து வரும் நிலையில், எதிர்காலத்தில் அவற்றின் உபயோகம் இன்னும் அதிகமாகலாம் என்று வல்லுனர்கள் தெரிவித்துள்ளனர்.

குறிப்பாக, கட்டுமான பணிகளில் அவற்றின் பயன்பாடு இன்னும் பெரிய அளவில் இல்லை என்றாலும், ஒரே மாதிரியான கட்டமைப்புகளை அதிக எண்ணிக்கையில் அமைக்கவும், ஆபத்தான கட்டட உயரங்களில் அல்லது மிக ஆழமான அஸ்திவார பணிகளில் உதவி செய்யவும் ரோபோக்கள் பயன்படுத்தப்படுவது குறித்த ஆய்வுகள் உலக அளவில் அதிகமாகி வருவதாக அறியப்பட்டுள்ளது.

மனித உழைப்புக்கு சவாலாக உள்ள கட்டுமான பணிகளில் ‘ரோபோக்கள்’ பங்களிப்பை மறுக்க இயலாது என்று மேலை நாட்டு கட்டுமான பொறியாளர்கள் பலரும் தெரிவித்துள்ளனர்.

இறை இல்லத்தைக் கட்ட ரோபோ

இப்ராஹீம் (அலை ) அவர்களை கவலை ஆட்கொண்டது .இறை ஆலயத்தை எவ்வாறு நிர்மாணிப்பது அதில் ஏதேனும் தவறு நிகழ்ந்து விடின் இறை கோபத்திற்கு ஆளாகி விடுவோமோ என்பதுதான் அது .

அப்போது இறைவன் அவர்களை நோக்கி " இப்ராஹீமே கவலைப்படாதீர்! நாம் ஒரு பேழையை அனுப்பி வைக்கிறோம் . அதன் நிழல் கீழே விழுவதை பார்த்து , நிழல் விழும் இடத்தில் நிழல் விழும் வண்ணமே கட்டடத்தை எழுப்பும் " என்று அருள் கட்டளை பிறப்பித்தான் இது கேட்டு இப்ராஹீம் அலை அவர்கள் மகிழ்ந்தனர்

இதன்பின் இறை ஆலயத்தை கட்டுவதற்குரிய கற்களை சேகரிப்பதில் இஸ்மாயில் (அலை) மும்முரமாக ஈடுபட்டனர் .ஹிரா மலையிலிருந்தும் , ஜூதி மலையிலிருந்தும் , தூர்ஸீனா மலையிலிருந்தும் , சிரியாவிலுள்ள ஸைத்தா மலையிலிருந்தும் , லூபான் மலையிலிருந்தும் அவர்கள் கற்களை கொண்டு வந்து சேர்த்தனர் .

இப்ராஹீம் (அலை) அவர்கள் இறை இல்லத்தின் சுவரை கட்ட கட்ட இஸ்மாயில் (அலை ) அவர்கள் கல்லை எடுத்து கொடுக்க கொடுக்க சுவர் ஓரளவு உயர்ந்ததும், சுவரில் ஓரிடத்தில் மட்டும் ஒரு கல் இல்லாது

காலியாக விடப்பட்டு இருப்பதைக் கண்ட மகனார் தந்தையாரை நோக்கி அதற்கான காரணத்தை விலகினர் .

அப்போது தந்தையார் " மகனே இதனை இடம் சுற்றி வருவதற்கு மனிதர்களுக்கு ஒரு அடையாளமாக இருக்கும் பொருட்டு இதில் ஓர் அழகிய கல்லை பதிக்க விரும்புகிறேன் எங்கேனும் பார்த்து எடுத்துவா ! " என்று கூறினார்கள்

அப்போது அண்மையில் இருந்த அபுல் குபைஸ் மலையிலிருந்து ஒரு சப்தம் கேட்டது " என்னிடம் ஒரு அடைக்கலப் பொருள் உள்ளது அதனை எடுத்துக்கொள்ளும் என்று !"

அதுகேட்டு இப்ராஹீம் அலை அவர்கள் அம்மலையை நோக்கி விரைந்து சென்று அதன் மீது ஏறினார் அங்கு 'ஹஜ்ருல் அஸ்வத் ' என்னும் புனிதமிகு கல் ஒன்று ஒளிர்ந்து கொண்டிருந்தது .அதனை எடுத்து கஃபாவின் தென்கிழக்கு மூலையில் பதித்தனர் .

இறை இல்ல கட்டிடத்தை நின்றுகொண்டு நிர்மாணிக்க ஓர் உயரமான கல்லை எடுத்து வருமாறு இப்ராஹீம் (அலை) அவர்கள் தன் மகனிடம் கூற , அவர்கள் அபுல் குபைஸ் மலையில் கல் எடுத்துவரச் சென்றனர் .

அங்கு ஜிப்ரீல் (அலை) சந்தித்தார்கள் அவர்கள் "ஆதம் சுவனத்தில் இருந்து வரும் போது இரண்டு பாக்கியமிக்க கற்களை தம்முடன் கொண்டு வந்தார் அதில் ஒன்றை இத்ரீஸ் நபி நூஹ் (அலை) காலத்தில் ஏற்படவிருக்கும் பிரளயத்தில் அழிந்து விடுமோ என்று அஞ்சி மலை அடிவாரத்தில் புதைத்து வைத்தார் " என்று கூறி மற்றொரு கல்லை சுட்டிக்காட்டி, " இது இப்ராஹீம் நிற்பதற்கு வசதியாக இதனை எடுத்துச் செல்லும் " என்றும் கூறினர்.

நிற்பதற்கு வசதியான அந்தக் கல் கஃபாவின் கட்டிட உயரம் ஏற ஏற அதற்கு ஏற்றாற்போல் இக்கல்லும் கீழிருந்து பொருட்களை எடுத்துக்கொண்டு மேல்நோக்கி நகரும் இப்படியே கீழும் மேலுமாக நகர்ந்து பொருட்களை உயரம் கொண்டு செல்ல உதவியது அதாவது 'லிப்ட்' மாதிரி இயங்கியது .

மேலும் இக்கல்லில் இப்ராஹீம் (அலை) அவர்களின் கால்தடமும் பதிவானது இதனையே "மகாமே இப்ராஹீம் " என்று அழைக்கிறார்கள் . இதனை முன்னோக்கி ஹாஜிகள் தொழுது வருகிறார்கள் .

எனவே ஐயாயிரம் வருடத்திற்கு முன்பே இறைவனால் நபி இப்ராஹீம் (அலை) அவர்களுக்கு கஃபா கட்ட உலகில் முதன்முதலாக ஒரு ரோபோவை இறைவன் ஏற்படுத்திக் கொடுத்தான் என்பதுதான் நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது !

ரஹ்மத் ராஜகுமாரன் .

ரோபாட் 2

தொடு திரை அடிமைகள்.



ரோபாட் 1 பதிவின் பின்னூட்டத்தில் சகோதரி #NasrathRosy " கிரேக்க மொழியில் ரோபாட் என்றால் 'அடிமை' என்று பொருள் என படித்த ஞாபகம்" என்று பின்னூட்டமிட்டிருந்தார். உண்மையில் ரோபாட் மனிதனுக்கு அடிமைதானா ? அல்லது மனிதன் ரோபாட்டிற்கு அடிமையா ? ஆய்வோம் .

வள்ளுவர் "தொட்டனைத்து ஊறும் அறிவு" என்று ஒரு குறளில் சொல்கிறார் . அந்த காலத்தில் வள்ளுவர் தொடுதிரை (ஸ்மார்ட் போன்) பற்றி சிந்திக்க முடியாதுதான். ஆனால் இன்று ஸ்மார்ட்போன் திரையை

தொட்டால் தகவல்கள் காட்டாற்று வெள்ளம் போல் பெருகி வழிந்தோடுகிறது அல்லவா ? ஸ்மார்ட் போன் என்பது பெருகி ஓடும் அறிவு ...?

நாளும் பொழுதும் பகலும் இரவும் உலகெங்கும் கோடிக்கணக்கான குனிந்த தலையும் ஸ்மார்ட் போனும் ஆக இருக்கின்றனரே அந்த அளவுக்கு அவை அவசியமானவைதானா ?

ஹாங்காங்கில் ஒரு கருத்தரங்கிற்கு கண்டிப்பாக அலைபேசிகளை அரங்குக்குள் அனுமதிக்கவில்லை வரவேற்பறையில் அவற்றை கண்டிப்பாக ஒப்படைத்துவிட்டு டோக்கன் பெற்றுக் கொள்ளச் சொன்னார்கள் .

பலரும் மருகி மருகி நின்றார்கள் இதுபோன்ற நிகழ்ச்சிகளில் அலைபேசிகளை ஒலிக்காமல் பார்த்துக்கொள்ளுங்கள் என்று தானே சொல்வார்கள் இப்படி சொல்லாமல் கொள்ளாமல் அலைபேசிகளை வாங்கி வைத்துக்கொள்ள மாட்டார்கள் என்ற வருத்தம் . என்ன செய்வது... கருத்தரங்கிற்கு வந்தாச்சு , சரி அலைபேசியை கொடுத்துவிட்டு அரங்கிற்குள் போனார்கள் .

அரங்கில் நடந்த கருத்தரங்கில் யாரும் கேட்டபாடில்லை . அவர்கள் அத்தனை பேரின் முழு சிந்தனையும் வெளியே கொடுத்துவிட்டு வந்த அலைபேசி மீதே இருந்தது . இதை கருத்தரங்கமும் கவனித்தது . தேனீர் இடைவேளை அறிவிக்கப்பட்டதுதான் தாமதம் பலரும் அரங்கில் இருந்து பாய்ந்து பறந்தோடி வெளியேறி தத்தமது அலைபேசியை கைப்பற்றி அதன் மீது கவிழ்ந்து

கொண்டார்கள் . தேனீர் கோப்பைகள் காத்துக் கொண்டிருந்தன.

உலகமெங்கும் இவர்களைப் போல் "தொடுதிரை அடிமைகள் இருக்கிறார்கள் என்பதை நிரூபிக்கும் கருத்தரங்கம்தான் இது ! "என்று முடிவில் அறிவிக்கப்பட்டது.

அலைபேசியை மறந்தாலோ , தொலைந்தாலோ, அதில் சார்ஜ் குறைந்தாலோ , தொடர்பு எல்லைக்கு வெளியே போக நேர்ந்தாலோ சிலர் ரொம்பவும் பதற்றம் அடைகிறார்கள் . அவர்களுக்கு BP கொஞ்சம் எகிறுகிறது

வேறு சிலர் அடிக்கடி அனிச்சையாக ஸ்மார்ட் போனை எடுத்து தகவலோ , அஞ்சலோ வந்திருக்கிறதா ? என்று பார்த்துக்கொண்டு இருப்பார்கள்.

சிலர் அவசியமில்லாமல் படமெடுத்த படியே இருப்பார்கள் . சிலர் தாங்கள் பதிவிட்ட தகவலுக்கு யாரும் பதில் அளிக்கவில்லை என்றால் ரொம்பவும் நொந்து கொள்கிறார்கள். சில சமயம் Profile போய் போன் போட்டு உங்க பதிவுக்கு எத்தனை Share செய்கிறேன் .என் பதிவுக்கு நீங்கள் ஒரு ஸ்மைல் Like போடக் கூடாதா ? கூச்சமில்லாமல் கேட்கிறார்கள் .

சிலர் எதிரில் முக்கியமானவர் தம்மோடு பேசிக்கொண்டிருக்கும்போதே போனை எடுத்து பார்க்கிறார்கள் .ஸ்கிரினை தொட்டுக் கொண்டே எதிரில் இருப்பவரை மறந்து போகிறார்கள் .

மேலை நாடுகளில் நிறைய குடும்பப் பெண்கள் விவகாரத்திற்குரிய காரணம் கேட்டதற்கு " கணவர் என்னை ஸ்மார்ட்டா தொட்டதே விட ஸ்மார்ட் போனை அதிகம் தொட்டு கொண்டிருக்கிறார் "

இது ஒரு நோய் இதற்கு " "நோமோஃபோபியா " என்று பெயர் வைத்திருக்கிறார்கள் நோ = மொபைல் போன் = ஃபோபியா என்பதின் சுருக்கம் இது .

இப்போது சொல்லுங்கள் யார் ரோபோட் ? யாருக்கு யார் அடிமை ?

நோமோஃபோபியாவின் அறிகுறிகள்...
* இரவில் படுக்கும் போது மொபைலை தொலைத்துவிடுவது போல் கனவுகள் வந்து, அதனால் மனம் பதறி உடனே எழுந்து மொபைல் இருக்கிறதா என்று பார்த்துவிட்டு, பின்னர் தூங்கினால், இந்த நோய் உள்ளது என்பதை அறியலாம்.
* தூங்கும் போது மொபைலை அருகில் வைத்துக் கொண்டே தூங்குவது. அவ்வாறு ஒரு நாள் கூட தவறாமல், அந்த மொபைலை படுக்க போகும் போது கையில் எடுத்துக் கொண்டு, தலையணைக்கடியில் வைத்துக் கொண்டோ அல்லது அருகில் வைத்துக் கொண்டோ தூங்கும் பழக்கம் இருந்தால், உடனே மருத்துவரை அணுக வேண்டும். இல்லையெனில் இந்த நோயால் பைத்தியம் கூட பிடிக்க நேரிடும்.
* செல்போனானது வீட்டில் எங்கேனும் வைத்துவிட்டு, பின் அது ஏதோ ஒரு பேப்பரின் அடியில் இருக்க, ஆனால் அது நமது கண்களுக்கு தெரியாமல் இருந்து, தொலைந்துவிட்டது என்று மனம் முடிவு செய்துவிட்டால்,

அப்போது உடனே முகம், உடல் முழுவதும் வியர்க்க ஆரம்பிக்கும். மேலும் மனம் சிறிது அப்செட்டில் இருக்கும். இப்படியிருந்தால், அது இந்நோய்க்கான அறிகுறி என்பதை தெரிந்து கொள்ளலாம்.
* குளிக்கும் போது கூட மொபைலை எடுத்துக் கொண்டு குளிக்கச் சென்றால், இதுவும் நோமோஃபோபியாவிற்கு ஒருவித அறிகுறி.
* சிலர் ஒன்றுக்கு இரண்டு மொபைல் போன்கள் வைத்திருப்பார்கள். ஏனெனில் ஒரு மொபைலில் சார்ஜ் அல்லது தொலைந்துவிட்டாலோ, மற்றொன்றை பயன்படுத்தலாம் என்று முன்பே யோசித்து, அவர்களுடனே வைத்திருப்பார்கள். இத்தகைய அறிவு இந்த நோய் இருப்பவர்களுக்குத் தான் அதிகம் இருக்கும்.
* சாதாரணமாக பேசிக் கொண்டிருக்கும் போது, மொபைலில் சார்ஜ் குறைந்தால், நன்கு பேசிக் கொண்டிருப்பவர்களின் மனநிலையிலும் சார்ஜ் குறையும். பின்னர் மொபைலுக்கு சார்ஜ் போட்டால் தான், இவர்களது மனமும் சற்று பிரகாசிக்கும்.
மேற்கூறியவற்றில் நான்கு அறிகுறிகள் இருந்தாலும், இந்த நோய் உங்களுக்கு உள்ளது என்பதில் சந்தேகமே இல்லை.

ரோபாட் 3 24-11-2020



கட்டுமானப் பணியில் ரோபாட்

சமீபத்தில் சுவிட்சர்லாந்து நாட்டில் உள்ள ‘ஸ்விஸ் பெடரல் இன்ஸ்டிட்யூட் ஆப் டெக்னாலஜி’ என்ற அமைப்பின் பொறியியல் வல்லுனர்கள் பறக்கும் கட்டுமான ‘ரோபோ’ வகைகளை உருவாக்கி இருக்கிறார்கள்.

அதாவது, உயரம் மற்றும் அகலம் அதிகமாக உள்ள கட்டமைப்புகளின் கட்டுமான பணிகள் நடக்கும் பகுதியில், குறிப்பிட்ட இடத்தில் அமைக்கப்பட வேண்டிய சாரங்களை இணைக்கும் கயிற்றுப் பாலங்களை அமைக்க இவ்வகை பறக்கும் ரோபோ வகைகள் உதவி செய்யும்படி அவர்கள் உருவாக்கி இருக்கிறார்கள்.

அவ்வாறு அமைக்கப்பட்ட கயிற்றுப் பாலத்தை பயன்படுத்தி பணியாளர்கள், கட்டிடங்களுக்கு இடையில் மேற்கொள்ள வேண்டிய சிக்கலான பணிகளை செய்து முடிக்க இயலும்.

பறக்கும் ‘ரோபோ’ வகைகள் கட்டுமானங்களுக்கு இடையில் எளிதாக பறந்து சென்று பல்வேறு பணிகளை செய்யும்படி அமைக்கப்பட்டிருக்கின்றன.

ஏற்கனவே பயன்பாட்டில் உள்ள சாதாரண ரோபோக்கள் செல்ல முடியாத பகுதிகளிலும் இவை நுழைந்து பணிகளை செய்கின்றன.

கிரேன்கள் உள்ளிட்ட இதர இயந்திரங்களைப் பயன்படுத்தி இரண்டு உயரமான கட்டிட அமைப்புகளுக்கு இடையில் சாரங்களுக்கான கயிற்று பாலங்களை அமைப்பது கடினமானது. ஆனால், பறக்கும் ரோபோ வகைகள் அந்த பணியை எளிதாக செய்வதுடன், பெரிய அளவுகொண்ட கனமான பொருள்களை நகர்த்திச் செல்லவும் உதவுகின்றன.

கடந்த 8 ஆண்டுகளுக்கும் மேலாக மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகளின் மூலம் உருவாக்கப்பட்ட இவ்வகை ரோபோக்களை பயன்படுத்தி கயிற்று பாலங்களை அமைக்கும்போது, ஒரே சமயத்தில் 4 ரோபோக்கள் பணியில் ஈடுபட வேண்டியதாக இருக்கும்.

சாரங்களில் அமைக்கப்படும் சட்டங்களில் எவ்வளவு தூரத்தில், எந்த இடங்களில் முடிச்சுக்களை போட்டு இணைக்க வேண்டும் என்ற நுட்பமான கணக்குகள் அடங்கிய மின்னணு மற்றும் இயந்திர தொழில்நுட்ப முறையில் செய்யப்பட்ட பதிவுகளின் அடிப்படையில் இந்த ரோபோ வகைகள் இயங்குகின்றன.

அவற்றுக்கிடையில் அதிவேகமாக நடக்கும் தகவல் பரிமாற்றங்கள் காரணமாக கயிற்றுப்பாலங்களை அவை கச்சிதமாக கட்டி முடிக்கின்றன.

நவீன காலத்தில் மனிதர்கள் செய்ய முடியாத அபாயகரமான கட்டிட வேலைகளையும் , மிகவும் பளுவான வேலைகளைச் செய்வதற்கு ரோபாட்களைப் பயன்படுத்தியது போன்று அக்காலத்தில் மனிதர்கள் செய்ய முடியாத கடினமான வேலைகளை நம் கண்களுக்குத் தெரியாத ஜின் வர்க்கங்களைக் கொண்டு நபி சுலைமான் (அலை)

செய்தார்கள் என்பதாக குர்ஆன் கூறுகிறது .

நபி சுலைமான் அலை அவர்களுக்காக ஷாம் தேசத்தில் தக்முர் என்று நகரத்தையும் , ஏமன் நாட்டில் ஸர்வாஜ் , மர்வாஜ், பைனூன் , ஸல்ஹீன் , ஹைதா ஹுனைதா , பல்தூம், கமதான் என்பன போன்ற பெயருள்ள நூதனமான கட்டிடங்களையும் ஜின்கள் கட்டின அவையாவும் இப்பொழுது பாழாகி விட்டன .

மனு, ஜின்களிலுள்ள அறிஞர்களையும் முரட்டு ஜின்களையும் தலைமை ஷைத்தான்களையும் ஒன்று கூட்டி ஒவ்வொரு கூட்டத்தினருக்கும் ஒரு வேலையை கொடுத்தார் .

ஒரு கூட்டம் கட்டிட வேலையை செய்தது ஒரு கூட்டம் பாறைகளை உடைத்தும் பளிங்குச் சுரங்கங்களிலிருந்தும் தூண்களை உண்டாக்கின .

ஒரு கூட்டம் கடலுக்குள் மூழ்கி பெரிய முத்துக்களையும் சிறிய முத்துக்களையும் எடுத்தது .அவைகள் கோழி முட்டை அளவும் , நெருப்புக்கோழி முட்டை அளவு உள்ள பெரிய முத்துக்கள் இருந்தன .

இவ்வாறு பைத்துல் முகத்தஸ் நகரம் கட்டப்பட்டது . அதில் 12 பேட்டைகளை ஏற்படுத்தி , ஒவ்வொரு பேட்டையிலும் பனூ இஸ்ராயீல்களின் 12 பிரிவுகளில் ஒவ்வொரு பிரிவினரையும் குடியேற்றினார் .

பின்னர் மஸ்ஜிதுல் அக்ஸாவை வர்ணப் பளிங்குகளால் கட்டினார். அதன் முகட்டை விலை உயர்ந்த ரத்தினக் கற்கள் பதித்த பலகைகளால் ஏற்படுத்தினார்.

அதன் சுவர்களிலும் , முகடுகளிலும் முத்துக்களையும் , மாணிக்கத்தையும் பதித்தார் . அதன் தலை வாசலுக்கு

" பாபுர் ரஹ்மத் "என்று பெயர் வைத்தார்.

அதன் தளத்தில் தள வரிசைகளாக தங்கம் , வெள்ளிப் பாளங்களைப் பதிப்பித்தார்.

அக்காலத்தில் உலகில் அதனைப் பார்க்கினும் அழகான பிரகாசமான ஆலயம் எங்குமே இல்லை . இருளில் பூரண சந்திரனைப் போல் அது பிரகாசித்துக் கொண்டிருந்தது அவர் பட்டத்துக்கு வந்து பதினோராம் ஆண்டில் பணி பூர்த்தியாயிற்று

ஜின்கள் செய்த கட்டடப் பணிகளை குர்ஆனில் அல்லாஹ் ...

يَعْمَلُوْنَ لَهٗ مَا يَشَآءُ مِنْ مَّحَارِيْبَ وَتَمَاثِيْلَ وَجِفَانٍ كَالْجَوَابِ وَقُدُوْرٍ رّٰسِيٰتٍ اِعْمَلُوْۤا اٰلَ دَاوٗدَ شُكْرًا وَقَلِيْلٌ مِّنْ عِبَادِىَ الشَّكُوْرُ

அ(ன்றி, ஜின் ஆகிய)வைகள் ஸுலைமான் விரும்பிய மாளிகைகளையும், சிலைகளையும், (பெரிய பெரிய) தண்ணீர்த் தொட்டிகளைப் போன்ற பெரும் கொப்பரைகளையும், அசைக்க முடியாத பெரிய (பெரிய) "தேகு" (சமையல் பாத்திரங்)களையும் செய்து கொண்டிருந்தன. (அவருடைய குடும்பத்தினரை நோக்கி) "தாவூதுடைய சந்ததிகளே! இவைகளுக்காக நீங்கள் (நமக்கு) நன்றி செலுத்திக் கொண்டிருங்கள்" (என்று கட்டளையிட்டோம்). எனினும் என்னுடைய அடியார்களில் நன்றி செலுத்துபவர்கள் வெகு சொற்பமாகவே இருக்கின்றார்கள். (அல்குர்ஆன் : 34:13)

ரஹ்மத் ராஜகுமாரன்

உலகின் முதல் ரோபோட்



ரோபாட் என்றதும் இயந்திர மனிதன் நமக்கு ஞாபகத்தில் வருகிறது . இரும்பு விரல்களும் , ஒளிரும் கண்களுமாக, தத்தக்கா பத்தக்கா என்று நடந்து வந்து நம் பெண்களை கவர்ந்து கொண்டு செல்லும் ராட்சசனை மனதில் கொண்டு வரும் பிம்பங்களுக்கு ஹாலிவுட் சினிமா

மற்றும் தரமற்ற புத்தகங்களும் காரணம்

தொழிற்சாலை ரோபாட்டுகள் கடினமான காரியங்களை மூஞ்சி சுளிக்காமல் செய்கின்றன. ரசாயன விஷ வாயுக்கள் அவைகளுக்கு பொருட்டல்ல . திரும்பத் திரும்ப ஒரே காரியத்தை சலிப்பில்லாமல் செய்யும். திருகும், பற்றவைக்கும் , அடிக்கும் , முடுக்கும் , வெட்டும் , எல்லாமே சொன்னதைச் செய்யும் ரோபோட்டுகள் .

மோட்டார் கார்கள் வீடியோ சமாச்சாரங்கள் கம்ப்யூட்டர்கள் இவைகளை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளில் குறிப்பாக ஜப்பான் , கொரியா போன்ற நாடுகளில் நிறையவே இந்த வகை ரோபோக்களை பயன்படுத்துகிறார்கள் .

இந்த மாதிரி ரோபோட்களுக்கு அதிகம் புத்தி கிடையாது அப்படி சொன்னதை அப்படியே செய்யுமே தவிர அதன் பாதையில் ஒரு குழந்தை குறுக்கிட்டால் நிற்காது .அதற்குப் பதிலாக ஒரு பையனுக்கு அந்த வேலையை தந்தால் 'பாப்பா ஒத்திக்கம்மா ' என்று நிற்பான் அதுதான் வித்யாசம் .

ரோபாட்டுக்கு குழந்தையை தடுத்தால் ஒதுங்கும் திறமை கிடையாது என்றில்லை ; அந்தத் திறமை வேண்டும் என்றால் அதற்கு மாய்ந்து மாய்ந்து நிறைய புரோகிராம் (Program ) எழுத வேண்டும். அதற்கான ஆப்டிகல் கேமரா சமாச்சாரங்கள் வேண்டும். இமேஜ் ரெகக்னிஷன் (image Recognition) என்றெல்லாம் இருக்கிறது . ரொம்ப காசு செலவாகும். பையனுக்கு மாதம் 6000 ரூபாய் சம்பளத்தில் கிடைக்கக்கூடிய பணியை ஒரு ரோபாட்டில் கொண்டு வர சுமார் 60 லட்ச ரூபாய் செலவாகும் . ....'எப்படி வசதி ?'

ரோபாட்டுகளைப் பற்றி மேலை நாடுகளில் சில பயங்கள் இருக்கின்றன. அந்த இயந்திரங்களுக்குள் குட்டி சாத்தான் புகுந்து அவர்களையும் நம்மையும் கட்டுப்படுத்த தொடங்கிவிடும் என்று சிலர் இன்னும் நம்புகிறார்கள் . அல்லது யாராவது ஒரு புத்திசாலி டெக்னீசியன் ஒயர்களை மாற்றி இணைத்து எல்லா ரோபாட்களையும் தன் அடிமையாக்கி "போய் கொல்லுங்கடா " என்று ஆணையிட வாய்ப்பிருக்கிறது என்றும் நம்புகிறார்கள்.

மற்றொரு பயம் அதை ஊடாடவிட்டால் காலாகாலத்தில் அதை அணைக்க முடியாமல் கட்டுக்கடங்காமல் பாயைப் பிறாண்ட ஆரம்பித்து விடும் என்கிற பயம் .

டெமன் ஸீீட் ( **Demon Seed** ) என்ற ஒரு திரைப்படம் வந்தது. ஜூலி கிறிஸ்டி நடித்த சுமாரான படம்தான். அதில் இருந்த ஒரு கருத்து வசீகரமானது . ரோபாட் ஒரு பெண்ணின் மேல் ஆசை கொண்டு அதனுடன் பழகி பிள்ளை பெற்றுக் கொள்வது இந்த பயமும் உள்ளது .

இவை எல்லாம் அர்த்தமற்ற பயங்கள் மனித எத்தனங்கள் சில , பெண் - பழகி - பிள்ளை பெறுவது - இது மனித நோக்கில் மிக எளிமையானவை. அல்வா போதும் . ஆனால் ரோபோட் நோக்கில் ரொம்ப கஷ்டமானது.

உதாரணம் நடப்பது ஒரு மனிதனோ, மண்புழுவோ அத்தனை எளிமையாக செய்யும் காரியத்தை ஒரு ரோபோட்டை செய்ய வைப்பதற்கு அதன் புரோகிராம்களை பார்த்தால் தலைசுற்றும் . காரணம் "அடாப்ட்டிவ் ரீஸனிங் **" (Adaptive Reasoning** ) என்று சொல்கிறார்கள் .

நான் முன்பு சொன்னேனே குழந்தை குறுக்கிடுவது மாதிரி , அது மாதிரி சந்தர்ப்பத்திற்கு ஏற்ப அதன் உள்ளே பதிந்திருக்கும் ஆணைத் தொடர்கள் மாற்றிக் கொள்ளும் திறமையை , முறையே சங்கேதப்படுத்துவதில் விஞ்ஞானிகளுக்குச் சிரமம் உள்ளது.

வீட்டு வேலை செய்யும் ரோபாட்டுகளுக்கு புரோகிராம் ரொம்ப சிக்கலானது . வீடு என்பதே ரொம்ப சிக்கலானது . குப்பை அதிகம் . தடங்கல்கள் அதிகம். வடிவங்கள் அதிகம். மாறுதலும் அதிகம். வீட்டு வேலை ரோபாட் அமைக்க ரொம்பச் செலவாகும். உபரி வேலைகள் தர வேண்டும் .இல்லையெனில் அஞ்சு நிமிஷத்தில் எல்லா வேலையும் முடித்து விடும் எதற்காக இத்தனை காசு என்று யாரும் வாங்க மாட்டார்கள் .

வீட்டு ரோபாட்டிற்கு நிறைய புரோக்கிராம் இருப்பதால் ஏதாவது தப்பு ஏற்பட்டு தூங்கும் கைக் குழந்தையை குப்பை என்று தொட்டிக்குள் போட்டு விட்டால் யாரைத் திட்டுவது ? யார் மேல் கேஸ் போடுவது?

ஜப்பானில் l982 ல் ஒரு ரோபோட் தன் அருகில் வந்த ஒரு தொழிலாளியை கழுத்தைப் பிடித்து நெரித்து கொன்று விட்ட ஒரு சம்பவம்தான் இது வரை நிகழ்ந்திருக்கிறது. மற்றபடி யாவும் நலம்

ஒரு ரோபாட்டை உருவாக்குவதற்கு எவ்வளவு சிரமம் பார்த்தீர்களா ? இதையே 4000 வருடங்களுக்கு முன்பே எகிப்தில் ஸாமிரி என்பவன் தங்கத்தால் ஆன காளைக் கன்று ரோபாட்டை உருவாக்கினான்.

ஸாமிரி என்பவன் பனூ இஸ்ராயீல்களிலுள்ள ஸாமிரா என்ற பிரிவுகளில் தோன்றிய பிரபலமானவர்களில் ஒருவன். பனூ இஸ்ராயீல்களில் பிறக்கிற ஆண் குழந்தைகளைக் கொன்று விடுமாறு

ஃபிர்அவ்ன் கட்டளையிட்ட சமயத்தில் இவன் பிறந்தான். இவன் பிரசவித்து உடன் இவனது தாய் நைல் நதிக்கரையில் இருந்த ஒரு திட்டில் குழந்தையை வைத்து விட்டாள் .

இவனை போஷித்து வளர்க்குமாறு இறைவன் ஜிப்ரீல் அலை அவர்களுக்கு கட்டளையிட்டான் அவ்வாறு ஜிப்ரீல் அலை அவர்களது பராமரிப்பில் ஸாமிரி வளர்ந்து வந்தான்

மூஸா அலை அவர்கள் ஸீனாய் மலைக்கு சென்றிருந்த சமயம் ஹாரூன் அவர்களிடம் ஸாமிரி வந்து "கிப்தியரிடம் இரவல் வாங்கிய நகைகளை நாம் உபயோகபடுத்துவது நமக்கு ஜாய்ஸ் இல்லை .பனூ இஸ்ராயீல்கள் அவற்றை விற்று விடுவார்கள் என நம்புகிறேன் . அவை எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து தீக்கிரையாக்கி விட உத்தரவு தர வேண்டும் என்று கோரிக்கொண்டான்.

" அனைவரும் நகைகளைக் கொண்டு வந்து கிணற்றில் போட்டு விட வேண்டும் அங்கு அவற்றில் நெருப்பு வைக்கப்படும். என்று ஹாரூன் அலை அவர்கள் உத்தரவிட்டார்கள் அதுபோல அவைகள் கொண்டுவரப்பட்டு தீ வைக்கப்பட்டன .

ஸாமிரி மிகத் திறமையான பொற்கொல்லன். அவன் உருகிய தங்கத்தில் ஒரு காளைமாடு உருவத்தை சிலையாக செய்தான்.

ஜிப்ரீல் அலை அவர்களின் குதிரையின் குளம்பு பட்ட காலடி மண்ணை சிலையின் வாயிக்குள் திணித்தான். அது உயிர் பெற்றது . எழும்பும் தசைகள் எல்லாம் அதற்கு உண்டாகி விட்டன. உரத்த சப்தமாக சத்தமும் செய்தது என்றாலும்,அது உயிர் பெறவில்லை , ஆனாலும் உயிர் பெற்றது போல காணப்பட்டது .அங்கும் இங்கும் கூட நடந்தது.

பனூ இஸ்ராயீல் காளை மாட்டின் உருவத்தை வணங்க தலைப்பட்டனர் .ஆகவே உமக்குப் பிறகு உமது சமூகத்தினர் காளைக் கன்றை வணங்குபவர்களாகி விட்டனர் என்று அல்லாஹுத்தஆலா மூஸா அலை அவர்களுக்கு அறிவித்தான்.

فَاَخْرَجَ لَهُمْ عِجْلًا جَسَدًا لَّهٗ خُوَارٌ فَقَالُوْا هٰذَاۤ اِلٰهُكُمْ وَاِلٰهُ مُوْسٰى فَنَسِىَ

பின்னர் அவன் அவர்களுக்காக ஒரு காளைக்கன்றை (உருவாக்கி) வெளிப்படுத்தினான்; அதற்கு மாட்டின் சப்தமும் இருந்தது. (இதைக் கண்ட) சிலர் “இது தான் உங்களுடைய நாயன்; இன்னும் (இதுவே) மூஸாவின் நாயனுமாகும்; ஆனால் அவர் இதை மறந்து விட்டார்” என்று சொன்னார்கள்.

(அல்குர்ஆன் : 20:88)

فَلَا يَرَوْنَ اَلَّا يَرْجِعُ اِلَيْهِمْ قَوْلًا ۙ وَّلَا يَمْلِكُ لَهُمْ ضَرًّا وَّلَا نَفْعًا

அவர்களுக்கு அது மறுபடி எதுவும் சொல்லவில்லை என்பதையும்; அவர்களுக்காக நன்மையையோ, தீமையையோ செய்யச் சக்தியற்றது என்பதையும் அவர்கள் பார்க்க வில்லையா? (அல்குர்ஆன் : 20:89)

ரஹ்மத் ராஜகுமாரன்

ரோபாட் 5




விண்வெளி ஆராய்ச்சிக்கு ரோபாட்

விண்வெளியில் நடக்கும் பல்வேறு மர்மங்களையும் கண்டறியும் வகையிலும், ஆராய்ச்சி செய்யவும் விண்வெளியில், பல்வேறு நாடுகளின் சார்பில் நாசா சர்வதேச விண்வெளி மையம் அமைத்துள்ளது..

பிறகு கிரகங்களிலும் பூமியை போன்று மனிதர்கள் வாழ முடியுமா அங்குள்ள தனிமங்கள், கால நிலைகள், தட்பவெப்ப சூழ்நிலை உள்ளிட்டவைகள் குறித்து மனிதர்களை விண்வெளிக்கு அனுப்பியும் ஆய்வுகள் நடந்து வருகின்றது.

பூமி மற்றும் பல்வேறு கிரகங்கள் குறித்து ஆராய்ச்சி செய்ய பல்வேறு நாடுகளும் பல மில்லியன் கணக்கில் செலவு செய்து விண்கலன்களை அனுப்பி வருகின்றனர். இதில் அமெரிக்கா, ரஷ்யா உள்ளிட்ட நாடுகள் முன்னிலையில் இருக்கின்றன.

விண்வெளியிலும் மனிதர்களை போல உள்ள ரோபோக்களையும் அனுப்பி ஆராய்ச்சி செய்ய முடியுமா என்ற நிலையில் பல்வேறு நாடுகளும் முயன்று வருகின்றனர். இந்த புதிய தொழில்நுட்பத்தில் பல்வேறு செயல்பாடுகளும் இருக்கின்றன.

மனித ரோபோவுடன் கூடிய ரஷ்யாவின் **சோயூஸ் எம்எஸ்-14** என்ற விண்கலன் விண்வெளிக்கு வெற்றிகரமாக செலுத்தப்பட்டுள்ளது. இதில் பெடர் என்ற ரோபோ விண்வெளியில் மனிதர்களை போலவே ஆய்வு செய்யும், எளிமைமையாகவும் தரைக்கட்டுப்பாட்டு மையத்திற்கும் தகவல் தெரிவிக்கும்.

சர்வதேச விண்வெளி மையத்தில் தங்கியுள்ள வீரர்களுக்கு உதவும் வகையிலும், விண்வெளி நடை மேற்கொண்டு சர்வதேச விண்வெளி மையத்தில் பழுது பார்க்கும் பணியில் ஈடுபடுத்தப்படுவதற்காகவும் ‘பெடர்’ என்ற ரோபோ மனிதனை ரஷ்யா உருவாக்கியுள்ளது. இதன் உயரம் 5 அடி 11 அங்குலம். எடை 160 கிலோ. இதற்கு ‘ஸ்கைபாட் எப்850’ என்ற அடையாள எண் கொடுக்கப்பட்டுள்ளது.

வழக்கமாக சோயுஸ் விண்கலத்தில் விண்வெளி வீரர்கள் அனுப்பப்படுவார்கள். இந்த முறை, சோதனை ரோபோ அனுப்பப்பட்டுள்ளது. விண்கலத்தின் பைலட் இருக்கையில் கட்டப்பட்டிருந்த ரோபோ தனது கையில் ரஷ்ய கொடி ஒன்றையும் வைத்திருந்தது.

சோயுஸ் விண்கலம் ஏவுதளத்தில் இருந்து புறப்படும்போது, 'நாம் புறப்படலாம் (லெட்'ஸ் கோ) என ரோபோ கூறியது. இது விண்வெளிக்கு முதலில் சென்ற ரஷ்ய வீரர் யூரி காகரின் கூறிய வார்த்தை.

இந்த பெடர் ரோபோவுக்கு இஸ்டாகிராம், டிவிட்டர் கணக்குகளும் உள்ளன. பெடர் ரோபோ விண்வெளியில் கற்றுக்கொள்ளும் விஷயங்களை இதில் தெரிவிக்கும்.

குறைந்த புவியீர்ப்பு விசையில் எப்படி செயல்படுவது, தண்ணீர் பாட்டிலை எப்படி திறப்பது போன்ற செயல்களை இந்த ரோபோ பரிசோதித்து பார்க்கும். ஸ்கூரு டிரைவர், ஸ்பானர், தீயணைப்பு கருவிகள் ஆகியவற்றை எப்படி பயன்படுத்துவது, சர்வதேச விண்வெளி மையத்தில் மின் வயர்களை இணைப்பது, துண்டிப்பது போன்றவற்றையும் இந்த ரோபா பரிசோதித்து பார்க்கும்.

சர்வதேச விண்வெளி மையத்துக்கு கடந்த மாதம் சென்ற ரஷ்ய வீரர் அலெக்ஸ்சாண்டர் ஸ்கோட்சோவின் மேற்பார்வையில் இந்த ரோபோ பணிகளை மேற்கொள்ளவுள்ளது. மனிதனின் செயல்களை அப்படியே செய்யும் இந்த ரோபோ, விண்வெளி வீரர்களுக்கு பல்வேறு வகையில் உதவும் வகையில் வடிவமைக்கப்பட்டுள்ளது.

விண்வெளி நடை போன்ற ஆபத்தான பணியும், இந்த ரோபோ மேற்கொள்ளும் என ரஷ்ய விண்வெளி மைய இயக்குனர் பிளாஸன்கோ தெரிவித்தார்.

விண்வெளியை மிக ஆழமாக ஆராயும் பணிகளுக்கு, இந்த வகை ரோபோக்களை எதிர்காலத்தில் பயன்படுத்த ரஷ்ய விண்வெளித்துறை திட்டமிட்டுள்ளது.

விண்வெளிக்கு ரோபோ அனுப்பப்படுவது இது முதல் முறை அல்ல. நாசா கடந்த 2011ல் 'ரோபோனட்-2' என்ற ரோபோவை அனுப்பியது. இதில் தொழில்நுட்ப கோளாறு ஏற்பட்டதால் இது கடந்த ஆண்டு பூமிக்கு திருப்பி கொண்டுவரப்பட்டது.

கடந்த 2013ம் ஆண்டில், ஜப்பானும் 'கிரோபோ' என்ற சிறிய ரோபோவை சர்வதேச விண்வெளி மையத்துக்கு அனுப்பியது

ஆண்ட்ராய்டு நுட்ப மனித ரோபோ:

ஆண்ட்ராய்டு தொழில்நுட்பத்தில் உருவாக்கப்பட்ட இந்த மனித ரோபோ, வரும் 24ம் தேதி சர்வதேச விண்வெளி நிலையத்தில் இறங்கி, செப்டம்பர் 7ம் தேதி வரை விண்வெளி வீரர் அலக்சாண்டர் ஸ்வோர்ட்சோவ் **( Alexander Skvortsov)** என்பவர் கண்காணிப்பில் விண்வெளி ஆராய்ச்சியில் ஈடுபடும். பின்னர் பூமிக்கு திரும்பவுள்ளதாகவும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இக் காலத்தில் ரோபாட் விண்வெளி ஆராய்ச்சிக்கு பயன்படுத்துவதைப் போல் அக் காலத்தில் விண்வெளியில் வானவர்கள் பேசிக் கொள்வதை ஒட்டுக் கேட்பதற்காகவே ஜின்கள் வானவெளியில் பிரவேசித்தன.

முற்காலத்தில் சைத்தான்கள் வானுலகம் செல்ல தடை செய்யப்படவில்லை.

ஈஸா அலை அவர்கள் பிறந்த பொழுது மூன்று வானங்களுக்குத் செல்லவிடாமல் ஷைத்தான்கள் தடுக்கப்பட்டனர் .

பின்னர் நபி ஸல் அவர்கள் பிறந்த பிறகு வான மண்டலங்கள் யாவற்றுக்கும் செல்லவிடாமல் தடுக்கப்பட்டு விட்டனர்

இக்காலத்தில் ஜின்கள் அறிவிக்கும் வானுலகச் செய்திகள் மனிதர்களது நாவில் மூலம் வெளிப்பட்டவைகள் பூமியில் நாம் பார்க்க முடியாத

சிலவற்றை அவர்கள் கண்டு அறிவிக்கும் செய்திகளை ஆகும்

இவர்கள் வருங்காலத்தைப் பற்றி கூறும் செய்திகள் பொய்யானவைகளாகும் என்று இப்னு அப்பாஸ் ரலி அவர்கள் கூறியிருப்பதாக ஆக்காமுல் மர்ஜான் என்னும் கிரந்தத்தில் கூறப்பட்டிருக்கிறது .

சைத்தான்கள் இப்பூமண்டலத்தின் வானத்துக்கு ஒன்றின் மீது ஒன்று ஏறி கொண்டுசெல்லும் யாவற்றுக்கும் மேலுள்ள சைத்தானுக்கு ஷைத்தானுல் மாரித் என்று பெயர்

அது வானமண்டலத்தில் மலக்குகள் பேசிக்கொள்வது செவியேற்று தனக்கு கீழுள்ள சைத்தானுக்கு கூறும் .

இவ்வாறு எல்லாவற்றுக்கும் கீழுள்ள சைத்தான் அச்செய்தியை செவியேற்று குறிகாரர்களிடம் அதனை கூற வந்துவிடும் .

எனவே வானில் வானவர்கள் பேசிக்கொள்வதை திருட்டுத்தனமாக செவி ஏற்கும் சைத்தான் ஷிஹாப் என்னும் எரிநட்சத்திரத்திரங்களை

எரிகொள்ளிகளாக் கொண்டு மலக்குமார்கள் துரத்துவார்கள் .

எரிகொள்ளிகள் அவைகளது முகங்களையோ , கைகளையோ கரித்துவிடும் சில சைத்தான்களுக்கு புத்தி தடுமாற்றத்தை உண்டு பண்ணிவிடும்.

இவ்வாறு புத்தி தடுமாற்றம் ஏற்பட்ட சைத்தான்கள் பின்னர் செய்திகளை திருட்டுத்தனமாக தெரிந்துகொள்ள வான் மண்டலத்திற்கு செல்லாது .அவைகள் மனித நடமாட்டமில்லாத வனங்களில் இருந்துகொண்டு சப்தமிட்டு அங்கு செல்லும் மனிதர்களை பயமுறுத்திக் கொன்றுவிடும்.

وَّاَنَّا لَمَسْنَا السَّمَآءَ فَوَجَدْنٰهَا مُلِئَتْ حَرَسًا شَدِيْدًا وَّشُهُبًا ۙ

நிச்சயமாக நாங்கள் வானத்தைத் தடவிப் பார்த்தோம். அது பலமான பாதுகாவலர்களாலும், எரி நட்சத்திரங்களாலும் நிரப்பபப்பட்டிருப்பதை நாங்கள் கண்டோம்.

(அல்குர்ஆன் : 72:8)

وَلَـقَدْ جَعَلْنَا فِى السَّمَآءِ بُرُوْجًا وَّزَيَّـنّٰهَا لِلنّٰظِرِيْنَۙ

வானத்தில் கிரகங்களுக்கான பாதைகளை நிச்சயமாக நாம் அமைத்து பார்ப்போருக்கு அவற்றை அலங்காரமாகவும் ஆக்கினோம்.

وَحَفِظْنٰهَا مِنْ كُلِّ شَيْطٰنٍ رَّجِيْمٍۙ

விரட்டப்பட்ட ஒவ்வொரு ஷைத்தானை விட்டும் நாம் அவற்றைப் பாதுகாத்தோம்.

اِلَّا مَنِ اسْتَرَقَ السَّمْعَ فَاَ تْبَعَهٗ شِهَابٌ مُّبِيْنٌ

திருட்டுத்தனமாக ஒட்டுக் கேட்கும் ஷைத்தானைத்தவிர; (அப்போது) பிரகாசமான தீப்பந்தம் அந்த ஷைத்தானை (விரட்டிப்) பின் பற்றும்.

(அல்குர்ஆன் : 15:16_18)

ர.ரா

அந்நியன் 5



كَذٰلِكَ نَجْزِى الْقَوْمَ الْمُجْرِمِيْنَ  وَلَقَدْ اَهْلَكْنَا الْـقُرُوْنَ مِنْ قَبْلِكُمْ لَمَّا ظَلَمُوْا ۙ وَجَآءَتْهُمْ رُسُلُهُمْ بِالْبَيِّنٰتِ وَمَا كَانُوْا لِيُـؤْمِنُوْا

(மனிதர்களே!) உங்களுக்கு முன்னிருந்த எத்தனையோ தலைமுறையினர்களை, அவர்கள் அநியாயம் செய்த போது நிச்சயமாக நாம் அழித்திருக்கின்றோம்; அவர்களிடம் அவர்களுடைய (இறை) தூதர்கள் தெளிவான அத்தாட்சிகளைக் கொண்டு வந்தார்கள்; எனினும் அவர்கள் நம்பவில்லை - குற்றம் செய்யும் மக்களுக்கு நாம் இவ்வாறு கூலி கொடுக்கின்றோம்.

ثُمَّ جَعَلْنٰكُمْ خَلٰٓـئِفَ فِى الْاَرْضِ مِنْۢ بَعْدِهِمْ لِنَـنْظُرَ كَيْفَ تَعْمَلُوْنَ

நீங்கள் எவ்வாறு நடந்து கொள்கிறீர்கள் என்று நாம் கவனிப்பதற்காக அவர்களுக்குப் பின்னால் பூமியிலே உங்களை நாம் பின்தோன்றல்களாக ஆக்கினோம். (குர்ஆன் : 10: 13,14)

மேற்கண்ட வசனத்தில் நாம் கவனிக்கவேண்டியது " உங்களுக்கு முன்னிருந்த எத்தனையோ தலைமுறையினரை அவர்கள் அநியாயம் செய்தபோது நாம் அழித்திருக்கின்றோம் " என்ற வசனம் தான்

இந்த வாசகத்தின் மூலம் அல்லாஹ் குறிப்பிட்டிருப்பது முந்திய மனித சமுதாயங்களை மட்டுமல்ல ; ஜின்களையும் சேர்த்துதான். ஏனெனில் வசனத்தின் பிற்பகுதியில் "அவர்களுக்குப் பிறகு பூமியிலே உங்களை நாம் வழித்தோன்றலாக ஆக்கினோம் " என்று அல்லாஹ் கூறுவதை வைத்து அழிக்கப்பட்ட முந்திய சமூகங்கள் பற்றிய வரலாறுகள் மனித இனத்தின் வரலாறு மட்டுமல்லாது மனித இனத்தை படைப்பதற்கு முற்பட்ட காலத்து நிகழ்வுகளையும் உள்ளடக்குகிறது என்பதை தெளிவாக புரிந்து கொள்ளலாம் .

மனித இனத்தின் கையில் அல்லாஹ் பூமியை ஒப்படைப்பதற்கு முன்னர் இந்த பூமியில் வாரிசுகளாக ஜின்கள் தாம் நீண்ட நெடுங்காலமாக இந்த பூமியை ஆண்டு அனுபவித்து வந்திருக்கிறார்கள் என்பது இந்த வசனத்தின் மூலம் தெளிவாகிறது .இது பற்றி குர்ஆனில் ..

" ஓசை தரக்கூடிய கருப்பான களி மண்ணால் மனிதனை நிச்சயமாக நாமே படைத்தோம். (அதற்கு) முன்னர் ஜான்னை (ஜின்களின் மூல பிதாவை) கடிய சூடுள்ள நெருப்பிலிருந்து நாம் படைத்தோம் " (குர்ஆன் : 15: 26, 27)

அதுமட்டுமல்லாமல் ஜின்களிலும் பல்வேறுபட்ட இனத்தவர்கள் இந்த பூமியில் அட்டூழியம் செய்பவர்களாக இருக்கிறார்கள் என்பதும் , அவர்கள் பல தலைமுறையினர் அழிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதும் புரிகிறது .

மனித இனம் படைப்பதற்கு முன்னே ஜின்கள் படைக்கப்பட்டிருக்கிறது. ஜின் இனத்தோடு உயிர்ப்பிராணிகளான டைனோசர் இனங்களும் படைக்கப்பட்டிருக்கிறது . ஏனெனில் டைனோசர்கள் இப்பூமியில் வாழ்ந்த காலம் சுமார் 200 மில்லியன் ஆண்டுகளுக்கு முன்பே வாழ்ந்திருக்கிறது .

(160 மில்லியன் ஆண்டுகளுக்கு முன்) ஜின்களின் அட்டகாசம் மிதமிஞ்சி போய் அவைகளை அழிப்பதற்கு வானவர்களின் படை அணியை அல்லாஹ் பூமிக்கு அனுப்பி வைத்ததாகவும் , குழப்பம் விளைவித்த ஜின் இனங்களை வானவர்கள் அடித்துத் துவம்சம் செய்து , சமுத்திரங்களுக்கு அப்பால் கண் காணாத தூர தேசங்களுக்கு துரத்தியடிக்கப்பட்டதாகவும் இப்னு அப்பால் (ரலி) அவர்கள் அறிவித்ததாக ஹாக்கிம் கிதாபில் பதிவு செய்யப்பட்டிருக்கிறது .

இறுதி கட்ட மாபெரும் பேரழிவு ஏறத்தாழ 66 மில்லியன் ஆண்டுகளுக்கு முன் பெரிய பெரிய விண் எரிகற்களின் வீழ்வு நடை பெற்றுகிறது என்பதாக விஞ்ஞானம் கூறுகிறது . இந்த பேரழிவில்தான் டைனோசர்கள் முற்றிலுமாக அழிக்கப்பட்டது. அத்தோடு ஜின் இனங்களும் அழிக்கப்பட்டிருக்கலாம் .

வானவர்கள் ஜின்களை அழித்தொழிக்க விண்கற்களைப் பயன்படுத்தி இருக்கலாம். காரணம் விண் எரிகற்களின் வீழ்வுகளினால்தான் டைனோசர்கள் அழிந்ததாக விஞ்ஞானம் நிரூபித்திருக்கிறது .

கட்டி ஆண்ட மொத்த ஜின்னும் இந்தப் பூமிக்கு அந்நியனானது !

وَلَوْ يُؤَاخِذُ اللّٰهُ النَّاسَ بِظُلْمِهِمْ مَّا تَرَكَ عَلَيْهَا مِنْ دَآبَّةٍ وَّلٰـكِنْ يُّؤَخِّرُهُمْ اِلٰٓى اَجَلٍ مُّسَمًّى فَاِذَا جَآءَ اَجَلُهُمْ لَا يَسْتَـاْخِرُوْنَ سَاعَةً وَّلَا يَسْتَقْدِمُوْنَ

மனிதர்கள் செய்யும் அக்கிரமங்களுக்காக அல்லாஹ் அவர்களை உடனுக்குடன் பிடி(த்துத் தண்டி)ப்பதாக இருந்தால் உயிர்ப்பிராணிகளில் ஒன்றையுமே பூமியில் விட்டு வைக்க மாட்டான்; ஆனால், ஒரு குறிப்பிட்ட தவணை வரை அவர்களை(ப் பிடிக்காது) பிற்படுத்துகிறான் - அவர்களுடைய தவணை வந்து விட்டாலோ ஒரு கணமேனும் (தண்டனை பெறுவதில்) அவர்கள் பிந்தவும் மாட்டார்கள்; முந்தவும் மாட்டார்கள். (அல்குர்ஆன் : 16:61)

ரஹ்மத் ராஜகுமாரன் .

தஃப்ஸீர் அஷ்ஷஃராவீ

கண்ணியமிகு ஆலிம் பெருந்தகையும், மிக்க நண்பருமான மௌலவி




எம். ஒய் .முகமது அன்சாரி மன்பஈ அவர்கள் தப்ஸீர் ஷஃராவீயை மொழியாக்கம் செய்திருப்பதாக , நாங்கள் அடிக்கடி செல்போனில் பேசிக் கொள்ளும்போது ஒரு தடவை சொன்னார். அதன் ஒரு காப்பியை எனக்கு அனுப்பி வைப்பதாகவும் சொன்னார் .

போன மாதம் புத்தக வாங்கும் என் பட்ஜெட்டிற்குள் இந்த மொழியாக்கத்தின் விலை ரூ 200 /= கண்ணில் படவே அவர் அனுப்புவதற்குள் நானே வாங்கிக் கொண்டேன் .

முந்தியே வாங்கக் காரணம் இம்மொழியாக்கத்தின் முன்னுரைப் படித்துப் பார்த்தேன் . அதில்...(பக் 36-ல்)

" இமாம் ஷஃராவீ அவர்கள் தான் எழுதியதை தஃப்ஸீர் என்று சொல்வதை தவிர்ப்பவராகவே இருந்தார்கள். காரணம் குர்ஆன் சம்பந்தமாக அதன் ஒரு வசனம் அல்லது சில வசனங்கள் குறித்து மனித மனங்களில்

ஏற்படும் சந்தேகங்களுக்கும் விமர்சகர்கள் வேறுபடுத்தும் அபாயகரமான கேள்விகளுக்கும் தெளிவு கொடுக்கவே முற்பட்டு உள்ளேன் என்று சொல்வார்கள் தனது விளக்கங்கள் தஃப்சீர் அல்ல எனத் தெளிவான கருத்து உடையவர்களாகவே இருந்தார்கள் .

இது அவர்களின் தூய்மை பண்பை காட்டுகிறது .

மேலும் குர்ஆனுக்கு தஃப்சீர் செய்வதென்றால் அப்படி செய்வதும் சாத்தியம் என்றால் அதற்கு முழுத்தகுதி உடையவர் அண்ணலெம் பெருமானார் முஹம்மதுர் ரஸுஉல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களே அதற்கு முழு தகுதி உடையவர்கள் . ஏனெனில் இந்த குர்ஆன் அவர்கள் மீதுதான் இறங்கியது. அதைக்கொண்டே அவர்கள் செயல்பட்டார்கள். அதையே பிறருக்கு பரப்புரை செய்தார்கள். அதையே கற்றுக் கொடுத்தார்கள் .அதைக்கொண்டே அமல் செய்தார்கள். அவர்களுக்கே அதன் முஃஜிஸாக்கள் வெளிப்பட்டன. எனவே இவ்வளவும் பெற்ற நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களே தஃப்சீர் செய்ய தகுதியுடையவர்கள் .

எனினும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் குர்ஆனுக்கு விளக்கம் சொல்லும் போது ,அந்த நேரத்து மனிதர்களின் தேவைக்கு எவ்வளவு சொல்ல வேண்டுமோ அந்த அளவு மட்டுமே சொல்லி நிறுத்திக் கொண்டார்கள் .மேலும் வணக்க வழிபாட்டுக்கு தேவை எதுவோ அதை மட்டும் விளக்கி விட்டு அமைதியாகி கொண்டார்கள் . அவை " செய் " "செய்யாதே " என்ற கட்டளையாகவே இருந்தன .

எல்லா தகுதியும் கொண்ட நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தஃப்ஸீர் செய்ய முற்படவில்லை எனும்போது மற்ற மனிதர்களால் அது எப்படி சாத்தியம் ? எனவே தனது கூற்றுகள் தஃப்ஸீர் அல்ல. மாறாக அவை குர்ஆனுக்கு நம்மால் கூற முடிந்த விளக்கம் மட்டுமே இது எனவும் , மனிதர்களுக்கு ஏற்படும் இயல்பான சந்தேகங்களை நீக்கவும் , விமர்சகர்கள் முன்வைக்கும் அபாரமான கேள்விகளுக்கு பதிலளிக்கவும் தேவை உள்ள கருத்துக்களை மட்டுமே நான் கூறியுள்ளேன் என தன்னடக்கத்துடன் கூறுவார்கள்."

....... இந்த வரிகள் என்னை ரொம்பவும் ஈர்த்தது . உடனேயே கிதாபை விலை கொடுத்து வாங்கிக் கொண்டேன் .

நான் FB -ல் " இஸ்லாத்தின் அடிப்படை கோட்பாடுகள் " என்ற நீண்ட நெடிய தொடர் பதிவுகள் (125 பதிவுக்கும் மேல்) எழுதி நிறைவு செய்ததும் , அடுத்து "சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் " என்ற நெடிய தொடர் பதிவை ஆரம்பிக்க ஆய்த்தமானேன் .

ஏதேதோ சில காரணங்களால் தள்ளிப்போனது .

ஹஜ்ரத் அவர்களின் தஃப்ஸீர் அஷ்ஷஃராவீ எழுதிய சூரத்துல் பாத்திஹாவின் மொழியாக்கத்தையும் , நான் ஏற்கனவே பல கிதாபுகளிலிருந்து தேர்வு செய்து எழுதிய விளக்கங்களையும் சேர்த்து தொகுத்து - "சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் " என்கிற தொடர் இன்ஷா அல்லாஹ் ஆரம்பிக்கிறேன் .

- ரஹ்மத் ராஜகுமாரன்

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 1



فَاِذَا قَرَاْتَ الْقُرْاٰنَ فَاسْتَعِذْ بِاللّٰهِ مِنَ الشَّيْطٰنِ الرَّجِيْمِ

மேலும் (நபியே!) நீர் குர்ஆனை ஓதுவீராயின் (முன்னதாக) வெருட்டப்பட்ட ஷைத்தானை விட்டும் அல்லாஹ்விடம் காவல் தேடிக்கொள்வீராக. (குர்ஆன் : 16:98)

"அவூது " என்பதற்கு ' நான் காவல் தேடுகிறேன் ' என்பது ஒரு பொருள் அச்சொல்லில் அடங்கியுள்ள ஒவ்வொரு எழுத்தும் ஒவ்வொரு கருத்தைச் சுற்றிக் காட்டுவதாகும் .

" அலிப் " - இறை மாண்பினையும் ,

"ஐன்" - அடக்கத்துடன் இறைவன்பால் தன்னை சமர்ப்பிப்பதையும் ,

" வாவ் " - ஆத்மீக பதவியையும்,

" தால் " _ பணிவையும் சுட்டிக்காட்டும் என அறிஞர்கள் குறிப்பிட்டுள்ளனர் .

"மினஷ்ஷைத்தான் " _ என்பதற்கு ஷைத்தானை விட்டும் என்பது பொருள். "ரஜீம் " - என்பதற்கு 'வெருட்டியோட்டப்பட்ட ' என்பது பொருள்

" ரஜ்ம்" என்னும் வேரிலிருந்து " ரஜீம் " என்னும் சொல் தோன்றிற்று . அதற்கு கல்லெறிதல் , சபித்தல் , வெளியேற்றல் தொடர்பைத் துண்டித்தல் என பல பொருட்கள் உள்ளன .

இறை ஆணையை இப்லீஸ் மறுத்த தருணத்தில் , அவனை சுவனத்தில் இருந்து வெளியேற்றியதையும் , இறைவனால் சபிக்கப்பட்டதையும்

இத்தொடர் உணர்த்துகின்றது .

ஆதம் தவறிழைத்த போது தம் பிழையினை உணர்ந்து , "எங்களுக்கு நாங்களே தீங்கிழைத்துக் கொண்டோம் " என்றும்

وَقُلْ رَّبِّ اَعُوْذُ بِكَ مِنْ هَمَزٰتِ الشَّيٰطِيْنِۙ

இன்னும்: நீர் கூறுவீராக! “என் இறைவனே! ஷைத்தானின் தூண்டுதல்களிலிருந்து நான் உன்னைக் கொண்டு காவல் தேடுகிறேன்” (என்றும்)

(அல்குர்ஆன் : 23:97)

எனக் கூறி இறைவனின் மன்னிப்பை வேண்டி பெற்றார்கள் . இப்லீஸோ தன் பிழையினை உணராமல் இறைவன் மீதே குற்றம் சாட்டி , இறைவனுடைய கோபத்திற்கு ஆளாகி சுவனத்திலிருந்து தூக்கி எறியப்பட்டான் என்பது உணரத்தக்கதாகும் .

பேராசியர் அப்துல் கபூர் - இனிக்கும் இறைமொழி

ثُمَّ لَاٰتِيَنَّهُمْ مِّنْۢ بَيْنِ اَيْدِيْهِمْ وَمِنْ خَلْفِهِمْ وَعَنْ اَيْمَانِهِمْ وَعَنْ شَمَآٮِٕلِهِمْ‌ وَلَا تَجِدُ اَكْثَرَهُمْ شٰكِرِيْنَ

“பின் நிச்சயமாக நான் அவர்கள் முன்னும், அவர்கள் பின்னும், அவர்கள் வலப்பக்கத்திலும், அவர்கள் இடப்பக்கத்திலும் வந்து (அவர்களை வழி கெடுத்துக்) கொண்டிருப்பேன்; ஆதலால் நீ அவர்களில் பெரும்பாலோரை (உனக்கு) நன்றி செலுத்துவோர்களாகக் காண மாட்டாய்” (என்றும் கூறினான்).

(அல்குர்ஆன் : 7:17)

இந்த வசனத்தில் இப்லீஸ் கெடுக்க வரும் புறங்கள் : முன்புறம்,பின்புறம் வலதுபுறம் , இடதுபுறம் .

ஆனால் மனிதனுக்கு இன்னும் இரண்டு புறங்கள் இருக்கின்றன அதாவது மனிதனுக்கு மேல்புறம் , மனிதனுக்கு கீழ்ப்புறம் . இவற்றை இப்லீஸ் குறிப்பிடவில்லை. இது ஏன் ? ....சொல்றேன்.

முதலில் நான்கு புறத்தைப் பார்ப்போம். முகத்துக்கு நேராக தாக்கினான், நேருக்கு நேர் மோதினான், எதிர்த்து நின்றான் , எதிரியாக இருக்கின்றான் இந்தச் சொல்லாடல் யாவும் முன்புறம் குறித்து பேசுபவை .

பின்னாலிருந்து தாக்கினான் , முதுகுக்குப்பின் தாக்கினான், முதுகில் குத்தினான் , புறமுதுகிட்டு ஓடினான் , பின்னால் இழுத்து விட்டான்.. இது போன்ற வார்த்தைகள் பின்திசையை குறிப்பவை.

வலதுசாரிகள் , வலதுசாரி கொள்கை உடையவர்கள் போன்ற சொற்கள் ... அதுபோன்றே இடதுசாரிகள் இடதுசாரி கொள்கையுடையவர்கள் போன்ற சொற்கள் இவையாவும் நன்மைகளை விட தீமைகளுக்கே அதிகம் சுட்டுப்பெயர் காரணங்களாக அமைந்துள்ளன.

இடதுசாரிகள் என்போர் தீனை மறுப்பவர்களாக உள்ளனர். மேலும் இறை நிராகரிப்பை வலியுறுத்துகின்றனர் கம்யூனிஸ்டுகளை போல. அல்லது சோவியத் ரஷ்யா கொள்கை உடையவர் போல .

வலதுசாரிகள் என்போர் பொருள் மூலதன ஆதரவாளர்களாக உள்ளனர். கார்ப்பரேட் மட்டும் கேப்பிட்டலிஸம் என்னும் பொருள் முதல் வாதம் கொண்டோராகும் . அவர்கள் எதையும் பணத்தைக் கொண்டே அளவீடு செய்பவர்கள் . மனிதர்களோ மற்றவைகளோ அவர்களுக்கு ஒரு பொருட்டே அல்ல ; பணமே குறிக்கோள்.

காசேதான் கடவுள்.

இன்னும் அவர்கள் மனித உரிமை மீறலில் எல்லை கடந்த வர்களாக உள்ளனர்.மனிதனின் உழைப்பை சுரண்டி கொழிக்கின்றனர் இவற்றை நாம் ஏற்க முடியாது.

ஆக மேற்கூறப்பட்ட நான்கு புறங்களிலும் நல்லவற்றையே குறிப்பிட்டு பேசப்படாமல் தீமைகளையே முன்னிறுத்தியே பிரபலமாகி உள்ளது என்பதை அறிந்தோம் .

அவைகள் இப்லீஸ் குறிப்பிட்டுப் பேசும் நாற்புறங்களில் அமைந்துள்ளது என்பதை அறியும்போது நாம் வியப்பிற்கு உள்ளாகிறோம்.

மேல்புற திசையும் , கீழ்ப்புற திசையும் இப்லீஸ் குறிப்பிடவில்லை இது ஏன் ?

இவ்விரு திசைகளிலும் அவனால் மனிதனை நெருங்க முடியாது. காரணம் மேல்புறம் என்பது இறைவனை நோக்கிய 'ஜிஹத்தே இலாஹிய்யா ' என்பதாகும். அது இறைவனின் தொடர்புகள் ஏறுவதும் இறங்குவதுமாக இருப்பதால் அங்கு அடிக்கடி இப்லீஸுக்கு தடை ஏற்படும் .எனவே அந்த மேற்புறதிசையை விட்டுவிட்டான் .

கீழ்ப்புறதிசை என்பது சஜ்தாவின் பகுதி ஆகும் . மனிதன் சஜ்தா இப்லீஸுக்கு எதிரானது . எனவே அங்கும் அவனால் ஒன்றும் செய்ய இயலாது. அதனால் இந்த இரு திசைகளையும் விட்டுவிட்டான்

இவ்விரு திசைகளிலும் அவனால் மனிதனை அணுக முடியாது .

மேலும் மேல்திசை அது உயர்வை குறிக்கும் .உம்மத்தே முஹம்மதியா உயர்ந்தது . அதனால் மேல்திசை அவர்களுக்கே சொந்தம் .இப்லீஸ் அங்கு தடுக்கப்பட்டு உள்ளான் .

உம்மத்தே முஹம்மதியா உயர்ந்தது என்பதற்கு ஆதாரம் அவர்களின் அமல்கள் அல்லாஹ்வின் புறத்திலிருந்தே வந்தவை என்பதாகும்.

எனவே நமது செயல்கள் அல்லாஹ்வின் புறத்திலிருந்தே நடைபெறுகிறது என்பது நிலைக்கும் வரை நமது உயர்வில் சமரசம் இல்லை .உயர்ந்து கொண்டே இருப்போம் .

நமது பணிதல் அல்லாஹ்வுக்கு மட்டுமே. அவனே உயர்ந்த தீர்மானிப்பாளன் . அவனுக்கே சிரம் பணிந்து வணங்குவோம் . இந்த வணக்கம் நீடிக்கும் வரை நமக்கு தாழ்வு என்பதே இல்லை .இதனால் கண்ணியமும் , அந்தஸ்தும் , உயர்வும் கிடைக்கும் .

(தஃப்ஸீர் அஷ்ஷஃராவீ )

ரஹ்மத் ராஜகுமாரன்

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 2

விரட்டப்பட்ட சைத்தான் குர்ஆன் ஓதும் போதும் மூமினின் தொழுகையிலும் ஊசலாட்டத்தை ஏற்படுத்துவது ஏன் ?

ஒரு யூதர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்து ,

"முஹம்மதே...! நாங்கள் ' வஸ்வஸா ' இல்லாமல் ஒருமனப்பட்டு இறைவனை வணங்குகிறோம் . தங்களது தோழர்கள் வஸ்வஸாவுடன் தொழுகையை நிறைவேற்றுவதாக அவரிடமிருந்தே கேள்விப்படுகிறோம்" என்று கூறினார் .

அப்பொழுது நபி (ஸல் ) அவர்கள், பக்கத்தில் இருந்த ஹஜரத் அபூபக்கர் சித்தீக் (ரலி ) அவர்களை நோக்கி , "அவருக்கு நீர் பதில் கூறுவீராக ! " என்றார்கள் .

அப்போது அபுபக்கர் சித்திக் (ரலி) அவர்கள் : " யூதரே ! தங்கம் வெள்ளி ஆபரணங்கள் நிறைந்த ஒரு வீடும், இவைகளெல்லாம் ஒன்றுமே இல்லாத காலியான மற்றொரு வீடும் இருக்கின்றன . இவ்விரண்டு வீடுகளில் திருடன் எந்த வீட்டில் பிரவேசிப்பான் ? " என்று விளங்கினார்கள்

"ஆபரணங்களும் வெள்ளி தங்கம் நிறைந்த வீட்டில் தான் திருடன் நுழைவான் " என்பதாக யூதர் கூறினார்

அப்பொழுது அபுபக்கர் சித்திக் (ரலி) அவர்கள் :

"எங்களது இருதயங்கள் 'மஜிஃபத் ' - என்னும் மெஞ்ஞானம் ,

'தவ்ஹீத் '- என்னும் ஏக தெய்வக் கொள்கை ,

' ஈமான் ' - எனும் இறை விசுவாசம் இவைகளால் நிறைந்து இருக்கின்றன . உங்களது இருதயங்கள் இவைகளெல்லாம் இல்லாமல் வெறுமனே காலியாக இருக்கின்றன . ஆதலினால் கன்னாஸ் என்னும் சைத்தான் தங்களிடம் வரமாட்டான் என்று கூறினார்கள் .

உடனே அந்த யூதர் இஸ்லாத்தை தழுவினர் .

சைத்தான் மூமின்களது இருதயங்களை நோக்குகிறான் என்றாலும் , அவன் தன் காரியத்தில் வெற்றி அடைவதில்லை என்பது வேறு விஷயம் .

ரஹ்மத் ராஜகுமாரன்

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 3




நம்முள் இருக்கும் ஷைத்தான் விரட்டப்பட வேண்டியவன்தான் .

" நிச்சயமாக சைத்தான் மனிதனின் ரத்தம் ஓடும் துறைகளிலெல்லாம் ஓடித் திரிகின்றான் " - புகாரி 2038

நபிமார்களையும் , நல்லடியார்களையும், இறைநேசச் செல்வர்களையும் இப்லீசின் பகை பற்றி நின்றது.

" மனிதர்கள் ஒவ்வொருவருடனும் தீயவழியில் தூண்டும் ஒரு (சைத்தான) ஜின்னும் , நல்வழியில் தூண்டும் ஒரு மலக்கும் சாட்டப்பட்டு உள்ளனர் என நபி (ஸல் ) அவர்கள் கூறினார்கள் .

அருகே இருந்த நபித்தோழர்கள்:

" அல்லாஹ்வின் தூதரே ..! தங்களுடனுமா ? " என வினவினர்

அதற்கு அண்ணலார் அவர்கள் :

"ஆம் என்னிடனும்தான் ; எனினும் அல்லாஹ் எனக்கு உதவி புரிந்து இருக்கிறான் எனவே அவன் (சைத்தான்) எனக்கு பணிந்து விட்டான் .நல்லதைக் கொண்டேயொழியே அவன் என்னை தூண்ட மாட்டான் "

சைத்தானின் தூண்டுதலால், இஸ்ராயிலின் சந்ததியில் பேரறிவு வாய்க்கப்பெற்ற பெரும் ஞானி பர்ஸீஸா என்பவரை உயர்நிலையில் இருந்து உருண்டு விழுந்து கொடிய முறையில் கொலை செய்யப்பட்ட வரலாற்றை கிதாபுகள் விவரிக்கின்றன.

அருமந்த புதல்வரை அல்லாஹ்வுக்காக அர்ப்பணிக்கத் துணிந்த இறை தோழர் இப்ராஹீம் (அலை) அவர்களையும் , மாபெரும் ஞானி மஹ்பூபு ஸுப்ஹானி (ரஹ்) அவர்கள் போன்ற மாமேதைகளை வழிதவறச் செய்வதற்காக தீயோன் இப்லீஸ் மேற்கொண்ட முயற்சிகள் தோல்வி அடைந்ததை இஸ்லாமிய ஏடுகளில் இடம் பெற்றுள்ளன.

ர.ரா

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 4



"பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் "

என்றால் அல்லாஹ்,ரஹ்மான்,ரஹீம் என்ற மூன்று திருநாமங்களை மட்டுமே குறிப்பதாக சொல்வர்.

ஆனால் " பிஸ்மில்லாஹிர் " என்பது அல்லாஹுவின் அழகிய திருநாமங்களில் ....

"பஷீர் "என்ற இஸ்முடைய ' பே ' என்ற முதல் எழுத்தும்,

"ஸமிவு " என்ற இஸ்மின் 'ஷீன் ' என்ற முதல் எழுத்தும்,

" மலீக் " என்ற இஸ்மின் ' மீம் 'என்ற முதல் எழுத்தும்,

"அல்லாஹ் " என்ற இஸ்முடைய 'அலிபு' என்ற முதல் எழுத்தும்,

"லத்தீப் " என்ற இஸ்முடைய 'லாம் ' என்ற முதல் எழுத்தும்,

"ஹாதி "என்ற இஸ்மின் 'ஹே' என்ற முதல் எழுத்தும்,

"ரசாக் "என்ற இஸ்மின் 'றே ' என்ற முதல் எழுத்தும்,

" நூர் " என்ற இஸ்மின் 'நூன் ' என்ற முதல் எழுத்தும் கொண்டு "பிஸ்மில்லாஹிர்" என்று எட்டு திருநாமங்களினால் அழைக்கப்படுகிறது.

அதன் பின் வரும் "ரஹ்மான் ரஹீம்" என்ற இருநாமங்களும் வெளிப்படையாக சொல்லப்பட்டுள்ளது . ஆக பத்து அவனின் திருநாமங்களை உள்ளடக்கியதான்

" பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் " எடுத்தியம்புகிறது என்பதை நாம் அறிந்திருக்க வேண்டும்.

உண்ணும் போதும் , உடுத்தும் போதும், உறங்கும் போதும் , ஓதத் தொடங்கும்போதும் , ஓய்ந்து படுத்திருக்கும் போதும் , எழுதத் தொடங்கும் போதும் , இல்லத்திலிருந்து இருந்து வெளியில் புறப்படுகின்ற போதும் ,வெளியில் இருந்து வீட்டுக்குள்

நுழைகின்ற போதும் , இறைவனையே நினைத்து, அவனது திருப்பெயரையே மொழிந்து நிறைவு காண்பது இஸ்லாமிய வாழ்வியல் மரபாகும் .

இப்பாருலகில் இறை உணர்வை மிகுவிக்கும் தொடர்களுக்கெல்லாம் மகுடம் வைத்தாற் போன்று இலங்குவதுதான் "பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர்ரஹீம்" என்னும் எழில்மிகு தொடராகும் . முஸ்லிம்களின் பசுமையான நெஞ்சங்களில் பதிந்து , நாள்தோறும் நாவுகளில் பன்முறை தவழ்கின்ற அருமையும் , பெருமையும் இத் தொடருக்குண்டு .

முதன் முதலாக நபி ஸல் அவர்களுக்கு இந்த புனித வேதம் இறக்கப்பட்ட போது, "நபியை உம்மை படைத்து வளர்த்து காப்பவனின் பெயரால் நீர் ஓதுவீராக ! " சூரா அல் அலக் اِقْرَاْ بِاسْمِ رَبِّكَ الَّذِىْ خَلَقَ

( 96 : 1 ) என்று அல்லாஹ்வால் அறிவிக்கப்பட்டது . ஆகவே அந்தப் படைப்பாளனின் "அல்லாஹ் " என்னும் பெயருடன் "ரஹ்மான் ரஹீம் " என்னும் அவனுடைய சிறப்பு வாய்ந்த இரு காரணப் பெயர்களையும் சேர்த்து இவ்வாக்கியம் இந்த வேதத்தின் ஆரம்பத்தில் அமைக்கப்பட்டுள்ளது .

இணையில்லா சிறப்புக்களை உடைய இத்தொடர் திருமறையின் தலைப்பு தொடராக விளங்குவதோடு மட்டுமின்றி "தௌபா" என்னும் 9-வது அத்தியாயத்தை தவிர ஏனைய அத்தியாயங்கள் அனைத்திற்கும் அழகிய தொடக்கமாகவும் இத்தொடர் அணி செய்கின்றது .

"தௌபா" என்னும் அத்தியாயத்தின் தலைப்பில் இருக்க வேண்டிய இத் தொடர் ஸபா நாட்டின் அரசி பல்கீஸ்க்கு நபி சுலைமான் (அலை) அவர்கள் எழுதிய கடிதத்தின் தலைப்பில் இத்தொடர் பொறிக்கப்பட்டிருந்ததை திருமறை காட்டுகிறது " மெய்யாகவே அது சுலைமானிடமிருந்து வந்துள்ளது நிச்சயமாக அதில் "பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர்ரஹீம்" என்று எழுதப்பட்டிருக்கிறது.

குர்ஆன் (27 : 30)

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 5




"பத்தொன்பது " என்ற எண்ணை உள்பூட்டாக **( Complex interlock system )** கொண்டு குர்ஆன் பாதுகாத்தல்

இந்த பதிவில் 19 என்கிற எண்ணிக்கையை அடிப்படைக் கொண்டும் குர்ஆன் பாதுகாப்பதுப் பற்றி ஆய்வோம்.

"பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்" தொடரில் 19 எழுத்துக்களைக் கொண்டது. மேலும் 4 சொற்களைக் கொண்டது .இஸ்ம், அல்லாஹ், ரஹ்மான், ரஹீம் என்பன

இஸ்ம் 19 x 1 = 19 தடவை இடம் பெற்றுள்ளது

அல்லாஹ் 19x 142 = 2698 தடவை

ரஹ்மான் 19 x 3 = 57 தடவை

ரஹீம் 19 x 6 = 144 தடவை இடம் பெற்றிருக்கிறது

ரஹ்மான் (அருளாளன்) 57 தடவை ஆனால்ரஹீம் (அன்புடையோன்)

114 (57 x 2 ) அருளைக் காட்டிலும் இரு மடங்கு அன்பு .

பிஸ்மியின் அப்ஜத் கணக்கின்படி 786.

குர்ஆனிலுள்ள சூராக்களின் எண்ணிக்கை 114 இவ்விரண்டையும் பெருக்கினால் 786 x 114 = 89604

இதுவும் 19 இன் பெருக்கமாகவே உள்ளது அதாவது 19 x 4716 = 89604

குர்ஆனின் மொத்த அத்தியாயங்கள் 114 அதாவது 19 X 6 = 114

அடுத்து "பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம் " என்னும் காப்புத் தொடர் , குர்ஆனில் 9 வது அத்தியாயமான

"அத் தவ்பா " வின் தலைப்பில் இடம் பெறவில்லை. அதனால் மொத்த எண்ணிக்கையில் ஏற்படும் குறையினை "நம்ல் " எனப்படும் 27வது அத்தியாயத்தில் 30-வது வசனத்தில் விடுபட்ட "பிஸ்மி"யை சேர்த்து எண்ணிக்கையை சரிபடுத்தி உள்ளான் .

குர்ஆனில் முதன்முதலாக அருளப்பட்டது சூரா "அலக் " அத்தியாயம் .குர்ஆனின் இறுதி சூரா " நாஸ்" இருந்து மேனோக்கி எண்ணிச் செல்கின்ற போது "அலக்" அத்தியாயம் 19வது இடத்தைப் பெறுகின்றது.

முதன் முதலாக அருளப்பட்ட சூரா அலக் என்ற 96 -வது அத்தியாயத்தில் முதல் ஐந்து வசனங்கள்தான் நபி (ஸல்) அவர்களுக்கு அருளப்பட்டது . இந்த 5 வசனங்களில் இடம்பெற்றுள்ள சொற்களின் எண்ணிக்கை 19. இந்த 19 சொற்களில் பயன்படுத்தப்பட்டிருக்கும் எழுத்துகளின் எண்ணிக்கை 76 அதுவும் கூட 19 ன் பெருக்கம் ( 19 x 4 =76)

மேற்கண்ட சூரா " அலக் "கில் ஐந்து வசனங்கள் மட்டுமே அருளி, பின் கொஞ்ச மாதங்கள் கழித்து அதே அலக் சூராவின் பிற்பகுதி 14 வசனங்கள் வெளியாகி " அலக்' அத்தியாயம் மொத்தம் 19 வசனங்களுடன் நிறைவு பெறுகிறது.

இந்த 19 வசனத்தில் இடம் பெற்றுள்ள மொத்த எழுத்து 285 அதாவது

19 x 15 = 285.

அதென்ன 19 என்கிற எண் ?

" ஆகவே " இது (குர்ஆன்) மயக்கக் கூடிய சூனியமேயன்றி வேறில்லை" என்றும்

"இது மனிதர்களுடைய சொல்லேயன்றி வேறில்லை" என்றும் கூறினான்

ஆகவே நாம் அவனை நரகத்தில் எறிவோம்.

(நபியே) அந்த நரகம் என்னவென்று நீங்கள் அறிவீர்களா ?

அது எவரையும் மிச்சம் வைக்காது . விடவுமாட்டாது

அது (எரித்து) மனிதனுடைய கோலத்தையே மாற்றி விடும்.

(அவனை வேதனை செய்ய ) அதில் பத்தொன்பது பேர்கள் இருக்கின்றனர் .

குர்ஆன் (74 : 24 -30)

"குர்ஆனில் எழுத்துப்பிழை " உள்ளது என்று விவாதம் பேசி விதண்டாவாதம் செய்பவர்கள் சற்று யோசிக்க வேண்டும். எரிநரகின் 19 வேதனை செய்யும் மலக்குகளைப் பற்றி சற்று சிந்திக்க வேண்டும் .

எண்களின் உலகமே எண்ணற்ற புதுமைகளைக் கொண்டது . எல்லா எண்களுக்கும் அடிப்படையானது ஒன்று முதல் ஒன்பது வரையிலான எண்களே . எண்களிற் சிறியது ஒன்று; பெரியது ஒன்பது.

"ஒன்று " என்னும் வினைச் சொல்லுக்கு ஒன்றுதல் , இணையதல், சேர்தல் என்பது பொருள் . மூத்த எண்ணாகிய ஒன்பது முதிர்ச்சியின் காரணமாக பல பட்டறிவுகளைப் பெற்றது .பிற எண்களுடன் கூடிக் குலாவிய போதிலும் தன்னியல்பில் மாறுபடாமையும் அதன் தனிப்பண்புகளாகும் .

(உ-ம்) எப்பெரும் தொகையினையும் ,9 ஆல் பெருக்கினால் , பெருக்கல் தொகையின் கூட்டல் 9 ஆகவே முடியும் .

(3745 x 9 = 33705 ; 3 + 3 + 7 + 0 + 5 = 18 ;

18 = 1 + 8 = 9

மேலும் எந்த எண்ணையும் ஒன்பதுடன் கூட்டினால் , தன்னோடு சேர்ந்து எண்ணைப் பிரித்துக் காட்டும் ஆற்றல் உடையது 9 . ( 8 +9 = 17 ; 1 + 7 = 8 )

எந்த தொகையையும் திருப்பி எழுதி பெரிய தொகையில் இருந்து சிறிய தொகையை கழித்தால் அதன் கூட்டுத்தொகை 9 ஆகவே வரும் .

8463 - 3648 =4815 ; 4 + 8 + 1 + 5 = 18 ;

1 + 8 = 9.

ஒருவனுக்கு கிடைக்கின்ற சிறப்புகளைக் கண்டு அயலார் பொறாமைப்படுவது இயல்பேயாகும் . ஒன்பதின் இந்த உயர்வு கண்டு புழுக்கம் அடைந்த பிறகு எண்கள் ; 9 தையும் , அதன் குழுவினராகிய 3 -யும் 6 -யும் பிரித்து வைத்து விட்டு தனியாக 142857 என்னும் வரிசையில் தனித்து போட்டியிட்டன.

1 முதல் 6 வரை எந்த எண்ணால் அதை பெருக்கிய போதிலும் , ஒன்பது குழுவினரின் ஆதரவே தேவையில்லாமல் ஜெயித்துக் கொண்டே இருந்தது . ஆனால் எழுச்சியூட்டுகின்ற 7 வந்து மோதியதும் 'பொறுத்தார் பூமி ஆள்வார்'

என்றாற்போல் அனைத்தும் 9 மயமாயின

142857 x 7 = 999999 .

வேறு எந்த எண்ணாலும் வென்று விட முடியாத , வகுத்து விட முடியாத ஒற்றைப்படை எண் 19 . இந்த 19 ன் குணம் குர்ஆனின் தனித்துவத்தை சுட்டிக் காட்டுவதாகிறது .

மேலும் அரபியில் 19 எழுதினால் அதன் வரிவடிவம் அனைத்துக்கும் அடிப்படையான அலிஃபானது , மீமை அணைத்து இருப்பது போல ஒரு தோற்றத்தை தருவதும் நம் சிந்தனைக்கு விருந்தாகும் .

அலிஃப் , மீமும் எவைகளைக் குறிக்கிறது என்பது நான் சொல்ல வேண்டியதில்லை.

சொல்றேன் . அல்லாஹ்வும் ரசூலும்

ரஹ்மத் ராஜகுமாரன்=

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 6

இறைநம்பிக்கையில் இறைவேதங்களை நம்புவது கட்டாயம் . இறைவனால் இறைத்தூதர்களுக்கு வழங்கப்பட்ட இறைவேதங்களையும், சுஹுபுகள் எனும் சிறிய ஏடுகளையும் (சுஹ்புகள்) உண்மை என உளமாற நம்ப வேண்டும். இது ஈமானின் அடித்தளம் .

பிரதான இறைவேதங்கள் என்று வரும்போது முக்கியமான நான்கு வேதங்களை குறிப்பிடலாம். அவை வருமாறு:-

1) தவ்ராத்: இது அப்ரானி எனும் ஹிப்ரு மொழியில் மூஸா (அலை) அவர்களுக்கு இறைவன் அருளினான். மேலும் அவருக்கு #பத்து ஏடு (சுபுஹ்) களையும் இறைவன் அளித்தான்.

2) சபூர்: இது யூனானி எனும் கிரேக்க மொழியில் தாவூத் (அலை) அவர்களுக்கு இறைவன் வழங்கினான்.

3) இன்ஜீல்: இது ஈஸா (அலை) அவர்களுக்கு சுர்யானி மொழியில் இறைவன் இறக்கிவைத்தான்.

4) திருக்குர்ஆன்: இது அரபி மொழியில் முஹம்மது (ஸல்) அவர்களுக்கு இறைவன் அருளினான். இந்த வேதம் படிப்படியாக 23 ஆண்டுகள்

5 மாதங்களில் அருளப்பட்டது.

இதைத்தவிர முதல் மனிதர் ஆதம் (அலை) அவர்களுக்கு #பத்து ஏடு (சுஹுபு) களையும்,

ஷீது (அலை) அவர்களுக்கு #ஐம்பது ஏடு (சுஹுபு) களையும்,

இத்ரீஸ் (அலை) அவர்களுக்கு #முப்பது (சுஹுபு) ஏடுகளையும்

இப்ராஹிம் (அலை) அவர்களுக்கு #பத்து (சுஹுபு) ஏடுகளையும் இறைவன் அருளினான்.

மேற்கூறப்பட்ட நான்கு இறைவேதங்களும், 110 (சுஹுபு) ஏடுகளும் இறைவனின் திருவசனங்கள் என்று நம்பிக்கை கொள்ள வேண்டும். இதுகுறித்து திருக்குர்ஆன் இவ்வாறு கூறுகிறது:

‘ #தவ்ராத்தையும் நாம் அருளினோம், அதில் நேர்வழியும், ஒளியும் இருந்தது’. குர்ஆன்: (5:44)

‘நபிமார்களில் சிலரைவிட சிலரைச் சிறப்பித்திருக்கிறோம். தாவூத் (அலை) அவர்களுக்கு #ஸபூர் (வேதத்தை) கொடுத்தோம்’. குர்ஆன் : (17:55)

‘தமக்கு முன் சென்ற தவ்ராத்தை உண்மைப்படுத்துபவராக அவர்களின் அடிச்சுவட்டில் மர்யமின் மகன் ஈஸாவைத் தொடரச் செய்தோம். அவருக்கு #இன்ஜீல் வேதத்தையும் வழங்கினோம். அதில் நேர்வழியும், ஒளியும் இருந்தது. தனக்கு முன்சென்ற தவ்ராத்தை உண்மைப்படுத்துவதாகவும் அது அமைந்திருந்தது. (இறைவனை) அஞ்சுவோருக்கு நேர்வழியாகவும், அறிவுரையாகவும் இருந்தது’.

குர்ஆன் : (5:46)

‘உலகத்தார் யாவரையும் அச்சமூட்டி எச்சரிக்கை செய்வதற்காக (சத்தியத்தையும், அசத்தியத்தையும் தெளிவாகப்) பிரித்தறிவிக்கும் இவ்வேதத்தை (#திருக்குர்ஆனை) தன் அடியார் (முகம்மது (ஸல்) மீது இறக்கியவன் மிக்க பாக்கியமுடையவன்’. குர்ஆன் : (25:1)

ஆக நபிமார்களுக்கு அருளப்பட்ட வேதங்களும் , ஏடு (சுஹுபு)களும் அனைத்தும் திருக்குர்ஆனில் அடக்கம் என்பதைக் காட்டுவதற்காக அதன் வசனங்கள் அடங்கிய அத்தியாயங்கள் 114 ஆக இறைவன் அடக்கி உள்ளான் !

இந்த 114 அத்தியாயங்களின் கருத்துக்களும் , சூரத்துல் பாத்திஹாவில் அடக்கம் என்பதை காட்ட சூரத்துல் பாத்திஹாவை 114 எழுத்துக்களில் இடம் பெறச் செய்தான்.

இந்த 114 அத்தியாயங்கள்தான் உண்மையான கல்வி என்பதை விளங்குவதற்காக ,

" எனது இறைவா எனக்கு கல்வியை அதிகப்படுத்து என்று கூறுவீராக " என்ற திரு வசனத்தை , இறைவன் 20 வது அத்தியாயத்தில் 114 - வது வசனமாக இடம் பெறச் செய்தான் .

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 8



தவிர்க்கப்பட்ட ஏழு எழுத்துக்கள்

நபிமார்களுக்கு அருளப்பட்ட 4 வேதங்களும் , 110 ஏடு (சுஹுபு)களும் அனைத்தும் திருக்குர்ஆனில் அடக்கம் என்பதைக் காட்டுவதற்காக அதன் வசனங்கள் அடங்கிய அத்தியாயங்கள் 114 ஆக இறைவன் அடக்கி உள்ளான் !

இந்த 114 அத்தியாயங்களின் கருத்துக்களும் , சூரத்துல் பாத்திஹாவில் அடக்கம் என்பதை காட்ட சூரத்துல் பாத்திஹாவை 114 எழுத்துக்களில் இடம் பெறச் செய்தான்.

وَلَقَدْ اٰتَيْنٰكَ سَبْعًا مِّنَ الْمَثَانِىْ وَالْقُرْاٰنَ الْعَظِيْمَ

(நபியே!) நிச்சயமாக நாம் உமக்கு திரும்பத் திரும்ப ஓதக் கூடிய (ஸூரத்துல் ஃபாத்திஹாவின்) ஏழு வசனங்களையும், மகத்தான (இந்த) குர்ஆனையும் வழங்கியிருக்கின்றோம்.

(அல்குர்ஆன் : 15:87)

திருப்பித் திருப்பி ஓதப்படும் ஏழு வசனங்கள் ( ஸப்அன் மினல் மதானி) என்னும் சிறப்பினைப் பெற்ற

"பாத்திஹா " அத்தியாத்திலே , அரபி நெடுங்கணக்கில் இருளெழுத்துக்கள் என்று குறிக்கப்படுகின்ற ஏழு எழுத்துக்களும் **(ஃதே ,ஜீம், கே, ஸே, ஷீன்,ளே, ஃபே )** தவிர்த்துள்ளான் .

அரபி மொழியில் எந்த ஒரு எழுத்தையும் தவிர்த்து எழுத முடியாது .அந்த அரபி மொழியில் ஏழு இருளெழுத்துக்கள் தவிர்த்து ஒரு அத்தியாயத்தை அருளி அதையையே திரும்ப திரும்ப தொழுகையில் ஓத வைத்தான். இது எங்வளவு பெரிய அற்புதம் ?

ஏன் ஏழு எழுத்துக்களும் தவிர்க்கப்பட்டது ?

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 9

ஸப்வுல் மஸானி (திரும்பத் திரும்ப ஓதப்படும் ஏழு வசனங்கள்) எவை? என்று அலீ (ரலி) அவர்களிடம் கேட்கப்பட்ட போது ,

"அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்" என்றார்கள்.

"அதில் ஆறு வசனங்கள் தானே உள்ளன" என்று மறுபடியும் அவர்களிடம் கேட்கப்பட்டது.

''பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்' (என்பதையும் சேர்த்து ஏழு வசனங்கள்) " என்று பதில் கூறினார்கள்.

தாரகுத்னி-313

திருக்குர்ஆனில் உள்ள 114 சூரத்துகளில் 113 சூரத்துகளின் ஆரம்பத்திலும் பிஸ்மில்லாஹ் எழுதப்பட்டிருக்கிறது .

இந்த பிஸ்மில்லாஹ் ஒவ்வொன்றும் அந்தந்த சூரத்துகளில் சேர்ந்து இருக்கிறதா என்ற விஷயத்தில் இமாம்களுக்கு கருத்து வேறுபாடு இருக்கிறது.

இந்த பிஸ்மில்லாஹ் சூரத்துல் பாத்திஹாவின் உள்ள ஒரு ஆய்த்தாகவும் பிஸ்மில்லாஹ் எழுதப்பட்டுள்ள 113 சூராக்களிலும் இது ஒரு ஆயத்தாக கணிக்கப்பட வேண்டும் என்றும் இப்னு அப்பாஸ் (ரலி)

அன்ஹு அபூஹுரைரா ( ரலி ) ஷஅனு இப்னு ஜுபைர் (ரலி) இமாம் ஷாபி ( ரஹ்) , இப்னுல் முபாரக் (ரஹ்) ஆகியோர் கூறியிருக்கிறார்கள் .

" இந்த பிஸ்மில்லாஹ் சூரத்துல் பாத்திஹாவிலுள்ள 7 ஆயத்துகளில் ஒன்றாக இல்லை "என்று இமாம் மாலிக் (ரஹ்) , இமாம் ஷாஃபி (ரஹ்) இமாம் அபூஹனீபா ரஹ்மத்துல்லாஹி ஆகியோர் கூறுகிறார்கள்

மேலும் அபூதாவூத் (ரஹ்) அவர்கள் பிஸ்மில்லாஹ் பாத்திஹாவில் இல்லாதது போல 112 சூரத்துகளிலும் தனியாக ஆய்த்தாக இல்லை. ஆயினும் சூரத்து நம்லிலுள்ள ஒரு ஆயத்தம் ஆகும் என்றும் , ஒவ்வொரு சூரத்தின் ஆரம்பத்திலும் இது எழுதப்பட்டிருப்பது சூரத்துகளை பிரித்து காட்டுவதற்காகவும் "பராக்கத்து " க்காவும்தான் என்று கருத்து தெரிவித்திருக்கிறார்கள்

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 10

அளவற்ற அருளாளன் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால் ஆரம்பிக்கின்றேன்.

அகிலத்தாரைப் படைத்துப் பரிபாலிக்கும் அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். (1:1)

(அவன்) அளவற்ற அருளாளன் நிகரற்ற அன்புடையவன். (1:2)

தீர்ப்பு நாளின் அதிபதியும் அவனே (1:3)

(அல்லாஹ்வே!) நாம் உன்னையே வணங்குகின்றோம், உன்னிடமே உதவியும் தேடுகின்றோம். (1:4)

நீ எங்களை நேரான வழியில் செலுத்துவாயாக!. (1:5)

(அது) நீ எவர்களுக்கு அருள் புரிந்தாயோ அவ்வழி. (அது) உன் கோபத்திற்கு ஆளானோர் வழியுமல்ல நெறி தவறியோர் வழியுமல்ல.

(அல்குர்ஆன் : 1:7)

ஸூரத்துல் பாத்திஹாவின் சிறப்பு:

‘குர்ஆன் உடைய ஸூராக்களிலேயே மிக்க மகத்துவம் வாய்ந்ததாகும். திரும்ப ஓதப்படக் கூடிய ஏழு ஆயத்துகளைக் கொண்டதும் மகத்தான குர்ஆனுமாகும்’ என்று ஒரு ஹதீஸின் வாசகம்.

‘சூரத்துல் பாத்திஹாவாகிறது அர்ஷுக்கு கீழுள்ள (பிரத்தியேக) இடத்திலிருந்து எனக்கு வழங்கப்பட்டுள்ளது’ என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

‘ஒரு தடவை ஜிப்ரீல் (அலை) அவர்கள் நபி (ஸல்) அவர்களின் சமூகத்தில் வருகை தந்து அமர்ந்திருந்தார்கள். .

அப்போது மேலிருந்து(வானத்திலிருந்து) ஒரு பெரும் சப்தத்தைக் கேட்டார்கள். ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள். தங்கள் தலையை உயர்த்திப் பார்த்து,...

‘இது வானத்திலுள்ள கதவொன்று திறக்கப்படுகின்ற சப்தம். அதன் வழியாக ஒரு மலக்கானவர் பூமிக்கு இறங்கி வருகிறார். அவர்கள் இதுவரை பூமிக்கு வந்ததே கிடையாது என்று கூறினார்கள்.

அதற்குள் அந்த மலக்கானவர் அங்கு வந்து ஸலாம் கூறி விட்டு, ‘இரண்டு ஒளிகளைக்கொண்டு நீங்கள் மகிழ்ச்சி அடையுங்கள். அவ்விரண்டு ஒளிகளும் உங்களுக்கு முன்னுள்ள எந்த நபிக்கும் கொடுக்கப்படவில்லை. அவை ஸூரத்துல் பாத்திஹாவும், ஸூரத்துல் பகராவுடைய கடைசி இரண்டு

ஆயத்துமாகும். அவ்விரண்டிலிருந்து ஓர் எழுத்தை நீங்கள் ஓதினாலும் அதற்குரிய நன்மை கொடுக்கப்படும்' என்று கூறினார்.

"குர்ஆன் ஓதப்பட்டால் அதைச் செவி தாழ்த்திக் கேளுங்கள். மவுனமாக இருங்கள்" (அல்குர்ஆன் 7:204)என இறைவன் கூறியுள்ளான்.

ர.ரா

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 11



ஹம்து 01

அல்ஹம்து லில்லாஹி றப்பில் ஆலமீன் !

اَلْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعٰلَمِيْنَۙ

எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! (அவன்தான்) அகில உலகத்தார் யாவரையும் படைத்து வளர்த்து தகுந்த பக்குவப்படுத்துபவன்.

(அல்குர்ஆன் : 1:2)

அல்ஹம்து - எல்லா புகழும் என்னும் மங்கலச் சொல் முதலிலேயே பெற்று திகழ்கிறது . அத்துடன் இறைவனுக்குரிய இடுகுறிப்பெயர் ஆகிய "அல்லாஹ் " எனும் சொல்லையும் அவனுக்குரிய பேரியல்பை வெளிப்படுத்தும் " றப் " என்னும் பண்பு பெயரையும் முதலிலேயே அடங்கி விடுகின்றது .

எனவே எழுச்சியூட்டும் 7 தொடர்களைக் கொண்ட சூரத்துல் பாத்திஹாவுக்கு இணையான கருத்துச் செறிந்த ஒரு பிரார்த்தனை உலகத்தில் எந்த மொழியிலும் , எந்த நூலிலும் கிடையாது என அறிஞர்கள் கருதுவதில் வியப்பொன்றுமில்லை.

அனைத்துலகையும் படைத்து அரியதாய்க் காக்கும் அல்லாஹ்வுக்கே அனைத்துப் புகழும் என்பதை தலைப்பிலேயே கண்ட தனிப்பெரும் தொடரின் சிறந்த பொருளாகும்.

அல்ஹம்து - எல்லா புகழும் ,

லில்லாஹி - அல்லாஹ்வுக்காக;

(அவன் எத்தகையோனெனின் )

றப்புல் ஆலமீன் - எல்லா உலகங்களையும் படைத்து காத்து படிப்படியாக நாளடைவில் பரிபக்குவப் படுத்துபவன்.

வளமார் மொழியாம் அரபியிலே புகழை குறிக்கும் சொற்கள் பல இருப்பினும் "ஹம்து " என்னும் சொல்லே ஈண்டு தேர்ந்தெடுக்கப்பட்டது .

தனக்கு மட்டும் கிடைத்த உதவிக்கு நன்றி தெரிவிக்கும் " ஷுக்ரு ",

பயன் பெறுவதற்கு முன்னரும் , பயன்பெற்றதற்குப் பின்னரும் பயன்படுத்துகின்ற "மத்ஹு "என்பன போன்ற சொற்களை கையாளாமல், உதவிய பெற்றபின் தனக்காகவும் பிறருக்காகவும் நன்றி செலுத்துகின்ற சொல்லாகி " ஹம்து " என்னும் சொல்லை அமைத்திருப்பது இவ்விடத்தில் சாலப் பொருத்தமுடையது. அதனையும் பொதுவாக சொல்லாமல் "அல்ஹம்து " என்பதாக எல்லாம் புகழையும் உள்ளடக்கி கூறப்பட்டது.

அனைத்து புகழுக்கும் இறைவன் மட்டுமே உரித்தானவன் என்பதன் வழியாக பிற படைப்பினங்களில் காணப்படும் சிறப்புகளுக்கெல்லாம் இறைவனே அடிப்படையானவன் என்பதும் , அவற்றின் சிறப்பு இயல்புகள் அனைத்தும் இறைவனின் அருட்கொடையே என்பதும் , அச்சிறப்பியல்புகளுக்காகப் பாராட்டப்பட வேண்டியவன் , அவற்றினை வழங்கிய அல்லாஹ்வே என்பதும் பெறப்படுகின்றன.

மிகத்தொன்மையான பழங்காலத்திலிருந்து இன்றுவரை பூத்துள்ள புகழும் , எதிர்காலத்தில் பூக்கவிருக்கின்ற எல்லா வகையான புகழும் இறைவனுக்கே இறைவனுக்கே உரித்தாவன ஆகும்.

ர.ரா

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 13

ஹம்து 03

15 நிமிடப் புகழ் !



" 15 நிமிடப் புகழ் " என்ற வாக்கியத்தை அதிக இடங்களில் கேட்டிருப்பீர்கள். ஆனால், இதன் வேர் 1966இல் இருந்து நீள்கிறது. 1985இல் Andy Warhol's Fifteen Minutes என்ற நிகழ்ச்சியின் மூலம் டி.வி. வைத்திருந்த மக்களிடையே பெருமளவில் சேர்ந்திருந்தாலும், 1966ஆம் ஆண்டு ஸ்வீடனின் ஸ்டாக்ஹோம் நகரத்தில் நடைபெற்ற Andy Warhol ன் ஓவியக் கண்காட்சிதான் அந்த வார்த்தைக்கு வேர்.

கண்காட்சியில் கலந்துகொண்ட Andy Warhol ரசிகர்கள், அவருடன் புகைப்படம் எடுத்துக்கொள்ள போட்டி போட்டபோது எல்லோருமே பிரபலமாக விரும்புகிறார்கள்என்று Andy Warhol சொல்ல, அவரைப் படம் பிடித்துக்கொண்டிருந்த நாட் ஃபிங்கெல்ஸ்டெய்ன்,

"ஆம், 15 நிமிடத்துக்கு மட்டும் " என்று பதிலளித்தார்.

இதைத்தான் Andy Warhol பிறகான தமது படைப்புகளில் அதிகளவு பயன்படுத்தினார். உலகம் முழுக்க வாய்ப்புள்ள இடங்களிலெல்லாம் இதைப் பயன்படுத்தி வருகின்றனர். நாமும் இந்தக் கட்டுரைக்குப் பயன்படுத்திக்கொள்வோம்.

துன்ஹாம் என்ற கலிபோர்னியாக்காரர் சொந்தமாக வெல்டிங் பட்டறைவைத்து லாரி நீளத்துக்கு ஒரு மோட்டார்பைக் தயாரித்து, ஏணி வைத்து ஏறி ஓட்டுகிறார்.

இங்கிலீஷ் விவசாயிகளுக்கு புகழ் ஆசை வந்தால், செயற்கை உரத்தைத் திணித்து பன்னிரண்டு அடி அகலத்துக்கு முட்டைகோஸ் பயிரிடுவார்கள். மற்றொருவர் நூதனமாக ஆயிரத்து ஐநூறு பவுண்டு பறங்கிக்காய் வளர்த்து அதை லாரியில் ஏற்றிக் கண்காட்சி நடத்துகிறார்.

இந்த மாதிரி எதையாவது செய்து டிவியில் காட்டும் போது மொத்த உலகமும் கொஞ்ச நேரமாவது தன்னைப் பார்க்க வேண்டும் என்கிற தீராத ஆசைதான் "15 நிமிட புகழ் " மனிதர்கள் என்று வர்ணிக்கிறார்கள். அதற்குப் பிறகு அந்த சொற்ப வெளிச்ச மனிதர்களை உலகம் அந்த உடனேயே மறந்தே போகிறது .

புகழ் யாரைப் பற்றி சொன்னாலும் , புகழ் அனைத்துமே இறைவனுக்குரியது என்று குறிப்பிடும். ‘அல் ஹம்து லில்லாஹ்’ என்ற சொற்றொடர் நிறைவைப் பெறும் ஒவ்வோர் இஸ்லாமியர் சொல்வதும் ‘அல்ஹம்துலில்லாஹ்’ தான்.

திருக்குர்ஆனின் முதல் வசனமே ஹம்து - புகழைப் பற்றித்தான் பேசுகிறது. எத்தனை புகழ் மனிதனுக்குக் கிடைத்த போதும் அந்தப்புகழுக்குரியவன் அந்த நபரைப் படைத்த இறைவன்தான் என்பதை இறைநேசகர்கள் கண்டிப்பாக உணர்ந்திருக்கிறார்கள்.

இரண்டு ஆஸ்கார் விருதைத் தூக்கிக் காட்டியபோதும் A.R ரஹ்மான் வாய் முணுமுணுத்ததோ, ‘எல்லாப் புகழும் இறைவனுக்கே’ என்கிற ‘அல்ஹம்துலில்லாஹ்’ தான்.

அப்பேர்ப் பட்ட மகாபெரியோனான இறைவன் தன்னுடைய நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் புகழ்கிறான்.

“நபியே முந்திய(நிமிடத்)தை விடப் பிந்திய (நிமிடம) தே உங்களுக்குச் சாலச் சிறந்தது” (அல் குர்ஆன் - 93 : 4)

நபி ஸல்லல்லாஹுஅலைஹி வஸல்லம் அவர்களைப் புகழ்கிறவர்கள் தமது உள்ளத்தில் ஊசலாடியவைகளை எல்லாம் வைத்து அவர்களின் (நாயகத்தின்) வர்ணிப்புகளில் கடும் முயற்சி எடுத்துப் பார்த்தனர். முயற்சித்தோர் எவரும் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட சிறப்புகளில் ஆயிரத்தில் ஒன்றைக் கூட அடைந்து கொள்ளவில்லை. காரணம் முந்திய நிமிடத்தில் உயர்ந்த புகழை விட அடுத்தநிமிடத்தில் இன்னும் புகழ் அதிகமாகிக் கொண்டே இருக்கிறது எனவேதான் அல்லாஹ்.

“(புகழ்பவர்கள் புகழையெல்லாம் விட்டு) உம் புகழை நாம் மிக உயர்த்திவிட்டோம். (குர்ஆன் : 94 - 4)

என்ற வசனத்தின்மூலம் தங்களின் தன்மைகள் ஒரு வட்டத்திற்குள் உட்படாமல், ஒவ்வொரு நிமிடமும் உயர்ந்து கொண்டே இருக்கிறது என்றும் தங்களின் சிறப்புகள் ஒரு எல்லைக்குள் உள்ளடங்கி விடாமல் ஒவ்வொரு இமைப் பொழுதும் மேலோங்கிக் கொண்டே இருக்கின்றன.

“புதிய வரலாறு படைத்தோரின் வரிசை முறை - நூறுபேர்” - என்ற வரலாற்று ஆய்வுப் புத்தகத்தை எழுதிய மைக்கேல் H . ஹார்ட் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பற்றி..

" உலகத்தில் முஸ்லிம்களை விடக் கிறிஸ்தவர்கள் ஏறத்தாழ இருமடங்கினராக இருப்பினும் கூட, முஹம்மது நபியவர்களை ஏசு நாதரை விட முதன்மையாக இடம் பெறச் செய்திருப்பது,எடுத்த எடுப்பில் புதுமையாகத் தோன்றலாம். இந்த முடிவுக்கு இரண்டு காரணங்கள் உண்டு.

ஒன்று : கிறிஸ்துவ வளர்ச்சிக்கு ஏசுநாதர் ஆற்றிய பணியை விட, இஸ்லாமிய வளர்ச்சிக்கு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த பணியினை முஹம்மது நபியவர்கள் ஆற்றினார்கள். கிறிஸ்துவத்தின் முக்கியமான அறநெறி,ஒழுக்க இயல் ஆகியவற்றுக்கு (அவை யூதசமயத்திலிருந்து வேறுபட்ட அம்சங்களைப் பொறுத்தவரை) ஏசு நாதரே காரணமாக இருந்தாலும்,அதன் இறைமையியலை (THEOLOGY) உருவாக்கியதில் முதன்மையானவரும், அதன்பால் மக்கள் வருவதற்கு முக்கியக் காரணமாக இருந்த வரும், புதிய ஏற்பாட்டின் பெரும் பகுதியின் ஆசிரியரும் தூய பவுல்தான் (ST. PAUL)

ஆனால் இஸ்லாத்தின் இறைமையில் (THEOLOGY) , அதன் அறநெறி,ஒழுக்க இயல் யாவற்றுக்குமே பொறுப்பானவர்கள் முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள்தாம். அன்றியும் அச்சமயத்தை மக்களிடையே பரப்புவதிலும், இஸ்லாமிய அனுஷ்டான மரபுகளை வகுப்பதிலும் அவர்கள் மூலாதாரமான பொறுப்பினை மேற்கொண்டிருந்தார்கள்

மேலும், இறைவனிடமிருந்துதங்களுக்கு நேரடியாய் அருளப்பட்ட திருவெளிப் பாடான புனித குர்ஆனின் போதகரும் அவர்கள்தாம். முஹம்மது நபியின் வாழ்நாளிலேயே இவ்விறை வெளிப்பாடுகள் பற்றுறுதியுடனும், கடமையுணர்வுடனும் பதிவு செய்யப்பட்டன.

அவர்கள் மறைந்த சிறிது காலத்துக்குள் ஆதாரப்பூர்வமாக அவை ஒருசேரத் தொகுக்கப்பட்டன;எனவே முஹம்மது நபியின் கருத்துக்களும், போதனைகளும்,கொள்கைகளும் குர்ஆனுடன் நெருக்கமானவை. மேலும் நபியவர்களின் வாழ்வின் ஒவ்வொரு நிகழ்வுகளும் பதிவு செய்யப்பட்டுள்ளன.

ஆனால் ஏசு நாதரின் இதுபோன்ற விரிவான போதனைகள் அடங்கிய எதுவும் (மூலாதாரத்துடன்) எஞ்சவில்லை. கிறிஸ்தவர்களுக்கு பைபிளைப் போன்று, முஸ்லிம்களுக்கு குர்ஆன் முக்கியம்வாய்ந்ததாகும்.

குர்ஆன் வாயிலாக முஹம்மதுநபி உண்டு பண்ணிய தாக்கம் மிகப் பெரும் அளவினதாகும். கிறிஸ்தவத்தின் மீது ஏசு நாதரும், தூய பவுலும் ஒருங்கிணைந்து உண்டு பண்ணிய தாக்கத்தைவிட முஹம்மது நபி இஸ்லாத்தின் மீது உண்டு பண்ணிய தாக்கம் மிகுந்ததே என்று சொல்லலாம்.

இரண்டு : மேலும் ஏசு நாதரைப் போலில்லாமல் முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்அவர்கள் சமயத்தலைவராக மட்டுமின்றி, உலகியல் துறைகளிலும் தலைவராகஇருந்தார்கள்.

உண்மையில், அரபுகளின் வெற்றிகளுக்கு, பின்னிருந்து இயக்கிய உந்து சக்தியாக அன்னார் எல்லாக் காலத்துக்கும் தாக்கத்தை உண்டு பண்ணும், செல்வாக்குமிக்க தலைவராக இடம் பெறலாம்.

ஆக ஏழாம் நூற்றாண்டில் தொடங்கிய அறபு வெற்றிகள், மானுடவரலாற்றில் இன்றும் முக்கியமான பங்கு வகித்து வருவதை அகில உலகமெங்கும் கண்கூடாகக் காண்கிறோம். சமயத் துறையிலும் உலகியல் துறையிலும் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஒரு சேரப் பெற்ற ஈடில்லாத செல்வாக்குத்தான் மனித வரலாற்றில் மிகப்பெரும் தாக்கத்தை ஏற்படுத்திய ஒரே ஒருதனிமனிதர் என்னும் தகுதிக்கு அவர்களை முதன்முதல் இடத்தில் உரித்தாக்குகிறது என நான்கருதுகிறேன்” என்றார் மைக்கேல் யஹச் ஹார்ட்.

இது ஒன்றும் 15 நிமிட புகழ் அல்ல.,

நபிகளார் புகழுக்குரியவர்தானா ? நபிகள் நாயத்தின் ரசவாதத்தால் என்ன நிகழ்ந்தது........?

ஒட்டக மேய்ப்பர்கள் உலகாளும் கலீபாக்கள் ஆனார்கள். ஒரு நீரூற்றுக்காகப் பல தலைமுறை யுத்தம் செய்து ரத்தம் கொட்டியவர்கள் என்ன ஆனார்கள்......? ‘கந்தக்’போரில் முஸ்லிம்கள் பக்கம் மரணவாசலில் வீழ்ந்து கிடக்கும் தன் சகோதரனுக்கு நீர்க்குடுவை கொண்டு சென்ற ஒரு முஸ்லிம் போர் வீரர், எதிரிகள்பக்கம் மரணத் தாகம் எடுத்துத் தண்ணீர்கேட்டவருக்கு நீர் வழங்கிய ஈரம், அனல் பாலையில் அதிசயமாகச் சுரந்தது.

பிறந்தவுடனேயே பெண் சிசுக்களை மண்ணில் புதைத்துச் சொர்க்கத்திற்கு ஏற்றுமதி செய்த பூமியில், அதே பெண்ணான தாயின்பாதத்திற்குக் கீழே சொர்க்கத்தை இறக்குமதி செய்த புரட்சி நிகழ்ந்தது.

ஓர் ஆண்,ஒரு பெண்ணிலிருந்து இவ்வுலக உயிர் வாழ்வு தொடங்கியது என்ற தெளிவுப் பிறந்தது. சாராயத்தைப் புட்டிகளே வாந்தி எடுத்தன. வட்டிக்காக இதயத்தையே அறுத்துக்கேட்ட ஷைலக்குகள், ஜக்காத்துக்காக (ஏழைவரி) சொத்து முழுவதையும் வழங்கி விட்டு அடுத்த நொடியில் ஆண்டவனிடம் கையேந்தி நின்றார்கள்.

உழைப்பாளிகளின் வியர்வைத் துளிகளை உல்லாச நீச்சல் குளங்களில் நிரப்பியவர்கள், அவர்கள் வியர்வை உலரும் முன்னே கூலி கொடுத்த இதயமாற்று அறுவைசிகிச்சை நிகழ்ந்துவிட்டது.

இறைவன் மாட்டு நிமிர்ந்த நேயம் கொண்டு முக்தி பெற்ற பக்தியாளர்கள் உள்ள சொர்க்கத்தைக் காட்டி, “இது உமக்கு” என்று இறைவன் சொன்னபொழுது, இங்கு எனக்கு வேலை இல்லை. ஏனெனில் இங்கு கண்ணீரில்லை, காயமில்லை, விம்மலில்லை, விசும்பல் இல்லை. எனவே இல்லாமையால் துடிக்கும் என் உம்மத்துக்கள் இருக்கும் அந்த ரண பூமிக்கே என்ன அனுப்பி விடு இறைவா! நுழைவதானால் என் உம்மத்துக்களோடு தான் நுழைவேன் " என்று சொர்க்கத்தை மறுதலித்தார்கள் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்அவர்கள்.

இம்மை வாழ்வில் ஒற்றைத் தனிச் சூரியனாகச் சுழன்றவர்கள் மறை உலகில் தான் மட்டும் ஒளியோடு இல்லாமல் கோடி கோடி நட்சத்திர உம்மத்துக்களையும் வெளிச்சப்படுத்தி உடனழைத்து இறை சொர்க்கம் எய்தச் செய்யும் நிறைமதியாகவும் இருப்பார்கள்.

அரபிக் கவிதை பாமாலை அண்ணலாரைப் பற்றி பாடுகையில்,

‘அந்த ஷம்ஷீன் அந்த பத்ருன்

அந்த நூருன் பௌக்க நூரி' என்று குறிப்பிடுகிறது.

“பகலவன்தான் நீங்கள்

பௌர்ணமி நிலா நீங்கள்,

ஒளியெல்லாம் நீங்கள்

ஒளிக்கு ஒளி நீங்கள்”

இரு வேறு உலகில் இருவேறு அணுமுறை என்பதைச் சூரியன், நிலாவென அந்த அரபுக் கவிதை, ஈரடியில் பேசினாலும், இறுதியாக,ஒளிகளுக்கெல்லாம் மூல ஒளி அண்ணலாரே என்று பேசுகிறது விந்தை! வெளிச்சம் தான் இரண்டு விளக்காகி விட்டது, ஒளி ஒன்றுதான் அதுதான் “நூரே முஹம்மதியா” என்ற உம்மு ஒளி ,அன்னைஒளி. அதுவே மூல ஒளி. பிற சுடர்களை மங்கவைத்து ஒளிய வைத்த ஒளி இல்லை; ஏனைய தூதுத்துவச் சுடர்களுக்கும் ஒளி மகுடம் சூட்டிய மூலச்சுடர்என்பதுதான் முத்தாய்ப்பு.

பெருமானாரின் குணம் குர்ஆனாகவே அமைந்து விட்டது என்று அன்னை ஆயிஷாநாயகி (ரலி) அவர்களின் மூலம் அறிவிக்கப்பட்டுள்ளது. இந்த ஹதீஸும் பெருமானாரின் புகழுக்கு எல்லை இல்லை என்பதற்கு ஆதாரமாக அமைவதைக் காணலாம்.

எப்படியயன்றால் “பூமியிலுள்ள மரங்கள் (செடிகள்) யாவும் எழுது கோல்களாவும்,

சமுத்திர (ஜலம் மையாக) வும் இருந்து, (அதுதீர்ந்து), பின்னும் ஏழு சமுத்திரங்கள் (மையாக) இருந்து (எழுத) உதவியபோதிலும், அல்லாஹ் உடையவசனங்கள் நிச்சயமாக (எழுதி) முடிவு பெறா. நிச்சயமாக அல்லாஹ் (யாவையும்) மிகைத்தோனும், ஞானமுடையோனுமாகஇருக்கிறான்” குர்ஆன்(31 : 27)

எனவே குர்ஆன் எவ்வளவு தான் விளக்கம் சொன்னாலும் விளக்கம் சொல்லி முடிக்க முடியாது என்று ஆகும்போது குர்ஆனாவே இருக்கின்ற பெருமானாரின் பொற் குணத்தையும், புகழாரத்தையும் விவரித்து முடிக்க முடியாது. இதனால்தான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்அவர்கள் ஒவ்வொரு நிமிடமும் சிறப்புகளில் உயர்ந்து கொண்டே இருக்கிறார்கள். எனவே,

"நிச்சயமாக அல்லாஹ்வும், அவனுடைய மலக்குகளும் நபியின் மீது ஸலவாத்து சொல்லுகின்றார்கள் (ஆகவே)விசுவாசிகளே! நீங்களும் அவர்கள்மீது ஸலவாத்துச் சொல்லி ஸலாமும் கூறிக்கொண்டேஇருங்கள்”

(குர்ஆன் - 33 : 56)

இக்கட்டுரையின் ஆரம்பத்தில் சற்று கவனியுங்கள், “எதிர்காலத்தில் நாம் எல்லோரும் பதினைந்து நிமிடநேரம் புகழுடன் இருக்கப் போகிறோம்” என்று ஆண்டி வார்ஹோல் 1968 - ல் சொன்னவாக்கியம் லட்சக்கணக்கான முறை எதிரொலிக்கப்பட்டு இன்றுவரை உலகத்தைச் சுற்றிக்கொண்டிருக்கிறது. குறளின் செறிவுள்ள இந்தவாக்கியத்தை தத்துவவாதிகளும், மானேஜ்மெண்ட் குரூப்களும் நூலாகப் பிய்த்து ஆராய்ந்துகொண்டிருக்கிறார்களாம். அதுவும் ஒரே ஒரு பதினைந்து நிமிடப் புகழுக்காக.........?

‘முஹம்மது’ - புகழப்பட்டவர், புகழப்படுகின்றவர், புகழப்படுபவர்என்ற முக்காலத்திற்கும் பொருந்தும்படியாக திருப்பெயர். நபியவர்களுக்கு முன் யாதொருவருக்கும்வைக்கப்படாத பெயர். அல்லாஹ்வும் அவனது மலக்குகளும் நபியின் மீது ஸலவாத்து கூறிக்கொண்டே இருக்கிறார்கள் என்றால், எத்தனை யுகயுகங்களாக கூறிக்கொண்டிருக்கிறார்கள்?

அல்லாஹ் தன் ஒளியிலிருந்து முதன் முதல்படைப்பாக நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் படைத்தான்.

“நான் அல்லாஹ்வுடைய ஒளியில் நின்று முள்ளவன்; சகலவஸ்துக்களும் என்னுடைய ஒளியில்நின்றுமுள்ளவை”

(“அன மின்னூரில்லாஹி - வகுல்லுஷையின் மின்னூரீ)

சிருஷ்டிகள் அனைத்தும் நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய ஜோதியில் சம்பந்தப்பட்டவை என்றால், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின்புகழ், யுகயுகங்களை கடந்து, இன்னும் விவரிக்க விவரிக்க ஆன்மீகத்தின் எல்லையை அது கடந்துவிடும்..... வாசகர்கள்,

இதுசம்பந்தமாக மார்க்கப் பெரியோர்களைக் அணுகவும். இப்போது சொல்லுங்கள்........ ‘புகழ்’ அது எத்தனை நொடிப் பொழுதிலிருந்தாலும் நமக்குரியதுதானா........?

சற்று யோசிங்கள்.

இப்போது நீங்களே சொல்வீர்கள் "அல்ஹம்தில்லாஹ் "

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 16

"லில்லாஹி " 02

உங்களது பெயரை எழுதி அதில் எந்த ஒரு எழுத்தையும் நீங்கி அதன் அர்த்தத்தைப் பாருங்கள். அது மாறிப்போய்கிறதா ? ஆனால் ....

"அல்லாஹ் " என்னும் சொல்லில் எந்த ஒரு எழுத்தை நீக்கிய போதிலும் அது பொருள் சிதைவின்றி அந்தத் தனிப்பெரும் ஓரிறைவனாகிய அல்லாஹ்வையே குறிக்கின்ற அற்புதத் தன்மையை காணலாம் !

' அல்லாஹ் ' என்ற சொல்லிலிருந்து "அலிஃபை " நீக்கினால் "லில்லாஹ் " என்றும் ,

அத்துடன் முந்திய "லாமை"யும் நீக்கினால் , " லஹு "என்றும் , இரண்டாவது "லாமை " நீக்கினால் ,

"ஹு " என்றும்

இரண்டு " லாமி" ல் ஒரு 'லாமை ' நீக்கினால் , " இலாஹு " என்றும் , இரண்டு 'லாமை' யும் நீக்கினால் "ஆஹ்"என்றும் ,

இரண்டாவது 'லாமை' யும் 'ஹாவை 'யும் நீக்கினால் 'அல்'என்றும் ஆகும்

இவ்வாறு வரும் 'லில்லாஹ்' 'லஹு ' 'ஹு' 'இலாஹு' 'ஆஹ்' 'அல்' ஆகிய சொற்கள் அனைத்தும் அல்லாஹ்வே குறிக்கின்றன என்பது எவ்வளவு வியப்பான விஷயம் பார்த்தீர்களா ?

அல்லாஹ்விலிருந்து முதல் அலிஃபை நீக்கினால் , "அல்லாஹ்வுக்கு " என்று பொருள்படும் "லில்லாஹ்" என்று ஆகிறது என்றும் ,

முதல் 'லாமை ' நீக்கினால் "அவனிடம் " என்று பொருள் " லஹு " என்று ஆகிறது என்றும்

இரண்டாவது 'லாமை' நீக்கினால் "அவன்" என்று பொருள்படும் "ஹுவ " என்று ஆகிறது என்றும் அப்துல் கரீம் ஜீலி (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகின்றனர்

"அல்லாஹ்" என்னும் பெயரில் எந்த ஒவ்வொரு எழுத்தை நீங்கினாலும் அச்சொல் அல்லாஹ்வையே குறிக்கிறது என்பதை அறிந்தோம்.

ஒருவேளை "அல்லாஹ் " என்னும் சொல்லிலுள்ள அத்தனை எழுத்தையும் நீக்கி விட்டு , அந்த வெற்று இடத்தை நீங்கள் உற்றுப் பாருங்கள். அப்போது கூட அவன் நம் புறக்கண்ணிற்கு "லா " என்ற இல்லாமையால் மறைந்து அகக் கண்ணில் அவன் இருப்பது தெரியும் !

"அல்லாஹ் " என்னும் சொல்லின் சப்தஒலி வடிவம் உள்ளத்தை ஈர்த்துப் பக்திப் பரவசமுறச் செய்யும் இனிய , கம்பீர ஓசையுடையதாக அமைந்துள்ளது !

அன்னையின் வயிற்றில் இருந்து வெளிவரும் குழந்தையின் மூடிய கைகளில் இதன் வரிவடிவத்தை காணமுடியும்

இசைகளுக்கு எழிலூட்டும் " லகர " ஓசையை இதன் ஒலி வடிவத்திலேயே கேட்கமுடியும் .

' அல்லாஹ் ' ஒற்றைச் சொல்லில் 'லாம் ' என்ற எழுத்து இருமுறை பயன்படுத்தப்பட்ட போதிலும், இச்சொல்லை 'லாமு'டைய தொனியும் 'ளாது ' டைய தொனியும் இல்லாமல் இரண்டிற்கும் நடுவில் உச்சரிக்க வேண்டும் என மக்காவில் வைத்து மாதிஹிர் ரசூல் சதக்கத்துல்லாஹ் அப்பா அவர்கள் பர்ஜன்ஜீ என்னும் அரபி அறிஞருடன் வாதிட்டு வெற்றி கண்டுள்ளார் .

தோற்றுப்போன அந்த அரபி அறிஞர் இவர்களைத் தூற்றி அரபியில் ஒரு கவிதை எழுத , இவர்களின் சகோதரர் ஸலாஹுத்தீன் வலி அவருக்குப் பதிலளிக்கும் முறையில் 403 வரிகள் கொண்ட ஒரு எதிர் கவிதையை அரபியிலேயே எழுதினார்.

அல்லாஹ் என்பதன் சரியான உச்சரிப்பு பற்றி " தவாலீஹுத் தலாலா - பீ - தஸ்ஹீஹில் ஜலாலா " என்னும் பெயருடைய ஒரு நூலையே இவர்கள் எழுதி இருக்கிறார்கள் .

' அல்லாஹ் ' என்ற ஒற்றை

வார்த்தையின் உச்சரிப்புக்காக உலகில் முதன்முதலாக எழுதப்பட்ட நூல் அது .

ரஹ்மத் ராஜகுமாரன்

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 19




றப்புல் ஆலமீன் 1

றப்புல் ஆலமீன் என்னும் சொற்றொடரில் " றப் "என்னும் இரு எழுத்துக்களால் அமைந்து , இறைவனின் இணையற்ற காவல் முறையை காட்டும் இச்சொல் , உலகத்தில் எந்த மொழிகளிலும் உரிய முறையில் மொழிபெயர்க்க இயலாத , முற்றிலும் கருத்து விவரிக்கமுடியாத சொல் என்றால் இந்த 'றப்' தான்.

" ஒவ்வொன்றையும் ஒழுங்குபடுத்தி ஒரு நிலையிலிருந்து இன்னொரு நிலைக்கு உயர்வதற்கு துணைபுரிவதுடன் நுட்பமான தொடக்கத்திலிருந்து முழுமையான நிறைவடைவது வரையில் அதற்கு உதவி புரிதல் " - என்பதாகப் இச்சின்னஞ்சிறு சொல்லுக்கு பொருள் சிலர் கூறுகிறார்கள் . ஆனாலும் இதுவும் அந்த சொல்லின் முழு விளக்கம் அல்ல.

"ஆற்ப ஜல மக்கினியால் அழியாமல் காவல் செய்து,

கர்ப்பமதில் வைத்துருவாய்க் கிளர்ந்ததற் பின்னரும் ,

மெய்ப்புடனே தரணியிலாக்கி "

நம்மை காவல் செய்து வருகின்ற சிறப்பை இச்சொல் சுட்டிக்காட்டுகின்றது உடலின் வளர்ச்சிக்காக காசு இல்லாமல் பெறுகின்ற காற்றும் நீரும் நெருப்பும் மட்டுமின்றி உண்ண உணவும் உடுக்க உடையும் இருக்க வீடும் தருகின்ற காவலன் இவற்றையெல்லாம் மனிதர்களுக்காக மட்டுமின்றி அனைத்து உலகின் எல்லா உயிரினங்களுக்கும் வழங்குகின்ற ஒப்பில்லா ஆற்றல் இறைவனிடத்தில் மட்டுமே அமைந்துள்ளது .

உள்ளத்தின் வளர்ச்சிக்காக உயர்மறை களையும் அருளி , அந்த உயர் மறையின் படி வாழ்ந்து காட்ட நபிமார்களையும் அனுப்பி வைத்ததையும் இந்த 'றப்' என்ற வார்த்தைக்குள் அடங்கும் .

பாருலகம் அனைத்தும் ஒரே குடையின் கீழ் ஆட்சி செய்த ஆற்றல் மிகுந்த நபி சுலைமான் (அலை ) அவர்கள் மண்ணுலக உயிரினங்களுக்கு ஒரு நாள் உணவு தான் அளிப்பதாக கூறி, பெரிய மீன் ஒன்றின் அரும் பசியைக் கூட தணிக்க முடியாமல் , அதனை வாய்பிளந்து நிற்கச் செய்த வரலாறும் கண்டு சிந்திக்கத்தக்கது .

உலகத்தின் உயிரினங்கள் வாழும் சூழ்நிலைக்கேற்ப அவற்றின் வாழ் நிலைகளை அமைத்துள்ள வல்லோனின் எல்லையில்லா ஆற்றல் வியப்புக்குரியது அன்றோ !

ஆழ் பெருங்கடலில் வாழும் பென்னம் பெரிய திமிங்கலங்கள் , ஆப்பிரிக்கா காடுகளில் வாழும் யானைகள், துருவப் பகுதியில் வாழ்கின்ற கரடிகள் , ஆஸ்திரேலியாவில் வாழ்கின்ற கங்காரு, கிர் காட்டில் சிங்கம் , ஆஸ்டிரிச் என்னும் நெருப்பு கோழி , சீனாவின் பாண்டா கரடி ,சஹாரா பாலைவனத்திற்கேற்ற ஒட்டகம் ஆகியவற்றை மட்டுமின்றி குமரிமுனையில் வாழ்கின்ற கொக்குகளையும்,குற்றாலம் மலையிலே குதிக்கின்ற சிங்கவால் குரங்கு களையும் , வண்டலூர் புற்றுகளில் வாழ்கின்ற பாம்புகளையும் , தஞ்சை மாநகர் வயல்வெளிகளில் குதித்தோடும் தவளைகளையும், ஏர்வாடியில் ஊறுகின்ற எறும்புகளையும் அவற்றின் சூழ்நிலைக்கேற்ப இறைவன் உணவளித்து காத்து காவல் செய்கின்றானே இதைத்தான் நாம் "றப்பு" என்கிறோமா ?

இறைவன் பாதுகாக்கும் பாங்கில் பல தனிச்சிறப்புகள் உள்ளன . அவன் பயன் கருதாமல் ஈபவன் ; கேட்காமல் கொடுப்பவன் ; எல்லையில்லாமல் வழங்குபவன் ; வற்புறுத்திக் கேட்டால் வழங்காமல் இருந்ததில்லை .அவன் அன்பர்களுக்கு மட்டுமின்றி அனைவருக்குமே அள்ளி அள்ளி சொரிபவன்.

இத்தகைய " ரூபூபிய்யத் " வாய்க்கப்பெற்றவனே , நம் நாட்டங்களை நிறைவேற்றும் ஆற்றல் படைத்தவன் . ஆகவேதான் திருமறையின் துஆக்கள் எல்லாம் " றப்பீ " " றப்பனா " என்னும் விளித்து கூறப் பெற்று விளங்குகின்றன

தொழுகையின் றுகூவிலும் ,சுஜூதிலும் மொழியப்படும் தொடர்களுள்

"றப்பியல் அளீம் " என்றும் "றப்பியல் அஃலா " என்றும் இச்சொல் இடம்பெற்றிருக்க காண்கிறோம் .

நபி இப்ராஹிம் (அலை) அவர்கள்

"றப்" பிடம் கேட்கும் துஆ

"நிச்சயமாக ( சிலைகள்) இவை எனக்கு எதிரிகளே! உலகத்தாரைப் படைத்து வளர்ப்பவனே எனது இறைவன்.

அவன்தான் என்னைப் படைத்தான். அவனே என்னை நேரான வழியில் நடத்துகிறான்.

அவனே எனக்குப் புசிக்கவும் குடிக்கவும் தருகிறான்.

நான் நோயுற்ற தருணத்தில் அவனே என்னை குணப்படுத்துகிறான்.

அவனே என்னை மரணிக்கச் செய்வான்; பின்னர் அவனே என்னை (மறுமையில்) உயிர்ப்பிப்பான். (குர்ஆன் : 26:81)

இவன்தான் என்னுடைய இறைவனான றப் .

ரஹ்மத் ராஜகுமாரன்

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 22



றப்புல் ஆலமீன் 3

" நாம் இருவர் அல்ல ; மூவர் "

றப்புல் ஆலமீன் என்னும் சொற்றொடரில் " றப் "என்னும் இரு எழுத்துக்களால் அமைந்து , இறைவனின் இணையற்ற காக்கும் முறையை காட்டும் இச்சொல்லானது கடலைப் பிளந்தும் காக்கவும் செய்வான் , மிக எளிய வழிகளிளான சிலந்தி வலையால் கூட காக்கவும் செய்வான் என்பதற்கு ஆதாரமாக ...

மக்கள் மூட நம்பிக்கையில் திளைத்திருந்த காலம் அது. தங்கள் கற்பனையில் உருவான உருவங்களை கடவுளாக வணங்கி வந்தனர்.

மக்கள் மூட நம்பிக்கையில் திளைத்திருந்த காலம் அது. தங்கள் கற்பனையில் உருவான உருவங்களை கடவுளாக வணங்கி வந்தனர். மேலும் தவறான, பாவம் நிறைந்த செயல்களில் ஈடுபட்டு வாழ்ந்தனர்.

அப்போது மக்களை திருத்தி, நல்வழிப்படுத்தி, அவர்களுக்கு நேர்வழிகாட்ட முகம்மது நபி (ஸல்) அவர்களை, தனது தூதராக இறைவன் அனுப்பினான். ஏக இறைவன் அல்லாஹ், தனது இறைச்செய்தியை நபிகளாருக்கு அனுப்பி மக்களிடம் அதை தெரிவிக்கச்செய்தான். ஆனால் மக்கள் இதை ஏற்க மறுத்தனர். அதோடு, நபிகளாருக்கு கடும் துன்பங்களையும் கொடுத்தார்கள்.

நாளுக்கு நாள் இறைமறுப்பாளர்களின் துன்பங்களும், கொடுமைகளும் அதிகரித்தன. ஏக இறைக் கொள்கைகளை மக்களிடம் எடுத்துச்சொல்ல முடியாத அளவுக்கு எதிரிகளின் ஆதிக்கம் மேலோங்கி இருந்தது.

எனவே இறைக்கட்டளைப்படி நபிகளார் தனது தோழர் அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்களுடன் மக்காவில் இருந்து மதீனாவுக்கு புலம் பெயர்ந்து சென்றார். இந்த நிகழ்ச்சி 'ஹிஜரத்' என்று அழைக்கப்பட்டது.

அருமை நாயகம் முகம்மது நபி (ஸல்) அவர்கள் மக்காவில்இருந்து தப்பி விட்டார்கள் என்ற செய்தி அறிந்த எதிரிகள் கோபம் அடைந்தனர். குறிப்பாக அபூஜஹில் ஆத்திரத்தின் உச்சியில் இருந்தான், 'அவர்கள் அவ்வளவு எளிதில் எல்லையை கடந் திருக்க முடியாது. முகம்மதை உயிரோடு பிடித்து கொண்டு வருபவர்களுக்கு தலைக்கு நூறு வெள்ளை ஒட்டகங்கள் ஆக 200 ஒட்டகங்கள் பரிசாக அளிப்பேன்' என்று அறிவித்தான்.

(சில கிதாபுகளில் சிவந்த ஒட்டகங்கள் என்று பதிவாகி இருக்கிறது )

அரேபியர்கள் மத்தியில் வெள்ளை ஒட்டகத்திற்கு என்று தனி மதிப்பு உண்டு. அதுவும் இரு நூறு வெள்ளை ஒட்டகங்கள் என்றால் கேட்கவா வேண்டும். எதிரிகள் அத்தனை பேருமே அண்ணலாரைத் தேடி பல திசைகளில் பயணித்தார்கள்.

ஆனால், அருமை நபிகளும், அபூபக்கரும் பாலைவனத்தில் மாற்றுப் பாதையை தேர்ந்தெடுத்தார்கள். கிட்டத்தட்ட பாதி தூரம் சென்றவர்கள், அந்த பாலைவனத்தைக் கடந்து தவர் மலையில் உள்ள ஒரு குகையை அடைந்தார்கள்.

அந்த குகை மிகவும் பழமை வாய்ந்த பள்ளதாக்கில் இருந்ததால் மிகவும் சிரமப்பட்டு இருவரும் அதில் ஏறினார்கள். தங்களது கால்தடங்கள் கூட தங்களை எதிரிகளிடம் காட்டிக்கொடுத்து விடும் என்று நபிகளார் அஞ்சினார்கள். எனவே அவர்கள் தங்களது கால்விரல் நுனியிலேயே நடந்து வந்தார்கள். இதனால் அவர்களது கால் விரல் வெப்பத்தினால் வெந்து காயங்கள் ஏற்பட்டு ரத்தம் கசிய ஆரம்பித்தது.

அதனைக் கண்ணுற்ற அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்கள் உடனே நபிகளாரை தனது தோள்களில் தூக்கி வைத்துக்கொண்டு அந்த குகையை நோக்கி நடந்தார்கள்.

குகைக்குச் சென்றதும் அண்ணலாரை வெளியே இருக்கச் செய்து விட்டு, தான் மட்டும் உள்ளே நுழைந்தார்கள். அந்த குகை மிகவும் சிறியதாக இருந்தது. இரண்டு நபர்கள் படுப்பதற்கும் மூன்று அல்லது நான்கு நபர்கள் அமரும் இடவசதி கொண்டது.

உள்ளே சென்ற அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்கள் குகையை நன்றாக சுத்தம் செய்தார்கள். குகைகளில் இருந்த ஏராளமான துவாரங்களை தங்களுடைய ஆடையை கிழித்து கிழித்து அடைத்தார்கள். பின்னர் அண்ணலாரை உள்ளே அழைத்தார்கள். அண்ணலார் உள்ளே சென்றதும், களைப்பின் மிகுதியால் அப்படியே துயில் கொள்ள ஆரம்பித்தார்கள்.

அண்ணலாரின் தலையை தன் மடியில் சாய்த்துக்கொண்ட அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்கள், கிழித்து அடைக்க ஆடை இல்லாததால் தன்னுடைய கால் விரல்களால் மீதமிருந்த இரண்டு துவாரங்களையும் அடைத்துக் கொண்டார்கள்.

துரதிர்ஷ்டவசமாக அந்த துவாரத்தில் இருந்த நாகம் ஒன்று அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்களின் பாதங்களை தீண்டி விட்டது. கொடிய விஷம் உடலில் ஏறியதால் சொல்லொண்ணா வலியும் வேதனையும் ஏற்பட்டது. கால்களை அசைத்தால் அது அண்ணலாரின் தூக்கத்தை கெடுத்து விடும் என்று நினைத்து, வலியை பொறுத்துக் கொண்டு அமைதியாக இருந்தார்கள்.

ஆனால், வலியின் வேதனையில் அவர்களது கண்ணிலிருந்து வழிந்தோடிய கண்ணீரை கட்டுப்படுத்த முடியவில்லை. சில கண்ணீர்த்துளிகள் வழிந்தோடி அண்ணலாரின் கன்னங்களில் பட்டு தெறித்தது.

உடனே விழித்துக்கொண்ட அண்ணலார், ‘அபூபக்கரே! என்ன நேர்ந்தது?’ என வினவினார்கள்.

அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்கள், ‘அண்ணலே! எனது காலில் ஏதோ விஷ ஜந்து தீண்டி விட்டது போல் தெரிகிறது. வலியையும் வேதனையையும் என்னால் தாங்கிக்கொள்ள முடியவில்லை’ என்றார்கள்.

உடனே பெருமானார் (ஸல்) அவர்கள் தங்கள் உமிழ் நீரை எடுத்து கடிபட்ட இடத்தில் தடவினார்கள். என்னே ஆச்சர்யம் ! உடனே அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்களின் வலியும் வேதனையும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டது.

அண்ணலாரும், அபூபக்கரும் குகையில் நுழைந்ததும் ஒரு புறா ஜோடி அங்கே கூடு கட்டி அதில் முட்டையிட்டு அடைகாக்க ஆரம்பித்து விட்டது. குகையின் வாயிற் பகுதியில் ஒரு சிலந்தி தன் வலைகளை முழுவதுமாக பின்னி அந்த இடத்தில் எந்தவித அசைவுகளும் ஏற்படவில்லை என்பது போலவும், யாரும் அங்கே நுழைந்திருக்க முடியாது என்பது போன்ற ஒரு மாயத் தோற்றத்தையும் ஏற்படுத்தி விட்டது.

சுகாதாரமற்ற, காற்று வசதி இல்லாத இருண்ட, விஷ ஜந்துக்கள் குடியிருக்கும் அந்த குகையில் இரு நண்பர்களும் தங்கினார்கள்.

இந்நிலையில் அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்களின் மகன் ஹஸ்ரத் அப்துல்லாஹ் (ரலி) அவர்கள், விரோதிகளின் கண்களில் மண்ணை தூவி விட்டு ஒவ்வொரு இரவும் குகைக்கு வந்து மக்கா நகரின் தற்போதைய தகவல்களை சொல்லிச் செல்வார்கள்.

அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்களின் அடிமை ஆமீர் இப்னு பஷீர் என்பவர் பாலைவனப்பகுதியில் ஆடுகளை மேய்த்து வருவது போல குகை இருக்கும் பகுதிக்கு இரவில் வந்து, குகையில் தங்கியிருந்த அண்ணலாருக்கும், அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்களுக்கும் ஆட்டின் பாலைக் கறந்து அருந்த கொடுப்பார்கள்.

பரிசுகளின் அறிவிப்பை தொடர்ந்து மேலும் பலர் அண்ணலாரை எல்லா இடங்களிலும் தேட ஆரம்பித்தார்கள். ஒரு கூட்டத்தினர் அண்ணலார் இருந்த குகை வாசல் வரை வந்து விட்டார்கள். அவர்களின் கால் பாதங்களை அபூபக்கர் சித்திக் (ரலி) அவர்களால் பார்க்க முடிந்தது.

“அண்ணலே! நம்மை எதிரிகள் சூழ்ந்து விட்டார்கள். சற்று குனிந்து பார்த்தால் நாம் பிடிபட்டு விடுவோம். நாம் இருவர்தானே இருக்கிறோம் .என்ன செய்வது ரசூலே” என்றார்கள்.

“மலைக்குகையில் இருந்த இருவரில் ஒருவராக அவர் இருந்த போது, எதிரிகள் வந்து சூழ்ந்து கொண்ட சமயத்தில் தன்னுடன் குகையில் இருந்த தோழராகிய அபூபக்கரை நோக்கி, ‘நீங்கள் கவலைப்படாதீர்கள், நிச்சயமாக அல்லாஹ் நம்மோடு இருக்கின்றான்’ என்று கூறிய போதும், அல்லாஹ் அவருக்கு தன்னுடைய மன நிம்மதியை அளித்தான்”. (திருக்குர்ஆன் 9:40)

அந்த நேரத்தில் எதிரிகளில் ஒருவன், ‘ஏதோ இங்கே ஒரு குகையின் வாசல் போல தோன்று கிறதே’ என்றான். ஆனால் அதற்கு பதிலாக மற்றொருவன், ‘இங்கே புறா கூடு கட்டியுள்ளது, சிலந்தி வலை பின்னியுள்ளது. இதனை அறுத்துக்கொண்டு யாரும் சென்றதற்கான அடையாளமே இல்லையே?. எனவே இங்கே யாரும் இருக்க மாட்டார்கள்’ என்று கூறியபடியே அவ்விடத்தை விட்டு அகன்றார்கள்.

எதிரிகளின் ஆரவாரம் முடிந்ததும், நபிகளார் மீண்டும் தங்கள் பயணத்தைத் தொடர்ந்தார்கள் .

மதீனாவை நோக்கி போய் கொண்டிருக்கும் போது அபூபக்கர் அவர்களுக்கு தெரிந்த ஒருவர் எதிரே வந்தார். ஆனால் நபியவர்களை யாரென்று அவருக்கு தெரியாது.

அப்போது " அபூபக்கர் அவர்களே ! இது யார் ? என்று நபியவர்களை காட்டி அம்மனிதர் கேட்டார்.

"இவர் எனது வழி காட்டி " என்று அபூபக்கர் அவர்கள் கூறிவிட்டு. மதீனாவை நோக்கி பயணத்தை தொடர்ந்தார்கள்.

"அவர் எனது வழி காட்டி என்று நான் சொன்னது, நபியவர்கள் மார்க்கத்திற்கு எனது வழிகாட்டி என்றடிப்படையிலும், அவருக்கு வழி காட்டி என்று சொன்னது பயணத்திற்கான வழி காட்டி என்றடிப்படையிலும் கூறினேன் " என்று சொல்லிக் கொண்டார்கள்.

மதினாவின் எல்லையை அடைந்தார்கள். அந்த எல்லையில் ஒரு இடத்தில் தங்கினார்கள். அதுவே ஹிஜ்ரத்தின் கடைசி இடமாகும். அங்கு தான் வந்து தங்கியதும் தொழுவதற்காக பேரீச்சம் மர இலைகளால் கூரை வேய்ந்த பள்ளியைக் கட்டினார்கள். அதுவே 'மஸ்ஜிதே குபா' என்று அழைக்கப்படுகிறது.

அங்கிருந்து அன்சாரி நண்பர்கள் புடைசூழ அல்லாஹ்வின் தூதர் ஏகத்துவத்தின் தலைநகரம் மதினாவை சென்றடைந்தார்கள். ஹிஜ்ரத் முடிவடைந்தது. இஸ்லாம் என்னும் பேரொளி குன்றிலிட்ட ஒளியாய் பிரகாசிக்கத் தொடங்கியது.

ரஹ்மத் ராஜகுமாரன்

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 25


( றப்புல் ஆலமீன் ) - ஆலமீன் 3



கார்ள் சேகன் **(Carl Sagan)** போன்றவர்கள் 1977-ல் வாயேஜர் 1, 2 போன்ற விண்கங்களை விண்வெளியில் நெடுந்தூரம் செல்ல அனுப்பும் போது வேற்று கிரகவாசிகள் பிரபஞ்சத்தில் இருந்தால், அவர்களுக்கு எப்படி நம்மைப் பற்றி செய்தி தருவது என்று யோசித்தார்கள்.

ஒரு 100 கோடி வருடம் தாங்கக் கூடிய தங்க முலாம் தகட்டில் , குறியீடாக பிரபஞ்சத்தில் நம் பூமியின் இடம் இதிலிருந்து கிளம்பும் விண்கலம் மற்றும் நம் உலகத்தின் அத்தனை வித சங்கீதங்களுக்கும் ஒரு சாம்பிள் .இதில் இந்திய ராகம் ஒன்று உள்ளது .

இந்த வாயேஜர் 1, 2 சூரிய மண்டலத்தை தாண்டி 1800 கோடி கி.மீக்கும் மேலாக இன்னும் பயணிக்கிறது . பயணிக்கட்டும். அதற்குள் நாம் 1400 வருடங்களுக்கு முன் போய் விட்டு வருவோம் .

மிஹ்ராஜ் விண்ணேற்றத்தின் போது, ஓரிடத்தில் ஒட்டகங்கள் சாரி சாரியாகச் செல்லவும் ,ஒட்டகங்கள் ஒவ்வொன்றின் மீதும் அதை ஓட்டுபவர் அமர்ந்திருக்கவும் அதன் இரு பக்கங்களிலும் தொங்கிக் கொண்டிருந்த இரு பொதிகளையும் பற்றி நபி (ஸல்) அவர்கள், வானவர் ஜிப்ரயீல் (அலை) அவர்களிடம் கேட்க,

"எனக்கு இது பற்றி யாதொன்றும் தெரியாது .நான் இங்கு வந்த காலத்திலிருந்து இவ்வாறுதான் சென்று கொண்டுள்ளது. தாங்கள் விரும்பின் இது பற்றி இறைவனிடமே கேளுங்கள்" என்று பதிலுரைத்தார்கள் .

அவ்வாறே நபி (ஸல்) அவர்கள் இறைவனிடம் அது பற்றி வினவ, இறை ஆணைப்படி அவ் ஒட்டகம் ஓட்டி தம் ஒட்டகத்தை நபி(ஸல்) அவர்களின் அருகே ஓட்டிச் சென்று அதன் இரு பக்கங்களில் தொங்கிக் கொண்டிருந்த பொதியில் ஒன்றை திறக்க அதில் ஒரு கோள வடிவ கிரகம் தென்பட்டது .

அக்கோளத்தை நபி (ஸல்) அவர்கள் முன் வைக்கப்பட்டு அதன் திறவுகோலையும் அவர்களின் கையில் கொடுக்க, நபி (ஸல்) அவர்கள் அதனைத் திறந்து கொண்டு உள்ளே சென்றனர்.

அங்கு குதிரையுடன் நின்று கொண்டிருந்த வீரர் ஒருவர் நபி(ஸல்) அவர்களுக்கு ஸலாம் உரைத்து, அக்குதிரையையும் அவர்களிடம் ஒப்படைத்தார். அதன் மீது ஏறி சென்ற நபி(ஸல்) அவர்கள் அங்கு நாடுகளும்

கண்டங்களும், நகரங்களும் ,காடுகளும், கழனிகளும் இருப்பதையும், அங்கு மக்கள் இறைவனைத் துதித்துக் கொண்டும் , தம் மீது ஸலாவாத்து ஓதிக் கொண்டும் இருப்பதைக் கண்டு பெரும் வியப்பெய்தினர்.

இதிலிருந்து எண்ண முடியாத கோளங்களும் அவற்றில் மனிதர்களும் உள்ளனர். அவர்களுக்கும் நபி (ஸல்) அவர்களே நபியாகவும் ரஸூலாகவும் இருக்கிறார்கள் .

விஞ்ஞானிகளும் பிரபஞ்சத்திலுள்ள எண்ணிலடங்கா கோலங்களில் நம் பூமியை போன்று தட்ப வெப்ப நிலையை பெற்றுள்ள கோலங்கள் எத்தனை எத்தனையோ உள்ளன என்றும் அவற்றிலெல்லாம் நிச்சயம் மனித உற்பத்தி தோன்றியிருக்க வேண்டும் என்றும் அதில் மனிதர்கள் வாழ்ந்து கொண்டிருப்பார்கள் என்றும் கூறுகின்றனர்.

அண்ணலெம் பெருமானார் (ஸல் ) அவர்கள் அகில உலகங்களுக்கும் அருளப்பெற்ற அருட்பெருங்கொடை அன்றி வேறென்ன ?

وَمَاۤ اَرْسَلْنٰكَ اِلَّا رَحْمَةً لِّلْعٰلَمِيْنَ

(நபியே!) உங்களை அகில உலகத்தாருக்கு ஓர் அருளாகவேயன்றி நாம் அனுப்பவில்லை."

(அல்குர்ஆன் : 21:107)

ஆதாரம் : நபி ஸலவாத்தின் நற்பலன்கள் - அப்துற் - றஹீம்

விஞ்ஞானிகளும் பிரபஞ்சத்திலுள்ள எண்ணிலடங்கா கிரகங்களில் நம் பூமி போன்று தட்பவெப்ப நிலையைப் பெற்றுள்ள கிரகங்கள் எத்தனையோ உள்ளன என்றும் அவற்றில் நிச்சயம் மனித வாழ்வும் இருக்கும் என்றும் அவர்களைத் தேடிதான் வாயேஜர் 1, 2 விண்கலங்கள் விண்வெளிக்கு அனுப்பப்பட்டுள்ளது.

நபி (ஸல்) அவர்கள் திறந்து பார்த்த கிரகத்தை இன்ஷா அல்லாஹ் நம் வாயேஜர் விண்கலம் ஒரு சமயம் எட்டலாம். அக்கிரகவாசிகளின் தகவல் தொடர்பு நமக்கு கிட்டலாம் . அம்மக்களுக்கும் நபியாக வந்த நம் அண்ணலெம் பெருமானார் (ஸல்) அவர்களை ஜியாரத் செய்வதற்கு நம் பூமிக்குக் கூட வரலாம் ! நம் கண்களுக்கு தெரியாத அவர்கள் வந்து கொண்டும் போய் கொண்டிருக்கலாம் !

وَرَفَعْنَا لَـكَ ذِكْرَكَ

உங்களுடைய கீர்த்தியையும் நாம் #உயர்த்தினோம். (அல்குர்ஆன் : 94:4)

என்று அண்ணலெம் பெருமானார் ஸல்லல்லாஹு அலா முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் புகழை பூலோகத்தில் மட்டுமல்லாமல் வேற்றுக் கிரகங்களிலெல்லாம் இறைவன் #உயர்த்தி இருப்பது நம்மை இன்னும் வியப்பில் ஆழ்த்துகிறது !

ரஹ்மத் ராஜகுமாரன்

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 27



الرَّحْمٰنِ الرَّحِيْمِۙ

(அவன்தான்) அளவற்ற அருளாளன். நிகரற்ற அன்புடையவன்.

(அல்குர்ஆன் : 1:3)

அளவற்ற அருளாளன் 2

இது அல்லாஹ்வின் திருப்பெயர்களில் ஒன்றாகும் . இவ்வுலகில் நல்லோர் தீயோர் ஆகிய அனைவருக்கும் எவ்வித பாகுபாடுமின்றி அருள்பாலிப்பவன் என்பது இதன் பொருளாகும் .இதுகூட அல்லாஹ்வின் அளப்பெரும் பேரருளை வர்ணிக்க போதுமானதாக இல்லாமல் பிஸ்மியில் "ரஹீம் " என்று சொல்லும் சேர்க்கப்பட்டது எனக் கூறுவர் .

"ரஹ்மான் " - " ரஹீம் " சொற்கள் " ரஹ்ம்" என்னும் மூலத்தில் இருந்து பிறந்தது என்றும் , ரஹ்மான் என்பது தன்னிடம் ரஹ்மத்தை உடையவன் அதாவது அன்பாளன் என்றும் ரஹீம் என்பது ரஹ்மத்தை பிரயோகித்து படைப்புகள் அனைத்தையும் அதனால் நலம்பெற செய்பவன் - அதாவது அன்பளிப்பவன் என்றும் மௌலானா அபுல் கலாம் ஆசாத் அவர்கள் கூறுகிறார்கள்

ரஹ்மான் என்பது ஜமாலும், ஜலாலும் நிறைந்த கருணாகரன் என்றும் ரஹீம் என்பது ஜமால் நிறைந்த கருணாகரன் என்றும் பொருள் விவரிக்கிறார் அறிஞர் கரீம் கனி (ரஹ்) அவர்கள்

ரஹ்மான் என்பது ரஹீம் என்ற சொல்லை விட மேலானது என்றும் அதில் ஐந்து எழுத்துக்கள் உள்ள பொழுது , ரஹீம் என்ற சொல்லில் நான்கு எழுத்துக்களை உள்ளன என்றும் மேலும் ரஹ்மான் என்னும் சொல் இறைவனின் அளப்பெரும் கருணையைக் குறிக்கிறது என்றும் பைழாவி (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்

ரஹ்மான் என்ற சொல்லின் பொருள் ரஹீம் என்ற சொல்லின் பொருளை விட ஆழமும் விரிவும் உடையது என்றும் , எனவேதான் ரஹ்மான் என்னும் சொல்லுக்கு இவ்வுலகிலும், மறுவுலகிலும் அருள்பாலிப்பவன் என்றும் ,

ரஹீம் என்ற சொல்லுக்கு அவ்வுலகில் அருள்பாலிப்பவன் என்றும் மக்கள் பொருள் விவரிக்கிறார்கள் என்றும் ஸமக்ஷரி தம்முடைய திருக்குர்ஆன் விரிவுரையும் குறிப்பிடுகின்றார்.

மேலும் ரஹ்மான் என்னும் சொல்லுக்குத் தன்னிடம் கேட்காதவர்கள் மீது கடும் சினம் கொள்பவன் என்றும் பொருள் விவரிக்கப்படுகின்றது .

இந்த வெஞ்சினமும் அல்லாஹ் தன் அடியார்கள் மீது கொண்டுள்ள அளப்பரும் அன்பையே தானே காட்டுகிறது .

இஸ்லாமியக் கலைக்களஞ்சியம் 4 - பாகம்

- அப்துற் – றஹீம்

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 30

\ 


مٰلِكِ يَوْمِ الدِّيْنِ

தீர்ப்பு நாளின் அதிபதி(யும் அவனே)

(அல்குர்ஆன் : 1:4) பகுதி 2

இவ்வுலக வாழ்வு முடிந்து மறுமையில் மீண்டும் எழுப்பப்பட்டு, அவரவர் நன்மை தீமைகள் விசாரிக்கப்பட்டு , கூலி அளிக்கப்படும் நாளில் , இறைவன் ஒருவனைத் தவிர யாருக்கும் எந்த அதிகாரமும் இல்லாததால் , நியாயத் தீர்ப்பு நாளின் அதிபதி என்று சொல்லப்பட்டிருக்கிறது .

இந்த ஆயத்தில் "மாலிகி " என்று

அருளப்பட்டிருக்கிறது இவ்வாறு ஓதுவதில் ஒரு எழுத்து அதிகமாகிறது . திருக்குர்ஆனில் ஒரு எழுத்துக்கு 10 நன்மைகள் என்றபடி இதில் 10 நன்மைகள் அதிகமாவதைக் கருதி இவ்வாறு ஓதுவது சிறந்தது என்று சொல்லப்பட்டிருக்கிறது .

நான் திருக்குர்ஆனை ஓதும் போது 'மாலிகி' என்று ஓதுவது வழக்கம் . இந்நிலையில் ஒரு பெரியார் நேரில் என்னை நோக்கி - " மலிகி "என்று ஓதினால் அர்த்தத்தில் 'மாலிகி' என்ற சொல்லை விட மிகவும் அர்த்த புஷ்டியுள்ளதாகும்" ஆகும் என்று கூறினார் .

எனவே நான் பழைய வழக்கத்தை விட்டுவிட்டு அன்று முதல் " மலிகி " என்று ஓதி வந்தேன் . இந்நிலையில் என் கனவில் மகான் ஒருவர் தோன்றி ,

"நீ உமக்குரிய நன்மையிலிருந்து பத்து நன்மைகளை ஏன் குறைத்துக் கொண்டீர் ? திருக்குர்ஆன் ஒருவர் மனனம் செய்தால் அவருக்கு ஒரு எழுத்துக்கு 10 நன்மைகள் எழுதப்பட்டு , 10 தீமைகள் அழிக்கப்படுகின்றன என்றும் , 10 பதவிகள் உயர்த்தப்படுகின்றன என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியிருப்பதை நீர் கேள்வி கேள்விப்பட்டதில்லையா ? "என்று கேட்டார்கள் .

உடனே நான் விழித்துவிட்டேன் அதன்பிறகும் பழைய வழக்கப்படி 'மாலிகி ' என்று ஓதாமல் புதிய வழக்கப்படி " மலிகி " என்றே ஓதி வந்தேன்.

மற்றொரு சமயம் அதே மகான் என் கனவில் தோன்றி , "ஏன் அந்த புது வழக்கத்தை விடாமல் இருக்கின்றீர் ? திருக்குர்ஆனை கண்ணியமாக ஓதுங்கள் என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியிருப்பது நீர் கேள்விப்பட்டதில்லையா ? என்று கேட்டார்.

அதன் பிறகு இமாம் ' குத்ரப் ' அவர்களிடத்தில் இதுபற்றி கேட்டேன்

' மலிகி ' என்று ஓதுவதே அர்த்தத்தில் சிறந்தது . மற்றபடி நீர் எப்படி ஓதினாலும் சரியே " என்று கூறினார்கள் என்று இப்னு ஷுஜா ரஹ்மத்துல்லாஹி கூறியுள்ளார்கள் .

ரஹ்மத் ராஜகுமாரன்



சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 32

مٰلِكِ يَوْمِ الدِّيْنِ

தீர்ப்பு நாளின் அதிபதி(யும் அவனே)

(அல்குர்ஆன் : 1:4) பகுதி 4

தீர்ப்பு நாள் என்பது குறித்து பேசிவரும் நாம் , அந்த நாளின் தன்மை , அந்த நாளின் அளவு போன்றவற்றை ஆராய்வோம் .

இந்த உலகில் ஒரு நாள் என்பது சூரியன் உதித்தது முதல் அது வளர்ந்து, மறைந்து, மீண்டும் உதயமாகும் நேரம் வரையிலான 24 மணி நேர அளவை 'ஒரு நாள் ' என்று கணக்கிடுகிறோம் . இந்தக் கணக்கீடு விஞ்ஞான , பூகோள , அறிவியல் கணிப்புகளால் ஏற்படுத்தப்பட்டவை . அதற்காக வரையறுக்கப்பட்ட நிகழ்வுகளாக சூரியன் உதயம் , பகல் , இரவு , நிலவு , நட்சத்திரங்கள் என பல காரணங்களை உள்ளடக்கி நேரத்திற்கும் காலத்திற்கும் ஒரு வரையறை கொடுத்து ஒரு நாள் என்பது ஒரு தினம் என பேசுகிறோம் .

அதே நேரம் " மாலிகி யவ்மித்தீன் " என்ற தீர்ப்பு நாள் குறித்து குர்ஆன் விரிவுரையாளர்கள் சொல்வதையும் கவனிக்க வேண்டும் . அவர்கள் தீர்ப்பு நாளின் அதிபதி என்று சொல்லாமல் தீர்ப்பு நாளில் நடைபெறும் நிகழ்வுகளுக்கு அதிபதி என்று கூறுகிறார்கள் . ஏனென்றால் அவனைத்தவிர காலத்தை யாரும் உரிமை கொண்டாட முடியாது .

ஆனால் தீர்ப்பு நாளின் அதிபதிக்கு முன்னால் , நம் வரையறைகள் செல்லுபடியாகாது . கால அளவுகள் வரையறுக்கப்படாதது . நம்மால் செய்ய இயலாதவைகளை அங்கு அல்லாஹ் மிக இலகுவாக செய்வான் . நாம் சிந்தித்து இருக்கவே மாட்டோம் ; கற்பனை கூட செய்திருக்க மாட்டோம் அத்தகைய பிரம்மாண்டமான மாற்றங்கள் அங்கே வெகு இயல்பாக நிகழும் .

காரணம் காலத்தை அல்லாஹ்தான் படைத்தான் . அந்த காலமும் இடமும் அல்லாஹ்வுக்கு எல்லை வகுக்க முடியாது. காலத்தின் வரையறைக்கும் இடத்தின் வரையறைக்கும் அல்லாஹ் உட்படாதவன் .

இவ்வாறு தான் தீர்ப்பு நாளின் அதிபதி என்று அல்லாஹ்வின் சொல்லுக்குப் பொருள் உதாரணமாக , கடந்த காலத்தை திருப்பிக் கொண்டு வர நம்மால் இயலாது. அந்த சக்தியும் நமக்கில்லை. ஆனால் அங்கே அது சுலபமாக நிகழும் . அல்லாஹ் கடந்த காலத்தை திருப்பிக் கொண்டு வந்து நிறுத்துவான். நாம் வாழ்ந்த நாட்களை அப்படியே திரும்பி வரச் செய்து அந்த நாட்களில் நாம் செய்தவற்றை கண்முன்னே காண்பிப்பான் .

وَيَسْتَعْجِلُوْنَكَ بِالْعَذَابِ وَلَنْ يُّخْلِفَ اللّٰهُ وَعْدَهٗ وَاِنَّ يَوْمًا عِنْدَ رَبِّكَ كَاَ لْفِ سَنَةٍ مِّمَّا تَعُدُّوْنَ

(நபியே!) அவர்கள் வேதனையைத் தேடி உங்களிடம் அவசரப்படுகின்றனர். (நீங்கள் கூறுங்கள்: உங்கள் மீது வேதனை இறக்குவதாக) அல்லாஹ் செய்த வாக்குறுதியை அவன் மாற்ற மாட்டான். நிச்சயமாக உங்களது இறைவனிடத்தில் ஒரு நாள் நீங்கள் எண்ணும் (உங்களுடைய) ஆயிரம் வருடங்களுக்குச் சமமாகும்.

(அல்குர்ஆன் : 22:47)

تَعْرُجُ الْمَلٰٓٮِٕكَةُ وَ الرُّوْحُ اِلَيْهِ فِىْ يَوْمٍ كَانَ مِقْدَارُهٗ خَمْسِيْنَ اَلْفَ سَنَةٍ

அந்நாளில் மலக்குகளும், ஜிப்ரயீலும் அவனிடம் போய்ச் சேருவார்கள். (அந்நாள்) ஐம்பதினாயிரம் வருடங்களுக்குச் சமமாக இருக்கும்.

(அல்குர்ஆன் : 70:4)

குர்ஆன் கூறுவதை பார்த்தீர்களா ? ஒருநாள் என்பதற்கு அல்லாஹ் கூறும் வரையறைகளை பார்த்தீர்களா ? ஆச்சரியம் தோன்றுகிறதா ?இவையாவும் சாத்தியமே காலத்தையும் , நேரத்தையும் படைத்தவன் அந்த அல்லாஹ் .அவன் ஆற்றலுக்கு அடிபணிந்து நிற்பவைகளே காலங்களும் நேரங்களும்.

அதனாலதான் காலத்திற்கும் , நேரத்திற்கும் வரையறைகளை மாற்றி அமைக்க முடிகிறது. அது அவனால் மட்டுமே முடியும் . அவன் நாடியபடி எந்த வரையறைகளையும் மாற்றி அமைக்க முடியும் .

இப்போது நீங்கள் சொல்லுங்கள் தீர்ப்பு நாள் என்பது எப்படிப்பட்டதாக இருக்கும் என்பதை யூகிக்க முடிகிறதா ?

- ஆதார நூல் : தஃப்ஸீர் அஷ்ஷஃராவீ

மேலும் விபரங்களுக்கு "காலம் " பற்றி எனது பதிவுகளை பார்வையிடவும்

ரஹ்மத் ராஜகுமாரன் .

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 35

إِيَّاكَ نَعْبُدُ وَإِيَّاكَ نَسْتَعِيْنُ

"உன்னையே வணங்குகிறோம்; உன்னிடமே உதவி தேடுகிறோம்"

(அல்குர்ஆன் : 1:5) பகுதி 3

"உன்னையே வணங்கி இம்மை மறுமை காரியங்களிலும் எங்களுக்கு சீர்திருத்தம் உண்டாவதற்காக உன்னிடமே உதவி தேடுகிறோம் " என்பதே வஇய்யாக நஸ்தஈன் "உன்னிடமே உதவி தேடுகிறோம் " என்பது தாத்பரியமாகும் .

ஒரு அடியான் அல்லாஹ் அல்லாத வேறு யாரையும் வணங்காதிருப்பதும், வேறு யாரிடமும் தன் தேவையை கேளாதிருப்பதுமே இவ்விரு வாக்கியங்களின் அர்த்தமாகும் .

இமாம் சுஃப்யானுத் தவ்ரீ ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் மஃரிப் தொழுகையை இமாமாக நின்று நிறைவேற்றி வைத்தார்கள் .

அப்பொழுது தொழுகையில் 'இய்யாக நஃபுது வஇய்யாக நஸ்தஈன் ' என்று ஓதிய உடனே மெய்மறந்து கீழே விழுந்து விட்டார்கள் . பின் மூச்சை தெளிந்த பிறகு விழுந்த காரணத்தைப் பற்றி கேட்கப்பட்டது,

அதற்கு ' உன்னிடத்தில்தான் உதவி தேடுகின்றோம் ' என்று சொல்கிறோம் "அவ்வாறெனில் அரசர்களிடமும் மருத்துவர்களிடமும் எதற்காக நீர் போகின்றீர் ? " என்று இறைவன் கேட்பதைப் பயந்து விழுந்துவிட்டேன் என்று கூறினார்கள் .

ரஹ்மத் ராஜகுமாரன்

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 38

اِهْدِنَا الصِّرَاطَ الْمُسْتَقِيْمَۙ

நீ எங்களை நேரான வழியில் நடத்துவாயாக!

(அல்குர்ஆன் : 1:6) பகுதி 1

அல்லாஹ் ரப்புல் ஆலமீனை 'இலாஹ் ' என்றும் ' ரப்பு ' என்றும் நீங்கள் ஈமான் கொண்டு ஏற்றுக் கொண்டபின் இலாஹிய்யத்தின் வெகுமதிகளையும் , ரூபூபிய்யத்தின் அருட்கொடைகளையும் , படைப்பினங்கள் மீதான அல்லாஹ்வின் ரஹ்மத்தையும் உங்கள் கவனத்தில் கொண்டு வந்த பின் ...

" இய்யாக நஅபுது " என்று கூறி வணங்குதல் என்பது அல்லாஹ்வுக்கே என்றும் அந்த வணக்கத்தில் அல்லாஹ்வுக்கு யாரையும் இணையாக்க மாட்டேன் என்று உறுதிகூறி "வஇய்யாக நஸ்தஈன் " அல்லாஹ்விடம் மட்டுமே உதவி தேட வேண்டும் என்றும் பிரகடனப்படுத்திய பின் நீங்கள் அல்லாஹ்வின் அடியான் "இபாதுல்லாஹ் " என்ற தகுதியை பெற்று விட்டீர்கள் .

இப்போது அல்லாஹ் உங்களுக்கு ஒரு துஆவை கற்றுத் தருகிறான் .அந்த துஆ தான் ஒவ்வொரு முஃமீனுக்கும் தேவையானதும் , அவசியமானதும் ஆகும்.

' இஹ்தினஸ் ஸிராத்தல் முஸ்தகீம் '-

(நீ எங்களை நேரான வழியில் நடத்துவாயாக!) என்ற அல்லாஹ்வின் சொல்லில் ஸிராத் என்பது என்னவென்றால் அது நமது இலக்கு கொண்டு சேர்க்கும் பாதையாகும் .

அதை அல்லாஹ் "ஸிராத்தல் முஸ்தகீம்" என்று சொல்வதற்கான காரணம் அல்லாஹ் அந்தப் பாதையை நாம் கடந்து செல்லும் வழியில் வைத்துள்ளான் .

அது மிகவும் குறுகிய பாதை ; எனினும் அதுவே இறுதியில் நாம் சென்று சேரும் இடத்திற்கு கொண்டு சேர்க்கும் பாதையாகும் . அந்த பாதை மிகவும் குறுகிய இரு புள்ளிகளுக்கு மத்தியில் சுருக்கப்பட்டதாகும் . அவ்விரு புள்ளிகளில் எந்த புள்ளியில் நம் பாதை மாறுகிறதோ அந்தப் பாதையே நாம் இறுதியாக சேருமிடத்தை அது சொர்க்கமா நரகமா என்பதை தீர்மானிக்க இடமாகும் .

அது நேரான பாதை . வளைவு நெளிவுகள் இல்லாத பாதை . எனினும் அது சின்ன குறுகலான மாற்றுப்பாதை உடையதாகும் . நேரான பாதைக்கும் பாதையை மாற்றி கொண்டு செல்லும் பாதைக்கும் இடையே பெரிய வளைவுகள் அல்லது பிரிவுகள் இருக்கும் என்று எண்ணிவிட வேண்டாம் . அது மிகவும் நுட்பமானது . எளிதாக விளங்க முடியாது . பார்வையில் தென்படாது எனினும் அதில் இரு பாதைக்கான பிரிவு இருக்கும் . அந்த நுட்பமான பிரிவு பாதையின் தொடக்கத்தில் தெரியாது . ஆனால் செல்லச்செல்ல வெகு தூரமான இடைவெளியை ஏற்படுத்திவிடும்.

ரயில்வே இருப்புப் பாதையை நீங்கள் கவனித்தால் இது மிக இலகுவாக புரிந்து கொள்ள முடியும் .ரயில் சென்று கொண்டிருக்கும் பாதையிலிருந்து வேறு பாதைக்கு மாற வேண்டிய இடத்தில் அது மாறுவதற்காக மிகப்பெரிய வளைவுகள் இருப்பதில்லை . மாற வேண்டிய இடத்தின் ஆரம்பத்தில் சில மில்லிமீட்டர் அளவில் மாறிச் செல்லும் . அதாவது ஆரம்ப இடத்தில் மிகக் குறுகலான ஒரு மாற்று மட்டுமே அங்கே இருக்கும் .

அந்த சில மில்லி மீட்டரில் மாறும் ரயில் செல்லச் செல்ல இடைவெளி மிக மிக தூரம் ஆகிவிடும் . இப்போது ரயில் சென்றடைந்துள்ள தூரத்திலிருந்து கவனித்தால் அதோ அந்த குறுகிய ஒரு இடம் பாதை மாற்றியதே அந்த இடத்திலிருந்து பிரிந்த இரு பாதைகளும் பல நூறு மைல்கள் இடைவெளி தூரமாக இருக்கும் .

இவ்வளவு தூர இடைவெளியில் அமைந்துள்ள இருவேறு பாதைகளை மாற்றிய அந்த இடம் மிகச் சிறிய இணைப்பாக இருந்தது . மாறுவதே தெரியாத வகையில் மிக இலகுவாக இருந்தது . மாறியபின் பாதைகளின் தூரம் பலமைல் இடைவெளியில் பிரிந்து சென்றுவிட்டது .

உதாரணமாக சென்னை எழும்பூர் ரயில் நிலையத்தில் இருந்து புறப்பட்ட ரயில்கள் இரண்டு ஒரு கிராசிங்கில் பாதை மாற்றப்படுகின்றன . அந்த இடத்தைப் பார்த்தால் மிகச் சிறிய ஒரு இணைப்பு மட்டுமே இருக்கும் . அதில் கடந்த இரு ரெயில்களில் ஒன்று சேலம் சென்றடைகிறது . மற்றொன்று ராமேஸ்வரம் சென்று அடைகிறது . சிறிய பிரிவில் ஒரே இடத்தில் பிரிந்த இந்த இரண்டு ரயில்களும் வெகு தூரம் கடந்தபின் மாறிப்போன இடங்கள் பல நூறு கிலோமீட்டர் ஆகிவிடும் .

இது போன்றே 'சிராத்துல் முஸ்தகீம் ' பாதையில் மிகக் குறுகலான ஒரு இடத்தில் பிரியும் . அந்த பிரிவில் செல்லும் பாதைகளில் ஒன்று சொர்கத்திற்கு கொண்டு சேர்க்கும் மற்றொன்று நரகத்தில் கொண்டு சேர்க்கும் .எனவேதான் அந்த இடம் மிக முக்கியமானதாக பார்க்கப்படுகிறது .

இங்கே பாதை பிரியும் இடம்தான் நம் மறுமை வாழ்க்கையை தீர்மானிக்கும் எனவே அந்த இடத்தில் நாம் தடுமாறி விடாமல் இருக்க , சரியான வழியை தேர்ந்தெடுத்து செல்ல நாம் நிதானித்து செயல்பட வேண்டும் . அந்த இடத்தில்தான் அல்லாஹ்வின் மிகப்பெரிய உதவியும் , வழிகாட்டலும் நமக்குத் தேவை . அதைத்தான் அல்லாஹ் துஆவாக ஆக்கி "இஹ்தினஸ் ஸிராத்தல் முஸ்தகீம் " என்று சொல்லிக் கொண்டே இருக்கும் வகையில் சூரத்துல் பாத்திஹாவில் ஆக்கி வைத்தான் .

ரஹ்மத் ராஜகுமாரன்

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 41

اِهْدِنَا الصِّرَاطَ الْمُسْتَقِيْمَۙ

நீ எங்களை நேரான வழியில் நடத்துவாயாக!

(அல்குர்ஆன் : 1:6) பகுதி 4

இறைநம்பிக்கையாளர் நேர்வழியில் தானே இருந்து கொண்டிருக்கிறார் ! இந்நிலையில் அவர் ஒவ்வொரு தொழுகையிலும் " நேரான வழியில் செலுத்துவாயாக - நேரான வழியில் செலுத்துவாயாக ! " என்று கூறுவது எப்படி பொருந்தும் ?

நேர்வழியில் நிலை குலையாமல் நீடித்து நிலைத்து இருக்க வேண்டுமானால் , ஒவ்வொரு வினாடியும் அல்லாஹ்வின் உதவி மனிதனுக்குத் தேவை . அவ்வாறு நேரிய வழியில் நிலைத்திருக்க உதவிடுமாறு எல்லா நேரங்களிலும் பிரார்த்திக்க வேண்டும் என இதன் மூலம் அல்லாஹ் நமக்கு வழி காட்டுகிறான் . இதற்குச் சான்றாக மற்றொரு வசனத்தையும் கூறுகிறேன்

" நம்பிக்கையாளர்களே! நீங்கள் அல்லாஹ்வையும், அவனுடைய தூதரையும், அவன் தன்னுடைய (இத்)தூதர் மீது அருளிய இவ்வேதத்தையும், இதற்கு முன்னர் அவன் அருளிய வேதங்களையும் நம்பிக்கை கொள்ளுங்கள் "

(அல்குர்ஆன் : 4:136) என்று அல்லாஹ் கட்டளையிடுகிறான் .

அல்லாஹ்வையும் , அவன் தூதரையும் முன் வேதங்களையும் இறைவன் நம்பச் சொல்வது , நபிமார்களைத்தான் , இறை நம்பிக்கையாளர்களைத்தான் இவர்களை விளித்து , இவற்றை நம்புங்கள் என்று கூறினால் , இந்த நம்பிக்கையில் நிலைத்து நிற்பதற்கொத்த செயல்களில் ஈடுபடுங்கள் என்று தானே பொருள் .

அதுமாதிரிதான் " நீ எங்களை நேரான வழியில் நடத்துவாயாக! " என்று அல்லாஹ் தன்னிடம் ஒவ்வொரு தொழுகையிலும் வேண்டச் சொல்கிறான் .

இக் கருத்தையொட்டிய நபிமொழி

5431. முஃகீரா பின் ஷுஅபா (ரலி) அவர்கள் கூறியதாவது:

நபி (ஸல்) அவர்கள் தம் பாதங்கள் புடைக்கும் அளவுக்கு நின்று தொழுவார்கள்.

அவர்களிடம், "இந்த அளவுக்கு நீங்கள் சிரமம் எடுத்துக்கொள்ள வேண்டுமா? தங்களின் முந்தைய மற்றும் பிந்தைய தவறுகளை அல்லாஹ் மன்னித்துவிட்டானே?" என்று கேட்கப்பட்டது.

அதற்கு அவர்கள், "நான் நன்றியுள்ள அடியானாக இருக்கவேண்டாமா?" என்று கேட்டார்கள்.

ரஹ்மத் ராஜகுமாரன் .

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 44

صِرَاطَ الَّذِيْنَ اَنْعَمْتَ عَلَيْهِمْ ۙ

" (அவ்வழி) எவர்களுக்கு நீ அருள்புரிந்தாயோ அவர்கள் (சென்ற) வழி " - (அல்குர்ஆன் : 1:7) பகுதி 3

இறைவனின் அருட்கொடைகளை வீண் விரயம் செய்யாதீர்கள் !

மதிய வேளை. வீட்டில் உணவு எதுவும் இருக்கவில்லை. பசி வயிற்றைக் கிள்ளியது. வீட்டைவிட்டு வெளியே வந்தார்கள் இறைவனின் இறுதித்தூதர் (ஸல்) அவர்கள். பள்ளிவாசலில் அபூபக்கர் (ரலி) அவர்களைச் சந்திக்கின்றார்கள்.

“என்ன இந்த நேரம் வெளியே வந்துள்ளீர்கள்?” என்று நபி (ஸல்) அவர்கள் அபூபக்கர் (ரலி) அவர்களிடம் கேட்க, “இறைத்தூதர் அவர்களே! தாங்கள் எதற்காக வீட்டைவிட்டு வெளியே வந்தீர்களோ, அதற்காகவே நானும் வந்துள்ளேன்” என்று அபூபக்கர் (ரலி) பதிலளித்தார்.

“சரி, வாருங்கள் நடக்கலாம்” என்று இருவரும் நடக்க, சற்று நேரத்தில் அங்கே உமர் (ரலி) அவர்களும் வெளியே வருகின்றார்.

“என்ன இந்த நேரம் வெளியே வந்துள்ளீர்கள்?” என்று நபிகளார் (ஸல்) அவர்கள் உமர் (ரலி) அவர்களிடம் கேட்க, “அல்லாஹ் மீது ஆணை! நீங்கள் இருவரும் எதற்காக வெளியே வந்தீர்களோ, அதற்காகவே நானும் வெளியே வந்துள்ளேன்” என்று அவரும் பதிலளித்தார்.

இவர்கள்தான் இஸ்லாமிய உலகின் முப்பெரும் ஆளுமைகள். அன்றைய தினம் இந்த மூவருக்குமே உண்பதற்கு வீட்டில் உணவு எதுவும் இருக்கவில்லை என்பது எவ்வளவு கவலைக்குரிய விஷயம்.

அபூஹைஸம் அல் அன்சாரி (ரலி) என்ற நபித்தோழரின் வீட்டில் மூவருக்கும் விருந்து. பலவகைப் பேரீச்சம் பழங்கள், ரொட்டி, ஆட்டிறைச்சி, குளிர்ந்த நீர் முதலியன விருந்தில் உணவாகக் கொடுக்கப்பட்டன.

அவற்றை உண்டபின் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “மறுமை நாளில் விசாரணையின்போது இந்த அருட்கொடைகளைக் குறித்து அல்லாஹ் விசாரிப்பான்”.

(அதாவது சற்றுமுன் நாம் பசியோடு இருந்தோம். இப்போது இந்த உணவு நமக்குக் கிடைத்துள்ளது. எனவே இந்த உணவு நமக்குக் கிடைத்தமைக்காக இறைவனுக்கு நாம் நன்றி செலுத்தினோமா? புசிக்கும்போது வீணடித்தோமா? இந்த உணவை உண்டபின் கிடைக்கும் உடல் ஆரோக்கியத்தின் மூலம் பயனுள்ள விஷயங்களைச் செய்தோமா? என்பது குறித்தெல்லாம் இறைவன் மறுமையில் விசாரிப்பான் என்று பொருள்)

இதனைச் செவியுற்ற உமர் (ரலி) அவர்களுக்கு, ‘இது குறித்துமா இறைவன் விசாரிப்பான்?’ என்று ஆச்சரியம்.

பெருமானார் (ஸல்) அவர்களிடமே விசாரித்தார்: “அல்லாஹ்வின் தூதரே! நாம் புசித்த இந்த உணவு அசுத்தமாகவும், நாம் அருந்திய இந்தத் தண்ணீர் சிறுநீராகவும் உடலில் இருந்து வெளியேறிவிடுகின்றது. இது குறித்துமா அல்லாஹ் மறுமையில் விசாரிப்பான்?”

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “ஆம், எனது உயிர் யார் கைவசம் இருக்கிறதோ அந்த இறைவன் மீது ஆணை! மறுமையில் இந்த அருட்கொடைகளைக் குறித்து நிச்சயம் அல்லாஹ் விசாரிப்பான். சற்றுமுன் வீட்டைவிட்டு நீங்கள் பசியுடன் வெளியே வந்தீர்கள். இதோ இப்போது இந்த அருட்கொடைகளை அல்லாஹ் உங்களுக்கு வழங்கியுள்ளான் என்பதை மறந்துவிடாதீர்கள். “பிறகு அந்நாளில் இந்த அருட்கொடைகளைக் குறித்து கட்டாயம் நீங்கள் வினவப்படத்தான் போகின்றீர்கள்”

(திருக்குர்ஆன் 102:08) என்று அல்லாஹ் கூறவில்லையா?”

(முஸ்லிம், அஹ்மத், நஸாயி)

உணவும் பானமும் இறைவனின் அருட்பேறுகளில் ஒன்று. ஆனால் அது குறித்த சிந்தனை எதுவும் இல்லாமல் எவ்வளவு உணவுகளைத்தான் அன்றாடம் நாம் வீணடித்துக் கொண்டிருக்கின்றோம். மறுமையில் இது குறித்த விசாரணை உண்டு என்பது ஏன் நமக்கு இன்னும் உறைக்கவில்லை?

வியாபார நோக்கில் செயல்படும் உணவு விடுதிகளை விட்டுத்தள்ளுங்கள். இந்த உபதேசம் எல்லாம் அவர்களின் செவிகளில் எடுபடாது. நமது வீடுகளை எடுத்துக்கொள்ளுங்கள். எவ்வளவு உணவுகள் அனுதினமும் வீணடிக்கப்படுகின்றது. சாக்கடைகளிலும் குப்பைத் தொட்டிகளிலும் கொட்டப்படும் உணவுகளைக் காணும்போது மனம் ஏனோ வேதனையால் அவதிப்படுகிறது.

‘வீணான உணவைக்கூட கொட்டக்கூடாதா?’ என்று புத்திசாலித்தனமகாக் கேள்வி கேட்க வேண்டாம். ‘உணவை ஏன் வீணாக்குகின்றோம்?’ என்பதுதான் இங்கே கேள்வியே. என்றாவது ஒருநாள் வீணானால்கூட பரவாயில்லை. அன்றாடம் கொட்டப்படுவது உணவு குறித்த அலட்சியத்தின் வெளிப்பாடுதானே.

அதிலும் குறிப்பாக, திருமண வீடுகளிலும் விசேஷங்களின்போதும் வீணடிக்கப்படும் உணவுகள்தான் எவ்வளவு? அவற்றைச் சேகரித்து ஏழை எளியோருக்கு வழங்கினால் எவ்வளவு நன்மை கிடைக்கும்.

‘பணம் இருக்கிறது, எனவே நாங்கள் செலவு செய்கிறோம். இது எங்கள் பணத்தில் வாங்கிய உணவுப்பொருள். எனவே இதனை நாங்கள் எப்படி வேண்டுமென்றாலும் செலவு செய்வோம்’ என்று கருதினால்... இதைவிட அறிவீனம் வேறொன்றும் இருக்க முடியாது.

அல்லாஹ் கூறுகின்றான்: “மேலும் நீங்கள் உண்ணுங்கள்; பருகுங்கள்; விரயம் செய்யாதீர்கள். விரயம் செய்வோரை அவன் (அல்லாஹ்) நேசிப்பதில்லை”. (திருக்குர்ஆன் 7:31)

இந்த வசனம் குறித்து முற்கால அறிஞர்களில் ஒருவரான அலி பின் அல்ஹுஸைன் பின் வாகித் (ரஹ்) அவர்கள் இவ்வாறு கூறுகின்றார்: “அல்லாஹ் மருத்துவ சிகிச்சை முறை அனைத்தையும் பாதி வசனத்திற்குள் அடக்கிவிட்டான்; அது இந்த வசனம்தான்”.

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுவதாவது: “நீ விரும்பியதை உண்ணலாம்; விரும்பியதை அணியலாம். ஆனால், ஒரு நிபந்தனை: விரயமும், கர்வமும் உன்னிடம் இருக்கக் கூடாது”. (புகாரி)

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களாவது, ‘விரும்பியதை உண்ணலாம் விரயம் செய்யாதே’ என்று கூறினார்கள். ஆனால் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களோ, விரயத்திற்கு கொடுத்திருக்கும் விளக்கம் என்ன தெரியுமா?

பெருமானார் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: “நீ விரும்பிய அனைத்தையும் உண்பதுகூட விரயம்தான்”. (இப்னுமாஜா, தாரகுத்னி)

கவனிக்கத்தக்க மற்றுமோர் விஷயம் என்னவென்றால், ‘விரயம் செய்வோரை இறைவன் விரும்ப மாட்டான்’ என்பதுதான். அனுமதிக்கப்பட்டவற்றிலும், தடை செய்யப்பட்டவற்றிலும் அல்லாஹ் விதித்துள்ள எல்லையை மீறுவோரை அவன் நேசிப்பதில்லை. அப்படி என்றால், இன்றைய திருமண வீடுகள், விசேஷ வீடுகள், விருந்து உபச்சார சபைகள் எல்லாம் அல்லாஹ்வின் நேசம் பெற்றவையா இல்லையா என்பதைக் கொஞ்சம் யோசிக்க வேண்டும்.

உலக உணவு தினமாக அக்டோபர் 16-ந் தேதி கொண்டாடப்படுகிறது. பசியாலும் பட்டினியாலும் வாடும் ஏழைகளின் எண்ணிக்கை பெருகிக்கொண்டே இருக்க, உணவை வீணடிக்கும் மக்களின் எண்ணிக்கையும் கூடிக்கொண்டே செல்வதுதான் நகை முரண்.

உலகில் 100 கோடி பேர் பசியால் அவதிப்படும் பரிதாபம் ஒருபுறம் இருக்க, வருடம்தோறும் 280 மில்லியன் டன் உணவு தானியங்கள் வீணடிக்கப்படுகின்றன என்று ஐ.நா. உணவு அமைப்பு கூறுகிறது.

எவ்வளவு பெரிய வேதனை..! உணவை வீணடிக்கும் ஒவ்வொருவரும் நினைவில் வைக்க வேண்டிய விஷயம் என்னவென்றால்.. நாம் வீணடிக்கும் உணவின் ஒவ்வொரு பருக்கையும் ஏதோ ஓர் ஏழைக்குரிய உணவு என்பதை மட்டும்தான். மட்டுமல்ல, இதுகுறித்தும் மறுமை விசாரணை உண்டு என்பதையும் மறந்துவிடலாகாது.

மவுலவி நூஹ் மஹ்ளரி, குளச்சல்.

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 46

وَلَا الضَّآلِّيْنَ

வழிதவறியோரது சென்ற வழியல்ல.

(அல்குர்ஆன் : 1:7)

' வளல்லாள்ளீன் ' - என்பதில்

வழி கெட்டவனும் , வழி கொடுத்தவனும் என இரு சாராரும் சேர்ந்துள்ளனர் .

வழி கெட்டவன் யாரெனில் அல்லாஹ் ஏற்படுத்திய மார்க்கத்தை விட்டு விட்டு வேறு வழியில் தனது மார்க்கத்தை ஏற்படுத்திக் கொண்டவனை குறிக்கும் .

அப்படிப்பட்டவன் ஹிதாயத்தை விட்டும் வெகுதூரம் கடந்து சென்றவன் . அல்லாஹ்வின் வழியும் அவனுக்கு மிகவும் தூரமாகி விட்டது .

ஊருக்கு வழி தெரியாமல் பாதை மாறிச் சென்று இலக்கை அடைய முடியாமல் போனவனை வழி தவறியவன் என்றும் , ஊருக்கு வழி தெரிந்தும் வழி இருந்தும் அதை விடுத்து வேறு ஊரில் போய் தங்கிக் கொண்டு ஊரில் உள்ள குடும்பத்தையும் , உறவுகளையும் கண்டுகொள்ளாமல் விட்டவனை வழி கெட்டவன் என்றும் நாம் பேசுவோம் .

அதுபோன்றே அல்லாஹ்வின் பாதையை விட்டு விட்டு மாறிச் சென்றவனையும் வழி கெட்டவன் என்றே அழைப்போம் .இப்படி வழிகெட்டுப் பாதை மாறிச் சென்றவனுக்கு சைத்தான் தோழன் ஆகிவிடுவான் . அவன் இன்னும் வழிகெடுத்து ஸிராத்துல் முஸ்தகீமை விட்டும் மிக தூரம் ஆகிவிடுவான் அப்படிப்பட்டவன்தான் வழி கெட்டவன் ஆகும் .

வழி கெடுத்தவன் யாரெனில் அவன் தானும் கெட்டு பிறரையும் வழி கொடுத்தவன் ஆகும் . தான் கேட்டது மட்டும் போதாது என்று பிறரையும் கெடுத்து மகிழ்பவன்தான் வழி கெடுத்தவன் . அவன் மக்களை நேர்வழியில் இருந்து திருப்பி குப்ரின் பக்கமும் அல்லாஹ்வின் பாதைக்கு மாற்றமான பாதைக்கும் இழுத்துச் சென்று விடுவான் . அதனால் வழி கெடுத்தவன் மிக மோசமான நிலைக்கு ஆளாவான் .

மறுமை நாளில் பாவிகள் தாம் செய்த பாவங்களை சுமந்தவர்களாக வந்து நிற்பார்கள் . ஆனால் வழி கெடுத்த பாவிகளோ தமது பாவங்களுடன் தங்களால் வழிகெடுக்கப்பட்டவர்களின் பாவங்களையும் சேர்த்து சுமந்து வருவார்கள் .அல்லாஹ்வின் வார்த்தை அதை உண்மைப்படுத்துகிறது பாருங்கள் .

لِيَحْمِلُوْۤا اَوْزَارَهُمْ كَامِلَةً يَّوْمَ الْقِيٰمَةِ‌ۙ وَمِنْ اَوْزَارِ الَّذِيْنَ يُضِلُّوْنَهُمْ بِغَيْرِ عِلْمٍ‌ اَلَا سَآءَ مَا يَزِرُوْنَ

மறுமை நாளில் தங்கள் பாவச்சுமையை இவர்கள் சுமப்பதுடன், அறிவின்றி இவர்கள் வழிகெடுத்த மற்றவர்களின் பாவச்சுமையையும் இவர்களே சுமப்பார்கள். (இவ்வாறு இருவரின் பாவச்சுமையை) இவர்களே சுமப்பது மிகக் கெட்டதல்லவா? (குர்ஆன் : 16:25)

வழி கெட்டவன் மிக மோசமான நிலையை அடைய வேண்டி துர்பாக்கியம் பெற்றவனாகிறான் . வழிகெட்டவனை விட வழிகெடுத்தவன்தான் கடும் பாதிப்பை எதிர்கொள்ள வேண்டி இருக்கிறது அதன் அபாயத்தை மேற்கண்ட இந்த வசனம் தெளிவுபடுத்துகிறது .

- தஃப்ஸீர் அஷ்ஷஃராவீ

ஆனாலும் விண்ணிலுள்ள கிரகங்களும் அதன் துணைக்கோள்களும் தங்களுக்கு இறைவன் வகுத்துக் கொடுத்த தத்தம் பாதைகளை விட்டு தவறியதுமில்லை ; விட்டு விலகுதுமில்லை ; விட்டுப் பிரிவதுமில்லை .

ஒரு பேச்சுக்கு , இவைகள் வழி தவறினால் இந்த பிரபஞ்சமே இருக்காது .நாமும் இருக்க மாட்டோம்

ர.ரா

சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் 49 22-12-2020

ஆமீன் 2

சூரத்துல் பாத்தியா அத்தியாயத்தை ஓதிய பிறகு "ஆமீன் " என்று கூறுவது விரும்பத்தக்கதாகும் .

"ஆமீன் " என்பதற்கு இறைவா ! ஏற்பாயாக! என்று பொருள்

அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள் :

"அல்லாஹ்வின் தூதர் நபி ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்கள் (தொழுகையில் ) ஃகைரில் மஃக்ளூபி அலைஹிம் வலள்ளால்லீன் " என்று ஓதியவுடன் "ஆமீன் " என்று கூறுவார்கள் அது நபி (ஸல்) அவர்கள் அருகில் முதல் அணியில் நிற்பவர்களின் செவிகளுக்கு நன்றாக கேட்கும் .

நூல் : அபூதாவூத் , இப்னுமாஜா

"ஆமீன் " சப்தத்தால் பள்ளிவாசல் அதிரும் என இப்னு மாஜா - வின் அறிவிப்பில் கூடுதலாக வந்துள்ளது .

(இத்துடன் " சூரத்துல் பாத்திஹாவின் அகமிய விளக்கங்கள் " - தொடர் பதிவுகள் நிறைவு பெறுகிறது .

49 பதிவுடனா ? 50 யை பூர்த்தி செய்யலாமே என்று நீங்கள் கருதக்கூடும் . காரணம் சூரத்துல் ஃபாத்திஹாவிற்கு ஏழே ஏழு வசனங்கள்தான் . அதுவும் அந்த வசனங்கள் திரும்ப திரும்ப ஓதக்கூடிய வசனங்கள் என்றே குர்ஆன் குறிப்பிடுகிறது .

எனவே திரும்ப திரும்ப என்பது (multi ) அதாவது பெருக்கம் ஆகவே 7 x 7 = 49கொண்ட பதிவுகள் )

.

